ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீஸூக்திமாலா மலர்-22

பூதத்தாழ்வார் அருளிய

# இரண்டாந்திருவந்தாதி

[பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்,

அப்பிள்ளையுரை,

விவரணத்துடன்]

(இரண்டாம் பதிப்பு)

பதிப்பாசிரியர்:—

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்,

3-B. புத்தூர் அக்ரஹாரம் திருச்சி.

---

THIS BOOK IS
PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
UNDER THEIR SCHEME
"AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

---

விலை ரூ [illegible] தபாற்கூலி தனி

18-2-93

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

## பூதத்தாழ்வார் திருநக்ஷத்ரத் தனியன்



तुलाघनिष्ठासंभूतं भूतं कल्लोलमालिनः ।
तीरे फुल्लोत्पले मल्लापुर्यामीडे गदांशजम् ॥

துலாத₄நிஷ்ட₂ாஸம்பூ₄தம் பூ₄தம் கல்லோலமாலிந :।
தீரே பு₂ல்லோத்பலே மல்லாபுர்யாமீடே₃ க₃தா₃ம்ஶஜம் ॥

[திருக்கடல்மல்லையில் கடற்கரையில் மலர்ந்த உத்பல புஷ்பத்தில் ஐப்பசியில் அவிட்டத்தில் பரமபுருஷனின் க₃தை₃யின் அம்சமாய் உண்டான பூதத்தாழ்வாரைத் துதிக்கிறேன் ]

## பூதத்தாழ்வார் நித்ய தனியன்



मल्लापुरवराधीशं माधवीकुसुमोद्भवम् ।
भूतं नमामि यो विष्णो रविं दीपमकल्पयत् ॥

மல்லாபுரவராதீ₄ஶம் மாத₄வீகுஸுமோத்₃ப₄வம் ।
பூ₄தம் நமாமி யோ விஷ்ணோ ரவிம் தீ₃பமகல்பயத் ॥

[எவரொருவர் பரமபுருஷனுக்கு ஞானச்சுடர் விளக்கை ஏற்றினரோ, கடல்மல்லையின் தலைவராய், குருக்கத்திப் பூவில் அவதரித்தருளின பூதத்தாழ்வாரை வணங்குகிறேன்.]

## பூதத்தாழ்வார் வாழித்திருநாமம்



அன்பே தகளிநூறு மருளினன் வாழியே
ஐப்பசியி லவிட்டத்தி லவதரித்தான் வாழியே
நன்புகழ்சேர் குருக்கத்தி நாண்மலரோன் வாழியே
நல்லதிருக் கடன்மல்லை நாதனார் வாழியே
இன்புருகு சிந்தைதிரி இட்டபிரான் வாழியே
எழில்ஞானச் சுடர்விளக்கை ஏற்றினன் வாழியே
பொன்புரையும் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே
பூதத்தார் தாளிணை இப் பூதலத்தில் வாழியே.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முதல் பதிப்பின் முகவுரை

காலத்தாலும், பகவத்விஷயத்திலுண்டான ஈடுபாட்டாலும் முதன்மைபெற்றிருப்பவர்கள் முதலாழ்வார்கள். "இம்மூவர்க்கும் அர்த்தம் ஒன்றே; மூன்று ரிஷிகள் கூடி ஒரு வ்யாகரணத்திற்குக் கர்த்தாக்களானாற்போலே கர்த்ருபேதமுண்டேயாகிலும் அர்த்தபேதமின்று; த்ரிமுநிவ்யாகரணம் என்னுமாபோலே." என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முதலாழ்வாரான பொய்கையாழ்வார் "வையந் தகளியா" என்று தொடங்கி உபயவிபூதிகளையும் அநுஸந்தித்து ஜ்ஞாநம் பிறந்த நிலையை வெளிப்படுத்தினார். இரண்டாம் ஆழ்வாரான பூதத்தாழ்வார் "அன்பே தகளி" என்று தொடங்கி ஞானம் முற்றி பக்தியாகும் நிலையை வெளிப்படுத்தினார். மூன்றாம் ஆழ்வாரான பேயாழ்வார் பக்திமுற்றி, அவனையொழியச் செல்லாதபடியான பரமபக்தி விளைந்திருக்கும் நிலையை வெளிப்படுத்தினார். செய்யகதிரோனும் விளக்கையும், அகல்விளக்கையும் ஏற்றினார் முதல்வர். ஞானச்சுடர்விளக்கேற்றியவர் இரண்டாமவர். அவ்விளக்குகளின் ஒளியில் திருக்கண்டேன் பொன்மேனிகண்டார் மூன்றாமவர். ஞானத்தைச் சொல்லுகிறது முதல்திருவந்தாதி. ஞானம் முற்றி பக்தியானபடி சொல்லுகிறது இரண்டாம் திருவந்தாதி. அந்த பக்தியாலே பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியைச் சொல்லுகிறது மூன்றாம் திருவந்தாதி. ஆக மூன்று திருவந்தாதிகளும் ஜ்ஞானபக்திஸாக்ஷாத்காரங்களைச் சொல்லுகின்றன.

"முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டியிருப்பர்கள்" என்பர்கள் பூர்வாசார்யர்கள். "வையம்தகளி"யிலே உபயவிபூதியோடு கூடியவன் ஸர்வேச்வரன் என்றுகாட்டினார் முதலாழ்வார். "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" என்றும் உபயவிபூதிகளையுடையவன் நாராயணனே

என்று அருளி, நாராயணசப்தத்தைக்கொண்டு பரதத்வ நிர்ணயம் செய்தார் இரண்டாமவர். "திருக்கண்டேன்" என்று தொடங்கி லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டிப் பரதத்வ நிர்ணயம் செய்தார் மூன்றாமவர். இந்தக்கிரமத்தை அடியொற்றியே நம்மாழ்வாரும் "உயர்வற" என்னும் முதல் திருவாய்மொழியிலே உபயவிபூதிகளோடு கூடியவன் ஸர்வேச்வரன் என்றார். "வீடுமின்" என்னும் இரண்டாம் திருவாய்மொழியிலே "வண்புகழ் நாரணன்" என்று நாராயண சப்தத்தைக் காட்டிப் பரதத்வ நிஷ்கர்ஷம் செய்தார். "பத்துடையடியவர்க்கு" என்னும் மூன்றாம் திருவாய்மொழியிலே "திருவுடையடிகள்" என்று லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டிப் பரதேவதா நிர்த்தாரணத்தைச் செய்தருளினார். இவ்வண்ணமாக நம்மாழ்வாருக்கும் வழிகாட்டியாய் நின்றவர்கள் முதலாழ்வார்கள். "அரன் நாரணன்" "முதலாவார் மூவரே அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன்" "மாமதில்மூன்றெய்த இறையான் நின்னாகத்திறை" "திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்" "ஏற்றான் புள்ளூர்ந்தான்...காப்பு" "பொன்திகழும்மேனி" [முதல் திருவ] "கண்ணுதலோனன்றே தொழுந்தகையார்" "பிறையிருந்த செஞ்சடையான்...மாலைக்குறையிரந்து" "எரியுருவத் தேறேறி பட்டவிடுசாபம்...சொல்லின் கதை" "மாகடல் நஞ்சுண்டான் தனக்கும் இறையாவான் எங்கள் பிரான்" [இர-திருவ] "மாமலரான் வார்சடையான் என்றிவர்கட்கு எண்ணத்தானுமோ இமை" [மூன்-திருவ] என்று தேவதாந்தரங்களின் அபரத்துவத்தைக் காட்டிக் களையெடுப்பதிலும் உறையிலிடாதவரான திருமழிசைப் பிரானுகிற நாலாம் ஆழ்வாருக்கும் வழிகாட்டியாய் நின்றனர் இம்முதலாழ்வார்கள். இவர்கள் பரத்வத்திலே மண்டியிருக்கும்படி இதுவாகும். இவ்வண்ணமாக எல்லா ஆழ்வார்களுக்கும் வழிகாட்டியாயிருக்கும் முதன்மையைப் பெற்றிருக்கையாலும் முதலாழ்வார்கள் என்னும் பெயர் இவர்களுக்குப் பொருத்தமுடையதாகிறது.

இத்தகைய பெருமையுடைய முதலாழ்வார் மூவரில் முதல்வரான பொய்கையாழ்வார் முதலாவானுனத மூரிநீர் வண்ணனின் முதன்மைபெற்ற நக்ஷத்திரமான திருவோணத்தில் முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சிதனில் பொய்கையில் பொற்றாமரையில் பஞ்சாயுதங்களில் முதன்மை பெற்ற பாஞ்சசன்னியமெனும் சங்கத்தின் அம்சமாக அவதரித்து 'வையம் தகளி' என்று தொடங்கும் முதல்திருவந்தாதியை அருளினர். இரண்டாமவரான பூதத்தாழ்வார், அடுத்ததான அவிட்டத்தில், திருக்கடல்மல்லையில் கடற்கரையிலுள்ளதொரு குருக்கத்திப்பூவில் ''ஶங்க₂ சக்ர க₃தா₃ஶார்ங்க₃ கட்₃கா₃யுத₄ம்'' [பாகவதம் 10-3-9] ''ஒண்சங்கதை வாளாழியான்'' [திருவாய்8-8-1] முதலான ப்ரமாணங்களில் சங்கத்திற்கு அடுத்தபடியாக எடுக்கப்பட்ட கௌமோத₃கீ என்னும் கதையின் அம்சமாக அவதரித்து 'அன்பே தகளி' என்று தொடங்கும் இரண்டாம் திருவந்தாதியை அருளினர்.

முதல் திருவந்தாதியானது பெரியவாச்சான்பிள்ளை அருளிய பரமபோக்₃யமான வியாக்கியானத்துடன் எந்தையாரால் விரோதி வருடம் மாசியில் திருவோணத்தில் வெளியிடப்பெற்றது. பெரியவாச்சான்பிள்ளையின் திருவந்தாதி வ்யாக்யானங்கள் அதிசூக்ஷ்மமாகவும், அதிஸங்க்₃ரஹமாகவும், சிலவிடங்களில் பொருளுணர அரியதாகவுமிருக்கையாலே மாமுனிகளின் திருவடியாய், அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான அப்பிள்ளை என்னும் ஆசார்யர் அருளிய அப்பிள்ளையுரையையும், இருவியாக்கியானங்களின் ஸாரத்தையும் உள்ளடக்கி எளிய நடையிலமைந்ததொரு விவரணத்தையும் வெளியிட்டால் லோகோபகாரமாகும் என்று கருதி, முதல்திருவந்தாதியானது அப்பிள்ளையுரையோடும், அடியேனுடைய விவரணத்தோடும் ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனமெனும் மாதப்பத்திரிகையில் தொடர்ந்து வெளியிடப்பெற்று சுபகிருத் ஐப்பசித் திருவோணத்தில் புத்தகவடிவில் வெளியிடப்பெற்றது. [இது இப்போது எம்மிடம் கிடைக்கும். விலை ரூ. 18-00] அதற்குப்பின் இரண்டாம் திருவந்தாதி-வியாக்கியானங்களுடன் ஸுதர்சனத்தில் வெளியிடப்பெற்று வந்தது.

பராபவ தையில் ரோகிணியான இன்று பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானமும், அப்பிள்ளையுரை, அடியேனுடைய விவரணம் ஆகிய மூன்றும் கொண்ட இரண்டாம் திருவந்தாதி புத்தகவடிவில் வெளியிடப்பெறுகிறது. இதே ரீதியில் மூன்றாம் திருவந்தாதியும் ஸுதர்சனத்தில் வெளியிடப்பெற்றுச் சில வருடங்களில் நூல் வடிவு கொள்ளும்.

அப்பிள்ளையுரையில் பழைய தமிழ்த்தெலுங்குலிபிப் பதிப்புகளில் பல பிழைகள் உள்ளன. பொழிப்புரையாய் அமைந்த அப்பிள்ளையுரை தாறுமாறாகப் பிரிக்கப்பட்டுப் (பழைய பதிப்புகளில்) பதவுரையாகத் தரப்பெற்றுள்ளது. இக்குறைகள் ஒன்றும் இல்லாதபடி திகழ்கின்றது இப் பதிப்பு. இதிலும் குறைகளிருந்து மஹான்கள் காட்டினால் நன்றியுடன் மறுபதிப்புகளில் திருத்தி வெளியிடுவோம்.

மூன்றாம் திருவந்தாதியும், மற்றுமுள்ள திவ்யப்ரபந்தங்களும் இம்முறையிலேயே வெளிவர எம்பெருமான் அருள்புரிவானாக.

பராபவ
தையில் ரோகிணி
(18—2—67)

இங்ஙனம்,
அன்பர் தாள் தூளி,
S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம்.
திருச்சிராப்பள்ளி-17.

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

பல வருடங்களாகக் கிடைக்காமலிருந்த இந்நூல் ஆங்கீரஸ ஸ்ரீ தையில் மகத்தில் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்படுகிறது.

தாஸன்
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

[8-2-93]

ஸ்ரீ:

# பாசுரங்களின் ஸூசிகை

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



## பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

# இரண்டாந் திருவந்தாதி

## தனியன் வ்யாக்யானம



திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்த தனியன்.

என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா
அன்பே தகளி யளித்தானை — நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

இன் இனிய, அமுதா — அமுதமாக, அன்பே தகளி— 'அன்பே தகளி' என்று தொடங்கும் இரண்டாம் திருவந்தாதியை, அளித்தான் — அருளியவராய், நல் — சிறந்த, புகழ்— கீர்த்தி, சேர்-சேரப்பெற்றிருப்பதாய், சீதத்து ஆர்-குளிர்த்தி நிறைந்த, முத்துக்கள் - முத்துக்களானவை, சேரும்-சேரப் பெற்றிருப்பதான, கடல் மல்லை — திருக்கடன்மல்லை என்னும் திருநாமத்தையுடைய திவ்யதேசத்தில் அவதரித்தருளிய, பூதத்தார் பூதத்தாழ்வாருடைய, பொன் அம் கழல்—விரும்பத்தக்க அழகிய திருவடிகளை, என் — என்னுடைய, பிறவி— ஜந்மங்கள், தீர-அழிவதற்காக, இறைஞ்சினேன் - துதித்தேன்.

அவதாரிகை — (என்பிறவி தீரவித்யாதி) இதில் திவ்ய ப்ரபந்த ப்ரதாதாவுமாய், திவ்யதேசத்தை ஜந்மதேசமாக

---

# இரண்டாந்திருவந்தாதி

## தனியன் வ்யாக்யான விவரணம்

[ஸ்ரீ. (ஸௌந்தர்ராஜன்) கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்]



அவதாரிகை :— இத்தனியனை அருளியவர் எம்பெருமானாரின் ப்ரியசிஷ்யரான திருக்குருகைப்பிரான் பிள்ளான். இதில், "இரண்டாம் திருவந்தாதியாகிற திவ்யப்ரபந்தத்தை உலகுய்ய அருளிய

வுடையருமாயிருக்கிற பூதத்தாருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை ஜந்மஸம்பந்தமறும்படி பூஜித்தேனென்கிறது. * இன்னமுதாவன்பே தகளியளித்தாருமாய், நன்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள்சேரும் கடல்மல்லைப் பூதத்தார் பொன்னம்கழல்களை என்பிறவி தீரவிறைஞ்சினேனென்கிறது.

வ்யா: (என்பிறவிதீர இறைஞ்சினேன்) என்பிறவி யாவது,- இவர்தாம் ''இப்பிறவியாவது'' என்று அருளிச் செய்தபடியே, *மாறிமாறிப்பலபிறப்பும் பிறந்து, *பல்பிறவி யில் படிந்து, *பிறவிப்பெருங்கடலிலே *உடலாழிப் பிறப் பிலே புக்கு உழலுகை. ஏவம்வித,மான ஜந்மபரம்பரைகள் தீரும்படி ஜந்மவைபவத்தையுடைய பூதத்தார் பொன்னங் கழலை இறைஞ்சினேன் என்கிறது. இறைஞ்சுகை-பூஜிக்கை;

---

வராய், திருக்கடல் மல்லையாகிற திவ்யதேசத்தைப் பிறப்பிடமாக உடையவராயிருக்கும் பூதத்தாழ்வாருடைய விரும்பத்தக்க திருவடி களைப் பிறவிப்பெருங்கடல் வற்றும்படியாகத் துதித்தேன்'' என் கிறார். இன்னமுதா அன்பேதகளியளித்தாராய், நன்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப் பூதத்தார் பொன்னங் கழலை என் பிறவி தீர இறைஞ்சினேன் என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும்.

வ்யா :— (என் பிறவிதீர இறைஞ்சினேன்) என் பிறவி தீரும் படியாகத்துதித்தேன். பிறவியாவது:-''இது கண்டாய் நன்னெஞ்சே இப்பிறவியாவது'' [66] என்று இவ்வாழ்வாரும், ''மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து'' [திருவாய் 2-6-8] ''பன்மாமாயப் பல் பிறவியில் படிகின்றயான்'' [திருவாய் 3-2-2] ''பிறவிப்பெருங்கடல்'' [பெரியதிரு 8-9-8] ''உடலாழிப்பிறப்பு'' [திருவாய் 1-4-10] என்று மற்றையாழ்வார்களும் அருளிச்செய்தபடியே பலவிதமான பிறப்புக ளில்மாறிமாறிப்பிறந்து, ஸம்ஸாரவாழ்க்கையிலேயே அழுந்தி, ஸம் ஸாரமாகிற பெருங்கடலிலே சரீரங்களாகிற சக்கரங்கள் சுழன்று வரும் பிறப்புகளிலே உழலுகை (என்பிறவிதீரபூதத்தார் பொன்னங் கழல் இறைஞ்சினேன்) ''புநரபி ஜநநம் புநரபி மரணம்'' என்கிற படியே இவ்வண்ணமாக மாறிமாறிவரும் பிறவிகள் தீரும்படியான அவதாரப்பெருமையை உடைய பூதத்தாழ்வாருடைய விரும்பத்தக்க அழகிய திருவடிகளை இறைஞ்சினேன் என்கிறார். இறைஞ்சுகை

அதாவது ஸேவிக்கை என்றபடி. ''பொன்னங்கழலே தொழு மின் முழுவினைகள் முன்னம் கழலும் முடிந்து'' என்னுமா போலே பூதத்திருவடிகளுடைய பொன்னங்கழற்கு ஆன பூர்வம் கழலுமிறே.

இனி அவர் உபகாரகத்வ வைபவம் சொல்லுகிறது. இன்னமுதாவன்பே தகளியளிக்கையாவது —* அமுதன்ன சொன்மாலையான ''இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்'' ''நாரணற்கு ஞானத்தமிழ்புரிந்த நான்'' என்றாப்படியான *அன்பேதகளியா என்னும் ப்ரபந்தத்தை ''உத்தமன் பேரேத்தும் திறமறிமின்'' என்னும்படி உபகரிக்கை; அன்றிக்கே, கொடுக்கை.

---

யாவது, மனம் மெய் மொழிகளாலே பக்திசெய்கை. அதாவது முக்கரணங்களாலும் வணங்குகை. ''பொது நின்ற பொன்னங்கழலே தொழுமின் முழுவினைகள் முன்னம் கழலும் முடிந்து'' [மூன் திருவ 86] என்கிறபடியே அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் பொது நின்ற பொன்னங்கழல்களைத் தொழுதாலே விரோதிநிவ்ருத்தி உண்டாகும் போது, பூதத்தாழ்வாரான பூதத்திருவடிகளுடைய பொன்னங்கழலைக் கண்டு அத்தன்கள் நெஞ்சத்துறையவைத்திருப்பவர்களுக்குப் பிறப்பிறப்புக்கள் கழலச் சொல்லவேண்டாமன்றே.

இனி, அவர் செய்த உபகாரத்தின் பெருமையைச் சொல்லுகிறது (இன்னமுதா அன்பே தகளி அளித்தானை) அன்பே தகளியாவது — அப்படித்தொடங்கும் இரண்டாம் திருவந்தாதியாகிற ப்ரபந்தம். அளிக்கையாவது கொடுக்கை. அதாவது: விலைமதிப்பற்ற மாணிக்கத்தைக் கையில் கொடுப்பாரைப்போலே ''உத்தமன் பேரேத்தும் திறம் அறிமின்'' [30] என்று மேல்விழுந்து உபகரிக்கை. இன்னமுதா அளிக்கையாவது:- ''அமுதன்ன சொன்மாலை'' [இரா-திருவ-46] ''தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'' [திருவாய் 9-4-9] என்கிறபடியே அடியார்க்கு இனிய அமுதம்போலேயிருக்கும் நூலை அளிக்கையாகும். ''இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன் பெருந்தமிழன் நல்லேன்'' [74] ''நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்'' [1] என்று இவ்வாழ்வாரே தம் நூலின் சீர்மையை ''நன்மாலை'' ''ஞானத்தமிழ்'' என்று அருளினாரன்றே.

கீழ் ஜ்ஞாநவைபவம் சொல்லிற்று. இனி ஜந்மவைபவம் சொல்லுகிறது—(நன்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப் பூதத்தார்) என்று. அதாவது-ஶ்லாக்₄யமான யஶஸ்ஸு சேருமூருமாய் சீதளாதிசய முக்தாமணிகள் சேரும்படியாயுமிருக்கிற ஸ்த₂லமென்கை. *சீதக்கடலிலே பிறந்த முக்தாதிகளும் சீதளமாயிருக்குமிறே. நன்புகழாவது- "यशसश्चैकभाजनं" (யஶஸஶ்சைகபா₄ஜநம்) "சேரும் கொடை புகழ் எல்லையிலானை" "அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே" "எண்ணிறந்த புகழினானை" என்னும்படியான *கடல்மல்லைத் தலசயனத் துறைவாரையும், / எப்புவியும் பேசு புகழ் பூதத்தாரையும் உடைத்தாகையாலும் உண்டான முத்துக்கள்; *வந்துதித்த வெண்டிரைகள்வெண்முத்தத்தைக் கொழிக்கை.

---

"அன்பே தகளியளித்தானை" என்று பூதத்தாழ்வாரின் ஞானப் பெருமையைச் சொல்லிற்று; இனி, பிறப்பின் பெருமையைச் சொல்லுகிறது (நன்புகழ்சேர் கடல் மல்லை) மிகச்சிறந்த புகழ் சேரப்பெற்ற திருக்கடல்மல்லை. நன்புகழாவது:- "புகழுக்கு ஒரே இருப்பிடமாயிருப்பவன் இராமபிரான்" [ரா-கி 15-19] "சேரும் கொடைபுகழ் எல்லையிலானை" [ திருவாய் 8-9-7 ] "அந்தமில் புகழ்க்காரெழில் அண்ணல்"[3-3-2] "எண்ணிறந்தபுகழினானை"[பெரியதிரு 2-5-8] என்னும்படியான கடல்மல்லைத்தலசயனத்துறையும் பெருமாளையும், /எப்புவியும் பேசுபுகழ்ப் பூதத்தாழ்வாரையும் உடைத்தாகையால் உண்டான புகழ். (சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லை) குளிர்த்தி நிறைந்த முத்துக்களும் மணிகளும் கடலாலே அலைப்புண்டு கரையிலே சேரும் பெருமைபெற்ற திருக்கடல்மல்லை. "சீதக்கடல்" [பெரியாழ்திரு 1-2-1] எனப்படும் குளிர்த்திநிறைந்த கடலில் தோன்றிய முத்துக்கள் சீதத்தார் முத்துக்களாயிருக்குமன்றே. "திசைவில் வீசும் செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை" [ திருவாய் 5-8-9 ] என்கிறபடியே முத்துக்களும் மணிகளும் ஸ்வாபதேசத்தில் ஞானச்சிறப்பாலே உலகமெங்கும் ஒளிவீசும் பாகவதோத்தமர்களைக் குறிக்கின்றன. சமதமாதிகுணங்களையுடையவர்களாகையாலே அவர்களையும் "சீதத்தார் முத்துக்கள்" என்னலாம். (சீதத்தார்முத்துக்கள்சேரும்)இந்நிலத்திலே உண்டானமுத்துக்கள், இதன் கரையிலே || வந்துதைத்தவெண்திரைகளால்கொழிக்கப்பட்ட வெண்முத்தங்கள் ஆகிய எல்லா முத்துக்களையும் சொல்லுகிறது.

---

/ உபதேசரத்தினமாலை-6. || மூன்-திருவ-16.

மாமணிவந்துந்து முந்நீர்மல்லையிலே § சங்கிடங்கொள் முத்தொன்றும், கரைகடந்த / முத்தொன்றும் சேரும் ஸ்தலம். "இக்கரையேறி" என்னக்கடவதிறே. "கரைகண்டோர்" என்றும்படியான / முக்தராயிற்று இவரும்.

கடல்மல்லை-விலக்ஷணவஸ்துக்கள் சேரும் தேசம். * சங்குதங்கு தடங்கடல் கடல்மல்லையிறே. "மாமல்லை" என்கிறாரிறே இவர்தாமும் மண்டியிருப்பது. "கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்" என்று அடுத்தடுத்துப் படுக்கும் தேசமாகவிறே பாடினார். ஆகையால், அவன் படுகாடுகிடக்கும் தேசமென்கிறது. (கடல்மல்லைப் பூதத்தார்) "தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதம்" என்ன

---

"மாமணி வந்துந்து முந்நீர் மல்லை" [திருநெடு-9] எனப்படுகிற கடல்மல்லையில் பாஞ்சசன்னியமாகிற சங்கை இடங்கையில் கொண்ட சங்கிடங்கொள் முத்தாகிற எம்பெருமானும், / கரைகடந்தமுத்தாகிற ஆழ்வாரும் சேரும் இடம் என்றும் கொள்ளலாம். இவர் கரை கடந்தவரோ? எனில், "அக்கரையென்னும் அனத்தக்கடலுள் அழுந்தி உன் பேரருளால் இக்கரையேறி" [பெரியாழ்திரு 5-3-7] என்றும், "கரைகண்டோர்" [திருவாய் 8-8-10] என்றும் சொல்லுகிறபடியே இக்கரையேறினவர் என்றும், கரைகண்டோரான முக்தர் போல் முக்தர் என்றும் சொல்லலாம்படியிருப்பவரன்றோ இவர்.

(கடல் மல்லை) கடலையொட்டியிருக்குமிடமாகையாலே மிகச் சிறந்த பொருள்கள் சேரும் தேசம். "சங்குதங்குதடங்கடல் கடல் மல்லையுள் கிடந்தாய்" [பெரியதிரு [illegible]] என்று திருமங்கைமன்னன் அருளினானன்றோ இப்பெருமையை நினைத்தன்றோ இவ்வாழ்வாரும் "தமருள்ளம் மாமல்லை" [இர-திருவ-70] என்று இந்த திவ்யதேசத்தில் ஈடுபட்டார். "கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்" [பெரியதிரு [illegible]] என்று திருமங்கையாழ்வார் கச்சியையும், கடல் மல்லையையும் பரமபுருஷன் அடுத்தடுத்துக்கைமாறிப்படுக்கும் இடங்களாகவன்றோ பாடினார். ஆகையால் அவன் படுகாடுகிடக்கும் தேசம் என்கிறது. (கடல்மல்லைப் பூதத்தார்) "தடங்கடல் பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதம்" [திருவாய் 5-2-4] என்று நம்மாழ்வா

---

§ சங்கில் முளைத்த முத்து என்றும் பொருள்படும்;
/ முக்தராகையாலே முத்து என்னலாம் என்று கருத்து.

லாம்படியான தரத்தையுடையவர். ''பாற்கடல் பாம்பணை மேல் பள்ளிகொண்டருளும் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே'' என்னக்கடவதிறே. ''இன்னை கொண்டு தொண்டரேத்தவெவ்வுள் கிடந்தானை'' என்கிறபடியே § மிக்கசீர்த்தொண்டரான புண்டரீகர் / வண்டுகிண்டு நறுந்துழாயலங்கல்கொண்டு சாத்தக்கிடந்த விடமிறே.

(கடல்மல்லைப் பூதத்தார்) திருக்கடல் மல்லையில் குருக்கத்திப் பூவிலேயிறே பூதத்தார் ஐப்பசியில் அவிட்டத்திலே அவதரித்தது. இவரும் * இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சூட்டினாரிறே. அத்தையிட்டு * கடல்மல்லைப் பூதத்தாரென்கிறது. அவனுக்கும், ''கடல்மல்லைத் தலசயனத்துறைவார்'' என்றிறே நிரூபகம். (பூதத்தார் பொன்

ரால் அருளப்பட்ட பெருமையை உடையவர். ''பாற்கடல் பாம்பணை மேல் பள்ளிகொண்டருளும் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே'' [திருவிருத்தம்-79] என்று இவ்வாழ்வார்போல்வாரை நித்யஸூரிகளிலும் சிறந்தவராகவன்றோ அருளினார். ''இன்னை கொண்டு தொண்டரேத்த எவ்வுள் கிடந்தான்'' [பெரியதிரு2-2-10] என்றாற்போலே § மிக்கசீர்த்தொண்டரான புண்டரீகர் வண்டுகள் மொய்க்கும் மணம்மிக்க துழாய்மாலைகளைக் கையிற்கொண்டு சாத்தும்படியாகப் பள்ளிகொண்டருளிய இடமே திருக்கடல்மல்லை என்றல்லவோ புராணங்களில் பேசப்படுகிறது.

(கடல்மல்லைப் பூதத்தார்) திருக்கடல்மல்லை என்னும் இந்த திவ்ய தேசத்திலே குருக்கத்திப்பூவிலேயன்றோ பூதத்தாழ்வார் ஐப்பசியில் அவிட்டத்திலே திருவவதாரம் செய்தருளினார். அப்புண்டரீகர் பூமாலை சூட்டிக் கைங்கர்யம் செய்ததுபோலே இவரும், ''இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்'' [74] என்று இவர்தாமே அருளிச்செய்தபடியே பாமாலைசூட்டிக் கைங்கர்யம் செய்தாரன்றோ. இப்படி அவ்வூரில் பிறந்து வாழ்ந்து அவ்வெம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்தவராகையாலே இவரைக் கடல்மல்லைப் பூதத்தார் என்கிறது. அவ்வெம்பெருமானையும் ''கடல்மல்லைத் தலசயனத்துறைவார்'' [பெரியதிரு 2-6-4] என்று இவ்வூரையிட்டன்றோ நிரூபிக்க வேண்டியிருக்கிறது. (பூதத்தார் பொன்னங்கழல் இறைஞ்சினேன்)

§ பெரியதிரு 11-1-9. /ருமாபன் திரு 2-8.

இவர் அவ்வுபயவிபூதியையும் தம்முடைய பக்தியாலே அநுஸந்தித்து பக்தி பரவசராய்க் கவிபாடுகிறார். அவர்க்கிந்த பக்தியில்லையோ வென்னில்; உண்டு; காரண கார்யரூபமான அவஸ்த்தாபேதமேயுள்ளது. உபயவிபூதியையும் அநுஸந்தித்துப் பிறந்தஜ்ஞாநமவரது; அது பக்வமாய் பக்திரூபாபந்நமானபடியிவரது. ஆழ்வார்களொருத்தர்க்கொருத்தர் பாவஜ்ஞராயிறே பரிமாறுவது.

---

போகையாலே, உபயவிபூதியையுடைய நாராயணனே உலகிற்கு ஸ்வாமி என்றார் பொய்கையாழ்வார். இத்திருவந்தாதியிலே "அன்பே தகளியா" என்று தொடங்கி, "என்றனளவன்றால் யானுடைய அன்பு" என்று முடிக்கையாலே, இந்த பூதத்தாழ்வார் முதலாழ்வாரால் அனுபவிக்கப்பட்ட உபயவிபூதிகளையும், அவற்றுக்கு ஸ்வாமியான நாராயணனையும் அன்பென்னும் பக்தியாலே அனுஸந்தித்து, பக்திபரவசராய்க் கவிபாடுகிறார். அப்படியானால் முதலாழ்வார்க்கு பக்தியில்லையோ? எனில்: உண்டு. "ஸேமுஷீ பக்தி ரூப" [ஸ்ரீபாஷ்யமங்களம்] என்கிறபடியே பக்தியும் ஞானத்தில் ஒரு வகையேயாகும். ஞானம் முற்றி பக்தியின் தொடக்கநிலை அவருடையது; பக்தி முற்றிய நிலை இவருடையது. அவருடையது காரண நிலை; இவருடையது கார்யநிலை. உபயவிபூதியையும் அநுஸந்தித்துப் பிறந்த ஜ்ஞாநம் அவருடையது; அதுமுற்றி பக்தி நிலையை அடைந்தபடி இவருடையது. அவருடைய ஞானம் இவருக்கு முற்றக்கூடுமோ? எனில்; ஆழ்வார்கள் ஒருவர்க்கொருவர் நினைவறிந்து பரிமாறுகையாலே கூடும்.

இதை மூன்றுமாழ்வாரிடத்திலும் காணலாம். "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" [மூன் திருவ-1] "இன்றே கழல்கண்டேன்", [2] "காண் காண் என விரும்பும் கண்கள்" [35] "பங்கயமே நீ ணெடுங்கண் காட்டும்" [55] "நெடுமால் நிறம்போலக் கார்வானம் காட்டும் கலந்து" [86] "கண்ணா! நின்மேனி மலர்ந்து மரதகமே காட்டும்... தண்டுழாய்க்கோமானை அந்திவான் காட்டும்" [87] "உணர்வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி வைத்தவனை நாடி வலைப்படுத்தேன்" [94] என்று முதலிலும், நடுவிலும், முடிவிலும் அருளியபடியே ஜ்ஞாநபக்திகள் முற்றி ஸாக்ஷாத்காரநிலையை உடையவராய் விளங்கினாரன்றோ மூன்றுமவரான பேயாழ்வார். ஆக, மூன்று திருவந்தாதிகளிலும் ஜ்ஞாந பக்தி ஸாக்ஷாத்காரங்கள் விளக்கப்பட்டன என்றபடி.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அப்பிள்ளை உரையின் அவதாரிகை

கீழில் திருவந்தாதியிலே உப₄யவிபூ₄திநாத₂னாய், ஸர்வஸ்மாத்பரனாயிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபரூபகு₃ண விபூ₄திகளைத் தன் நிர்ஹேதுக கடாக்ஷவிஶேஷலப்₃த₄மாய் பரப₄க்தித₃ஶாபந்நமான ஜ்ஞானவிஶேஷத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுப₄வித்து அநுப₄வஜநித ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, அநுப₄வித்தபடியே ஸவிபூ₄திகனான எம்பெருமானைப்பேசி

"வையந்தகளியா...சுடராழியான்" என்று தொடங்குகையாலே உப₄யவிபூ₄திகளோடு கூடியவன் ஸர்வேச்வரன் என்றார் முதலாழ்வார். "நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்" என்று தொடங்குகையாலே ஸர்வேச்வரனைச் சொல்லும் தனிப்பெயர் நாராயணசப்தம் என்று காட்டினார் இரண்டாமவர். "திருக்கண்டேன்" என்று தொடங்குகையாலே லக்ஷ்மீஸம்பந்தத்தையிட்டுப் பரதத்வ நிர்ணயம் செய்தார் மூன்றாமவர். இம்மூவரையும் அடியொற்றியே நம்மாழ்வாரும் "உயர்வற" என்னும் முதல் திருவாய்மொழியாலே உபயவிபூதியுடையவன் என்றும், இரண்டாம் திருவாய்மொழியிலே "வண்புகழ் நாரணன்" என்று நாராயணசப்தத்தைக்கொண்டும், மூன்றாம் திருவாய்மொழியில் "திருவுடையடிகள்" என்று லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டியும் பரதத்வநிர்த₄ாரணம் செய்தாரன்றோ. இவற்றிலிருந்து ஆழ்வார்கள் ஒருவருக்கொருவர் நினைவறிந்து பரிமாறுமவர்கள் என்று தெளிவாகிறது.

மூன்று திருவந்தாதிகளிலும் பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளின் விளக்கப்படுவதாக நிர்வஹிப்பதுமுண்டு. அதாவது:— உபயவிபூதிகளுக்கும் நாதனாய், அனைத்திலும் மேலாயிருக்கிற ஸர்வேச்வரன் தன்னுடைய ஸ்வரூபம், ரூபம், ஸ்வரூபகுணங்கள், ரூபகுணங்கள், விபூதிகள் ஆகியவற்றைத் தன் நிர்ஹேதுககடாக்ஷத்தாலே ஆழ்வார்க்கு உண்டான பரபக்தியெனப்படும் ஞானவிசேஷத்தாலே காட்டக்கண்டு அவற்றை அநுபவித்து, அந்த அநுபவத்தாலுண்டான ஆநந்தவெள்ளத்தாலே, தாம் அனுபவித்தபடியே "வையம் தகளியா" என்று தொடங்கி விபூதிகளோடு கூடிய எம்பெருமானைப்பேசி, "வாயவனையல்லது" "திருமாலையல்லது ஏத்

ப்ராப்தாவான ஆத்மாவினுடைய ேசஷத்வமான ஸ்வ ரூபத்தையும், ேசஷியான எம்பெருமான் திருவடிகளில் பண்ணும் நித்ய கைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம் என்னுமிடத்தையும், அந்த ப்ராப்யத்தைக் கைப்படுத்தித் தரும் ஸ்வரூபாநுரூபமான ப்ராபகமும் அவன் திருவடிகளே என்னுமிடத்தையும் அறுதியிட்டார் முதலாழ்வார்களில் முதலாழ்வாரான பொய்கையார்.

அநந்தரம் பூதத்தார் *வையம்தகளியில் அருளிச்செய்த எம்பெருமான் படிகளைக் கூடவிருந்து உத்தரோத்தரம் அநுபவித்துக்கொண்டு போருகையாலே, எம்பெருமானுடைய அருளே தஞ்மாக முளைத்துக்கிளர்ந்த தம்முடைய பரபக்தியானது ப்ரஜ்ஞாநதசாபந்நமாம்படி பரிபக்வமாய் வளர, அந்தப் பரஜ்ஞாநதசாபந்ந ப்ரேமவிேசஷத்தாலே அவன் படிகளைக் கட்டடங்க ஸாக்ஷாத்கரித்து அநுஸந்தித்துத் தாம் அனுபவித்த ப்ரகாரத்தை நாடு அறிந்து அநுஸந்

தேன்'' முதலான பாசுரங்களிலே ப்ராப்தாவான ஜீவனுடைய அநந்யார்ஹசேஷத்வஸ்வரூபத்தையும், ''ஊழியான் பாதம் மருவாதார்க்குண்டாமோ வான்'' ''ஒரடியும் சாடுதைத்த'' முதலான பாசுரங்களிலே ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன் திருவடிகளிலே பண்ணும் நித்யகைங்கர்யமே நம் அநந்யார்ஹசேஷத்வ ஸ்வரூபத்திற்குத் தகுந்த ப்ராப்யமென்பதையும், அந்த ப்ராப்யத்தை நமக்குக் கைப்படுத்தித் தரவல்லதாய், நம் அத்யந்த பரதந்திர ஸ்வரூபத்திற்குத் தகுந்ததான உபாயமும் அவன் திருவடிகளே என்பதையும் முடிவுகட்டினார் முதல் திருவந்தாதியிலே முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வார்.

அடுத்தபடியாக பூதத்தாழ்வார், முதல்திருவந்தாதியிலே பொய்கையாழ்வார் அருளிச்செய்த எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுணவிபூதிகளைக் கூடவிருந்து மேன்மேலாக அனுபவித்துச் செல்லுகையாலே, பரமபுருஷனுடைய நிர்ஹேதுககிருபையே காரணமாக உண்டாகி வளர்ந்த தம்முடைய பரபக்தியானது பரஜ்ஞான நிலையை உடையதாம்படி முற்றி வளர, பரஜ்ஞானம் எனப்படும் அவ்வன்பாலே அவனுடைய ஸ்வரூபாதிகளை முழுவதும் கண்டு

பற்றிக்கிடக்கிற / உள்ளிருள் நீங்கும்படியாக ப்ரத்யக்₃வஸ்து வான ஆத்மபரமாத்மாக்களில் உண்டாகக்கடவ ‡ ஸம்ஶய விபர்யயங்களை அறுக்கிறார்.

பரப₄க்த்யாதி₃கள் மூன்றும் மூவர்க்கும் தனித்தனியே குறைவற உண்டாயிருக்கச்செய்தேயும், ஓரொருத்தருக்கு ஓரோ அவஸ்தை₂ தலையெடுத்து, அல்லாத அவஸ்தை₂கள் அதுக்குள்ளே அடங்கிக்கிடக்கும். பரஜ்ஞாந பரமப₄க்திகள் நிழலிட்டுத் தோற்றும்படி பரப₄க்தியே விஞ்சியிருக்கும் அவருக்கு. பரப₄க்தி முற்றிப் பக்வமானதாய், பரமப₄க்தி ஶிரஸ்கமான பரஜ்ஞாநமேயாயிருக்கும் இவருக்கு. பரம ப₄க்தியே விஞ்சிப் பரப₄க்தி பரஜ்ஞானங்கள் இரண்டும் அதன்கீழே செருகிக்கிடக்கும் மற்றையவருக்கு. பரப₄க்த் யாதி₃களினுடைய உத்பத்தியும், வ்ருத்₃தி₄யும் இன்னாருக்கு இன்னபோது இன்னது தலையெடுக்கக்கடவது. இன்னது

---

[இராமா-9] என்று அமுதனார் அருளியபடியே ஸர்வேச்வரனைக் காணும் § நெஞ்சென்னும் உட்கண்ணைப்பற்றிக்கிடக்கும் / உள்ளி ருள் நீங்கும்படியாக, தனக்குத்தானே பிரகாசிக்கும் ப்ரத்யக்₃ வஸ்துவான ஆத்மபரமாத்மஸ்வரூபஸ்வபாவங்களில் உண்டாகக் கூடிய ‡ ஐயம் திரிபுகளை அறுக்கிறார்.

பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாகிற மூன்று நிலைகளும் மூன்று ஆழ்வார்களுக்கும் தனித்தனியே பரிபூர்ணமாக உண்டாயிருக்கச் செய்தேயும், ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்று விஞ்சி, மற்றையிரண் டும் அதற்குள் அடங்கியிருக்கும். முதலாழ்வாருக்கு, பரஜ்ஞான பரம பக்திகள் அப்ரத₄ானமாகத்தோற்றும்படி பரபக்தியே விஞ்சியிருக் கும். இரண்டாமவருக்கு பரபக்தி முற்றிப்பழுத்ததாய், பரம பக்தியைத் தோற்றுவிப்பதான பரஜ்ஞானமே ப்ரத₄ானமாயிருக்கும். மூன்றுமவருக்குப் பரமபக்தியே ப்ரத₄ானமாய், பரபக்திபரஜ்ஞானங் களிரண்டும் அதன்கீழே அடங்கிக்கிடக்கும். பரபக்தி முதலான வற்றின் உற்பத்தியும், வளர்ச்சியும், இன்னாருக்கு இன்னகாலத்தில் இன்னது பிரதானமாகவும், இன்னது அப்ரதானமாகவும் ஆகக்

---

§ பெரிய திருவ:-28. / ஆசார்யஹ்ருதயம்-88. ‡ ஸம்சயம் / (ஐயம்)- பழுதையைக்கண்டு, 'பாம்போ, பழுதையோ' என்று ஸந்தே ஹிப்பதுபோன்ற ஐயம்; விபர்யயம் (திரிபு) -பழுதையைப் பாம் பென்றே கருதுவதுபோன்ற விபரீதஜ்ஞாநம்.

அடங்கிக்கிடக்கக்கடவது என்னுமிவையெல்லாம் ஈச்வரன் நினைவாலே உண்டாகத் தட்டில்லை.

பகவத்விஷயத்தை ஸாக்ஷாத்கரிக்கவேணும் என்னும் அபிநிவேசம் பரபக்தி; ஸாக்ஷாத்காரம் பரஜ்ஞாநம்; பின்பு உத்தரோத்தரம் அநுபவிக்கவேணும் என்னும் அபிநிவேசம் பரமபக்தி. ஸம்ச்லேஷத்தில் ஸுகித்து, விச்லேஷத்தில் துக்கிக்கும்படியிருக்கை பரபக்தி; "அடியரோடிருந்தமை" என்னும்படி பூர்ணஸாக்ஷாத்காரம் பரஜ்ஞாநம்; அநுபவம் பெறுவிடில் நீரைப்பிரிந்த மத்ஸ்யம்போலே மூச்சடங்கும்படியிருக்கை பரமபக்தி என்று அருளிச்செய்யும்படி. நிரூபித்தால் தன்னில் இரண்டும் ஒக்கும். இவை ப்ராமாணிகருக்கு முக்த்யவஸ்தையிலே உண்டாமித்தனை. *மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுக்கு இங்கேயிருக்கச்செய்தே பகவத்ப்ரஸாதத்தாலே உண்டாய்த்து. இனி, "परभक्तिपरज्ञान-

---

கடவது என்னும் நியமமும் ஈச்வரனுடைய ஸங்கல்பத்தாலே ஏற்படக் குறையில்லை.

பரபக்தி முதலானவற்றின் லக்ஷணமென்னவெனில்: "பகவத் ஸ்வரூபாதிகளை நேரே காணவேணும் என்னும் ஆசை பரபக்தி; அவற்றைக் காண்பது பரஜ்ஞானம்; கண்டபின்பு மேன்மேலே அனுபவிக்க ஆசைப்படுவது பரமபக்தி" என்பது ஒரு லக்ஷணம். "பகவானோடு கூடினால் இன்புறுவது, பிரிந்தால் துன்புறுவதாயிருக்கை பரபக்தி; 'அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை' [திருவாய் 10-9-11] என்கிறபடியே பரமபதத்திற்போலே பரிபூர்ணமாகக் காண்கை பரஜ்ஞானம்; அவனை அனுபவிக்கப் பெறுவிடில் நீரைப்பிரிந்த மீன்போலே உயிரிழக்கும்படியிருக்கை பரமபக்தி" என்பது மற்றொரு லக்ஷணம். ஆராய்ந்து பார்த்தால் இரண்டு லக்ஷணங்களும் ஒன்றாகவேயிருக்கும். ப்ரமாணங்களில் கண்ட ஸாதனங்களை அனுஷ்டித்தவர்களுக்கு இந்தப் பரபக்தி முதலான நிலைகள் முக்தி நிலையிலே உண்டாகும்; மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுக்கு இங்கு இருக்கும்போதே பகவானுடைய அருளாலே உண்டாயின. இனி, ஸர்வஜ்ஞரான ஆசார்யர்களுக்கு "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளையே இயற்கையாகக் கொண்ட

பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

ஞானம் தமிழ் — அறிவை யளிக்கும் தமிழ்நூலை, புரிந்த — இயற்றிய, நான்-அடியேன், அன்பே-பக்தியே, தகளியா — அகலாகவும், ஆர்வமே — பரபக்தியே, நெய்யாக — நெய்யாக வும், இன்பு உருகு சிந்தை — இனிமையாலே உருகும் மனம், இடு திரியா — அகலில் இடப்படும் திரியாகவும், நன்பு — ஞான ஸ்வரூபமான ஆத்மா, உருகி — கரையப்பெற்று, ஞானம் — பரஜ்ஞாநமாகிற, சுடர் விளக்கு-கிளர்ந்தெரியும் விளக்கை, நாரணற்கு-நாராயணனுக்காக, ஏற்றினேன்-கொளுத்தினேன்.

परमभक्त्येकस्वभावं मां कुरुष्व ' (பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்த்யேக ஸ்வப₄ாவம் மாம் குருஷ்வ) என்று ப்ராமாணிகருக்கு அவன் பக்கலிலே ப்ரார்த்தி₂த்துப் பெறவேணும்; ஜ்ஞாநத₃ர்சந ப்ராப்திகள் என்று சாஸ்த்ரங்களிலே பரப₄க்த்யாதி₃க்களைச் சொல்லும்; 'ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परन्तप' (ஜ்ஞாதும் த்₃ரஷ்டுஞ்ச தத்த்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப) என்றிறே கீதாசார்யன் வார்த்தை. 'संज्ञायते-सन्दृश्यते व्याप्यधिगम्यते वा' (ஸம்ஜ்ஞாயதே-ஸந்த்₃ருஶ்யதே வ்யாப்யதி₄கம்யதே வா) என்றிறே பராசரவசநம்.

---

வனாக என்னைச்செய்''[சரணாகதிகத்யம்-15] என்று பரமபுருஷனிடம் பிரார்த்தித்துப் பெறும்படியிருக்கும் இந்நிலைகள். பரபக்தி முதலான இம்மூன்றையும் சாஸ்திரங்கள் ஜ்ஞாநம், தர்சனம், ப்ராப்தி என்று கோஷிக்கின்றன. ''ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச'' [கீதை 11-54] என்றருளினன்றோ கீதாசார்யன். ''ஸம்ஜ்ஞாயதே-ஸந்த்₃ருஶ்யதே வாப்யதி₄க₃ம்யதே'' [வி-பு 6-5-87] என்று ஜ்ஞாந தர்சந ப்ராப்திகளைச் சொன்னாரன்றோ ஸ்ரீபராசரபகவான்.

## பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

ஞானம் தமிழ் — அறிவையளிக்கும் தமிழ்நூலை, புரிந்த — இயற்றிய, நான் - அடியேன், அன்பே - பக்தியே, தகளியா — அகலாகவும், ஆர்வமே — பரபக்தியே, நெய்யாக — நெய்யாகவும், இன்பு உருகு சிந்தை — இனிமையாலே உருகும் மனமே, இடு திரியா — அகலில் இடப்படும் திரியாகவும், நன்பு — ஞான ஸ்வரூபமான ஆத்மா, உருகி — கரையப்பெற்று, ஞானம் — பரஜ்ஞாநமாகிற, சுடர் விளக்கு - கிளர்ந்தெரியும் விளக்கை, நாரணற்கு - நாராயணனுக்காக, ஏற்றினேன் - கொளுத்தினேன்.

---

परमभक्त्येकस्वभावं मां कुरुष्व ' (பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்த்யேக ஸ்வபா₄வம் மாம் குருஷ்வ) என்று ப்ராமாணிகருக்கு அவன் பக்கலிலே ப்ரார்த்தி₂த்துப் பெறவேணும்; ஜ்ஞாநத₃ர்ஶந ப்ராப்திகள் என்று ஶாஸ்த்ரங்களிலே பரப₄க்த்யாதி₃களைச் சொல்லும்; 'ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परन्तप'' (ஜ்ஞாதும் த்₃ரஷ்டுஞ்ச தத்த்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப) என்றிறே கீதாசார்யன் வார்த்தை. ''संज्ञायते-संदृश्यते व्याप्यधिगम्यते वा'' (ஸம்ஜ்ஞாயதே-ஸந்த்₃ருஶ்யதே வ்யாப்யதி₄க₃ம்யதே வா) என்றிறே பராஶரவசநம்.

---

வணுக என்னைச்செய்''[சரணாகதிகத்யம்-15] என்று பரமபுருஷனிடம் பிரார்த்தித்துப் பெறும்படியிருக்கும் இந்நிலைகள். பரபக்தி முதலான இம்மூன்றையும் சாஸ்திரங்கள் ஜ்ஞாநம், தர்சனம், ப்ராப்தி என்று கோஷிக்கின்றன. ''ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச'' [கீதை 11-54] என்றானன்றோ கீதாசார்யன். ''ஸம்ஜ்ஞாயதே-ஸந்த்₃ருஶ்யதே வ்யாப்யதி₄க₃ம்யதே'' [வி.பு 6-5-87] என்று ஜ்ஞாந தர்சந ப்ராப்திகளைச் சொன்னாரன்றோ ஸ்ரீபராசரபகவான்.

† பெரிய.அவ — ஜக₃த்₃ வைசித்ரியினுடைய நிர்வாஹகத்வம் போரும் என்னைத் திருத்தினபடி என்றநுஸந்திக்கிறார்.

வ்யா:— (அன்பே தகளியா) "வையந்தகளியா" என்று வையத்தைத் தம்முடையபக்தியிலே அநுஸந்தித்து பக்தியைத் தகளியாகக் கொள்ளுகிறார். தைலவர்த்திகளுக்கு ஒரு ஆதா₄ர

---

† அப்பிள்ளை அவ:- ப₄க₃வத்ப்ரஸாத₃லப்₃த₄மான தம் முடைய ப்ரேமாவஸ்தா₂விஶேஷங்களைத் தகளியும், நெய்யுமாக நிரூபியாநின்றுகொண்டு, ஸர்வஶேஷியான நாராயணனுக்குப் பரஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீ₃பத்தை ஏற்றி அடிமைசெய்யப்பெற்றேன் என்று க்ருதார்த்த₂ராகிறார்.

உரை:-விஷயவைலக்ஷண்யம் தூ₃ளமாக முளைத்துக் கிளருகிற பராப₄க்த்யுபக்ரமரூபமான ஸ்நேஹமானது-மேற்சொல்லுகிற நெய், திரி முதலானவற்றுக்குஆதா₄ரமானதகளியாகவும்,

---

† நம்பா-அவ-முதலாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி, எம்பெருமான் விசித்திரமான உலகை நிர்வஹித்துச் செல்லும் பெருமையை அனுஸந்தித்தார்; 'அன்பு, ஆர்வம் முதலானவற்றை உண்டாக்கி என்னைத் திருத்தினபடியைப் பார்த்தால், விசித்திரமான உலகை நிர்வஹித்துப்போவதனைத்தையும் ஒத்திராநின்றது' என்று ஈடுபடுகிறார் இவர் இப்பாசுரத்தில். பரமபுருஷனுடைய அருளாலே உண்டான தம் அன்பின் நிலைகளைத் தகளியும் நெய்யுமாக உருவகப்படுத்திக்கொண்டு, அனைவர்க்கும் தலைவனை நாராயணனுக்குப் ப்ரஜ்ஞானமாகிற கொழுந்துவிட்டெரியும் விளக்கை ஏற்றி அடிமைசெய்யப் பெற்றேன் என்று இனியராகிறார்.

வ்யா:—(அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக... சிந்தை இடுதிரியா... ஞானச்சுடர் விளக்கேற்றினேன்) ஒரு விளக்கென்றால், அதற்கும் நெய் முதலானவற்றுக்கும் ஆதாரமான அகல் வேண்டும்; அன்பைகலை ஆதாரமாகக்கொண்டதாய், விளக்குக்கு உபாதான காரணமான நெய் வேண்டும். விளக்குக்கு நேரே ஆதாரமான

---

† இனி, பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் தடித்த பெரிய எழுத்துக்களிலும், அப்பிள்ளையுரை மெல்லிய பெரிய எழுத்துக்களிலும், நம்முடைய விவரணம் சிறிய எழுத்துக்களிலும் கொடுக்கப்படும்.

ரம் வேணும். (ஆர்வமே நெய்யாக) அதடியாகப் பிறந்த அபி₄நிவேஶமே நெய்யாக. ஆர்வமாகிறது— அன்பினுடைய த்₃விதீயபர்வம். (இன்புருகு சிந்தையிடுதிரியா) விஷயத்தினுடைய ரஸ்யதையாலே ஶிதி₂லமான ஹ்ருதயம் திரியாக.

'அந்தவிஷயவைலக்ஷண்யத்துக்குஎன புகுருகிறதோ?' என்று பரிந்து காப்பிடும்படி பரிபக்வத₃ஶாபந்நமான அபி₄நிவேஶமானது மேல் ஏற்றத்தேடுகிற விளக்கை வளர்க்கைக்குறுப்பான நெய்யாகவும், விஷயவைலக்ஷண்யாநுஸந்த₄ாநஜநிதமான ஆநந்த₃த்தாலே த்₃ரவீபூ₄தமான அந்தப்ரேமாவஸ்தை₂களுக்கு வாய்த்தநிலையான ஹ்ருத₃யமானது மேற்சொல்லுகிற பரஜ்ஞானமாகிற விளக்குக்கு இடப்படும் திரியாகவும்.

---

திரி வேண்டும், நான் ஏற்றிய ஞானச்சுடர் விளக்குக்கு அன்பே அகலாகவும், ஆர்வமே நெய்யாகவும், மனம் திரியாகவும் ஆயிற்று என்கிறார். (அன்பே தகளியா) பரப₄க்தியின் ஆரம்பநிலையாய், பகவத்விஷயத்தின் பெருமையைக்கண்டதே காரணமாக உண்டாகி வளர்வதான பக்தி எனப்படும் அன்பே நான் ஏற்றிய ஞானச்சுடர் விளக்குக்கும், அதற்கு வேண்டிய சிந்தையாகிற திரிக்கும், பரபக்தியாகிற நெய்க்கும் ஆதாரமான அகலாயிற்று என்கிறார். (ஆர்வமே நெய்யாக) அகலை ஆதாரமாகக்கொண்ட நெய்யைப் போலே, பக்தியை ஆதாரமாகக்கொண்டு வளர்ந்த (பக்திமுற்றின நிலையான) பரப₄க்தி நெய்யாயிற்று. (ஆர்வம்) பக்திக்கும் பரஜ்ஞானத்துக்கும் இடையேயுள்ள அன்பின் நிலை. பகவத்விஷயத்தின் பெருமைக்கு என்ன ஆபத்து நேரிடுமோ? என்று அன்பின் மிகுதியாலே அஸ்தா₂நே ப₄யசங்கை பண்ணிப் பரிந்து பல்லாண்டு பாடும் பொங்கும் பரிவே இது. (நெய்யாக) மேலே ஏற்றப்போகிற பரஜ்ஞானமாகிற விளக்குக்கு உபாதானமாய் அதை வளர்க்கும் நெய்யாகிறது பரபக்தி. (இன்புருகு சிந்தை இடு திரியா) பகவத்விஷயத்தின் பெருமையை அநுஸந்திப்பதால் ஏற்படும் ஆநந்தத்தாலே உருகி நனைந்திருக்கிற மனம், பரஜ்ஞானமாகிற விளக்குக்கு இடப்படும் திரியாகிறது. (சிந்தை திரியா) விளக்குக்கு நேரே ஆதாரமாயிருக்கும் திரிபோலே, இம்மனமும் பரஜ்ஞானமாகிற பக்திநிலைக்கு ஆதாரமாயிருக்கிறது என்றபடி. பக்தியானது, பரபக்தியாக வளர்ந்து மனத்தைப்பற்றிநின்று பரஜ்ஞானம் என்னும் நிலையை அடைகிறது என்று கருத்து.

'நன்பு' என்று ஜ்ஞாநம்; ''तद्गुणसारत्वात्'' (தத்3கு3ணஸாரத்வாத்) என்கிறபடியே ஜ்ஞாதாவைக் காட்டுகிறது. ''अदाह्यः'' (அதா3ஹ்ய:) என்கிற ஆத்மா. இந்த ப4க்திக்கநுரூப

ஜ்ஞாநாநந்த3லக்ஷணமாய், ஜ்ஞாநகு3ணகமாய்; ப4க3வத3நந்யார்ஹஶேஷமாகையாலே அத்யந்தவிலக்ஷணமான ஆத்மவஸ்துவானது ப4க3வத்3கு3ணஸ்வாத3ரஸத்தாலே த்3ரவத்3ரவ்யமாயுருகிப் பரஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீ3பத்தை,

(நன்புருகி) ஆத்மவஸ்துவானது உருகி. 'நன்பு' என்று ஞானத்தைச் சொல்லுகிறது. இங்கு ஜ்ஞானத்தையும், அதன் மற்றொரு நிலையான ஆநந்த3த்தையும் ஸ்வரூபமாக உடையதாய், ஞானத்தையே ஸ்வபாவமாகவுமுடையதான ஆத்மாவைக் குறிக்கிறது. ''தத்3கு3ணஸாரத்வாத் து தத்3வ்யபதே3ஶ:'' [ப்3ரஹ்மஸூ 2-3-29] [ஞான குணத்தை ஸாரமாக உடையதாகையாலே ஆத்மாவானது ஞானமென்று சொல்லப்படுகிறது.] என்று ப்ரஹ்மஸூத்ரத்தில் சொல்லப்பட்டதன்றோ. அன்றிக்கே, 'நன்பு' என்று நன்மையைச் சொல்லுவதாய், இங்கு ஞானானந்தங்களிலும் சிறப்புடையதான ப4க3வத3நந்யார்ஹ ஶேஷத்வத்தை (பகவான் ஒருவனுக்கே உரியவனாயிருக்கும் தன்மையை) உடையதாகையாலே மிகச்சிறந்த ஆத்மாவைக் கூறுகிறதாகவுமாம். ஆத்மாவின் த4ர்மபூ4தஜ்ஞானமே பரஜ்ஞான நிலையை அடைகிறதாகையாலே ஆத்மா உருகுவதாகச் சொல்லப்படுகிறது. பகவானுடைய குணங்களாகிற மதுவைப்பருகி, ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்'' [பெரியதிருவ-34] என்னும் நிலைக்கும் மேலேசென்று ''அதா3ஹ்யோயம்''[கீதை 2-24] [ஆத்மாவானது எரித்து உருக்கமுடியாதது.] என்று சொல்லப்படும் ஆத்மாவானது நீர்ப்பண்டமாய் உருகிற்று. ஆர்வமாகிறநெய்யும் உருகிற்று; சிந்தையும் உருகிற்று; எல்லாவற்றுக்கும் ஆதாரமான ஆத்மாவே உருகுகிறது. பகவத்குணங்கள் படுத்துகிற பாடு இது. (ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன்) முதலாழ்வார்கள் ஜ்ஞாநப4க்திஸாக்ஷாத்காரங்களை வெளியிடுகிறார்கள் என்னும் பக்ஷத்திலே, ஞானத்தின் முறு நிலையான பக்தியாகிற கொழுந்துவிட்டெரியும் விளக்கை ஏற்றினேன் என்று பொருள். ''ஶேமுஷீ ப4க்திரூபா''[ஸ்ரீபாஷ்யமங்களம்] [பக்திரூபமான ஞானம்] என்றாரன்றோ பாஷ்யகாரரும். முதலாழ்வார்கள் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளை வெளியிடுகிறார்கள்

மான ஸம்ப₃ந்த₄த்தையுடையவருக்கு (ஞானச்சுடர் விளக்கேற்றினேன்) பரப₄க்தியாகிற விளக்கேற்றினேன். (ஞானத் தமிழ் புரிந்த நான்) பரப₄க்திபரவஶனாய்க் கவிபாடுகிற நான்.

---

ப₄க₃வத்தத்வயாதா₂த்ம்யஜ்ஞாந ஜநகமாய், வேதா₃திகள் போலே அதி₄காராநதி₄காரமன்றிக்கே ஸர்வாதி₄காரமான த்₃ராவிட₃ப்ரப₃ந்த₄த்தை லோகோபகாரமாகப் பண்ணின நான் ஸர்வஶேஷியான நாராயணனுக்கு ஸ்வஸ்வரூபபர ஸ்வரூபங்கள் உள்ளபடியே ப்ரகாசிக்கும்படி ஏற்றினேன்.

---

என்னும் பக்ஷத்திலே பரஜ்ஞானமாகிற கொழுந்துவிட்டெரியும் விளக்கை ஏற்றினேன் என்று பொருள்படுகிறது. விளக்கேற்றியது யாருக்கு? எனில்; விளக்கேற்றத்தகுந்தவனுக்கு என்கிறார், — (நாரணற்கு) ஸகல பதார்த்தங்களையும் தன்னுள் கொண்டவனை, ஸகல ரத்னங்களும் அடங்கிய பெட்டியை விளக்கேற்றிக் கண்டு அனுபவிப்பதுபோலே அனுபவித்தேன். பக்திசெய்யத்தகுந்த விஷயத்தில் பக்தி செய்தேன். இதுவரையில் பிரபந்தத்தில் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தத்தை அருளினார்; இனி, பிரபந்த வைலக்ஷண்யத்தையும், கர்த்தாவான தம்முடைய வைலக்ஷண்யத்தையும் அருளுகிறார் — (ஞானத் தமிழ் புரிந்த நான்) பரபக்திக்கு வசப்பட்டுக் கவிபாடுகிற நான். (ஞானம்) பகவானைப்பற்றிய உண்மையறிவை விளைக்கும் நூல். (தமிழ்) ஸம்ஸ்க்ருதவேதம்போலே கரடுமுரடாய், மூன்று வர்ணத்தவரே கற்கக்கூடியதாய், மற்றையோர் கற்கமுடியாததாயிருக்கையன்றிக்கே, அனைவரும் கற்கலாம்படியான அமிழ்தினுமினிய தமிழ்நூலை. தமிழுக்குள்ள இப்பெருமைகளை நினைத்தன்றோ "அந்தமிழினின்பப்பாவினை அவ்வடமொழியை" [பெருமாள்திரு1-4] என்றும், "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி" [திருநெடு 4] என்றும் ஆழ்வார்கள் வடமொழியிலும் தென்மொழியை விசேஷித்தார்கள். (புரிந்த நான்) தமிழ்நூலை உலகிற்கு உபகாரமாக இயற்றிய நான். பிறர்க்கு உபகரிப்பதையே எனக்குப் பெரும்பேறாகக் கொண்டு விரும்பி இயற்றிய நான். புரிகை-விரும்பிச்செய்கை. இப்போதே நூலைத்தொடங்கியிருந்த போதிலும், தம்மைப் பேசுவிக்கத் தொடங்கிய ஸர்வேச்வரன் ஸத்யஸங்கல்பனுகையாலும், பேசிப்பிரபந்தத்தை முடிக்காமல் நிற்கமுடியாத தம் தன்மையை நோக்கியும் முடிந்ததாகவே நிச்சயித்து, 'புரிந்த' [இயற்றிய] என்று இறந்த

பேசுவிக்க ஒருப்பட்ட ஈச்வரன் ஸத்யஸங்கல்பனுகை யாலும், பேசித்தலைக்கட்டியல்லது தரிக்கவொண்ணுத தம் ப்ரக்ருதியாலும் ஸித்₃த₄வத்கரித்து "தமிழ்புரிந்த" என் கிருர். "அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கவாவாருயிர் உருகியுக்க நேரியகாதலன்பு" என்று ஆழ்வாரும் பரப₄க்தியாதிகள் மூன்றும் தமக்கு உண்டென்று அருளிச்செய்கிற வர் 'சூடுதற்கவா" என்று பரப₄க்தியை முந்துற அருளிச்செய்து, பரஜ்ஞாநமருளிச்செய்கிறவிடத்தில் "அவா வாருயிர் உருகியுக்கநேரிய காதல்" என்று பரப₄க்தியாலே உருகியுக்க ஆருயிருண்டு-ஆத்மவஸ்து, அதனிடத்திலுண் டான ஸூக்ஷ்மமான காதல் என்று பரஜ்ஞாநாவஸ்தை₂யில் ஆத்மா த்₃ரவத்₃ரவ்யமாய் உருகும் என்னுமிடம் அருளிச்

---

காலத்திலே அருளிச்செய்கிருர். (நான்)"குருகூர்ச்சடகோபன்" என் றுப்போலே தம்முடைய ஆப்தியை அருளிச்செய்கிருர். (நாரணற்கு நான் விளக்கேற்றினேன்) நாராயணனுகிய அவனுடைய ஸ்வ ரூபத்தையும், ஜீவனுகிய என்னுடைய ஸ்வரூபத்தையும் உல கெல்லாம் உள்ளபடி அறிந்து வாழும்படியாக விளக்கேற்றினேன். (விளக்கேற்றினேன்) அஜ்ஞானமாகிற இருள் அழியும்படி விளக்கேற்றினேன்.

"அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவா ஆருயிர் உருகி உக்க நேரிய காதலன்பு" [திருவாசிரியம்-2] என்று நம் மாழ்வாரும் பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகள் மூன்றும் தமக்கு உண்டென்று அருளிச்செய்யும்போது, "அறைகழல் சுடர்ப்பூந் தாமரை சூடுதற்கு அவா" [பரமபுருஷனுடைய திருவடித்தாமரை களைத் தலையிலே சூடவேண்டுமென்னும் ஆசை] என்று பரபக்தியை முதலில் அருளிச்செய்தார்; அடுத்தபடியாக, " அவா ஆருயிர் உருகி உக்க நேரிய காதல்" [அவாவாகிற பரபக்தியாலே ஆருயிராகிற ஆத்மா உருகிவிழ அதனிடமுண்டான நுண்ணிய காதல்] என்று பரபக்தியிலிருந்து தோன்றும் பரஜ்ஞானத்தையும், அதற்கடுத்த படியாக, "காதல் அன்பு" என்று பரஜ்ஞானத்திலிருந்து தோன்றும் பரமப₄க்தியையும் அருளிச்செய்தார். இப்படி அருளிச்செய்யும் போது பரஜ்ஞானநிலையில் ஆத்மாவானது நீர்ப்பண்டமாய் உருகும் என்று அருளிச்செய்தாரன்றே. அப்படியே இவரும் "நன்புருகி ஞானச்சுடர் விளக்கு" என்கிருர். "ஆவல் அன்புடையார்" [நாச்-

செய்தாரிறே. அந்த நேரிய காதலாலே உண்டான அன்பு என்று பரமபக்தியைச் சொல்லுகிறது. "ஆவலன்புடையார்" என்றும், "சிரத்தை தன்னால் வேட்கை மீதூர" என்றும், "ஈரநெல்வித்தி—பேரமர் காதல்" என்றும் பர பக்திதனக்கே இரண்டும் உண்டாக அருளிச்செய்கையாலே 'அன்பு, ஆர்வம்' என்று ஓரவஸ்தைதன்னில் உபக்ரம சரமாவஸ்தைகளைச் சொல்லத்தட்டில்லை. "सङ्गात्सञ्जायते कामः" (ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:) என்றிறே கீதாசார்யன் அருளிச்செய்தது. "कामो नाम सङ्गस्य विपाकदशा" (காமோ நாம ஸங்கஸ்ய விபாகதஶா) என்றிறே அதுக்கு பாஷ்யம். "स्नेहो मे परमः" (ஸ்நேஹோ மே பரம:) "भक्तिश्च नियता वीर" (பக்திஶ்ச நியதா வீர) என்றானிறே திருவடியும். ஆகையாலே பர பக்த்யங்குர ரூபமான அன்பே தகளியென்றும், அத் தலைக்குப் பரிந்தல்லது நிற்கவொண்ணாதபடி பரிபக்வமான

---

திரு 4-8] என்றும், 'சிரத்தைதன்னால் வேட்கைமீதூர' [திருக்குறு-4] என்றும், "ஈரநெல் வித்தி-பேரமர்காதல்" [திருவாய் 5-3-4] என்றும் பரபக்திக்கு ஆவல், சிரத்தை, ஈரம் எனப்படும் தொடக்க நிலையும், அன்பு, வேட்கை, பேரமர் காதல் எனப்படும் முடிவு நிலையும் உள்ளதாக ஆழ்வார்கள் அருளிச்செய்வதுபோலே இவரும் "அன்பு" என்று பரபக்தியின் தொடக்கநிலையையும், "ஆர்வம்" என்று அதன் முடிவு நிலையையும் அருளிச்செய்கிறார். "ஸங்காத் ஸஞ்ஜாயதேகாம:" [கீதை 2-62] [ஸங்கத்திலிருந்து காமம் உண்டாகிறது] என்று இதரவிஷயங்களில் காதலிலும் இப்படி இரண்டு நிலைகள் உள்ளதாக கீதாசார்யன் அருளினான். "காமோ நாம ஸங்கஸ்ய விபாகதஶா" [காமம் என்பது ஸங்கத்தின் முற்றிய நிலையாகும்] என்று அந்த ச்லோகத்தின் பாஷ்யத்தில் எம்பெருமானாரும் அருளிச்செய்தார். "ஸ்நேஹோ மே பரமோ ராஜந்-பக்திஶ்ச நியதா வீர" [ரா-உத் 40-16] [அரசனே! எனக்கு உன்னிடமுள்ள அன்பு ஒப்பற்றது; வீரனே! (உன்னிடம்) பக்தியும் நித்யமாயுள்ளது.] என்று திருவடியும் பக்திக்கு இரண்டு நிலைகள் உள்ளதாக அருளினான். ஆகையாலே இவரும், பரபக்தியின் தொடக்க நிலையான அன்பையே விளக்குக்கு முதலில் வேண்டிய அகலாகவும், ஸர்வேச்வரனுக்குப் பல்லாண்டு பாடியல்லது நிற்கமுடியாத முற்

2. ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்
தானத்தால் மற்றவன்பேர் சாற்றிஞல்—வானத்
தணியமர ராக்குவிக்கு மஃதன்றே நங்கள்
பணியமரர் கோமான் பரிசு.

---

பரபக்தியை நெய்யென்றும், "நன்புருகி ஞானச்சுடர் விளக்கு" என்று ஆஶ்ரயமான ஆத்மவஸ்து உருகி விழும் படியான பரஜ்ஞாநாவஸ்தையை விளக்கென்றும் இவரும் அருளிச்செய்தாராயிற்று. "ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்" என்று பக்த்யங்குரமான ஸங்காவஸ்தை முதலாக நெஞ்சு ஸ்தலமாக உண்டாமதாயிருக்க, பரஜ்ஞாநாவஸ்தைக்குக் காரணமாக நெஞ்சைச் சொல்லுகிறது—"உருகுமால் நெஞ்சம்-பெருகுமால் வேட்கை" என்று பரபக்த்யவஸ்தையில் கரணமான நெஞ்சம் உருகும்; பரஜ்ஞாநாவஸ்தையில் கரணமான நெஞ்சும்,கரணியான ஆத்மாவும் உருகும் என்கிற விஶேஷம் தோற்றுகைக்காக. (1)

---

றின நிலையை அகலிலும் விளக்குக்கு அந்தரங்கமான நெய்யாகவும், இவ்விரண்டிலிருந்தும் தோன்றியதாய், "நன்புருகி ஞானச்சுடர் விளக்கு" என்கிறபடியே தனக்கு இருப்பிடமான ஆத்மவஸ்துவையும் உருகச்செய்யும் பரஜ்ஞான நிலையை அகலையும்,நெய்யையும் துணைகொண்டு எரியும் விளக்காகவும் அருளிச்செய்தாராயிற்று, "ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப்பெருஞ்செய்யுள் பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த" [திருவாய் 5-3-4] என்கிறபடியே பரபக்தியின் தொடக்க நிலையான அன்பு முதலாகப் பரமபக்திரீருக எல்லாமே நெஞ்சையே ஆச்ரயித்து உண்டாவதாயிருக்க, "இன் புருகு சிந்தை இடுதிரியா-ஞானச்சுடர் விளக்கேற்றினேன்" என்று பரஜ்ஞான நிலை ஒன்றுக்கே இருப்பிடமாக நெஞ்சைச் சொல்லுவதற்குக் கருத்தென்ன? எனில்: "உருகுமால் நெஞ்சம், பெருகுமால் வேட்கை" [திருவாய் 9-6-1] என்று பரபக்திநிலையில் இந்த்ரியமான நெஞ்சம் மாத்திரம் உருகும்; பரஜ்ஞானநிலையில் இந்திரியமான நெஞ்சமும், அவ்விந்திரியத்தையுடைய ஆத்மாவுமே உருகும் என்கிற பரஜ்ஞானத்தின் பெருமை தோற்றுவதற்காக அப்படி அருளிச்செய்கிறுர். 1.

நாரணன் தன் — ஸ்ரீமந் நாராயணனுடைய, நாமங்கள்- (ஸ்வரூபரூபகுணங்களைச் சொல்லும்) தனிப்பெயர்களையும், மற்று — மற்றும், அவன்பேர் — அப்பெருமானுடைய (விபூதி விஸ்தாரங்களுக்கு வாசகமான) திருநாமங்களையும், ஞானத் தால் — (அன்புருவான) அறிவாலே, நன்கு உணர்ந்து-உள்ள படியறிந்து, தானத்தால்-(அன்பின் முடிவெல்லையான) ஸ்த₂ா னத்திலே நின்று, சாற்றினல் — அநுஸந்தித்தால், நங்கள் பணி அமரர் கோமான் பரிசு — நமக்கு பந்துக்களாயும் எப் போதும் கைங்கர்ய பரர்களாயுமுள்ள நித்யஸூரிகளுக்குத் தலைவனை எம்பெருமானுடைய தன்மையாவது, வானத்து அணி அமரர் ஆக்குவிக்கும் அஃது அன்றே - பரமபதத்திற்கு அலங்காரமான நித்யஸூரிகள் போலே (நம்மைச்) செய்து வைக்குமதுவேயாம்.

பெரிய அவ:— (ஞானத்தால்) ப₄க்திபரவஶராய்க் கவிபாடி ஞர்க்கு அவன் கொடுக்கும் பரிசு சொல்லுகிறது.

வ்யா:— (ஞானத்தால் நன்குணர்ந்து) பக்தியாலே நன்ருக வுணர்ந்து. (நாரணன்தன் நாமங்கள்) அஸாத₄ாரணமான

---

அவ:— ப₄க்திபரவஶர்களாய்க் கொண்டு அக்ரமமாகத் திருநாமங்களைச் சொல்லிக் கூப்பிடுமவர்களை ஸர்வேஶ்வரன் நித்யஸூரிகளோடு ஒத்த தரத்தைக் கொடுத்து ரக்ஷிக் கும் என்கிருர்.

உரை:— வகுத்த ஶேஷியான ஸர்வேச்வரனுடைய விக்₃ ரஹாதி₃களுக்கு வாசகமாய் அஸாத₄ாரணமான திருநாமங்

---

அவ:—பக்திக்கு வசப்பட்டு முறைகெடத் திருநாமங்களைச் சொல்லிக் கூப்பிடுமவர்களுக்கு ஸர்வேச்வரன் நித்யஸூரிகளோ டொத்த பெருமையைப் பரமபதத்திலே கொடுத்து ரக்ஷித்தருளு வான் என்று அருளிச்செய்கிருர் இரண்டாம் பாட்டில்.

வ்யா:— (நாரணன் தன் நாமங்கள்) நரஸமூஹங்களுக்கு இயற் கையிலேயே ஏற்பட்ட ஸ்வாமியான நாராயணனுடைய தனிப்பெயர்

நாராயணுதி₃ நாமங்களை, விபூ₄தியோக₃த்தைப்பற்றின நாமங்களை (தானத்தால் மற்றவன் பேர் சாற்றினுல்) பக்தியாலே உணர்ந்தபடியேசொன்னுல்.(வானத்தித்யாதி₃) பரமபதத்துக்கு

---

களையும். மற்றும் விபூ₄தியோக₃த்துக்கு வாசகமான திரு நாமங்களையும், ப்ரேமத₃ஶாபந்நமான ஜ்ஞாநத்தாலே அவனுக்கும் தனக்குமுண்டான ஶேஷஶேஷித்வ ரூபமான உறவளவும் செல்ல உள்ளபடி அறிந்து, ''பேர் பல சொல்லிப் பிதற்றி'' என்கிறபடியே சொல்லியல்லது நிற்கவொண்ணுத படி தலைமண்டைகொண்ட ப்ரேமத்தினுடைய முடிஸ்த₂ா னத்திலே நின்று அடைவுகெடக் கூப்பிட்டால். பரமாகாஶஶப்₃த₃வாச்யமான பரமபதத்தில் ஸ்வஸம்பந்தத்தாலே

---

கள். நாராயணன், விஷ்ணு, ஹரி முதலான அவனையே குறிக்கும் பெயர்களும், பரவாஸுதேவன், அநிருத்தன், ராமன், கிருஷ்ணன் முதலான அவனுடைய விக்ரஹங்களைக்குறிக்கும் நாமங்களும் நாரணன் தன் நாமங்கள் எனப்படுகின்றன. இவை வேறொரு தெய்வத்தைக் குறிக்கின்றனவோ என்று சங்கிப்பதற்கும் இடமில்லையன்றோ. (மற்று அவன்பேர்)பிரமன், உருத்திரன், இந்திரன். வாயு, ஆகாசம் முதலான அவனுடைய விபூதிகளையும் குறிக்கக்கூடியவையாய், சரீரியான அவனளவும் சென்றல்லது நில்லாதவையாகையாலே அவன் பெயரேயான நாமங்களையும். வேறு சில தத்துவங்களைக் குறிக்கும் பெயர்களோ என்று பாமரர்கள் ஐயமுற்றபோதிலும், வேதாந்த வ்யுத்பத்தியுடையவர்களுக்கு இவையும் அவன் பெயரே என்கை. (ஞானத்தால் நன்குணர்ந்து) பக்திநிலையடைந்த ஞானத்தாலே நன்ருக அறிந்து.(நன்குணர்ந்து)'அவன் உடையவன், நாம் அவனுடைய உடமைப்பொருள்' என்னும் உறவளவும் செல்ல நன்ருக அறிந்து. (தானத்தால்) ''பேர் பல சொல்லிப் பிதற்றிப் பித்தரென்றே பிறர்கூற'' [திருவாய் 3-5-8] என்கிறபடியே திருநாமம் சொல்லியல்லது நிற்கவொண்ணுதபடி தலைமண்டைகொண்ட அன்பின் மேலெல்லை நிலத்தில் நின்று. (சாற்றினுல்) ''அத்யந்த ப₄க்தியுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ சக்ரம:''[மிகவும்பக்தியுடையவனுக்கு சாஸ்திரமும் இல்லை, முறையும் இல்லை.] என்கிறபடியே முறைகெடக்கூப்பிட்டால்; அல்லது அறிந்தவளவில் சொன்னுல். இப்படி ஸ்வயம்ப்ரயோஜனமாகத் திருநாமஞ் சொல்லுவார்க்கு

ஆபரணமான நித்யஸூரிகளோடே ஒரு கோவையிலே கோக்குமதிறே. (நங்களித்யாதி₃) ஒருநாள் பணிந்து ஒருநாள் பணியாதிராதே பணிகையே ஸ்வபா₄வமான அமரர் கோமானுடைய படி. 2.

---

நிறம் கொடுக்கும்படியான அழகை உடையரான ஸூரிகளோடொத்த பெருமையுடையராம்படி பண்ணுமதன்றோ. நமக்கு நிருபாதி₄க ப₃ந்து₄க்களாய் ''नित्याञ्जलिपुटाः'' (நித்யாஞ்ஜலிபுடா:) என்கிறபடியே கையும் அஞ்ஜலியுமாய்க் கொண்டுதொழுகையே நித்யயாத்ரையாக உடையராயிருக்கிற அநந்தவைநதேயாதி₃களான நித்யஸித்₃த₄ புருஷர்களுக்கு நிருபாதி₄கஶேஷியானவனுடைய ப்ரகாரம், இங்கே அடைவுகெடத் திருநாமஞ்சொன்னவர்களை அங்கே அடைவு கெட்டுக் கூப்பிடும் கோஷ்டியிலே வைக்கும் என்றபடி. 2.

---

ஈச்வரன் தரும் பலனைச் சொல்லுகிறது மேலே—(வானத்து அணி அமரர் ஆக்குவிக்கும் அஃதன்றே) 'பரமாகாஶம்' எனப்படும் மேலான வானமாகிற பரமபதத்திலே, அந்தப் பரமபதத்திற்கும் அழகு கொடுப்பவர்களான நித்யஸூரிகளோடு ஒத்தவர்களாக ஆக்குவிப்பதன்றோ; (நங்கள் பணி அமரர் கோமான் பரிசு) நமக்கு இயற்கையிலேயே உறவினராயிருப்பவர்களாய், ''நித்யாஞ்ஜலீபுடா ஹ்ருஷ்டா: நம இத்யேவ வாதி₃ந:'' [எப்போதும் அஞ்சலி செய்துகொண்டேயிருப்பவர்கள்; எப்போதும் ஆநந்தமடைபவர்கள்; எப்போதும் 'நம:' என்றே சொல்லிக்கொண்டிருப்பவர்கள்] என்கிற படியே எப்போதும் பணிவதையே இயற்கையாகக் கொண்டவர்களான ஆதிசேஷன், கருடன் முதலான நித்யஸூரிகளுக்கு இயற்கையிலேயே ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய ஸ்வபாவம். இவ்வுலகில் ஸ்வயம் ப்ரயோஜனமாக முறையறியாமல் திருநாமஞ் சொன்னவர்களை, அவ்வுலகில் முறைகெடத் திருநாமஞ்சொல்லும் நித்யஸூரிகள் கோஷ்டியிலே, தன்பேருக வைத்தருளுவான் ஸர்வேச்வரன் என்று கருத்து, ''நங்கள் அமரர்'' [நமக்கு இயற்கையுறவினரான தேவர்] 'பணி அமரர்' [பணிவதையே இயற்கையாக உடைய தேவர்கள்] என்று விசேஷிக்கையாலே அஹங்காரிகளான இந்திராதிதேவர்களல்லர் என விளங்குகிறது. 2

3. பரிசு நறுமலரால் பாற்கடலான் பாதம்
புரிவார் புகப்பெறுவர் போலாம்—புரிவார்கள்
தொல்லமரர் கேள்வித் துலங்கொளிசேர் தோற்றத்து
நல்லமரர் கோமான் நகர்.

பால் கடலான் பாதம்—க்ஷீராப்திநாதனுடைய திருவடிகளை, நறு மலரால்—பரிமளம் மிக்க புஷ்பங்களைக்கொண்டு, பரிசு புரிவார்—பக்திமுறையாலே விரும்பித் தொழுமவர்கள், புரிவார்கள் தொல் அமரர்-ஸாதநாநுஷ்டாநபரர்களான (பிரமன் முதலிய) பழைய தேவர்களுக்கும், கேள்வி—(கண்ணால் காணமுடியாமல்) காதால்மாத்திரம் கேட்டுக்கொண்டிருக்கக்கூடியதும், துலங்கு ஒளிசேர் தோற்றத்து—மிகவிளங்குகின்ற ஒளிபொருந்திய காட்சியையுடையதுமான, நல் அமரர் கோமான் நகர்—நித்யஸூரிகள் தலைவனுடைய பெருநகரமான பரமபதத்தை, புகப்பெறுவர் போலாம்—அடையப் பெறுவர்களாம்!

பெரி-அவ: (பரிசு) அவன் செய்ததிலே தாம் ஈடுபடுகிறார்.

வ்யா:—(பரிசு நறுமலரால்)பக்திப்ரகாரத்தாலே செவ்விப் பூவைக்கொண்டு. (பாற்கடலான் பாதம் புரிவார்) ஸம்ஸாரிகளை

---

அவ:-அடுத்தணித்தாகத் திருப்பாற்கடலிலே வந்து கண் வளர்ந்தருளுகிற நீர்மையை உடையவனை ஆஶ்ரயிக்குமவர்கள், பரமபதத்தைச் சென்று ப்ராபிக்கப்பெறுவர் என்கிறார்

உரை:—செவ்வி குன்றாத அழகிய பூக்களைக்கொண்டு ஸம்ஸாரிகளை அக்கரைப்படுத்துகைக்காகத் திருப்பாற்கட

---

அவ:-சென்ற பாட்டில் அருளியதையே விவரிக்கிறார். பரமபதத்திலிருந்து, ஸம்ஸாரிகளுக்கு அருகிலிருப்பதான திருப்பாற்கடலிலே வந்து கண்வளரும் ஸௌலப்யமுடையவனுடைய திருவடிகளை உபாயமாக அடைபவர்கள் பிரமன் முதலிய தேவர்களாலும் அடைய அரிய பரமபதத்தைச் சென்றடைவர் என்று தமக்கு அவன் செய்த நன்மையிலே ஈடுபடுகிறார்.

வ்யா:-(நறுமலரால்) செவ்வி மாறாததாகையாலே, நறுமணம் மிக்கதும், அழகியதுமான மலர்களைக்கொண்டு. (பாற்கடலான்

அக்கரைப்படுத்தவேணுமென்று திருப்பாற்கடலிலே கண்வளரு கிறவனுடைய திருவடிகளை ஆஶ்ரயிக்குமவர்கள் புகப்பெறு வர் போலாம். (புரிவார்களித்யாதி₃) ஸாத₄கராய் முற்பட நாலுநாளிருந்துள்ள ப்₃ரஹ்மாதி₃கள் என்றும் கேட்டே போவ

---

விலேமுற்கோலிக் கண்வளர்ந்தருளுகிறவனுடைய திருவடி களை ஶாஸ்த்ரோக்தமானப்ரகாரத்தால் ப₄க்திபரவஶராய்க் கொண்டு ஆஶ்ரயிக்குமவர்கள், முழுகுவது, மூக்குப்புதைப் பது, ஜபிப்பது, தொழுவது, புகழுவதாய்க்கொண்டு இடை விடாமல் அவனை ஆச்ரயித்துக்கொண்டு போரக்கடவர்க ளாய், ஸம்ஸாரிகளில் பழையரான ப்₃ரஹ்மாதி₃தே₃வர்கள்

---

பாதம்) ஸம்ஸாரிகளை ஸம்ஸாரஸாகரத்திலிருந்து அக்கரைப்படுத்த வேண்டும் என்பதற்காகவே, பரமபதத்திலிருந்து வெகுதூரம் வந்து ஸம்ஸாரமண்டலத்திலிருக்கும் திருப்பாற்கடலிலே யோகநித்திரை செய்யுமவனுடைய திருவடிகளை. (பரிசு புரிவார்) பக்திப்ரகாரத்திலே ஆச்ரயிக்கிறவர்கள். சாஸ்த்ரோக்தமுறையிலே ஆச்ரயிக்குமவர்கள் என்றுமாம். (பாதம் புரிவார்) புரிகை-விரும்பியடைகை. திருவடி களை உபாயமாக விரும்பி அடைபவர்கள். இதனால், "ஞானத்தால்" என்று சென்ற பாசுரத்திலும், 'பரிசு' என்று இப்பாசுரத்திலும் எடுக்கப்பட்ட ப₄க்தி ப்ரபந்நர்களுக்கும் உள்ளதான ஸாத்₄யப₄க்தி யெனப்படும் ஸ்வயம்ப்ரயோஜநப₄க்தியேயொழிய ஸாத₄னப₄க்தி யன்று என்று காட்டப்படுகிறது. சென்ற பாசுரத்தில் திருநாம ஸங்கீர்த்தனமும் 'நன்குணர்ந்து' என்று ஸ்வரூபஜ்ஞானத்தை முன்னிடச் சொல்லுகையாலே ஸ்வயம்ப்ரயோஜனமாய், ப₂லரூபமா யிருப்பதேயாகும்; ஸாதனரூபமாயிருப்பதன்று. இங்கு புஷ்பங்களைக் கொண்டு ஆச்ரயிப்பதும் அப்படிப்பட்டதே. இனி, இப்படி அவ னுடைய திருவடிகளைச் சரணடைபவர்களுக்குக் கிடைக்கும் பலனைச் சொல்லுகிறார்,- (புரிவார்கள்)புரிகை-முயலுகை. கர்மஜ்ஞானங்களை அங்கமாகக்கொண்ட பக்தியை ஸாத₄னமாகப் பற்றியவர்களாகை யாலே, முழுகுவது, (ப்ராணாயாமம் செய்வதற்காக) மூக்குப்புதைப் பது, ஜபிப்பது, தொழுவது, தோத்திரம் செய்வது முதலான செயல் களை ஸாதனபுத்தியுடன் இடைவிடாமல் செய்துகொண்டு அவனை அடையும் பிரமன் முதலான தேவர்களைச் சொல்லுகிறது. (தொல்ல மரர்) நம்மைப்போன்றவர்களைக்காட்டிலும் சிலநாள் முற்படப் பிறந்தவர்கள். (அமரர்) கல்பத்தின் ஆதியில் பிறந்து முடிவுவரை யில் வாழ்பவர்களாகையாலே 'அமரர்' [மரணமற்றவர்கள்] என்று

தாம். (துலங்கொளிசேர் தோற்றத்து) "अत्यर्कानलदीप्तं तत्" (அத்யர்க்காநலதீ₃ப்தம் தத்) என்றுமொளியையுடைத்தாயிருந்

---

காணவொண்ணுதே என்றும் கேட்டே போமித்தனையாய் நிரவதி,கதேஜஸ்ஸை உடைத்தாய்க்கொண்டு ப்ரகாசிக்கக் கடவதாயிருந்து பிரியில் தரிக்கமாட்டாத நன்மையையுடைய

---

அழைக்கப்படும் பிரமன், சிவன் முதலான தேவர்கள். (தொல்லமரர்) தொன்மையையிட்டே பிறப்பிறப்பற்றவரென் அழைக்கப்படுபவர்கள். (கேள்வி நகர்) இவர்கள் கேட்டே போமதாய், என்றும் கண்ணுல் காணமுடியாததான பரமபதத்தைச் சொல்லுகிறது.

"யந்ந தே₃வா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர:।
ஜாநந்தி பரமேஶஸ்ய தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம்॥"
[வி-பு 1-9-55]

[யாதொன்றை தேவர்களும், முனிவரும், (பிரமனுகிய) நானும், சங்கரனும் அறியமாட்டாரோ, அதுவே பரமேச்வரனுன விஷ்ணுவின் பரமபதமாகும்.] முதலான பல்லாயிரக்கணக்கான பிரமாணங்களில் பிரமன், உருத்திரன் முதலான தேவர்கள் பரமபதத்தை அறியமாட்டார்கள் என்று கோஷிக்கப்படுகிறதன்றே. இப்படி ப்ரஹ்மருத்₃ராதி₃களாலும் காணப்படாமைக்குக் காரணம் காட்டுகிறது அடுத்தபடியாக. (துலங்கு ஒளிசேர் தோற்றத்து நகர்) என்றும் எல்லையற்ற தேஜஸ்ஸை உடையதாய்க்கொண்டு விளங்கும் நகராகையாலே, எவராலும் காணமுடியாதது என்கை.

"அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்த₂ாநம் விஷ்ணோர் மஹாத்மந:।
ஸ்வயைவ ப்ரப₄யா ராஜந் து₃ஷ்ப்ரேக்ஷம் தே₃வதா₃நவை:॥"
[பா₄ர-ஆர 186-18]

[மஹாத்மாவரன விஷ்ணுவினுடைய அந்த ஸ்தானம் ஸூர்யனுடையவும், அக்னியுடையவும் ஒளியை விஞ்சியது. அரசனே! அது தன்னுடைய ஒளியினுலேயே தேவர்களாலும், அஸுரர்களாலும் காண அரியது.] என்று பாரதத்திலும் கோஷிக்கப்படுகிறதன்றே. (நல்லமரர்) அவனேடு எதிரம்புகோக்கும் அத்தொல்லமரரைப்போலல்லாமல், அவனை ஒருகணம் பிரிந்தால், "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக₄வ" [ரா-அ53-31] [ராகவனே! உன்னைப் பிரிந்தால் ஸீதையும் நானும் உயிரிழப்போம்.] என்கிற படியே ஸத்தையிழக்கக்கூடியவர்களாகையாலே அப்பரமபுருஷ

துள்ள. (நல்லமரர் கோமான் நகர்) என்றும் ஸாத்₄யரான நித்யஸூரிகளுக்கு சேஷியாயிருந்துள்ளவனுடைய நகரை. "பரிசு நறுமலரால் பாற்கடலான் பாதம் புரிவார் புகப்பெறுவர் போலே! என்ன ஆச்சர்யமோ!" என்று ஈடுபடுகிறார். 3.

---

நித்யஸூரிகளுக்கு நாயகனான ஸர்வேச்வரனுடைய வைகுந்த மாநகரத்தை ப்ராபிக்கப் பெறுவராம். 3

---

னிடம் பேரன்பாகிய பெருநன்மையை உடைய நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. (நல்லமரர்-தொல்லமரர்) இந்த நன்மை யில்லாமையாலே நெடுங்காலமிருந்தபோதிலும் அவர்கள் ஒரு போதும் நமக்கு ஸாத்₄யர் [அடையத்தக்கவர்] அல்லர். இந்த நன்மை உடையவர்களாகையாலே இவர்கள் நமக்கு எப்போதும் ஸாத்₄யர் ஆகிறார்கள். "யத்ர பூர்வே ஸாத்₄யா: ஸந்தி தே₃வா:" [புருஷஸூக்தம்] என்று வேதத்திலும் இதனாலன்றோ நித்யஸூரிகள் ஸாத்₄யதே₃வர்கள் என்று அழைக்கப்பட்டனர். (தொல்லமரர் கோமான் நகர் புகப்பெறுவர் போலாம்) நித்யஸூரிகளுக்கு நாயகனான நாராயணனுக்கு உடைமைப்பொருளாயிருக்கும் வைகுந்தமா நகரை எளிதிலே அடையப்பெறுவர்களாம்! இதென்ன ஆச்சர்யம்! (போலாம்) என்னும் பதம் ஆச்சரியத்தைக் காட்டுகிறது. நெடுங் காலம் ஸாத₄நாநுஷ்டானம் செய்தவர்களுக்கும் அடைய அரிதான பரமபதம் ஒருகால் அவனையே உபாயமாக நினைத்தவர்களுக்கு எளிதாயிருப்பது பேராச்சரியமன்றோ! இவ்வாச்சரியம் நிகழு வதற்குக் காரணம் ப்ரஹ்மாதிதேவர்களுக்கு பகவத்ஸம்பந்த ஜ்ஞானம் பரிபூர்ணமாக இல்லாமலிருப்பதும், ப்ரபந்நர்களுக்கு அவ்வறிவு பரிபூர்ணமாக இருப்பதுமேயாகும். வேலைசெய்து கூலி பெற நினைக்கும் வேலைக்காரனுக்கு, கூலிக்குத்தக்க வேலைசெய்த பின்பே பலனேற்படுவதையும், ஸம்பந்தஜ்ஞானமுள்ள பெண்டு பிள்ளைகள் முதலான உறவினர்கள் ஒருவேலையும் செய்யாமலிருந் தாலும் பலன் பெறுவதையும் உலகில் காண்கிறோமன்றோ. இப் படியே அவன் நமக்கு எல்லாவுறவுமாவான் என்பதை அறியாமல், ஒரு ஸாதனத்தை அனுஷ்டித்து மோக்ஷத்தைப்பெற நினைக்கும் ப்ரஹ்மாதிகளுக்கு, ஒப்பற்ற புருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஒரு சிறிதாவது ஒப்பாகும் பெருமுயற்சியைச் செய்தபின்பே பலனளிக் கிறான். 'அவன் நமக்கு எல்லாவுறவுமாகையாலே, நம் காரியம் செய்வது அவனுடைய பொறுப்பு' என்றிருக்கும் ப்ரபந்நர்களுக்கு ஒரு முயற்சியையும் எதிர்பாராமல் பரமபுருஷார்த்தத்தைக் கொடுக் கிறான். இதுவே இப்பாசுரத்தில் காட்டப்பட்ட பேராச்சரியம் நிகழ்வதற்குக் காரணமாகும். 3.

4. நகரிழைத்து நித்திலத்து நாண்மலர்கொண்டு ஆங்கே
திகழுமணி வயிரம் சேர்த்து—நிகரில்லாப்
பைங்கமல மேந்திப் பணிந்தேன் பனிமலராள்
அங்கம்வலங் கொண்டா னடி.

நகர் இழைத்து - என்னுடைய நெஞ்சை எம்பெருமான் வாழக்கூடிய தலைநகராக அமைத்து ஆங்கே நித்திலத்து நாள் மலர் கொண்டு-அதிலே ஸ்நேஹமாகிற முத்தை அன்றலர்ந்த புறவிதழாக அமைதது, திகழும் மணிவயிரம்சேர்த்து- ஸங்கம் காமம் என்கிற நல்ல மாணிக்கத்தையும் வயிரத்தையும் அல்லியும் தாதுமாக வைத்து, நிகர் இல்லா-ஒப்பில்லாத, பைங் கமலம் ஏந்தி - பக்தியாகிற அழகிய தாமரைப்பூவைத் தரித்துக் கொண்டு, பனிமலராள் அங்கம் வலம் கொண்டான் - குளிர்ந்த தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதேவியுடைய திருமேனியை வலத்திருமார்பில் கொண்ட எம்பெருமானுடைய, அடி— திருவடிகளை, பணிந்தேன்—வணங்கினேன்.

பெரி- அவ: (நகரிழைத்து) 'அன்பேதகளியா'' என்றொரு விளக்கு ரூபித்தாற்போலே ஒரு புஷ்பமாக ரூபித்து அத்தைக் கொண்டு ஆஶ்ரயிக்கிறார்.

வ்யா:—(நகரிழைத்து)நெஞ்சைக் கோயிலாகக்கொண்டு. (நித்திலத்தித்யாதி) குளிர்ந்த முத்தையிதழாகக் கொண்டு.

---

அவ;— 'அன்பேதகளி' என்று தொடங்கித் தம்முடைய பக்த்யவஸ்தாவிஶேஷங்களைத் தகளியும் நெய்யும் விளக்கு யாக நிரூபித்தாற்போலே, தம்முடைய பக்த்யவஸ்தா விஶேஷங்களை இதழும் அல்லியும் தாதுமாயிருப்பதொரு தாமரைப்பூவாக நிரூபித்துக்கொண்டு அவனை ஆச்ரயிக்கிறார்.

---

அவ:— 'அன்பே தகளி' என்னும் முதற்பாட்டிலே பக்தியின் தொடக்கநிலைகளைத் தகளியாகவும், நெய்யாகவும், முற்றிய நிலையான பரஜ்ஞானத்தை ஒரு விளக்காகவும் ரூபணம்செய்து பேசினாற்போலே, தம்முடைய பக்தியின் நிலைகளை இதழ், அல்லி, தாது ஆகியவற்றோடு கூடிய ஒரு தாமரைப்பூவாக ரூபணம் செய்து கொண்டு, அம்மலராலே அவனை ஆச்ரயிக்கிறார்.

(ஆங்கித்யாதி₃) அதிலே திகழாநின்ற மணிவயிரங்களாகிற

---

உரை:- ப₄க்த்யுத்பத்திஸ்த₂ானமான நெஞ்சை ராஜாதி₄ ராஜனை ஸர்வேச்வரனுக்குத் திருப்படைவீடாக வகுத்து, அந்தத் திருப்படைவீட்டிலே, அந்நெஞ்சிலே உண்டாய். ஸ்வாதந்த்ர்யமாகிற அழல்தட்டாமையாலே குளிர்ந்து "ஸர்வ-க₃ந்த₄:" (ஸர்வக₃ந்த₄:) என்கிற விஷயத்தைப்பற்றிக் கிளருகையாலே பரிமளிதமாய் ஒளிவிடுகிற ஸ்நேஹமாகிற முத்தை செவ்விகுன்றாத இதழாக வகுத்துக்கொண்டு. ப்ராப்தியையும், வைலக்ஷண்யத்தையும் விஷயீகரித்து இரண்டுகூறுக

---

வ்யா:-(நகரிழைத்து) ப₄க்தி உண்டாகுமிடமான நெஞ்சை ஸர்வலோகசக்ரவர்த்தியான ஸர்வேச்வரனுக்கு ராஜதானியாக ஏற்படுத்தி. (நகர்) "நெஞ்சமே நீள்நகர்" [திருவாய் 5-8-2] என்று நம்மாழ்வார் இதை விவரித்தார். உபமேயத்தை மறைத்து உபமானமாகவே சொல்லுகையாலே 'ரூபகாதிசயோக்தி' எனப்படும் அலங்காரமாகும். மேலேயும் பெரும்பாலும் இவ்வணியேயாகும். நகரிழைக்க முத்துமாணிக்க வயிரங்கள் வேணுமே என்னில்: அவையும் உண்டென்கிருர் மேலே;— (நித்திலத்து நாண்மலர் கொண்டு) முத்துப்போன்ற ஸ்நேஹத்தை அன்றலர்ந்தபுறவிதழாகக்கொண்டு. நித்திலம்-முத்து. ஸாதனபக்திநிஷ்டர்களுடைய ஸ்நேஹம் ஸ்வாதந்த்ர்யமாகிற வெப்பத்தோடு கலந்திருக்கும்; அவ்வெப்பமில்லாமல் பாரதந்த்ர்யமாகிற தண்மை கலந்திருக்கையாலே, இங்கு பக்தியின் தொடக்கநிலையான ஸ்நேஹத்தைக்குளிர்ந்த முத்தாகவே கூறுகிருர். (ஆங்கே நித்திலத்து நாண்மலர் கொண்டு) நெஞ்சமாகிற அத்தலை நகரிலே, "ஸர்வக₃ந்த₄:" [எல்லா நறுமணங்களேயும் உடையவன்] என்று மறைமுடிகளில் ஓதப்படும் பகவத்விஷயத்தைப்பற்றிக் கிளருமதாகையாலே நறுமணம் மிக்கதாய், அழகியதாய், ஒளிவிடுகிற ஸ்நேஹமாகிற தண்முத்தை ப₄க்தியாகிற தாமரையின் அன்றலர்ந்த புறவிதழாகக்கொண்டு. (மலர்) மேலே 'பைங்கமலம்' என்று மலரும். 'மணிவயிரம்' என்னுமிடத்தில் அல்லியாகிற அகவிதழும் குறிக்கப்படப்போகின்றனவாகையாலே இந்த 'மலர்' என்று புறவிதழைச்சொல்லுகிறது. (ஆங்கேதிகழும்மணிவயிரம் சேர்த்து) ஸ்நேஹத்தை அடுத்து ஸங்கம், காமம் என்னும் இரண்டு பக்திநிலைகள் உண்டாகின்றன. 'ஸர்வேச்வரன் நமக்கு வகுத்த ஸ்வாமி' என்று அவனுடைய ப்ராப்தியை அனுஸந்திக்கும் போது ஸங்கம் எனப்படும் பக்திநிலை உண்டாகிறது. 'ஸர்வேச்வரன் இனியவன்' என்று அவனுடைய சிறப்பை அனுஸந்திக்கும்போது 'காமம்' எனப்படும்

அல்லியையுமுண்டாக்கி. (நிகரித்யாதி) ஒப்பின்றிக்கேயிருந் துள்ள ஆர்வமாகிற புஷ்பத்தைக்கொண்டு பணிந்தேன். (பணி

எழுந்திருக்கிற அபிநிவேஶமாகிற உஜ்ஜ்வலமான மாணிக்ய வைரங்களை அல்லியும் தாதுமாகச்சேர்த்து. இப்படி லௌகிக மான தாமரையிற்காட்டில் வ்யாவ்ருத்தமான இதழையும், அல்லியையும், தாதையும் உடைத்தாகையாலே உபமான ரஹிதமான பக்தியாகிற பெரியதாமரைப்பூவை அழகுபெற தரித்துக்கொண்டு, குளிர்ந்த தாமரைப்பூவை இருப்பிட மாக உடைய போக்யதைகவேஷையான பெரியபிராட்டி யாரைத் திருமேனியில் வலவருகான திருமார்விலே வைத்துக்கொண்டவனுடைய திருவடிகளிலே நிர்மமனுயக் கொண்டு விழுந்து ஆச்ரயித்தேன். நெஞ்சை நகரமாக

பக்திநிலை உண்டாகிறது. இவையிரண்டும் சேர்ந்து 'அபிநிவேசம்' [காதல்] எனப்படுகின்றன. இருகூறுகக் கிளர்ந்து எழுகின்ற ஸங்கசாமங்கள் இங்கு கிளர்ந்து எழும் ஒளியுடைய மணிவயிரங் களாகச் சொல்லப்படுகின்றன. (மணிவயிரம் சேர்த்து) பக்தியாகிற பைங்கமலத்திற்கு ஸங்ககாமங்களை அல்லியும் தாதுமாகச் சேர்த்து. அல்லி-அகவிதழ்; தாது-கேஸரங்கள், (நிகரில்லாப் பைங்கமலம் ஏந்தி) ஒப்பற்ற பக்தியாகிற தாமரையை தரித்து. உலகிற்காணும் புறவிதழ், அகவிதழ், கேஸரம் ஆகியவற்றை அவயவமாகக்கொண்ட தாமரைவிரைவில் வாடி அழியக்கூடியது. இந்தபக்தியாகிற தாமரை யும், அதன் அவயவங்களான ஸ்நேஹஸங்ககாமங்களும் என்றும் பசுமையுடன், நாள் செல்ல நாள் செல்ல வளர்ச்சிபெற்று அழி யாமல் விளங்குகையாலே, இங்கு இவ்வாழ்வார்க்குள்ள பரஜ்ஞான தசையையடைந்த பக்தி 'நிகரில்லாப் பைங்கமலம்' எனப்படுகிறது. (பைங்கமலம் ஏந்தி) பக்தித்தாமரையை அழகாகத் தரித்து. (பணி மலரான் அங்கம் வலங்கொண்டானடி பணிந்தேன்) குளிர்ந்த தாமரைப்பூவை இருப்பிடமாகக் கொண்டவளாய், அத்தாமரையின் மென்மை, நறுமணம், இனிமை முதலான குணங்களெல்லாம் ஒரு வடிவெடுத்தனவோ என்னலாம்படியிருப்பவளான பெரியபிராட்டி யாரைத் திருமேனியிலே வலத்திருமார்பிலே உடைய ஸர்வேச்வர னுடைய திருவடிகளிலே அஹங்காரமமகாரங்களற்று விழுந்து வணங்கினேன். குறைவுடைய ஸமாச்ரயணத்தையும், நிறைவு படுத்தவல்ல புருஷகாரத்தை முன்னிட்டுக்கொண்டு நாராயண

மலராளித்யாதி₃) பணிவுக்கு விஷயமாவான் ஶ்ரிய:பதியிறே. அவனுடைய ஸந்நிதி₄யில் அபுஷ்கலமான ஸமாஶ்ரயணமும் புஷ்கலமாமிறே. 4.

---

ரூபிக்கையாலே, நகரமாகில் முத்து, மாணிக்கம் முதலான விலக்ஷணவஸ்துவை உடைத்தாயிருக்குமென்று ப₄க்த்ய வஸ்தா₂பே₄த₃மான ஸ்நேஹாதி₃களை முத்துமாணிக்யாதி₃க ளாக ரூபிக்கிறது, ''பைங்கமலம் ஏந்தி'' என்று ப₄க்தியைத் தாமரையாக நிரூபிக்கையாலே அந்தப₄க்த்யவஸ்தா₂பே₄த₃ மான ஸ்நேஹாதி₃களை அதுக்கு இதழும், அல்லியும், தாது மாக ரூபிக்கிறது. ப₄க்தியினுடைய பே₄ாகோ₃பகரணத்வ மும், பே₄ாக்₃யதையும் தோற்றுகைக்காக அத்தைத் தாமரை யாக நிரூபிக்கிறது. நெஞ்சை நகரமாக நிரூபிக்கிறது. கலங் காப்பெருநகரத்தில் பண்ணும் விருப்பத்தைத் தன் நெஞ் சிலே பண்ணிக்கொண்டு அவன் ரஸோத்தரமாக வர்த்திக்கு மென்று தோற்றுகைக்காக. 4.

---

னுடைய திருவடிகளை ஶரணமடைந்தேன் என்றபடி. த்₃வயத்தின் பூர்வகண்டத்தின் பொருளிருந்தபடி. ஸ்நேஹம், ஸங்கம், காமம் ஆகியவற்றை முத்து, மாணிக்கம், வயிரம் என்றும், புறவிதழ், அகவிதழ், தாது என்றும் இரண்டுபடியாக ரூபணம் செய்வானேன்? எனில்; நெஞ்சை நகரமாக ரூபணம் செய்கையாலே, நகரமானது முத்து மாணிக்க வைரங்களை உடையதென்று காட்டுவதற்காக ஸ்நேஹம் முதலானவற்றை முத்து முதலானவையாக ரூபிக்கிறார். ''பைங்கமலம் ஏந்தி''என்று பக்தியைத் தாமரையாக ரூபிக்கையாலே பக்தியின் முன்நிலைகளான ஸ்நேஹம் முதலானவற்றைப் புறவிதழ் முதலானவையாகவும் ரூபணம் செய்கிறது. சிலவற்றை மறைத்தும் சிலவற்றை வெளிப்படையாகவும் காட்டுகிறார். பக்தியானது பக வானை அனுபவிப்பதற்குக் கருவியாகவும்; தானே அநுபவிக்கத்தக்க தாகவும் விளங்குகையாலே, பிற இன்பங்களை அநுபவிக்கக் கருவி யாகவும், தானே அனுபவிக்கத்தக்கதாகவுமிருக்கும் தாமரையாக அதை ரூபிக்கிறார். நெஞ்சைத் தலைநகராக ரூபிக்கிறதற்குக் கருத் தென்ன? எனில்: சரணமடைந்தவுடன் கலங்காப்பெருநகராகிய ஸ்ரீவைகுண்டத்தில் பண்ணும் விருப்பத்திலும் விஞ்சிய விருப்பத்தைத் தன் நெஞ்சிலேகொண்டு அவன் பரமரஸத்துடன் விளங்குவான் என்று தோற்றுவதற்காக நெஞ்சை நீள்நகராக உருவகப் படுத்துகிறார். 4.

5. அடிமூன்றி லிவ்வுலக மன்றளந்தாய் போலும்
அடிமூன் றிரந்தவனி கொண்டாய்—படிநின்ற
நீரோத மேனி நெடுமாலே நின்னடியை
யாரோத வல்லா ரறிந்து.

படி நின்ற-பூமியிலே அவதரித்து நின்ற, நீர் ஓதம் மேனி நெடுமாலே-கடல் வண்ணனான ஸர்வேச்வரனே!, அடி மூன்று-மூவடி நிலத்தை, இரந்து அவனி கொண்டாய்—(மாவலியிடத்தில்) யாசித்து உலகைப்பெற்றாய்; அன்று—அக்காலத்தில், இ உலகம்—இந்த உலகத்தை, அடி மூன்றில் அளந்தாய் போலும்-மூன்று அடியாலே அளந்து கொண்டாயோ? (இல்லையே), நின் அடியை—உனது திருவடியை, அறிந்து-நன்றாய்த் தெரிந்து கொண்டு, ஓத வல்லார் ஆர்—பேசவல்லவர்கள் யாவருளர்? [யாருமில்லை.]

பெரி அவ:— (அடிமூன்றில்) அவனுடைய உத்கர்ஷம் சிறிதறியுமத்தனையல்லது, ஸௌலப்₄யம்ஒருவருமறிவாரில்லை யென்கிறது.

வ்யா:— (அடிமூன்றிலித்யாதி₃) மூன்றடியில் இரண்டடியாலே லோகத்தையளந்தாய். (அடிமூன்றித்யாதி₃) அளக்கைக்

---

அவ:—''ஆழ்வீர்! நீர் நம்மைப் பணிந்தீரோ?'' என்ன ''ஒன்றைச் சொன்னேனித்தனைபோக்கி, ஏவம்வித₄னான உன் நீர்மை ஒருவரால் பரிச்சே₂தி₃க்கப்போமோ?'' என்கிறார்.

உரை:—சால தூ₃ரத₃ர்ஶியாய்க்கொண்டு, இரண்டடியாலே அளந்து, ஓரடிக்குச் சிறையிட்டு வைப்பாயாக

---

அவ:— ''நன்குணர்ந்து பேர் சாற்றினால்'' [2] ''பாதம் புரிவார் புகப்பெறுவர்'' [3] ''அடி பணிந்தேன்'' [4] என்று உரைத்தீரே! 'நீர் நம்மை நன்குணர்ந்து பணிந்தீரோ?' என்ன, ''உன்னை முழுவதும் அறிய ஒருவரால் முடியுமோ? உன் மேன்மையைச் சிறிது அறிந்தாலும் நீர்மையை எவரும் அறியமுடியாதே!'' என்கிறார்.

வ்யா:—(அடி மூன்றிரந்து அவனி கொண்டாய்) மிகவும் தீர்க்க தர்சியாய், பின் நடக்கப்போவதை முன்கூட்டியே அறிந்து மூன்றடி

கடியாகமூன்றடியையிரந்து பூமியைக்கொண்டாய். (படிநின்ற) பூ₄மியிலே ஸ்வாபா₄விகமாக நின்ற என்றுமாம். (நீரோத மித்யாதி₃) கடலோதம்போலேயிருந்துள்ள திருமேனியையுடையனாய் வளர்ந்தவனே! வ்யாமோஹத்தையுடையவ

---

மஹாப₃லி பக்கலிலே முந்துறச்சென்று, மூன்றடியை அர்த்தி₂த்து பூ₄மியை அளந்துகொண்டாய்; அளந்து கொள்ளுகிற அக்காலத்திலே, இரண்டடியாலே அளந்து கொண்டதித்தனைபோக்கி மூன்றடியாலே இந்த லோகங்களை அளந்து கொண்டாயோதான்? பூ₄மியிலே ரக்ஷகனாய்க்கொண்டு செவ்வே வந்து அவதரித்துநின்றநீர்மையை உடையையாய். ஜலஸம்ருத்₃தி₄யை உடைத்தானகடல்போலேஶ்ரமஹரமான வடிவை உடையையாய், ஸர்வாதி₄கனான ஸர்வேஶ்வரனே!

---

மண்ணை மாவலியிடம் யாசித்து பூமியை அளந்து கொண்டாய்; அளந்து கொண்டவனே! என்று ஸம்போதனமாகவுமாம். (அன்று) அளந்து கொள்ளுகிற அக்காலத்திலே. (அடிமூன்றில் இவ்வுலகம் அளந்தாய் போலும்) இரண்டு அடியாலே எல்லா உலகையும் அளந்துகொண்டாயேயொழிய, மூன்றடியாலே அவற்றை அளந்து கொண்டாயோ? உன் தீர்க்கதரிசனம் என்னாயிற்று? மாவலியைப் பாதாளத்தில் சிறையிட்டு வைக்கவே மூன்றுமடியையும் யாசித்து வைத்தானாகையாலே, இது நிந்தாஸ்துதி. (படிநின்ற நெடுமாலே) அப்படி அளக்கும்போது, மற்ற தேவதைகளைப்போலே இவ்வுலகத்தின் தண்மையைப்பார்த்து நிலத்திலே கால்தோயாமல் இருக்கையன்றிக்கே, தேவாதிதேவனான இவன், தன் உடைமையான இதனிடம் உள்ள அதிகமான வ்யாமோஹத்தாலே இதன் தண்மை பாராமல், 'இதுவே இவனுடைய இயற்கையான இருப்பிடம் போலும்' என்று காண்பார்கருதும்படி கால்நிலம் தோய்ந்து நின்றமையிலே ஈடுபடுகிறார். (படிநின்ற நீர்) பூமியிலே ரக்ஷகனாய்க்கொண்டு நேரே வந்து அவதரித்து நின்ற நீர்மையை உடையவன்என்கிறதாகவுமாம். 'நீரோதம்' என்று மேலே கூட்டினால் 'நீர் நிறைந்த கடல்' என்று பொருளாகிறது. (ஓதமேனி நெடுமாலே) நீர் நிறைந்த கடல் போலே கண்டார் களைப்பை ஆற்றும் திருமேனியை உடைய ஸர்வாதிகனான ஸர்வேச்வரனே! (நின் அடியை ஆரோதவல்லார் அறிந்து) இப்படி நீர்மையே வடிவான உன்னுடைய திருவடிகளின் பெருமையை என்னைப்போலே அறிவு கலங்கியவர்கள் பேசலாமேயொழிய, அவ்வறிவுக்கலக்கமில்லாதவர்களால் உன் திருவடியின்

னென்றுமாம்,(நின்னடியையித்யாதி₃) உன்னுடைய ஸௌலப்₄யத்தையறிந்து சிலராலே ஆர்ரயிக்கப்போமோ? 5.

---

இப்படி நீர்மையே வடிவான உன்னுடைய திருவடிகளை, என்னைப்போலே அறிவுகெட்டார் பேசில் பேசுமித்தனை போக்கி நேர்கொடுநேரே இவ்வளவென்று அறிந்து பேசவல்லார் ஆர்? 5.

---

பெருமையை 'இவ்வளவு' என்று அளவிட்டறிந்து பேசமுடியுமோ? என்கிறார். (அடி மூன்றில் அளந்தாய் போலும்—நின் அடியை யாரோதவல்லார் அறிந்து)

''த்₃வே இத₃ஸ்ய க்ரமணே
ஸ்வர்த்₃ருஶோऽபி₄க்₂யாய மர்த்யோ பு₄ரண்யதி ।
த்ருதீயமஸ்ய நகிரா த₃த₄ர்ஷதி
வயஶ்சந பதயந்த: பதத்ரிண:॥''

[ருக்-அஷ்டகம் 2-2-25]

[பரமபதத்தைக் காண்பவனான விஷ்ணுவினுடைய இரண்டு அடிவைப்புக்களையே மனிதன் நன்கறிந்து பஜிக்கிறான்; இந்த விஷ்ணுவின் மூன்றாவது அடிவைப்பை ஒருபோதும் அறியவல்லனல்லன். 'எங்கும் வீசும் வாயுக்களும் பறக்கும் பறவைகளும் அறியவல்லனவல்ல.]

''பரோ மாத்ரயா தந்வா வ்ருத₄ாந
ந தே மஹித்வமந்வஶ்நுவந்தி ।
உபே₄ தே வித்₃ம ரஜஸீப்ருதி₂வ்யா:
விஷ்ணோ தே₂வ த்வம் பரமஸ்ய வித்ஸே॥''

[ருக்-அஷ்டகம் 5-5-24]

[மிகப்பெரிய திருமேனியோடு வளர்ந்தருளின தேவனான விஷ்ணுவே! நீ மிகப்பெரியவன்; உன்னுடைய பெருமையை (அளவிட்டு) அனுபவித்தார் யாருமில்லை; பூமியிலிருந்து தொடங்கிய உன்னுடைய இரண்டு பாதஸ்தானங்களை அறிகிறோம். (அதற்கு) மேற்பட்ட மூன்றாவது அடிவைப்பை நீயே அறிகிறாய்] என்கிற ச்ருதிச்சாயையிலே மூன்றாவது அடிவைப்பை எவராலும் அறிய முடியாது என்கிறாராகவுமாம். இந்த ச்ருதிகளின் கருத்தை நம்முடைய விஷ்ணுஸூக்த வ்யாக்யானத்திலே கண்டுகொள்வது. 5.

6. அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர்கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே — அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல்.

அறிந்து—(எம்பெருமானுடைய பெருமையையும் விஷயங்களின்சிறுமையையும் நன்ருக) அறிந்துகொண்டு, ஐந்தும்-—பஞ்சேந்திரியங்களையும், உள் அடக்கி-(மற்றவிஷயங்களில் ஈடுபடாதபடி தடுத்து) பகவத் விஷயத்திலே ஊன்றும்படி நியமித்து, ஆய் மலர் கொண்டு-(பகவானுக்கு ஏற்கும்படி) ஆராய்ந்த புஷ்பங்களை ஸம்பாதித்துக்கொண்டு, ஆர்வம் செறிந்த மனத்தர் ஆய்-பக்தி நிறைந்தமனத்தையுடையராகி, செவ்வே அறிந்து-(எம்பெருமானுக்கும் தமக்குமுள்ள ஶேஷ ஶேஷிபாவ முறையை) நன்ருக அறிந்து, அவன் தன் பேர்-அப்பெருமானது திருநாமங்களை, ஓதி — இடைவிடாமற் சொல்லிக்கொண்டு, ஏத்தும்-துதிக்கின்ற, பெரும் தவத்தோர்-மஹா பாக்யசாலிகள், கார் ஓதம் வண்ணன் கழல்— கருங் கடல் வண்ணனை அப்பெருமானுடைய திருவடிகளை, காண்பர்—கண்டு அநுபவிக்கப் பெறுவார்கள்.

பெரி அவ:—(அறிந்து) ஜ்ஞாநத்துக்கு விஷயமன்ருகில் சூந்யமாகிறதோவென்னில்; அபிநிவேஶத்தையுடையராய் ஆஶ்ரயிக்கவல்ல பாக்யவான்கள் அறிவரென்கிறது.

அவ:—ஆனால் இப்படி யாரும் அறியாதே இழந்துபோமித்தனையோ? என்னில்: அதுவேண்டா; இதரவிஷயஸங்க

அவ:—"ஆரும் அவனை அறியமாட்டார்களாகில், பகவத் விஷயம் சூந்யமாகவேண்டிவருமே; அப்படியல்லாவிடிலும் எல்லோருமே இழக்கவேண்டிவருகையாலே பயனற்றதாகிவிடுமே" என்னும் கேள்வி எழ, "அப்படி ஆகாது; இதரவிஷயங்களில் பற்றற்று அவனிடத்தில் பெருங்காதலாலே அவன் திருநாமங்களைச் சொல்லிப் புகழும் பாக்கியசாலிகள் அவனை அடைவர்" என்கிருர். முன்பாசுரத்தில் "அவனை ஆரும் அறியார்" என்றது. எத்தனை அறிவுடைய

வ்யா:—(அறிந்து) ஶப்₃த₃ாதி₃கள் த்யாஜ்யமென்றறிந்து. (ஐந்து முள்ளடக்கி) விஷயங்களில்நின்றும் இந்த்₃ரியங்களை மீட்டு ப்ரத்யக்காக்கி. (ஆய்மலர்கொண்டு) செவ்விப்பூக்

மற்று அவன் திருநாமங்களைச் சொல்லிப் புகழுமவர்கள் அவன் திருவடிகளைப் பெறுவர் என்கிறார்.

உரை:— ப₄க₃வத்₃வைலக்ஷண்யத்தையும், இதரவிஷய தோ₃ஷங்களையும் நன்றாக அறிந்து, ஹேயவிஷயங்களிற் போகாதபடி ஶ்ரோத்ராதி₃களான இந்த்₃ரியங்கள் ஐந்தையும் ப்ரத்யக்கான ப₄க₃வத்₃விஷயத்திலே ப்ரவணமாம்படி நியமித்து, அங்குத்தைக்கு ஸத்₃ருஶமாம்படி கந்தலற ஆயப்பட்ட செவ்விப்பூக்களை ஸம்பாதித்துக்கொண்டு அபி₄நிவேஶம் மிக்க மனஸ்ஸை உடையராய், 'அவன் ஶேஷி, நாம்

ராலும் அவனை அளவிட்டு அறியமுடியாது என்றபடி. இங்கு 'அன்புடன் அவனை ஆஶ்ரயிப்பவர்களுக்குத் தானே தன்னைக் காட்டுவான்' என்கிறது. ஆகையாலே விரோதமில்லை.

வ்யா:— (அறிந்து) பகவானுடைய பெருமையையும், மற்ற விஷயங்களின் தாழ்வையும் நன்றாக அறிந்து. (ஐந்தும் உள்ளடக்கி) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களையும் பா₃ஹ்யமான சப்தாதி விஷயங்களில் செல்லாதபடியாக்கி, ஆந்தரமான பகவத்விஷயத்திலே ஈடுபடும்படி நியமித்து. "கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே" [திருவாய் 8-2-8] என்றாரன்றோ ஆழ்வாரும். (உள்ளடக்கி) சப்தாதி விஷயங்கள் பிறர்க்கே ப்ரகாசிக்கும் பராக்₃விஷயங்களாகையாலே பா₃ஹ்யவிஷயங்களென்றும், பகவத்விஷயம் தனக்குத்தானே ப்ரகாசிக்கும் ப்ரத்யக்₃ விஷயமாகையாலே ஆந்தரவிஷயமென்றும் சொல்லப்படுகிறது. (ஆய் மலர்கொண்டு) "புரிவதுவும் புகைபூவே" [திருவாய் 1-6-1] "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும்" [பெரிய திரு 11-7-6] என்று அவனுக்கு ஆகாத பூ இல்லாவிடிலும், அவனிடம் இவனுக்குள்ள பரிவாலே, இவன் அஸாரமான பூக்களைக்கழித்து அவனுடைய ஸௌகுமார்யத் திருமேனிக்குத் தகுதியான அன்றலர்ந்த புஷ்பங்களை ஆய்ந்து எடுத்துக்கொண்டு ஆச்ரயிக்கிறான். அப்படி ஆச்ரயிக்கும்

கொண்டு, (ஆர்வமித்யாதி₃) அபி₄நிவேஶம் நெருங்கின மநஸ்ஸையுடையராய், (செவ்வேயறிந்து) நாம் ஶேஷம், அவன் ஸ்வாமியென்னுமிடத்தையறிந்து. (அவன் தன் பேரோதியேத்தும் பெருந்தவத்தோர்) அவனுடைய திருநாமங்களைச் சொல்லி ஏத்துகிற பா₄க்₃யவான்கள். (காண்பர்) நிஶ்சிதம். (காரோத வண்ணன்கழல்) கடலுத₃ஹரணமான வடிவையுடைய திருவடிகளை. 6.

---

ஶேஷபூ₄தர்' என்னும் முறையை நன்ருகத் தெரிந்து கு₃ண சேஷ்டிதாதி₃களுக்கு வாசகமான அவன் திருநாமங்களை இடைவிடாமற் சொல்லிக்கொண்டு ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்தோத்ரம் பண்ணும் பெரிய பா₄க்₃யாதி₄கர்களானவர்கள்– கறுத்த கடல்போலேஶ்ரமஹரமான வடிவையுடையனானவன் திருவடிகளைக் கண்டு அநுப₄விக்கப்பெறுவர்கள். 6.

---

போதும் 'இது நமக்குக் கடமை' என்று விஹிதம் என்னும் எண்ணத்தோடு ஆச்ரயிக்கிருனே எனில், இல்லையென்கிருர்,- (ஆர்வம் செறிந்த மனத்தராய்) 'இதைக்காட்டிலும் இனியதில்லை' என்னும் எண்ணத்தோடு, பெருங்காதல் நிறைந்த மனத்தோடு ஆச்ரயிக்கிருன். 'இதில் உபாயபுத்தியுண்டோ?' எனில் (செவ்வே அறிந்து) 'அவன் நமக்கு ஸ்வாமியாயிருப்பவன்; அவனுடைய அடியோமாயிருப்பவர் நாம்; ஆகையால் நம் கார்யம் செய்பவன் அவனே' என்று ஸ்வருபத்தை உள்ளபடி அறிந்து உபாயபுத்தியைச் சிறிதும் வைக்காமல் ஆச்ரயிக்கிருன். ஆச்ரயிக்கும் ப்ரகாரமென்ன? எனில்: (பேரோதி ஏத்தும் பெரும் தவத்தோர்) அவனுடைய குணசேஷ்டிதாதிகளைச் சொல்லும் திருநாமங்களை ஸ்வயம் ப்ரயோஜனமாகச் சொல்லிப் புகழ்ந்து அவனைச் சரணமடையும் பாக்யசாலிகள். "ந்யாஸமேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:" என்று தவங்களுள் சிறந்த தவமான சரணுகதியை அனுஷ்டித்தவர்களைப் பெருந்தவத்தோர் என்கிறது. (காண்பரே) அப்படிப்பட்ட பாக்யசாலிகள் கண்டே தீருவார்கள். இது நிச்சயம். எதைக்காண்பார்கள்? எனில்: (காரோதவண்ணன் கழல்) கறுத்த கடல்போலே கண்டார் களைப்பையெல்லாம் ஆற்றும் வடிவையுடையவனுடைய திருவடிகளைக் கண்டு அனுபவிக்கப்பெறுவர். திருவடிகளை உபாயமாகப் பற்றி அத்திருவடிகளையே அடைவர் என்கிருர். 6

7. கழலெடுத்து வாய்மடித்துக் கண்சுழன்று மாற்றார்
அழலெடுத்த சிந்தையரா யஞ்ச—தழலெடுத்த
போராழி யேந்தினான் பொன்மலர்ச் சேவடியே
ஓராழி நெஞ்சே யுகந்து.

ஆழி நெஞ்சே—கடல்போல் ஆழ்ந்த மனமே!, (முன்பு த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளினபோது) கழல் எடுத்து—திருவடிகளை உயரத் தூக்கினவனாயும், மாற்றார்—எதிரிட்ட நமுசி முதலானவர்கள், அழல் எடுத்த சிந்தையர் ஆய் அஞ்ச—பயாக்னிகொழுந்துவிட்டெரியும் நெஞ்சையுடையவர்களாய் நடுங்கும்படியாக, வாய் மடித்து—உதட்டை மடித்துக் கொண்டு, கண் சுழன்று—(பார்க்கிற பார்வையிலேயே அவ்வெதிரிகள் பட்டு விழும்படி) கண்கள் வட்டமிட, தழல் எடுத்த போர் ஆழி—நெருப்பையுமிழ்கிற, போர் செய்யவல்ல ஸுதர்சனாழ்வானை, ஏந்தினான் — தரித்தவனாயுமிருக்கிற எம்பெருமானுடைய, பொன் மலர் சே அடியே — அழகிய மலர்போன்ற திருவடிகளையே, உகந்து ஓர்—விரும்பி அநுஸந்திப்பாயாக.

பெரி-அவ:—(கழலெடுத்து) அவனையுகந்தார் காண்பாரானபின்பு, நீயுமவனையே உகந்தாச்ரயியென்று திருவுள்ளத்தைப் பார்த்துச்சொல்லுகிறார். ப்ரதிபந்தகமுண்டாகில் செய்வதென்னென்னில், நமுசிபட்டது படுமத்தனை.

---

அவ:—இப்படி பாக்யோத்தரரடங்கலும் ஆச்ரயித்து வாழுகிற விஷயத்தை ப்ரீதிபூர்வகமாக நெஞ்சே! நீயும் அநுஸந்திக்கப்பார் என்கிறார்.

---

அவ:—'இப்படி பாக்கியசாலிகளெல்லாம் உகந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கும் விஷயத்தை நீயும் உகந்து அடைந்து உய்வாயாக' என்று திருவுள்ளத்தைக்குறித்து உபதேசிக்கிறார். பாபங்கள் முதலான தடைகள் அவனை ஆச்ரயித்தவுடன் நமுசிபட்டதுபடும் என்று உணர்த்துவதற்காக நமுசி வ்ருத்தாந்தத்தை முன்னிடுகிறார்.

வ்யா:— (கழலீத்யாதி₃) (அஞ்சக்கழலெடுத்து) வாய் மடித்துச் சுழலாநின்ற கண்களையுடைய நமுசி ப்ரப்₄ருதிகள் ஹ்ருத₃யத்திலே கொளுத்தின ப₄யாக்₃நியையுடையராய் அஞ்சும்படி திருவடியையெடுத்து. (வாய்மடித்துக் கண்சுழன்று கழலெடுத்து) என்று ஈச்வர விசேஷணமாகவுமாம். (தழலீத்யாதி₃) அக்₃நியை உமிழாநின்ற திருவாழியைக் கையிலே ஏந்தினவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையே.

---

உரை:— ஆச்ரிதர் வாழும்படி திருவடிகளை வளர்த்து, சத்ருக்களான நமுசிப்ரப்₄ருதிகள் நெருப்புக்கொளுத்தின ஹ்ருத₃யத்தையுடையராய்க்கொண்டு பல்லிறுகி நாமடிக்கொண்டு, பார்வையிலே பட்டுவிழும்படி சுடப்பார்க்கிற கண் பரிப்₄ரமித்து நடுங்கும்படியாக எதிரிகள் மேலே நெருப்பை உமிழுகிற யுத்₃தோ₄ந்முக₂மான திருவாழியை த₄ரித்த ஸர்வேச்வரனுடைய பொன்போலேயும் பூப்போலேயும் ஸ்ப்ருஹணீயமாய், அதிஸுகுமாரமான சிவந்த திருவடிகளையே.

---

வ்யா:-(கழலெடுத்து) திரிவிக்கிரமப்பெருமானைத்தகைவதற்காக அன்புடையார் அஞ்சும்படியாக நமுசி முதலானூர் தம் கால்களை பூமியதிரும்படி எடுத்துவைத்ததைச் சொல்லுகிறதாகவுமாம். 'கழலெடுத்து-ஆழியேந்தினுன்' என்று கூட்டி, அடியார் வாழும்படி திரிவிக்கிரமன் திருவடியைத் தூக்கியதைச் சொல்லுகிறதாகவுமாம். (வாய்மடித்துக் கண் சுழன்று மாற்ருர்) கோபத்தாலே வாயை மடித்துச் சுழலும் கண்களையுடைய நமுசி முதலானூர் என்றுமாம். (வாய் மடித்துக் கண்சுழன்று தழலெடுத்த போராழி) என்று கூட்டி திருவாழியாழ்வான் (அல்லது த்ரிவிக்ரமன்) தன் கோபத்தாலே கண்டார் அழியும்படி வாய்மடித்துக் கண்சுழல் நிற்கிறபடியைச் சொல்லுகிறதாகவுமாம். (மாற்ருர் அழலெடுத்த சிந்தையராய், வாய்மடித்துக் கண் சுழன்று அஞ்ச) என்று கூட்டி, நமுசி முதலான எதிரிகள் ப₄யநெருப்பு எரியும் நெஞ்சையுடையவர்களாய், ப₄யத்தாலே பல்லிறுகி, வாய்மடித்துக் கண் சுழன்று அஞ்சும்படியாக என்றுமாம். (தழலெடுத்த போராழி ஏந்தினுன்) எதிரிகள் அஞ்சும்படியாக அவர்கள் மேலே நெருப்பை உமிழுகிற போர்வல்ல ஸுதர்சனுழ்வானை, பூவேந்தினூற்போலே ஏந்தியிருக்கிற ஸர்வேச்வரனுடைய. (பொன் மலர்ச் சேவடியே) பொன்போலும், பூப்போலும் ஆசைப்படத்தக்கதும், மென்மைமிக்கதுமான அவனுடைய சிவந்த திருவடிகளையே.

(ஆழிநெஞ்சேயுகந்தோர்) அளவுடையநெஞ்சே!உகந்தாஶ்ரயி.

8. உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கொள் கொங்கை
அகங்குளிர வுண்ணென்று ளாவி—உகந்து
முலையுண்பாய் போலே முனிந்துண்டாய் நீயும்
அலைபண்பா லானமையா லன்று.

உகந்து-யசோதைப் பிராட்டியைப்போலே அன்புடைய வளாக அபிநயஞ்செய்து, உன்னை வாங்கி—(நீ தூங்கும் போது வந்து) உன்னைத் தூக்கியெடுத்து, ஒளி நிறம் கொள் கொங்கை—(பால் விம்மியிருத்தலால்) ஒளி விட்டு அழகு பெற்றுள்ள (தனது) ஸ்தனத்தை, அகம் குளிர உண் என்றாள்—(குழந்தை) மனம்மகிழும்படி 'உண்ணு' என்று சொல்லிவைத்தாள்; ஆனமையால்—ஆகையினாலே, அன்று—அவள் முலைதந்த அக்காலத்தில், நீயும்-சிறுகுழந்தையான நீயும், அலை பண்பால்—அலையெறிகிற [அதி₄கமான] உன் குழந்தைத் தனத்தினாலே, முலை உண்பாய் போலே—மெய்யே

---

அளவுடைய நெஞ்சே! தேவையாகவன்றிக்கே ப்ரீதியோடே கூடிக்கொண்டு அநுஸந்தி₄. வாய்மடித்துக்கொண்டு கண் சுழன்றுகொண்டு மாற்றார் அழலெடுத்த் சிந்தையராம்படி தழலெடுத்த போராழி என்னவுமாம்.

---

(ஆழிநெஞ்சே) கடல்போலே ஆழமுடைய (கம்பீரமான) நெஞ்சே! உன் ஆழத்தை என்னாலும் அறியமுடியாமையாலன்றோ உனக்கு அடிக்கடி நான் உபதேசிக்கவேண்டியிருக்கிறது. என்ன செய்ய வேண்டும்? என்ன,-(உகந்து ஓர்) 'இது நம் கடன்' என்று நினையாமல், அன்போடு கூட அந்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையே சிந்திப்பாயாக. (பொன்மலர்ச்சேவடியே உகந்து ஓர்) பால் குடிக்கக் கால்பிடிக்கவேண்டுமோ? கைக்குழந்தைக்குத் தாய் முலைபோலே சேஷபூ₄தனுக்கு இனியதாயிருக்கும் திருவடியைப் பற்றச்சொல்லி நான் உபதேசிக்கவேண்டுமோ? என்னிலும் முந்துற்று நீயே உகந்து பற்றவேண்டிய விஷயமன்றோ திருவடி. 7

பால் குடிப்பவனைப்போலே, உகந்து—(பெருப்பேறு பெற்ருற்போலே) (வெளியில்) மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டு, மூனிந்து—(மனத்தில்) கடுங்கோபங்கொண்டு, ஆவி—(அந்தப்பூதனையின்) உயிரை, உண்டாய்—(பாலோடு உறிஞ்சி) உட்கொண்டாய்.

பெரி அவ:—(உகந்து) பொய்யுகப்பு பூாதகமாம்படி சொல்லுகிறது.

வ்யா:—(உகந்து) யசோதைப்பிராட்டி உகக்குமாபோலே உகந்து (உன்னைவாங்கி) அவள் ஓசழக்காக எடுக்குமாபோலேயெடுத்து, (ஒளிநிறங்கொள்கொங்கை) முலைப்பாலாலே

---

அவ:—இப்படி ஆஶ்ரயிக்குமிடத்தில் ப்ரதிபந்தகமுண்டாளுலோ? என்னில்: பூதனையை முடித்தாற்போலே அவன்தானே அவற்றைப் போக்கும் என்கிருர்.

உரை:—பூதனையானவள் யசோதைப்பிராட்டி ஸ்நேஹிக்குமாபோலே ஸ்நேஹித்துப் பரிவுதோற்ற ஓசழக்காக உன்னை உறக்கத்திலே தூக்கியெடுத்து, பால்விம்மி ஒளி

---

அவ:—இப்படி அவன் திருவடிகளை ஆஶ்ரயிக்கும்போது தடைகள் உண்டாளுல் என்ன செய்வது? என்ன, பூதனையை அழித்தாற்போலே அவனே அத்தடைகளையும் போக்குவான் என்று காட்டுவதற்காகப் பூதநாவ்ருத்தாந்தத்தை அனுஸந்திக்கிருர். உகந்து அவனுடைய திருவடிகளை அடையும்போது பூதனையைப்போலே பொய்யான உகப்புடன் அவனை அணுகிளுல் அழிவே வரும்; ஆகையால் உண்மையான அன்புடன் ஆஶ்ரயிக்கவேணும் என்று உணர்த்துவதற்காகப் பூதநாவ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிருராகவுமாம்.

வ்யா:—(உகந்து) தாயான யசோதைப்பிராட்டி கண்ணனுக்குப் பால்கொடுக்கும்போது உகப்பதுபோலே, தானும் உகப்பதாக நடித்தாள் பூதனை. (உன்னை வாங்கி) பரிவுதோற்ற அவள் நலுங்காதபடி எடுப்பதுபோலே, இவளும் உறங்கிக்கிடந்த உன்னை உன் திருமேனி நலுங்காதபடி பரிவுதோற்ற எடுத்து வைத்துக்கொண்டாள். (ஒளிநிறங்கொள் கொங்கை) பிள்ளையிடம் பேரன்பாலே

நெறித்து அத்தாலே புகருடைத்தான கொங்கை. (அகங் குளிரவித்யாதி₃) உண்டல்லது நிற்கப்போகாதபடி ஹ்ருத₃யங் குளிரும்படிக்கீடாகச் சொன்னவளுடைய ப்ராணனை. (உகந் தித்யாதி₃) அவள் பொய்யே உகந்துமுடிக்க நினைத்தாற்போலே நீயும் பொய்யே உகந்து முலை உண்ணுமாபோலே முனிந்து முடிக்க நினைத்தாய். (அலையித்யாதி₃) அவள் பொய்யே உகந்து முடிக்க நினைத்தாற்போலே நீயும் பொய்யேயுகந்து. மிக்க

---

விடுகின்ற புகரையுடைத்தான முலையை ஹ்ருத₃யம் குளி ரும்படி 'உண்' என்று ஸாத₃ரமாக முலைதந்தாள்; ஆகை யாலே நீயும் அவள் முலைதந்தவன்று அலையெறிகிற குணத் தாலே பெருப்பேறு பெற்றுப்போலே உகந்துகொண்டு மெய்யே முலையுண்பாரைப்போலே சீறி உண்டு அவள் ப்ராணனை முடித்துப்பொகட்டாய்; ''அலைபண்பால்'' என்று ''அழிந்த நீர்மையை உடையவள்'' என்று அவள்மேலே

---

பால் விம்மி அந்த யசோதைப் பிராட்டியின் ஸ்தனங்கள் ஒளி விடுவதுபோலே, இவளுடைய முலைகளும் ஒளிவிடுவனவாய் திற முடையனவாயிருந்தன. (அகம் குளிர 'உண்' என்றாள்) அப் பிராட்டி கண்ணன் நெஞ்சு குளிரும்படி, தன்பேருக, 'முலை யுண்ணாய்' என்பள்; அது போலே இவளும் குழந்தை உண்டல்லது நிற்கவொண்ணாதபடி 'உண்பாய்' என்று நெஞ்சுகுளிரும் வார்த் தையைச் சொல்லி முலைதந்தாள். (ஆனமையால்) அவள் வெளி வேஷமாக உகப்பைக்காட்டி உள்ளே தீய நினைவை ஒளித்து வைத்துக் கொண்டிருந்தபடியாலே. (அன்று) அவள் அப்படி முலை தந்த அன்று. (நீயும் அலைபண்பால் உகந்து முலையுண்பாய் போலே ஆவி முனிந்து உண்டாய்) நீயும் அலையெறிகிற மாத்ரு ஸ்நேஹத்தாலே பெருப்பேறு பெற்றுப்போலே தாயிடம் உகந்து முலையுண்பவன் போலே வெளிவேஷமிட்டுக்கொண்டு, உள்ளே ஒளித்திருந்த கோபத்தாலே அவளுடைய பாலோடு பிராணனையும் சேர்த்து உண்டுவிட்டாயன்றோ! (அலைபண்பால் 'உண்' என்றாள்) என்று கூட்டி, அழிந்த குணத்தை உடையவளாய், குழந்தையை முடிக்க எண்ணி விஷங்கலந்த பாலை 'உண்' என்றாள் என்றும் கொள்ளலாம். (அலைபண்பால் ஆனமையால்) அடியார்களிடம்

நீர்மையையுடையையாகையால் அன்று உனக்குமித்ரப₄ாவமும் அமைந்திருக்கச் செய்தே அவளை முடித்து உன்னைத் தந்தது ஆஶ்ரிதர் பக்கலுண்டான ஓரமிறே. 8.

9. அன்றதுகண் டஞ்சாத வாய்ச்சி யுனக்கிரங்கி
நின்று முலைதந்த விந்நீர்மைக்கு—அன்று
வரன்முறையால் நீயளந்த மாகடல்சூழ் ஞாலம்
பெருமுறையா லெய்துமோ பேர்த்து.

அன்று—(பூதனை பிணமாக விழும்படி நீ முலையுண்டு அவளை முடித்த) அக்காலத்தில், அது கண்டு-முலை கொடுத்த அவள் செத்துக்கிடந்த பயங்கரத்தைக் கண்ணாலே பார்த்து, அஞ்சாத — 'முலை கொடுக்கிற நாமும் செத்துப்போவோமோ' என்று பயப்படாத, ஆய்ச்சி — யசோதைப் பிராட்டியான வள், நின்று - த₄ரித்துநின்று, (அந்தப் பூதனையின் விஷத் திற்கு மாற்றாக) உனக்கு இரங்கி முலை தந்த—உன்னிடம் பரிவுகொண்டு முலைகொடுத்த, இ நீர்மைக்கு-இந்தப் பெருங் குணத்திற்கு, அன்று நீ வரன் முறையால் அளந்த மாகடல் சூழ் ஞாலம்-முன்பு நீ சிறந்த உறவினாலே அளந்து கொண்ட பெரும் கடல் சூழ்ந்த இவ்வுலகமானது, பேர்த்து பெரு முறையால் எய்துமோ — மறுபடியும் மறுபடியும் இன்னது பெரியதென்று பார்க்கும் முறைமையில் ஒப்பாக முடியுமோ?

---

ஏறிடவுமாம்; உகந்துன்னை வாங்கி ஒளிநிறங்கொள் கொங்கை அகங்குளிர உண்ணென்றாள்; ஆனமையால் நீயும் அன்று அலைபண்பால் உகந்து முலையுண்பாய்போலே முனிந்து ஆவியுண்டாய் என்று அந்வயம்.

---

உள்ள அலையெறிகின்ற பக்ஷபாதத்தாலே என்றும் பொருள் கொள்ளலாம்; "மித்ரப₄ாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம்" என்கிற படியே வெளிவேஷமான நட்புடன் வந்தவர்களுக்கும் காரியம் செய்பவன் நீ; ஆகையால் வெளிவேஷமான அன்பையுடையவளாய் வந்த பூதனைக்கும் கார்யம் செய்ய நினைத்து உன்னை நீயே முடித்துக்கொண்டிருப்பாய்; அப்படிச் செய்யாமல், அவளை அழித்து, உன்னைத்தந்தது உன்னையொழிய நிலையில்லாத அடியாரிடம் உனக்குள்ள மிகுந்த பக்ஷபாதத்தாலன்றோ என்கிறார். 8.

பெரி அவ:— (அன்றது) யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்துக்கு உபமாந முண்டோ? என்கிறது.

வ்யா:—(அன்றது கண்டஞ்சாதவாய்ச்சி) அப்பெரிய வ்யஸநத்தைக்கண்டு பயப்படாத தாயார். (உனக்கிரங்கி) உன் பக்கலிலே ஸ்திதிலையாய். (நின்றித்யாதி) தறையிலே கால்பாவி முலைதந்த ஸ்வபாவத்துக்கு. (வரன்முறையால்) ஈச்வரனை

---

அவ:—பூதனைபடியை அநுஸந்தித்த நெஞ்சாறல் தீர, இவ்விஷயத்தில் நிலைநின்ற ப்ரேமமுடைய யசோதைப் பிராட்டியும் ஒருத்தியே! என்று அவள் ஸ்நேஹத்தைக் கொண்டாடுகிறுர்.

உரை:—அவள் பிணமாய் விழும்படி நீ முலையுண்டு முடித்த அன்று, முலைகொடுத்தவள் பட்டதுகண்டு, 'நாமும் அப்படிச் செய்வதென்?' என்று பயப்படாத யசோதைப் பிராட்டியானவள் 'உனக்கு எது விளையத்தேடிற்றே?' என்னும் வயிறெரிச்சலாலே பரிந்து தளராதே தறையிலே கால் பாவும்படி தரித்து நின்று முலைதந்த இம்மஹாஸ்வபாவத்

---

அவ:—பூதனையின் பொய்யன்பை நினைத்த மனவருத்தம் தீர, கண்ணனிடம் நிலைநின்ற மெய்யன்பையுடைய யசோதைப் பிராட்டிக்கு உபமானமுண்டோ? என்று கூறி அவளுடைய அன்பைக் கொண்டாடுகிறுர்.

வ்யா:—(அன்று) நீ பாலைக்குடித்தவுடன் அப்பூதனை பிணமாய் விழுந்த அன்று. (அது கண்டு) முலை கொடுத்த ஒருத்தி பிணமாய் விழுந்த அந்த அதிபயங்கரச் செயலைக்கண்டும். (அஞ்சாத ஆய்ச்சி) 'நாமும் முலை கொடுத்தால் மடிந்து வீழ்வோமோ!' என்று பயப்படாத யசோதைப் பிராட்டி. தனக்காக பயப்படாதவளவேயோ? உனக்காக பயப்பட்டாள் என்கிறுர் மேலே: (உனக்கு இரங்கி...) 'அரக்கி நஞ்சைக்கொடுத்துவிட்டாளே, பிள்ளைக்கு என்ன வருமோ?' என்னும் பயசங்கையாலே உனக்கு நஞ்சுக்குப் பரிஹாரமாகத் தன் முலைப்பாலமுதைக் கொடுத்தாள். (நின்று முலை தந்த இந்நீர்மைக்கு) தனக்காக பயந்து தளர்ந்துவிடாமல் உனக்காகப் பரிந்து தறையிலே கால் பாவும்படி நிலைநின்று முலைகொடுத்த இப்பெருங்குணத்

ப்ராப்தியாலே. (நீயளந்தவித்யாதி₃) நீயளந்த பெரிய கடல் சூழ்ந்த பெரியபூமியானது பெருமுறையாலெய்துமோ? அவ னுடைய ஸ்வபா₄வத்துக்கு. இந்த பூமியானது திரிபட்டு இது பெரியது, இது பெரியதென்னும் முறையாலே எதிர்க்குமோ?

---

துக்கு மஹாபஃலி நீர்வார்த்துத்தந்த அன்று, நீ உடைய வனும், இவை உடைமையுமாகிற ஶ்ரேஷ்ட₂மான உறவாலே ரக்ஷகனை நீ அந்யாபி₄மானத்தால் வந்த அழல் மாறும்படி குளிரத்திருவடிகளாலே ஸ்பர்ஶித்து அளந்துகொண்ட பெரிய கடலாலே சூழப்பட்ட பூ₄மியானது மறித்துப் பார்க்குமிடத்தில் 'இதில் இது பெரியது' என்று பெருக்கப்

---

திற்கு நீயளந்த பூமியெல்லாம் ஒப்பாகுமோ? என்று மேலோடே அந்வயம். (அன்று) பிறர்க்குக் கொடுத்து வளர்ந்த கையைஉடைய நீ ஒருவனிடம் உன் வஸ்துவைப் பெறக் கூனிக்குறுகி நின்ற அன்று; பிறர்க்கு தா₃னநீர்வார்த்துப் பழகிய நீ மாவலியின் தா₃ன நீரை ஏற்று நின்ற அன்று. உன்னை விரும்பாமல், ஒரு ப்ரயோ ஜநாந்தரத்தை விரும்பிய இந்திரனுக்காக நீ உன் ஸ்வரூபத்தை மாற்றிக்கொண்ட அன்று. இயற்கையிலேயே ப்ராக்ருத கு₃ணங் களற்றவனும், கல்யாண கு₃ணக்கடலான உன்னுடைய இப்பெருங் குணமும், ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள அத்தாயின் குணத்திற்கு ஈடாகாது என்று கருத்து. (வரன் முறையால்) நீ உடையவனாகவும், உலகம் உடைமையாகவுமிருக்கும் சிறந்த உறவாலே, யாசிப்பதாக அபி₄நயித்த போதிலும், நீ செய்த காரியம் உன் உறவுக்குத் தக்க தாகவேயிருந்தது என்கிறார். (நீ அளந்த) ஸர்வரக்ஷகனை நீ, இந்திரனும் மாவலியும் தம்முடையதாக அபிமானித்ததால் இதற்கு ஏற்பட்ட வெப்பம் தீரும்படியாக, உன்னுடைய குளிர்ந்த திருவடி களாலே தடவி அளந்துகொண்டதான. பிறர் தம்முடையது என்று அபிமானித்தது பொய்; உண்மையில் இது உன்னுடையதே என்று நீ நிரூபித்துக்கொண்டாய் என்று கருத்து. (மாகடல் சூழ்ஞாலம்) பெரிய கடலாலே சூழப்பட்ட பூமியானது. மற்றவர்களுடைய அபிமானாக்₃னியினால் கொதித்து வாடிக்கிடந்த இது, உடையவனு டைய குளிர்ந்த திருவடி ஸ்பர்சம் பெற்றபின்பே குளிர்ந்து மலர்ந்து மாகடல் சூழ் ஞாலமாயிற்றுப்போலும்! (பேர்த்து பெரு முறையால்) மறுபடியும் மறுபடியும் 'இது பெரிதோ, இது பெரிதோ'

அவளுடைய ஸ்வபாவத்துக்கு நீ பெரிதாகச் செய்ததுவும் ஒப்பன்றென்கிறது.

10. பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய் மண்ணிரந்து
காத்தனை பல்லுயிரும் காவலனே!—ஏத்திய
நாவுடையேன் பூவுடையேன் நின்னுள்ளி நின்றமையால்
காவடியேன் பட்ட கடை.

காவலனே-ஸர்வரக்ஷகனே!, பிள்ளை ஆய்-சிறுகுழந்தையாயிருந்து, மா சகடம் - (அஸுராவேசமுள்ள)பெரியதொரு வண்டியை, பேர்த்தனை— கட்டழியும்படி உதைத்துத் தள்ளினாய்; மண்—பூமியை, இரந்து— (மஹாபலியினிடத்தில்) யாசித்துப்பெற்று (திருவடியாலே குளிரத்தடவி),பல்உயிரும்-எல்லா ஆத்மாக்களையும், காத்தனை — ரக்ஷித்தருளினாய்; நின்-(இப்படி ரக்ஷகனான) உன்னை,உள்ளிநின்றமையால்—(ரக்ஷகனாக) எண்ணியிருப்பதனால், ஏத்திய நா உடையேன் — உன்னைத்துதிப்பதையே ஸ்வபாவமாகவுள்ள நாக்கையுடையவனாயிருக்கிறேன்; பூ உடையேன்— (அர்ச்சிப்பதற்கு உரிய) புஷ்பங்களையுமுடையவனாயிருக்கிறேன்; (ஆனபின்பு)

---

பார்க்கும் க்ரமத்தால் ஒக்குமோ? அதுவும் பெரியசெயல்; இதுவும் பெரிய செயல்; அந்த ஸ்வபாவத்துக்கு இது ஒப்பாகப்போகுமோ? என்றபடி.

---

என்னும் முறையாலே ஆராய்ந்தாலும், (எய்துமோ) பெருத்துக் கிடக்கும் இவ்வுலகமெல்லாம் யசோதைப்பிராட்டியின் இவ்வொரு குணத்துக்கு ஒப்பாகுமோ? “மாகடல் சூழ் ஞாலம் அளந்த(து) எய்துமோ?” என்று கூட்டி, அவள் அந்த தசையிலே முலை கொடுத்த நீர்மைக்கு. நீ உலகையெல்லாம் குளிரத்தடவி அளந்து கொண்ட பெருமையும் ஒக்குமோ! என்றும் கொள்ளலாம். நீ உலகளந்த செயலும் பெரிதேயானாலும், இத்தாயின் இப்பெரிய செயலுக்கு அதுவும் ஒப்பாகாது என்று கருத்து. இத்தால் யசோதைப் பிராட்டிக்குக் கண்ணனிடம் உள்ள அன்பின் பெருமையைக் கூறி உகந்தாராயிற்று. 9.

அடியேன்— உனக்கு அடியனஞ்யிருக்கும் பெரும் பதவியைப் பெற்றிருக்கிற நான், பட்ட— வெகுகாலமாக (மற்ற தெய்வங்களைப்பற்றி) அடைந்த, கடை— தாழ்வுகளை கா—போக்கியருளவேணும்.

வ்யா:- (பேர்த்தனையித்யாதி₂)பிள்ளையாயிருந்து பெரிய மகடத்தை உதைத்தாய். (மண்ணிரந்தித்யாதி₃) மஹாபலியாலே நோவுபடாமே பூமியையிரந்து ரக்ஷித்தாய். இப்படி ரக்ஷிக்கைக்கடி என்னென்றுல்; (காவலனே) எல்லாவற்றையுமுடையனுகை.

அவ:— அவளைப்போலே எனக்கு உன்பக்கல் அதிமாத்ர ப்ராவண்யம் இல்லையேயாகிலும் ப்ராவண்யலேஶந்தானுகிலும் உண்டே; அதுவே பற்றுசாக அடியே பிடித்துக் கண்டகண்ட தே₃வதைகள் காற்கீழே தலைமடுத்துப் பட்ட என் தண்மையைப்போக்கி ரக்ஷிக்கவேணும் என்கிறுர்.

உரை:— வளர்த்தின தொட்டிலிலே கிடக்கும்படியான சிறுபிள்ளையாய்க்கொண்டு பெரிய சகடத்தைக் கட்டழியும்படி தள்ளிப்பொகட்டாய்! ஸர்வரக்ஷகனுனவனே!

அவ:— அந்த யசோதைப் பிராட்டியைப் போலே உன்னிடம் எனக்கு மிகுந்த பேரன்பு இல்லாவிடிலும், சிறிது அன்பு உள்ளதே; அதையே அடியாகக்கொண்டு, நான் பல ஜன்மங்களில் கண்ட கண்ட தெய்வங்கள் காலின் கீழே தலையை வைத்துப் பட்ட தாழ்வுகளையெல்லாம் போக்கி ரக்ஷித்தருளவேணும் என்கிறுர்.

வ்யா:— (காவலனே) நீ ஸர்வரக்ஷகன் என்பதை உன்னுடைய ஒவ்வொரு செயலும் காட்டித்தருகின்றதே! உன்னுலும் அதை மறைக்கமுடியாதே! (பிள்ளையாய்) உன்னை நீ மறைத்துக்கொண்டு கிடத்தின தொட்டிலிலேயே கிடக்கும்படியான சிறுபிள்ளையானுய்; அப்போதும்உன்னுல்உன் ஸர்வரக்ஷகத்வத்தைமறைக்கமுடிந்ததா? (பேர்த்தனை மாசகடம்) 'முலைவரவு தாழ்த்தது' என்று சீறி நீ உதைத்த உதையிலே மஹாப₃லமுள்ள சகடாஸுரன் கட்டழிந்து விழுந்தானன்றே. (காவலனே) இதற்குக்காரணம் இயற்கையிலேயே நீ ரக்ஷகத்வத்தையே ஸ்வரூபமாகக்கொண்டவனுயிருக்கையன்றே.

(நின்னுள்ளி நின்றமையால்-ஏத்திய நாவுடையேன் பூவுடையேன்) உன்னை ஸமாஶ்ரயணீயனாக உடையேனாகையாலே ஆஶ்ரயிக்கும் த்₃ரவ்யங்களையும் இந்த்₃ரியங்களையும்புஷ்கலமாக

---

அந்த ரக்ஷ்யரக்ஷகஸம்ப₃ந்த₄த்தைப் புரஸ்கரித்துக்கொண்டு ஆஶ்ரிதனான இந்த்₃ரனிழவைப் பரிஹரிக்கைக்காக பூ₄மியை அர்த்தி₂த்து வாங்கிக்கொண்டு திருவடிகளாலே குளிர ஸ்பர்ஶித்து ஸகலாத்மாக்களையும் ரக்ஷித்தருளினாய். இப்படி ரக்ஷகனான உன்னை ஸர்வஸமாஶ்ரயணீயனென்று அநுஸந்தித்துநிற்கையாலே தனக்குத்தானே ஏத்தும்படியான நாவை உடையேனானேன். காயிகமான அடிமைசெய்கைக்கு உபகரணமான புஷ்பங்களை உடையேனானேன். உனக்கு

---

இதுவொன்றேயோ நீ செய்தது? (மண்ணிரந்து) என்ன காரியத்தைச் செய்தாய்? உன்னுடையதான பூமியையன்றோ நீயே யாசித்துப்பெற்றாய்! எதற்காக இப்படிச்செய்தாயெனில்: (காத்தனை பல்லுயிரும்) எல்லா உயிர்களும் உன்னால் ரக்ஷிக்கத்தக்கதாகவும், நீ அவர்களுக்கு ரக்ஷகனாகவும் இருக்கையாலன்றோ இச்செயலைச் செய்தாய்; இழந்த பூமியைப் பெறவேண்டி ஆஶ்ரயித்தான் இந்திரன்; மாவலியும் உன்னிடம் பக்தியுள்ளவனாயிருந்தான். ஆகையால், இருவருக்கும் தீங்கு நேரிடாதபடி ரக்ஷிக்கத்திருவுள்ளங் கொண்டு ஸகல ப₂ல ப்ரத₃னான உன் ஸ்வரூபத்தை நீ மாற்றிக்கொண்டு மாவலியிடம் உன்னுடையதான பூமியைப் பிச்சையாக ஏற்று அனைவரையும் ரக்ஷித்தாயன்றோ. (காத்தனை பல்லுயிரும்) அஸுரனான மாவலியாலே நோவுபடாதபடி உயிர்களை ரக்ஷித்தாய் என்றுமாம். (பல்லுயிரும் காத்தனை) இதை வியாஜமாகக்கொண்டு, உறங்குகிற குழந்தையை அணைக்கும் தாயைப்போலே எல்லா ஜீவராசிகளையும் திருவடியாலே குளிரத் தடவிக்கொடுத்து ரக்ஷித்தாயன்றோ. (காவலனே) இத்தனையும் செய்வதற்குக் காரணம் நீ ஸர்வரக்ஷகனாயிருக்கையன்றோ. (நின் உள்ளி நின்றமையால்) இவ்வண்ணமாக அனைவரையும் ரக்ஷிக்கும் நீயே அனைவராலும் அடையத்தக்கவன் என்று அனுஸந்தித்து நிற்கையாலே. (ஏத்திய நாவுடையேன்) என்னிலும் முந்துற்றுத் தானே உன்னைத் துதிக்கும் நாவை உடையவனானேன் நான். (பூவுடையேன்) காயமெனப்படும் உடம்பால் அடிமை செய்யலாம்படியான புஷ்பம் முதலான

வுடையேனானேன். (அடியேன் பட்டகடை) உன்னுடையேனா யிருந்து வைத்து நான் முன்பு தேவதாந்தரங்களை அநுவர்த் தித்துப்பட்ட பொல்லாங்கு இனிப்படாதபடி காத்தருளவேணும். 10.

11. கடைநின் றமரர் கழல்தொழுது நாளும்
இடைநின்ற வின்பத்த ராவர் —புடைநின்ற
நீரோத மேனி நெடுமாலே நின்னடியை
யாரோத வல்லா ரவர்.

(ஸம்ஸாரிகளானவர்கள்) அமரர் கடை நின்று-மற்றதெய் வங்களின் வாசல்களைப் பற்றிநின்று, நாளும் — எப்போதும், கழல்தொழுது-(அவர்களுடைய) காலில் விழுந்து (பேரின்பம்

---

ஶேஷபூதனாகையாலே வந்த ராஜகுலத்தை உடையனான நான் அநாதிகாலம் அர்வாசீநமான தேவதைகளின் காற் கீழே தலைமடுத்துப்பட்ட தண்மையை இனி வாராதபடி தேவர் காத்தருளவேணும், 10.

---

உபகரணங்களை உடையவனானேன். 'உள்ளி' 'ஏத்தியநா' 'பூவுடை யேன்' என்கையாலே மனோ வாக் காயங்கள் மூன்றும் பகவத் விஷயத்திலே ஈடுபட்டபடியைச் சொல்லுகிறது. (அடியேன் பட்ட கடை கா) அடியேன் நெடுங்காலமாகப் பட்ட தாழ்வினின்றும் என்னை ரக்ஷிக்கவேணும். (அடியேன்) உனக்கு அடிமைப்பட்டிருக்கையாகிற பெருமையை உடைய யான். (பட்ட கடை) அநாதிகாலமாக உன்னைவிடத் தாழ்ந்த தேவதைகளின் காலின் கீழே என் தலையை வைத்து வணங்கி நான் பட்ட தாழ்வை. 'கடை' என்னும் பதம் தாழ்வைக் குறிக்கும். அடுத்த பாசுரத்தில் "அமரர் கழல்தொழுது நாளும் இடைநின்ற இன்பத்தராவர்" என்று தேவதாந்தரபஜனத்தின் தாழ்வை அநுஸந்திக்கையாலே இங்கு அத்தாழ்வே 'கடை' என்று கூறப்படுகிறது என்று கொள் வதே பொருத்தம். (கா) சக்ரவர்த்தியைப்பற்றியவன் அவனுடைய வேலைக்காரனை வணங்குவதோ? அதுபோலே உனக்கு அடிமைப் பட்ட ராஜகுலப்பெருமையை உடைய நான், உன்னுடைய வேலைக் காரர்களான மற்ற தெய்வங்களை முன் ஜன்மங்களில் வணங்கிப் பட்ட தாழ்வுகளையெல்லாம் இனியும் படாதபடி ஸர்வரக்ஷகனான நீயே காத்தருளவேணும். 10.

பெறமாட்டாமல்), இடை நின்ற இன்பத்தர் ஆவர்—நடுவே கிடக்கிற (சுவர்க்கம் முதலிய) சுகத்தைப் பெற்ருெழிவர்கள்; புடைநின்ற நீர் ஓதம் மேனி நெடுமாலே — (இவ்வுலகைச்) சூழ்ந்து கிடக்கிற கடல்போன்ற திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனே!, நின் அடியை—உனது திருவடிகளை, ஒத வல்லார் அவர் ஆர்— நினைக்கவல்ல பெருமையை உடையார் ஆரேனுமுண்டோ? (எவருமில்லையே!)

பெரி அவ:— (கடைநின்றமரர்) தே₃வதாந்தரங்களை அநுவர்த்தித்துப்பட்ட அநர்த்த₂த்தைப் பரிஹரியென்ன; இப்படி செய்வாருண்டோவென்னில்; அவரிப்படி செய்தன்ருே அநர்த்தப்படுகிருர்.

வ்யா:— (கடையித்யாதி₃) தேவதாந்தரங்கள் வாசலிலே நின்று அவர்களை நாள்தோறுந்தொழுது மத்₄யமபுருஷார்த்த₂

அவ:—நாட்டிலுள்ளார் க்ஷுத்₃ரதே₃வதைகளை ஆஶ்ரயித்து க்ஷுத்₃ரப₂லத்தைப் பெற்றுப்போமதொழிய ஸர்வாதி₄கனை உன்னை அறிந்து ஆஶ்ரயிக்கவல்லார் ஆர்? என்கிருர்.

உரை:—அவ்வோ தே₃வதைகளின் வாசற்கடைப்பற்றி நின்று நம்மிற்காட்டில் நாலுநாள் ஏறவிருந்து சாகக்கடவ

அவ:— "அநாதிகாலமாக நான் மற்ற தெய்வங்களை ஆஶ்ரயித்துப் பட்ட தாழ்வை இனிப்படாதபடி தவிர்த்தருளவேணும்" என்று ஆழ்வார் சென்ற பாசுரத்தில் அருளியவுடன் "சக்ரவர்த்தியான நானிருக்க, என்னுடைய அடிமைகளை ஆஶ்ரயித்து அநர்த்த₂ப் படுவாரும் உண்டோ?" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, "உலகிற் பலரும் க்ஷுத்₃ர தெய்வங்களை ஆஶ்ரயித்து க்ஷுத்₃ரபலங்களைப் பெற்றுப்போகிருர்களேயொழிய உன் திருவடிகளையே ப்ராப்யமாக அறிந்து உன்னை ஆஶ்ரயிப்பவர்கள் மிகச்சிலரன்ருே" என்கிருர்.

வ்யா:— (கடை நின்று) அந்தந்த தேவதைகள் குடியிருக்குமிடங்களின் வாசலிலே நின்று; கடை—வாசல். (அமரர்) தம்மை விடச் சில நாட்கள் அதிகமாக வாழ்கின்றவர்களாகையாலே

மான ஸுகத்தைப் பெறுவர். (புடைநின்றவித்யாதி) எங்கும் புக்கு நின்ற நீரையுடைத்தான கடலில் நிறத்தையுடைய

ப்₃ரஹ்மாதி₃தே₃வர்களுடைய கால்களை து₃ராராத₄ரான வர்கள் இரங்கிக் கார்யம் செய்யுமளவும் நெடுங்காலம் ஆஶ்ர யித்து, அங்கே வந்து உன்னை அநுப₄வித்தல், இங்கேயிருந்து உன்னை ஆஶ்ரயித்தல் செய்கைக்கு யோக்₃யதையில்லாதபடி நடுவே மிடறுபிடியாய் நின்ற ஸ்வர்க்க₃ாதி₃ஸுக₂த்தைப் பெற்று அநுப₄விக்கப்பெறுவர் சுற்றும் சூழ்ந்துகிடக்கிற ஜலஸம்ருத்₃தி₄யையுடைய கடல்போலே ஶ்ரமஹரமான

'அமரர்' (மரணமற்றவர்) என்று பெயர்பெற்றிருக்கிறபடி; "ந ப்₃ரஹ்மா நேஶாந:" என்று அவர்களும் ஒருகாலத்தில் அழிகின்ற வர்களே என்று ஶ்ருதி சொல்லுவதை உணராமல், இவர்கள் என்றுமே சாவாமலிருப்பவர்கள் என்று நினைக்கிறான் இவன். (அமரர் கழல் தொழுது) அந்த தேவர்களில் ஒருவர் மாறி ஒருவ ராகக் காலைக் கட்டித் திரிகிறான் இவன். ஸர்வேஶ்வரனைப்போலே ஸகலப₂லப்ரத₃ர்களன்றே அவர்கள்; ஆகையாலே ஒவ்வொரு வரிடமும் ஒவ்வொரு க்ஷுத்₃ரப₂லனைப் பெறுவதற்காகக் கண்ட கண்ட தெய்வங்களையெல்லாம் கழல் பணிந்து திரிகிறான் இவன். (நாளும் தொழுது) அந்த தெய்வங்களும் "பையனை அறுத்துத்தா" "ஆட்டை அறுத்துத்தா" "கோழியை அறுத்துக் கொடு" என்று கூறுகின்றவர்களாய் ஆராதனைக்கு அரியவர்களாயிருப்பார்கள். ஆகையாலே அவர்கள் இரங்கிக் காரியம் செய்யும் வரையில் நீண்ட நாள் இவன் அவர்கள் காலைக்கட்டித் திரிகிறான். "பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம்" [கீதை 9-26] என்கிறபடியே ஓர் இலையையோ, பூவையோ, பழத்தையோ, நீரையோ இட்டாலும் போதும் என்று கூறுமவனைப்போன்றவர்களன்றே அவர்கள். இப்படிப் படாத பாடுபட்டுப் பெறப்போகிற பயன்தான் எத்தகையது? என்னில்: (இடைநின்ற இன்பத்தராவர்) இங்குமல்லாமல், அங்குமல்லாமல் திரிசங்கு சுவர்க்கம்போலே கால்கட்டாயிருக்கும் நடுவிலேயுள்ள தொரு ஸுக₂த்தைப் பெறுவர். நித்தியமுக்தர்களைப்போல் பரம பதத்தில் வந்து உன்னை அனுபவிக்கப் பெறுவதுமில்லை; அஸ்ம தாதிகளைப்போலே இங்கேயிருந்து உன்னை ஆஶ்ரயித்து விரை விலேயே மோக்ஷஸுகத்தைப் பெறவிருக்கும் நிலையிலுமில்லை; அஹங்காரிகள் கூடியிருக்குமிடமாகையாலும், நீண்டநாள் நிலையா

ஸர்வேஶ்வரனே! ப்ராப்யமாக உன்னுடைய திருவடிகளை அறிந்து ஆஶ்ரயிக்கவல்லார் ஆர்? 11.

வடிவையுடைய அபரிச்சேத்யவைபவனானவனே! இப்படி ஸர்வாதிகனான உன்னுடைய திருவடிகளை ஸ்தோத்ராதிகளைப்பண்ணி ஆஶ்ரயிக்கவல்லவர் ஆர்தான்? அன்றிக்கே, தேவதாந்தரங்கள் உன் வாசலிலே நின்று உன் திருவடிகளைத் தொழுது உன்னை ப்ரயோஜநமாகக் கொள்ளாதே ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு போவர் என்றுமாம். 11

யிருப்பதாகையாலும், 'கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான கண்ணன் அடிக்கமலந்தன்னை அயன்' [முதல் திருவ 66] ''ப்ரஹ்மாவாய் இழந்து விடுதல்'' என்கிறபடியே உன்னை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கவும் வழியில்லாதபடி கழுத்துக்கட்டியாயிருக்கும் சுவர்க்கம் முதலான மத்யமஸுகத்தைப் பெற்று அநுபவிப்பவராவார்கள். இது என்ன அறிவுகேடு!

இப்படி அறிவுகெட்ட காரியத்தைச் செய்வானேன்? என்னில், உன்பெருமையை அறியாமையே என்கிறார் மேலே, — (புடை நின்ற நீரோதமேனி) சூழ்ந்து நிற்கும் நீர்ப்பெருக்கை உடைய கடல் போலே, கண்டார் களைப்பை ஆற்றும் திருமேனியை உடையவன் என்று திவ்யமங்கள விக்ரஹப்பெருமை சொல்லுகிறது உடம்பின் பெருமையையோ? எனில்: (நெடுமாலே) அளவிடவொண்ணாத பெருமையை உடைய திவ்யாத்மஸ்வரூபத்தை உடையவனே! (நின் அடியை ஓதவல்லாரவர் ஆர்) இப்படி அனைவரிலும் பெரியவனான உன்னுடைய திருவடிகளையே பரம ப்ராப்யமாக அறிந்து துதி முதலானவற்றைப் பண்ணி ஆஶ்ரயிக்க வல்ல பெருமையை உடையவர்கள் இவ்வுலகில் யாரிருக்கிறார்கள்? உலகில் பெரும்பாலும் மற்ற தெய்வங்களை ஆஶ்ரயித்துத் தாழ்ந்த பலன்களைப் பெற்றுப்போவாரே மலிந்துள்ளனர்; பகவானைப்பற்றுவோரிலும் மிகப்பலர் அவனையே உபாயமாகவும், உபேயமாகவும் எண்ணுவதில்லை; அவனையே உபாயமாகப்பற்றி அவன் திருவடிகளில் கைங்கர்யம் செய்ய விரும்புவார் மிகச்சிலரே என்று கருத்து. ''வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:'' [கீதை 7–19] [உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் என்று நினைப்பவனே மஹாத்மா; கிடைத்தற்கரியவனவன்.] என்றானன்றோ அவனும்.

12. அவரிவ ரென்றில்லை யரவணையான் பாதம்
எவர்வணங்கி யேத்தாதா ரெண்ணில்—பவரும்
செழுங்கதிரோ னொண்மலரோன் கண்ணுதலோ னன்றே
தொழுந்தகையார் நாளும் தொடர்ந்து.

எண்ணில்—('எம்பெருமானை வணங்கி நிறம் பெறுகிற வர்கள் ஆரார்?' என்று) ஆராயுமளவில், அவர் இவர் என்று இல்லை—இன்னார்தாம் ஆஶ்ரயிப்பவர்கள், இன்னார் ஆஶ்ரயிக் காதவர்களென்று ஒருவாசியில்லை; அரவு அணையான் பாதம்—ஆதிசேஷசயனனான அப்பெருமானுடைய திருவடிகளை, வணங்கி—தொழுது, ஏத்தாதார்—துதியாதவர்கள், எவர்—யார்? (ஒருவருமிலர்.) பவரும் செழும் கதிரோன்—பரவின அழகிய ஆயிரங்கிரணங்களை உடையவனான ஸூர்யனும், ஒண் மலரோன்—அழகிய (திருநாபிக்கமல) மலரை இருப்பிட மாகவுடைய பிரமனும், கண் நுதலோன்—நெற்றிக்கண்ண னான உருத்திரனும் (ஆகிய தெய்வங்களெல்லாம்), நாளும்—நாள்தோறும், தொடர்ந்து தொழும் தகையார் அன்றே—அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தைத் தேடி அவனை வணங்கும் தன்மையுள்ளவர்களன்றோ?

---

முன் இரண்டு அடிகளுக்கு வேறு வகையாகவும் பொருள் கொள்ளலாம்; (அமரர்) பிரமன் உருத்திரன் முதலான தேவர்கள். (கடைநின்று) நின் கோயிலின் வாசலைப் பற்றிநின்று. (கழல் தொழுது) உன் திருவடிகளைத் தொழுது. (நாளும் இடைநின்ற இன்பத்தராவர்) உன்னையே பிரயோஜனமாகக் கொள்ளாமல், எப்போதும் ப்ரஹ்மபட்டம், ருத்ரபதவி, இந்திரபதவி முதலான மத்யம புருஷார்த்தங்களையே பெற்றுப்போவர். கற்பகவ்ருக்ஷத்திடம் கௌபீநபிக்ஷைகேட்பது போலே இது ஒரு அறிவுகேடு இருந்தபடி யென்! என்று வெறுக்கிறார். "நின்னை விண்ணோர் தாள் நிலம் தோய்ந்து தொழுவர் நின் மூர்த்தி பல் கூற்றில் ஒன்றும் காணலும் ஆங்கொல் என்றே வைகல் மாலையும் காலையுமே" [திருவிருத்தம் 92] என்றாரன்றோ நம்மாழ்வாரும். "நின்னடியை யாரோதவல்லார்" என்றதை "நின் மூர்த்தி பல் கூற்றில் ஒன்றும் காணலும் ஆங்கொல் என்றே" என்று விவரித்தார். 11.




பெரி அவ:— (அவரிவர்) சிறியார் பெரியாரென்னாதே, ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயியாதாரெவர்?

வ்யா:-(அவரித்யாதி₃) எல்லாரும் அவனையே ஆஶ்ரயிக்கிறதோவென்னில்: ப்ரஸித்₃த₄ரான ப்₃ரஹ்மாதி₃களும், அவனைத் தொழும் ஸ்வபா₄வராயன்றோ இருக்கிறது. (எண்ணிலித்யாதி₃)

---

அவ:-ஆனால் அந்த தேவதைகளை ஆஶ்ரயிக்கவொண்ணாதோ? அவர்களை க்ஷேபிக்கிறதென்? என்னில்: அவர்கள் தாங்களும் தந்தாம் அபி₄மதம் பெறுகைக்கு அவனை ஆஶ்ரயியாநின்ற பின்பு நமக்கும் அவனை ஆஶ்ரயிக்கையன்றோ அடுப்பது என்கிறார்.

உரை:—ஆஶ்ரயணீயரான அந்த தே₃வர்கள், அவர்களை ஆஶ்ரயிக்கிற இந்த மநுஷ்யர்கள் என்ன ஒரு *வாசியில்லை;* திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வாதி₄கனுடைய திருவடிகளைத் தலையாலே வணங்கி, வாயாலே ஏத்தி எவர்தான் ஆஶ்ரயியாதவர்கள்? ஆராய்ந்து பார்க்குமளவில்

---

அவ:—மற்ற தெய்வங்களைப் பற்றுகிறவர்கள் *அறிவற்றவர்கள்* என்று அருளினர் சென்ற பாசுரத்தில். இதற்குக்காரணமென்ன? என்னில்: இவர்களால் ஆஶ்ரயிக்கப்படும் அந்த தெய்வங்களும தம்முடைய விருப்பங்களைப் பெறுவதற்கு அவனையே அடைகையில், நாமும் அவனை அடைவதன்றோ தக்கது என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(அவர் இவர் என்றில்லை) உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் வாசியில்லை; பலரால் ஆஶ்ரயிக்கப்படுகையாகிற உயர்வையுடைய தேவர்களும் இவனை ஆஶ்ரயிக்கிறார்கள்; அவர்களை ஆஶ்ரயிக்கும் மனிதர்களும் இவனை ஆஶ்ரயிக்கிறார்கள். (அரவணையான் பாதம் எவர் வணங்கி ஏத்தாதார்) திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடைய *ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைத் தலையாலே* வணங்கி வாயாலே துதித்து அவனை ஆஶ்ரயிக்காதவர்கள் யார் இருக்கிறார்கள்? தேவர்களுக்குத் தலைவர்கள் என்று பிரஸித்தரான ப்ரஹ்மருத்ராதிகளும் இவனை ஆஶ்ரயிப்பவர்களே என்று காட்டுவதன் மூலம் முன் கூறியதை விளக்குகிறார் மேலே; (எண்ணில்)

பரந்தழகியதான கிரணங்களையுடைய ஆதித்யனும், ப்₃ரஹ்மாவும் லலாடநேத்ரனும். (நாளுந்தொடர்ந்து தொழுந்தகையார்) தொழும் ஸ்வப₄ாவத்தையுடையராவர். 12.

---

பரம்பின அழகிய கிரணங்களை உடையனான ஆதி₃த்யனும், அழகிய திருநாபீ₄கமலத்தை இருப்பிடமாகவுடைய ப்₃ரஹ்மாவும் லலாடநேத்ரனான ருத்₃ரனுமாகிற நாட்டுக்கு ஆஶ்ரயணீயராக ப்ரஸித்₃த₄ரான இவர்களன்றோ நாடோறும் அவன் புக்கவிடம் புக்குப் பின்பற்றி ஆஶ்ரயிக்கையே ஸ்வப₄ாவமாக உடையராயிருக்கிறார்கள். 12.

---

இவனைத் தொழும் உயர்ந்தோர் யாரென்று பார்த்தால். (பவரும் செழுங்கதிரோன்) எங்கும் பரவிநிற்கும் அழகிய கிரணங்களை உடையவனான ஆதித்தியனும். ஸூர்யநமஸ்காராதிகளிலே பலருடைய தொழுகைக்கு விஷயமாயிருப்பவனன்றோ இவன்.'ஆரோக்₃யம் ப₄ாஸ்கராதி₃ச்சே₂த்' என்று 'ஆரோக்கியத்தை விரும்புகிறவர்கள் இவனைத் தொழவேண்டும் என்று சாஸ்திரவிதியும் உண்டன்றோ. (ஒண்மலரோன்) ஸர்வேஶ்வரனுடைய திருநாபிகமலத்திலிருந்து நேரே பிறந்தவனாகையாலும், உருத்திரன் முதலான மற்றவர்கள் அனைவரையும் ஸ்ருஷ்டிப்பவனாகையாலும் தன்னில் உயர்ந்த தே₃வதாந்தரம் இல்லையென்னும் பெருமையைப் பெற்றிருக்கும் நான்முகனும் இவனையன்றோ தொழுகிறான்! (கண்ணுதலோன்) நான்முகனால் பிறப்பிக்கப்பட்டவனானாலும், அவனுடைய தலையையும் கொய்ய வல்லனும்படியான சக்தியையுடையவனும், மிகப்பலராலே பரம்பொருளென்று கொண்டாடப்படுபவனும், தன்னுடைய மனைவி பிள்ளை முதலானோரும் பரம்பொருள் என்று பாமரர்களால் கொண்டாடப்படும் பெருமையுடையவனான நெற்றிக்கண்ணனான உருத்திரனும் தொழுவது இவனையன்றோ. எப்போதாவது ஒருமுறை தொழுவதோ? எனில்; (நாளும் தொடர்ந்து தொழும் தகையார் அன்றே) எப்போதும் ஸர்வேஶ்வரனான நாராயணன் புகுந்தவிடமெல்லாம் தாங்களும் தொடர்ந்து சென்று அவனை ஆஶ்ரயிப்பதையே இயற்கையாகக் கொண்டிருப்பவர்களன்றோ. அவதாரங்கள் தோறும் இவர்கள் அவனைத் தொழுவதை இதிஹாஸபுராணங்களிலே ஆயிரக்கணக்கான விடங்களில் காண்கிறோமன்றோ.

13. தொடரெடுத்த மால்யானை சூழ்கயம் புக்கஞ்சி
படரெடுத்த பைங்கமலங் கொண்டுஅன்—றிடரடுக்க
ஆழியான் பாதம் பணிந்தன்றே வானவர்கோன்
பாழிதா னெய்திற்றுப் பண்டு.

தொடர் எடுத்த மால் யானை—காற்சங்கிலியை முறித்துக் கையிற்கொண்டுதிரிகின்ற தன்மையுடையமதயானையானது, சூழ்கயம் புக்கு—பரந்திருக்கும் பொய்கையிலே இறங்கி, படர் எடுத்த பை கமலம் கொண்டு—மலர்ந்து ஓங்கியிருக்கிற அழகிய தாமரைப்பூக்களை (எம்பெருமான் திருவடிகளில் இடுவதற்காகக்) கையிற்கொண்டு, அன்று இடர் அடுக்க- அந்த நிலையிலே (முதலையின் வாயிலகப்பட்டுத் தானே விடுவித்துக் கொள்ள முடியாத) பெருந்துன்பமுண்டாக, அஞ்சி (வாடுவதற்கு முன்னே இந்தப்பூக்களை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க முடியாமற்போய்விடுமோ என்று) மனம் பதறி, ஆழியான் பாதம்—(முதலையை வெட்டுங்கருவியான) திருவாழியைக் கையிலேந்தின எம்பெருமானுடைய திருவடிகளை, பணிந்து அன்றே— (சரணமடைந்து) வணங்கியதனுலன்ரோ, தான்—அந்த கஜேந்திராழ்வான், பண்டு—முற்காலத்தில், வானவர் கோன் பாழி - நித்யஸூரிநாதனுடைய இருப்பிடமான பரம பதத்தை, எய்திற்று—அடைந்தது.

---

கீழ்ப்பாட்டில், "நெடுமாலே! நின்னடியை யார் ஓதவல்லாரவர்" என்று சொல்லிவைத்து, இப்பாட்டில் "அரவணையான் பாதம் எவர் வணங்கி ஏத்தாதார்" என்று அருளியிருப்பது முரணல்லவோ? எனில்: முரணுகாது; சென்ற பாசுரத்தில்—பரமபுருஷனுடைய திருவடிகளையே ப்ராப்யமாக அறிந்து அவனைத் துதிப்பவர்கள் அருமைப்பட்டிருப்பர் என்று அருளினர். இப்பாசுரத்தில் — இதரபலன்களுக்காக ப்ரஹ்மாதிதேவர்களோடு மனிதர்களோடு வாசியற அனைவருமே அவனைத் துதிப்பவர்களே என்கிறர். ஆகையாலே ஒரு முரணுமில்லை. 12.

பெரி·அவ:-(தொடரெடுத்தமால்) விலக்ஷணாதி₄காரமாகில் கிடையாதோவென்னில்; ஓரானைக்கன்றே எளிதாய்த் தோன்றுகிறது.

வ்யா:-(தொடரித்யாதி₃) வல்லியை முறித்துக் கையிற் கொண்ட ஆனை; மதித்திருந்துள்ள ஆனை. (சூழ்கயம்புக்கு)

---

அவ:-இப்படிப் பெரியார் ஆஶ்ரயிக்கிறவளவன்றிக்கே ஜந்மவ்ருத்தாதி₃களால்குறைய நின்றவர்களுக்கும்கூச்சமறச் சென்று ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கலாம் என்கிறார்.

உரை:—இட்ட விலங்கை ஒடித்துக் கையிலே கொண்டு ஸ்வைரமாகத் திரிகிற மத்தக₃ஜமானது தன்னால் கரை காண வொண்ணாத பரப்பையுடைத்தான பொய்கையிலே அத்ய பி₄நிவிஷ்டமாய்ச்சென்று புக்கு, விகஸிதமாய் ஓங்கியிருந்துள்ள அழகிய தாமரைப்பூவை ஸாத₃ரமாகப் பிடித்துக்

---

அவ:— ஜ்ஞானசக்திகளில் பெரியவர்களான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களால்தான் இவனை ஆஶ்ரயிக்க முடியுமோ? என்னில்: அப்படியன்று; பிறப்பு, ஒழுக்கம், அறிவு முதலானவற்றால் குறைவுபட்ட விலங்கினத்தைச் சேர்ந்தவர்களுங்கூடக் கூச்சமில்லாமல் சென்று இவனை ஆஶ்ரயிக்கலாம்; அவர்களுக்கும் இவன் எளியவனாய்த் தோற்றுவான் என்கிறார்.

வ்யா:— (தொடரெடுத்த யானை) காலில் இட்ட விலங்கை ஒடித்துக் கையிலே கொண்டு இஷ்டப்படி திரியும் ஸ்வபா₄வத்தை உடைய யானை. இதனால் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்கக்கூடியதன்று என்று காட்டுவதன் மூலம் இதன் ஒழுக்கக்குறைவு உணர்த்தப்படுகிறது. (மால் யானை) மதம் பிடித்து மயங்கியிருக்கும் யானை. மால்—மயக்கம். இதனால் இதன் அறிவுக்குறைவு உணர்த்தப்படுகிறது. யானைக்கு இவ்விரண்டும் ஸ்வபா₄வமாகையாலே சொல்லுகிறார். (சூழ் கயம் புக்கு) தன்னால் கரைகாணமுடியாத பரப்புடைய பொய்கையிலே, மிகவும் ஆவலோடு புகுந்து; ஆவல் எதற்காக? எனில்: (படர் எடுத்த பைங்கமலம் கொண்டு) மலர்ந்து ஓங்கியிருக்கும், குளிர்ந்து அழகிய தாமரைப்பூக்களைப் பறிப்பதற்காகவே என்கிறது. பூர்வ ஜன்மத்தில் பகலத் பக்தி

பரந்த பொய்கையிலே புக்கு. (இடரடுக்கவஞ்சி) முதலையால் வந்த இடருக்கு பயப்பட்டு. (படரெடுத்த பைங்கமலங்கொண்டு) படர்ந்தோங்கிக் குளிர்ந்த தாமரைப் பூவைக்கொண்டு.

---

கொண்டு, அத்தசையிலே முதலையின் வாயிலே அகப்பட்டுத் தன்னாலும் பிறராலும் பரிஹரிக்கவொண்ணாதபடியான து₃:க்க₂ம் ப்ரஸ்துதமாகப் பதறி, 'பூச்செவ்வியழிவதுக்கு முன்னே திருவடிகளிலே பணிமாறப் பெறுகிறிலோம்' என்று பயப்பட்டு, முதலையைத் துணிக்கைக்குப் பரிகரமான

---

மிக்கிருந்து சாபத்தாலே ஆனையான அரசனன்றோ இவன். இந்த ஜன்மத்திலும் விஷ்ணு பக்தி மாறாமையாலே, பரமபுருஷனுக்குப் புஷ்பங்களைப் பறித்துச் செல்லவன்றோ இவன் இப்பொய்கைக்கு வந்தது. (கொண்டு) ஸர்வேஶ்வரனுடைய பூஜைக்காகப் பறித்த தாகையாலே பேரன்புடன் கையிலே அத்தாமரை மலர்களைக் கொண்டு நிற்கிறது. (அன்று) "க₃ஜ ஆகர்ஷதே தீரே—க்₃ராஹ ஆகர்ஷதே ஜலே" [விஷ்ணு த₄ர்மம் 69-46] என்று யானை கரையை நோக்கியும், முதலை நீரை நோக்கியும் நெடுங்காலம் இழுக்கை யாலும், முதலைக்குத் தன்னிலமாகையாலும், அதுவிரும்பும் மாம்ஸம் கிடைக்கையாலும், யானைக்குத் தன் நிலமல்லாமையாலும், விரும்பி யது கிடைக்காமையாலும், ஆஹாரமில்லாமையாலும், கஜேந்திரன் தன் பலமெல்லாம் குறைந்து நின்ற அன்று; தன்முயற்சியினின் றும் கைவாங்கி நின்ற அன்று. (இடர் அடுக்க அஞ்சி) தான் முதலை வாயிலே அகப்பட்டு, "பரமாபத₃ம்" [வி-த₄ர்] என்கிற படியே தன்னாலும், பிறராலும் தவிர்த்துக்கொள்ள முடியாத துன்பம் ஏற்படப் பதறி. (அஞ்சி) தன் உயிர் போகின்றதே என்று அஞ்சவில்லையே இவன். "இத்தாமரைகள் வாடுவதற்கு முன்னே திருவடிகளிலே இடப் பெறுமல் போய்விடுமோ" என்றல் லவோ அஞ்சினான்.

"நாஹம் கலேப₃ரஸ்யாஸ்ய த்ராணார்த்த₂ம் மது₄ஸூத₃ந|
கரஸ்த₂கமலாந்யேவ பாத₃யோரர்ப்பிதும் தவ||"

[மதுசூதனனே! இந்த ஶரீரத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நான் கரையவில்லை; என் கையிலுள்ள தாமரைகளை உன் திருவடி களில் இடுவதற்கே கதறுகின்றேன்.] என்றானன்றோ. அவ்விடர் தீருவதற்காகச் செய்த செயலைச் சொல்லுகிறது அடுத்தபடியாக—

(ஆழியானித்யாதி₃) ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே விழுந்தன்றே நித்யஸூரிகளோடே கூடியிருக்கிறவனுடைய படுக்கையிலே ஏறப்பெற்றது. 13.

14 பண்டிப் பெரும்பதியை யாக்கிப் பழிபாவம்
கொண்டிங்கு வாழ்வாரைக் கூறுதே—எண்டிசையும்
பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள் !
தீர்த்தகர ராமின் திரிந்து.

---

திருவாழியை உடையனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை ஆஶ்ரயித்தன்றே முன்பொருநாளிலே, அயர்வறுமமரர்கள் அதிபதியானவனுடைய பரமபதமாகிற ஸ்தாநம்தன்னை ப்ராபித்தது; ஆன பின்பு, அவனை ஆஶ்ரயிக்குமிடத்தில் இன்னார் ஆவர், இன்னார் ஆகார் என்னும் நியதியில்லையென்று கருத்து. 13.

---

(ஆழியான் பாதம் பணிந்தன்றே) அடியார் இடரைக் கடிவதற்காகவே எப்போதும் கைகழலா நேமியானாயிருக்கும் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் ஶரணமடைந்தன்றே தன் இடர் தீரப் பெற்றது. இடர் தீர்ந்தவளவேயோ? எனில்; மிகச்சிறந்த ப்ராப்யத்தையும் பெற்றது என்கிறார் மேலே; (பண்டு வானவர் கோன் பாழிதான் எய்திற்று) முன்பொருகாலத்திலே, நித்ய ஸூரிகளுக்கு நாத₂னான நாராயணனுடைய அப்ராக்ருதஸ்தா₂னமாகிற பரமபதத்தையன்றே அடைந்தது. விலங்காய்ப் பிறந்ததன்றே அயர்வறும் அமரர்களோடு கூடிய ஸர்வேஶ்வரனுடைய படுக்கையிலே அடியிட்டு ஏறப்பெற்றது. ஆனபின்பு, அவனை ஆஶ்ரயிப்பதற்கு இன்னார் தான் ஆவார், இன்னார் ஆகமாட்டார் என்று நியமமில்லை என்று கருத்து. "அதி₄காரி நியமமின்றிக்கே யொழிந்தபடியென்? என்னில்: த₄ர்மபுத்ராதி₃களும், த்₃ரௌபதி₃யும், காகமும், காளியனும், ஸ்ரீ க₃ஜேந்த்₃ராழ்வானும், ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானும், பெருமாளும் தொடக்கமானவர்கள் ஶரணம்புகுருகையாலே அதி₄காரி நியமமில்லை." என்று ஶரணாக₃திக்கு அதி₄காரி நியமமில்லாமையை அருளிச்செய்யும் ஸ்ரீ வசநபூ₄ஷண (32—வது) ஸூத்ரமும், அதன் வ்யாக்யானமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.13

பேதைகாள்-அறிவற்றவர்களே!. பண்டியை-வயிற்றை, பெரும் பதி ஆக்கி—பெரிய ஊர்போலக் கண்டதையுங் கொண்டு நிரப்பி வளர்த்து, பழி பாவம் கொண்டு-தெரியாமல் செய்யும் குற்றங்களையும் தெரிந்து செய்யுங் குற்றங்களையும் மேன்மேலும் வளர்த்துக் கொண்டு, இங்கு-இவ்வுலகில், வாழ்வாரை-வாழ்கின்ற ஸம்ஸாரிகளை, கூறுதே—புகழ்ந்து பேசுவதை விட்டு, எண் திசையும் பேர்த்த கரம் நான்கு உடையான்-(உலகளந்த காலத்தில்) எட்டுத் திக்குக்களையும் பேர்த்துப்போடும்படி விம்மி வளர்ந்த நான்கு திருத்தோள்களையுடையனான திரிவிக்ரமனுடைய, பேர்-திருநாமங்களை, ஓதி-பலன்கருதாது சொல்லிக் கொண்டு, திரிந்து—உலகெங்கும் ஸஞ்சரித்து, தீர்த்தகரர் ஆமின்—(உங்கள் ஸம்பந்தத்தாலே) நாட்டையெல்லாம் பரிசுத்தப் படுத்துங்கள்.

பெரி அவ:— (பண்டி) அவன்படி இதுவானபின்பு ஸம்ஸாரிகளை ஏத்தித்திரியாதே அவன் திருவடிகளிலே பணிந்து திருநாமங்களைச்சொல்லி உங்களுடைய ஸ்பர்ஶத்தாலே லோகத்தை சுத்தமாக்கிக்கொள்ளுங்கோளென்கிறுர்.

வ்யா:-(பண்டிப் பெரும்பதியையாக்கி) அன்றிக்கே, வயிறுகிற பெரும்பதியை உண்டாக்கி என்றுமாம். (பழிபாவ

அவ:- இப்படி அவன் ஸர்வ ஸமாஶ்ரயணீயனான பின்பு, ஸம்ஸாரவர்த்தகரான க்ஷுத்ரரை ஸ்தோத்ரம் பண்ணுதே, எம்பெருமானை ஆஶ்ரயித்து நாட்டையும் உங்கள் ஸஞ்சாரத்தாலே பரிசுத்தமாம்படி பண்ணுங்கோள் என்கிறுர்.

உரை:—வயிற்றைப் பெரிய ஊர்போலே, கண்ட அன்னலும் துன்னலுமாக இட்டு வளர்த்து, அதுக்கு உறுப்

அவ:—இவ்வண்ணமாக அவனை அடைவதற்கு ஆகாதாரில்லையானபின்பு, ஸம்ஸாரத்தை வளர்ப்பதற்கே உதவும் தாழ்ந்தவர்களான ஸம்ஸாரிகளைத் துதித்துத்திரியாமல், ஸர்வேஶ்வரன் திருவடிகளில் பணிந்து அவனுடைய திருநாமங்களைச் சொல்லி, உங்களுடைய ஸம்பந்தத்தாலே உலகைப் பரிசுத்தப்படுத்துங்கள் என்கிருர்.

மித்யாதி3) அடியுண்டாயும் அடியின்றிக்கேயுமான பாபமே வாழ்வாக இருப்பாரைப் பேசாதே, எட்டுத்திக்கும்

---

பாகத் தான் அறியாதே பிறர் அறிந்து ஏறிடும்படி அபு3த்3தி4 பூர்வகமாகச் செய்யப்படும் பழியையும், பு3த்3தி4பூர்வகமாகத் தான் அநுஷ்டி2த்துப் போரும் நிஷித்3த4ாசரணமாகிற பாபத்தையும் உத்தரோத்தரம் வளர்த்துக்கொண்டு, இஹலோகத்திலே பரலோகஸுக2ம் கனாக்கண்டு அறியாதவர்களாகையாலே, இத்தைப் பெரிய வாழ்வாக நினைத்துக் களித்துத் திரியும் ஹேயரான ஸம்ஸாரிகளை. 'உனக்கு ஒரு பழியுண்டோ, பாவமுண்டோ' என்று புகழாதே, கண்டதல்லதறி

---

வ்யா:—(பண்டிப் பெரும்பதியை ஆக்கி) பண்டியைப் பெரும்பதியாக்கி. பண்டியாவது வயிறு. வயிற்றைப் பெரிய ஊர் போலே கண்ட கண்ட பொருள்களையெல்லாம் இட்டு வளர்த்து. "பண்டு இப் பெரும் பதியை ஆக்கி" என்று பிரித்து, "அநாதிகாலமாக இந்தப் பெரிய ஸம்ஸாரத்தை வளர்த்து" என்றும் பொருள் கொள்ளலாம். "முற்காலத்தில் இந்தப்பெரிய ஸம்ஸாரத்தைப் படைத்து" என்று பொருள் கொண்டு, "பேர்த்தகரம் நான்குடையான்" என்னும் பதங்களோடு கூட்டவுமாம். வயிற்றை வளர்ப்பதற்காக இவன் செய்யும் பாபங்களை அடுத்தபடியாகக் காட்டுகிறார்,— (பழி பாவம்கொண்டு) தான் அறியாமல், யமப4டர் முதலானோர் அறிந்து தண்டிக்கும்படியாக அபுத்திபூர்வகமாகச் செய்யப்படும் தீய செயல்கள் 'பழி' எனப்படுகின்றன; தானே புத்தி பூர்வகமாக அறிந்து செய்யும் தீயசெயல்கள் 'பாவம்' எனப்படுகின்றன. அன்றிக்கே, ஒரு காரணமுமில்லாமல் உலகினரால் ஏறிடப்படும் அபவாதங்கள் 'பழி' என்றும், காரணத்தோடு நிரூபிக்கப்படும் அவப்பெயர்கள் 'பாவம்' என்றும் கூறப்படுவதாகவும் கொள்ளலாம். (பழி பாவம் கொண்டு) நாள் செல்லச்செல்ல இவற்றை மேன்மேலும் வளர்த்துக் கொள்கிறானன்றோ இவன். (இங்கு வாழ்வாரை) இவ்வுலகிலேயிருந்துகொண்டு, மோக்ஷவின்பத்தைக் கனவிலும் காணாதவர்களாகையாலே, இதையே பெருவாழ்வாகக் கொண்டு களித்துத்திரியும் தாழ்ந்தோரான ஸம்ஸாரிகளை. (கூறுதே) அப்பேர்ப்பட்ட தாழ்வையுடையவர்களை, "உனக்கு ஒரு பழியுண்டோ, பாவமுண்டோ" என்றாற்போலே தாழ்வேயற்றவர்களாகக் கூறுவதோடு நில்லாமல், ஸமஸ்தகல்யாணகு3ணாத்மகனைக் குறித்துச்

விம்மவளர்ந்த நாலு தோள்களையுடையனானவனுடைய திரு நாமங்களைச்சொல்லி. 14.

---

யாத அறிவுகேடர்காள்! திருவுலகளந்தருளினபோது எட்டு திக்குகளையும் பேர்த்துப்பொகடும்படி விம்மவளர்ந்த நாலு திருத்தோள்களை உடையனான ஸர்வேச்வரனுடைய குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை இடைவிடாமற் சொல்லிக் கொண்டு, தீதில் நன்னெறிகாட்டி எங்கும் ஸஞ்சரித்து, உங்கள் ஸஞ்சாரத்தாலே நாட்டை இருந்ததே குடியாகப் பரி

---

சொல்லவேண்டிய புகழுரைகளையும் இந்த ஸம்ஸாரிகளைக் குறித்துச் சொல்லுவதாயன்றோ உலகியற்கையிருக்கிறது; இப்படிப்புகழாமல் இப்படிப்புகழுகைக்குக் காரணமென்னவெனில்: (பேதைகாள்) உங்களுடைய அறிவுகேடன்றோ இப்படிச் சொல்லவைக்கிறது; அப்படியானால் செய்ய வேண்டியதென்னவெனில்; (எண்டிசையும் பேர்த்த கரம் நான்குடையான் பேரோதி) திரிவிக்கிரமனாகித் திருவுலகளந்தருளியபோது எட்டுத் திக்குகளிலுமுள்ள பொருள்களையெல்லாம் பேர்த்துப் போடும்படி விம்மிவளர்ந்த நாலு திருத்தோள்களையுடைய ஸர்வேச்வரனுடைய திருநாமங்களைச் சொல்லுங்கள். எண்திசையென்று எட்டுத்திசைகளிலுமுள்ள பொருள்களைச் சொல்லுகிறது. (பேர் ஓதி) அவனுடைய குணரூபச்செயல்களின் பெருமைகளைக் கூறும் திருநாமங்களைச் சொல்லுங்கள். (கூறுதே பேரோதி) அவனுடைய பெருமைகளைத்திருடிப் பிறர்க்குப் பெருமை கூறாமல், எவ்வளவு பெருமைகளைச் சொன்னாலும் பொருந்தும் அவனுடைய பெருமைகளைக் காட்டும் பெயர்களைக் கூறுங்கள். (பேர் ஓதி) 'ஓதி' என்கையாலே அப்பேரையும் ஒன்றுக்கும் உபாயமாக நினையாமல், ஸ்வயம்ப்ரயோஜனமாக அநுஸந்தியுங்கள் என்கிறார். ஸ்வயம் ப்ரயோஜனமாகத் திருநாமஞ் சொல்லுவதினால் இவனுக்கு ஏற்படும் பெருமையைச்சொல்லுகிறார்;— (தீர்த்தகரராமின் திரிந்து) இவ்வண்ணமாகத் தீதற்ற நன்னெறியைக் காட்டிக் கொண்டு, உலகெல்லாம் திரிந்து உங்களுடைய ஸ்பர்சம், பார்வை முதலிய ஸம்பந்தம் பெற்ற பொருள்களையெல்லாம் பரிசுத்தப்படுத்துங்கள். பண்டிப் பெரும்பதியை ஆக்கிப் பழிபாவங்கொண்டு, இங்கு வாழ்வாரைக் கூறினீர்களாகில், உங்களுக்கும் அவர்களுக்கும் பழிபாவங்களை வளர்த்து விடுவீர்

சுத்தராம்படி பண்ணுங்கோள். "பண்டிப்பெரும்பதி" என்று, முன்பு இந்த ஸம்ஸாரத்தை வர்த்திப்பித்து என்னுதல்; பழையதான ஸம்ஸாரத்தைச் சேர்த்து என்னவுமாம். 14.

---

கள். எண்டிசையும் பேர்த்தகரம் நான்குடையான் பேர் ஓதினீர்களாகில், உங்களுடைய பழிபாவங்களைத் தீர்த்துக்கொள்வதோடன்றியில், பிறருடைய பழிபாவங்களையும் தீர்த்து, அவர்களையும் பரிசுத்தப்படுத்தும் தீர்த்தகரராவீர்கள் என்று கருத்து. தீர்த்தமாவது பரிசுத்தம். "தீர்த்தம் கரோதீதி தீர்த்தகர:" என்கிற வ்யுத்பத்தியின்படியே பிறரைப் பரிசுத்தப்படுத்துமவன் தீர்த்தகரனாகிறான்.

"அதிபாதகயுக்தோபி த்யாயந் நிமிஷமச்யுதம்|
பூயஸ் தபஸ்வீ பவதி பங்க்திபாவநபாவந:||"

[மஹாபாபங்களைச் செய்தவனாயினும், அச்யுதனை ஒரு நிமிஷம் தியானம் செய்வானாகில், மஹாதபஸ்ஸைச் செய்தவனாகவும், தன் ஸம்பந்தத்தாலே ஒரு பங்க்தி (வரிசை) முழுவதையும் பரிசுத்தப்படுத்தும் பங்க்திபாவனர்களையும் பரிசுத்தப்படுத்துபவனாகவும் ஆகிறான்.]

"ஜ்ஞாநதோ஽ஜ்ஞாநதோவாபி வாஸுதேவஸ்ய கீர்த்தநாத்|
தத் ஸர்வம் விலயம் யாதி தோயஸ்தம் லவணம் யதா||"

[தெரிந்தோ, தெரியாமலோ வாஸுதேவனை ஸங்கீர்த்தனம் செய்வதன் மூலம், மனிதனுடைய பாபமெல்லாம் தண்ணீரிலுள்ள உப்புபோல் கரைந்து விடுகிறது.]

"யந்நாமகீர்த்தநம் பக்த்யா விலாயநமநுத்தமம்|
மைத்ரேயாசேஷபாபாநாம் தாதூநாமிவ பாவக:||"

[மைத்ரேயரே! எவனுடைய நாமத்தை அன்புடன் கீர்த்தனம் செய்வது தாதுக்களை அழிக்கும் நெருப்பைப்போலே எல்லாப் பாபங்களையும் அழித்தொழிப்பதாயிருக்கின்றதோ...]

"சமாயாலம் ஜலம் வஹ்நேஸ் தமஸோ பாஸ்கரோதய:|
சாந்தி: கலேரகௌகஸ்ய நாமஸங்கீர்த்தநம் ஹரே:||"

[நெருப்பை அணைப்பதற்கு நீரும், இருட்டை நீக்க ஸூர்யோதயமும் போதுமானது; (அதுபோலவே) கலிகாலத்திலுள்ள பாபக்கூட்டங்களையெல்லாம் அழிக்க ஹரியின் நாமகீர்த்தனத்தாலேயே இயலும்.] என்று சாஸ்திரங்களில் கோஷிக்கப்படுகின்றதன்றோ. 14.

15. திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி அன்று
பிரிந்தது சீதையைமான் பின்போய் —புரிந்ததுவும்
கண்பள்ளி கொள்ள வழகியதே நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் றனக்கு.

வெம் சமத்து— (கண்ணனாயிருந்தபோது) கொடிய (பாரத) யுத்தத்திலே, தேர் கடவி— (பார்த்தஸாரதியாகித்) தேரை நடத்திக்கொண்டு, திரிந்தது- அலைந்ததும், அன்று- இராமனாகத் திருவவதரித்தபோது, மான் பின் போய்— மாரீசனாகிற மாயமானின் பின்னே சென்று, சீதையை பிரிந்தது — பிராட்டியைப் பிரிந்து துயருற்றதும், கண்— தரையிலே,பள்ளி கொள்ள-படுத்துக் கொள்ள, புரிந்ததுவும்- விரும்பியதும், (ஆகிய இச்செயல்கள் எல்லாம்), நாகத்தின் தண் பள்ளி கொள்வான் தனக்கு— திருவனந்தாழ்வானாகிற குளிர்ந்த படுக்கையில் பள்ளிகொண்டிருக்கும்பெருமானுக்கு, அழகியதே— தக்கவையோ?

பெரி அவ:-(திரிந்தது) திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமாகையாலே அல்லாத அவதாரங்களிலும் ஆஶ்ரிதார்த்தமாக மிகப்பட்ட மிறுக்குகளை நினைத்து வெறுக்கிறார்.

---

அவ: —இவர்கள் இப்படி தங்கள் உடம்பைப் பேணிப் பேய்களாய்த்திரிய, இவர்களுக்காக க்ருஷ்ணனாவது ராமனாவதாய்க்கொண்டு அதிஸுகுமாரமான திருமேனியோடே அவன் பட்ட மிறுக்குகளை நினைத்து வெறுக்கிறார்.

---

அவ:—திரிவிக்கிரமனாகிக் காட்டையும், மேட்டையும், பூவிலும் மென்மைமிக்க தன் திருவடிகளாலே அளந்துபட்ட சிரமம் சென்ற பாசுரத்தில் நினைவுக்கு வந்தவுடன், இப்பாசுரத்தில் மற்ற அவதாரங்களில் அடியார்களுக்காகப் பட்ட பாடுகளை நினைத்து வெறுக்கிறார். அன்றிக்கே, பண்டிப் பெரும்பதியையாக்கிப் பழிபாவங் கொண்டு வாழும் பேய்களான இந்த ஸம்ஸாரிகளுக்காக அவன் ராமனாகவும் கண்ணனாகவும் அவதரித்து, மென்மைமிக்க திருமேனியோடு பட்டபாடுகளை நினைத்து வெறுக்கிறார் என்றுமாம்.

வ்யா:-(வெஞ்சமத்துத் தேர் கடவித் திரிந்தது) யுத்₃த₄த்திலே உடம்புக்குஈடிடாதே உன்னையழியமாறிப்படைபொறுத்துத்தேர் கடவித்திரிந்தது. (அன்று மான்பின்போய் பிரிந்தது சீதையை)

---

உரை:—கொடிதான யுத்₃த₄த்திலே எதிரிகள் விடுகிற அம்புகள் தன்மேலே படும்படி உடம்புக்கு ஈடு இடாமல், ஸாரதி₂யாய்க்கொண்டு அர்ஜுனன் சொன்னவிடத்திலே தேரை நடத்திக்கொண்டு திருமேனி அலசும்படி இதஸ்ததஸ் ஸஞ்சரித்ததுவும், "वनवासो महोदयः" (வநவாஸோ மஹோத₃ய:) என்று சொல்லும்படி உகப்புடனே காட்டிலே ஸஞ்சரித்துத்

---

வ்யா:—(திரிந்தது) ஸர்வேஶ்வரனாயிருந்தும் ஸம்ஸாரியானவன் ஸம்ஸாரத்தில் திரிந்ததற்கும் மேலே திரிந்தான்! அதுதான் உத்₃யானவனம் முதலான ஸுகமான இடங்களிலேயா? எனில்: (வெம்சமத்து) எதிரிகளின் அம்புகள் திருமேனியிலே தைத்துப்புண்ணுக்கும்படியான கொடுமையையுடைய யுத்தபூமியிலேயன்றோ திருமேனி நோவத் திரிந்தான்! அதுதான் கவசமணிந்த போர் வீரனாகவோ? எனில்: (தேர் கடவி) உடம்புக்கு ஒரு கவசமும் இடாமல் ஸாரதியாகப் பார்த்தன் தன் தேரை நடத்தித்திரிந்தானே! (தேர் கடவி)

"ஆத்மாநம் ரதி₂நம் வித்₃தி₄ ஶரீரம் ரத₂மேவ ச|
பு₃த்₃தி₄ம் து ஸாரதி₂ம் வித்₃தி₄ மந: ப்ரக்₃ரஹமேவ ச ||
இந்த்₃ரியாணி ஹயாநாஹுர் விஷயாம்ஸ்தேஷு கோ₃சராந்||"
[கட₂ 1-3-34]

[ஆத்மாவை ரதி₂யாகவும், சரீரத்தை ரதமாகவும், புத்தியை ஸாரதியாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் அறிவாயாக; இந்திரியங்களைக் குதிரைகளாகவும், சப்தம் முதலான விஷயங்களை அக்குதிரைகள் செல்லும் பாதைகளாகவும் கூறுகின்றனர்] என்று ஸம்ஸாரமண்டலத்திலுள்ள ஸாரதி₂ ரதி₂ முதலான அனைவரையும் நடத்திச்செல்கின்றவன் ஒரு ரதி₂க்கு அடங்கி நின்று ஒரு தேரையும் சில குதிரைகளையும் மாத்திரம் நடத்திச்செல்லும் ஸாரதியானானே! கிருஷ்ணாவதாரத்தில் பட்டபாடு இது; ராமாவதாரத்தில்தான் ஸுகமடைந்தானோ? (அன்று)

"மா ச லக்ஷ்மண ஸந்தாபம் கார்ஷீர் லக்ஷ்மயா விபர்யயே|
ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோத₃ய: ||"
[ரா-ஆ 2 -29]

ரக்ஷிக்கிறவிடத்தில் இருவருங் கூடவிருந்து ரக்ஷிக்கப்பெற்றோமோ? (புரிந்ததுவுங் கண் பள்ளிகொள்ள) தரையிலே பள்ளி

---

திரிகிற அன்று, மாயாம்ருகத்தின் பின்னேபோய், நித்யம் ப்ராணஸமையான பிராட்டியைப் பிரிந்து அலேச்சல் பட்டதுவும், அதிகடிநமான பூமியிடத்திலே பள்ளி கொண்டருள ஆதரித்ததுவுமான இவ்வோ செயல்களெல்

---

[லக்ஷ்மணா! அரசுபோய்விட்டதே என்று வருந்தாதே; அரசும் வனவாஸமும் ஒன்றுதான்; (உண்மையில்) வனவாஸமே அரசைவிடச் சிறந்ததாகும்] என்று தானே அருளியபடியே 'பிராட்டியும் தானுமாய் ஏகாந்தமாக அநுபவிக்கலாம்; அடியார்கள் பலரோடு கூடி இன்புறலாம்' என்று மநோரதம் செய்துகொண்டு காட்டிற்குச் சென்று உகப்புடன் காட்டிலே திரிந்த அன்று. அவ்வுகப்பு நீடிக்கப் பெறவில்லையே என்று வெறுக்கிறார் மேலே: (பிரிந்தது சீதையை)

"ராஜ்யாத் ப்ரம்ஶோ வநே வாஸ: ஸீதா நஷ்டா ஹதோ த்விஜ:|
ஈத்ருஶீயம் மமாலக்ஷ்மீர் நிர்தஹேதபி பாவகம் ||"

[ரா ஆ67-24]

[அரசிழந்தது, வநவாஸம், ஸீதையின்பிரிவு, ஜடாயுவின் அழிவு ஆக இப்படி எனக்கு வந்த இந்தத் துன்பங்களெல்லாம் நெருப்பையும் எரிக்கும்] என்கிறபடியே மஹோதயமாக நினைத்த வனவாஸமே மஹாதுக்கமாம்படி எப்போதும் உயிரினும் இனியவளான சீதையையும் பிரிந்தானே! அவனுக்கு உதவிய ஜடாயுவும் அழிந்தாரே! (பிரிந்தது சீதையை) ஆச்ரிதரக்ஷணத்திற்காக வனம் சென்றவிடத்திலும் இருவரும் கூடவிருந்து ரக்ஷிக்கப்பெறவில்லையே! சீதையைப் பிரிந்தது தான் எவ்வகையில்? (மான்பின்போய்) ஓர் பெண் பிள்ளை சொற்கேட்டு மாயமானின் பின்சென்று அநர்த்தப்பட்டான் என்று பாமரர் பழி சொல்லும்படியன்றோ பிரிந்தான்! இந்த அலேச்சலால் வந்த ஆயாஸமெல்லாம் தீரப் பள்ளிகொண்டவிடம்தான் எத்தகையது? (புரிந்ததுவும் கண் பள்ளி கொள்ள) விரும்பியதும் வெறும் தரையிலே பள்ளி கொள்வதையன்றோ. கல்லும் முள்ளும் நிறைந்த கானகத்தரையிலேயன்றோ படுத்தான். இதனால் ஆயாஸம் அதிகமாகவன்றோ பெருகும்! புரிந்தது—விரும்பியது; கண்—பூமி. (அழகியதே) இவன் ஜகத்ரக்ஷணம் செய்யும்படி மிக அழகாயிருக்கிறது! என்று வயிறு பிடிக்கிறார். எத்தகைய திருமேனியைக்

கொள்ளக்கற்றது. (நாகத்தின் தண்பள்ளிகொள்வான் தனக்கு அழகியதே) திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளப் பெற்ற ஸௌகுமார்யத்தையுடையனானவனுக்கு ஜகத் ரக்ஷணம் சாலஅழகிதாயிருந்தது. 15.

16. தனக்கடிமை பட்டது தானறியா னேலும்
மனத்தடைய வைப்பதாம் மாலை – வனத்திடரை
ஏரியாம் வண்ண மியற்றுமிது வல்லால்
மாரியார் பெய்கிற்பார் மற்று.

---

லாம், மென்மை குளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வான் மேலே குளிரப் பள்ளிகொண்டருளக் கடவ அதிஸுகுமாரனை தனக்குச் சால அழகியதாயிருந் தன! என்று வயிறுபிடிக்கிறார். 'கண்பள்ளி கொள்ள' என்றது 'கண்' என்று இடமாய், தறைக்கிடைகிடக்க என்றபடி. 15.

---

கொண்டு இவ்வரிய செயல்களைச் செய்கிறான்? எனில்; (நாகத்தின் தண் பள்ளிகொள்வான் தனக்கு) திருவநந்தாழ்வானாகிற தண்மைமிக்க படுக்கையிலே பள்ளிகொள்வதையே இயற்கையாகவுடைய அதிஸுகுமாரமான திருமேனியைக் கொண்டன்றோ இப்பாடுபட்டது! (நாகத்தின் தண்பள்ளி கொள்வான் தனக்குக் கண் பள்ளிகொள்ளப் புரிந்ததுவும் அழகியதே) மென்மை, குளிர்ச்சி, நறுமணம், வழவழப்பு, பளபளப்பு முதலிய படுக்கைக் குணங்களை இயற்கையாகவுடைய திருவனந்தாழ்வான் மேலே பள்ளி கொள்கின்றவன் கல்லும் முள்ளுமுள்ள கானகத்தரையிலே பள்ளி கொள்ள விரும்பியதோ அழகு? (நாகத்தின்......வெஞ்சமத்துத் தேர் கடவித்திரிந்தது அழகியதே) இத்தகையவன் கொடிய யுத்தபூமியிலே கவசமுமிடாமல் தேரோட்டியதோ அழகு? (நாகத்தின்...... மான்பின் போய்ச்சீதையைப் பிரிந்தது அழகியதே) பிராட்டியும் தானுமாகத் தண்மைமிக்க திருவனந்தாழ்வான் மேலே குளிரப்பள்ளி கொள்கின்றவன் ஒருமானின் பின் அலைந்து பிராட்டியைப் பிரிந்ததுதான் அழகோ? "புஷ்பஹாஸ:" என்னும் திருநாமத்தை அளிப்பதாய், திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டுவதான இவனுடைய திருமேனிக்கும், இச்செயல்களுக்கும் என்ன சேர்த்தியுண்டு? பண்டிப்பெரும்பதியையாக்கிப் பழிபாவம் கொண்டிங்கு வாழ்வார்க்காகவா இச்செயல்களைச் செய்வது? 15.

தனக்கு—சேதனனாகிய தனக்கு, அடிமை—சேஷத்வ மானது, பட்டது — பொருந்தியிருக்கின்றதென்பதை, தான் அறியான் ஏலும்—தான் தெரிந்து கொள்ள முடியாதவனா யிருந்தாலும்,(எம்பெருமான்தானாகவே) மனத்து-மனத்திலே, அடைய - வந்து சேர்ந்தவளவில், மாலை — அப்பெருமானை, வைப்பது —இடங்கொடுத்து வைத்துக் கொள்வது, ஆம்— தகும்; (இவனுக்கு இவ்வளவு ருசிமாத்திரம் உண்டானால் விரோதியைப் போக்கித் தன்னைத் தானே தந்தருள்வன் எம்பெருமான்; அது எங்ஙனேயென்னில்;) வனம் திடரை - காடெழுந்து கிடக்கிற மேட்டு நிலத்தை, ஏரி ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால்—(பெய்யும் மழைநீர் அப்பால் போகாமல் தடையின்றி உள்ளே வந்து புகும்படி ஏரியாகக் குழி வெட்டுதல் செய்யக்கூடுமேயல்லாமல், மற்று-பின்னும், மாரி—மழையை, பெய்கிற்பார் – பெய்யும்படி செய்விக்கவல்ல வர்கள், யார்-யாவருளர்? (மழை பெய்வது பகவத் ஸங்கல் பத்தாலன்றோ.)

வ்யா:-(தனக்கடிமையித்யாதி₃)''स्वत्वमात्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्'' (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம

---

அவ:—இப்படி நம்மைப் பெறுகைக்கு எம்பெருமான் தானே கைதொடனாய் உதித்து க்ருஷிபண்ணாநிற்க, சேதன னை வாசிக்கு அவனைப் பெறவேணும் என்னும் ருசிமாத்ர மொழிய, நாம் பேற்றுக்கு யத்னம் பண்ணவேணும் என் பதொன்று உண்டோ? என்கிறார்.

உரை:-''आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च सदा स्मर'' (ஆத்ம தா₃ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வப₄ாவம் ச ஸதா₃ ஸ்மர)

---

அவ:-''இப்படி நம்மைப் பெறுவதற்கு எம்பெருமான் தானே அவ தரித்து நேர் நின்று காரியம் செய்யாநிற்க, அவன் மேல்விழுந்து விஷயீகரிக்கும்போது விலக்காமல் தான் அறிவுடையவனாயிருந் தமைக்குச்சேர. 'அவனைப் பெறவேணும்' என்னும் ருசியுடையவனா யிருப்பதையொழிய 'நாம் பேற்றுக்கு முயற்சிசெய்யவேணும்' என்ப தொன்று உண்டோ?'' என்கிறார். பரக₃தஸ்வீகார நிஷ்டை₂யின் சிறப்பைத் தெரிவிக்கும் பாசுரம் இது.

ப்3ரஹ்மணிஸ்தி2தம்' என்னும்படியே விசதமாகவறியாளுகிலும், (மனத்தித்யாதி3) "यद्यदाचरति श्रेष्ठः" (யத்3யதா3சரதி ஶ்ரேஷ்ட2:) என்னும்படியாகிலும் ஸர்வேஶ்வரனை ஹ்ருத3யத்திலே ஸங்கல்ப்ப

---

என்று எம்பெருமானுக்கு ஶேஷித்வம் கூறுபட்டாப் போலே தனக்கு ஶேஷத்வம் கூறுபட்டது என்னுமிடத்தை ப்ரமாணப்ரஸித்3தி4யாலும், ஆசார்யஸேவையாலும் தான் உள்ளபடி அறியமாட்டாதவனாய இருந்தானேயாகிலும், 'நம் உடைமையை நாம் பெறவேணும்' என்று மேல் விழுகிற வ்யாமுக்3த4னானவனை திருவாணையிட்டுப் புகாதபடி தடுக்கையன்றிக்கே, மனஸ்ஸிலே வந்து சேரத்தக்கதாகத் தான் பொருந்தி இடங்கொடுத்து வைத்துக்கொள்ளுவது; இத்தலையிலே இவ்வளவு ருசிமாத்ரம் உண்டானால் விரோதி4யைப்போக்கித் தன்னைத் தருகை அவனுடைய ப4ரமிறே.

---

வ்யா :—(தனக்கு அடிமை பட்டது...) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்3ரஹ்மணி ஸ்தி2தம்" [உடைமையாயிருக்கை ஜீவாத்மாவிடம் உள்ளது; உடையவனாயிருக்கை பரமாத்மாவிடம் உள்ளது.] "ஆத்மதா3ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபா4வஞ்ச ஸதா3 ஸ்மர" [ஆத்மாவின் தாஸத்தன்மையையும், ஹரியின் ஸ்வாமித்தன்மையையும், இவையிரண்டும் இயற்கையானவையென்பதையும் எப்போதும் அறிவாயாக]என்கிறபடியே எம்பெருமானுக்கு சேஷித்வம் ஸ்வபாவமாயிருப்பது போல் ஜீவனுக்கு தனக்கு சேஷத்வம் ஸ்வபாவமாயிருப்பதைத் தான் தெளிவாக அறியாமலிருந்தானுகிலும்; (தான் அறியானேலும்) ப்ரமாணப்ரஸித்தியாலும் ஸதாசார்ய ஸேவையாலும் தான் உள்ளபடி அறியாமலிருந்தானுகிலும். சிறந்த அறிவாளிகளுக்கும் அநுஷ்டா2ன பர்யந்தமாக இவ்வறிவு கைகூடாதன்றே. (மாலே) 'நம் உடைமையை நாம் பெறவேணும்' என்று மேல் விழுகின்ற ஆஶ்ரிதவ்யாமோஹத்தை உடையவனே. மால் - அடியாரிடம் மயக்கமுடையவன். (மனத்து அடைய) இப்படி மயக்கமுடையவன் ஜீவனுடைய நெஞ்சமே நீள் நகராகக்கொண்டு வாழவிரும்பி வந்து அடையும்போது.(வைப்பது ஆம்) அவனைத்திருவாணையிட்டுப் புகாதபடி தடுக்காமல், தன் மனத்திலே பொருந்தியிருக்கும்படி இடங்கொடுத்து வைத்துக்கொள்வது தக்கது.

தாம். (வனத்திடரித்யாதி) காட்டில் திடரைக் கல்லில் குள மாக்குமதொழிய வர்ஷத்தை இவனாலே பெய்விக்கப்போமோ? இத்தால்ருசிமாத்ரம்இவன் தலையிலேயுண்டாமித்தனையொழிய ப்ராப்தி இவனாலே உண்டாக்கிக் கொள்ளப்போமோ? என்ற

---

அது எங்ஙனேயென்னில்; காடெழுந்துகிடக்கிற அதிகடிநமான திடரை, வருகிற வர்ஷஜலம் புறம்பு போகாதே தடையற வந்து புகுரும்படி ஏரியாம் ப்ரகாரம் யத்நித்து வெட்டுவிக்கும் இத்தனையொழியப்பின்னை வர்ஷத்தைப்பெய்விப்பார் ஆர்? அதுக்குக்கடவனான பர்ஜன்யனன்றோ. ஏரி வர்ஷத்தை உண்டாக்கிக் கொள்ளுமன்றன்றோ ப்ராப்தி இவனால் உண்டாக்கிக் கொள்ளலாவது. ஆனபின்பு இத்தலையில் விலக்காமையே பற்றாசாகத் தானே விரோதியைப்போக்கி ப்ராப்தியையும் பண்ணித்தரும் என்றபடி.

---

இப்படியல்லாமல், (தானறியானேலும் மனத்தடைய வைப்பதாம் மாலை) என்னும் பகுதிக்கு வேறுவிதமாகவும் பொருள் கொள்ளலாம்: (தானறியானேலும்...) தன் சேஷத்வத்தையும், ஸர்வேச்வரனுடைய சேஷித்வத்தையும் ருசியும் அறிவும்குறைந்த தான் அறியமாட்டானாகிலும். ''யத்₃யதா₃சரதி ஶ்ரேஷ்ட₂: தத் ததே₃வேதரோ ஜந:'' [கீதை3-21] [அறிவாளியானவன் எதெதை அநுஷ்டிக்கிறானோ அததையே அறிவுகுறைந்தவனும் அநுஷ்டிக்கிறான்] என்கிற முறையிலே ருசியிலும் அறிவிலும் சிறந்தவர்களுடைய அநுஷ்டானத்தைக் கண்டாவது தானும் அநுஷ்டிக்கலாமே! அவ்வநுஷ்டானம் எத்தகையதாயிருக்கும்? எனில்: (மாலை மனத்து அடைய வைப்பது ஆம்) அவர்களுடைய அநுஷ்டானத்தின்படி ஸர்வேஶ்வரனை நெஞ்சில் வைத்துக்கொள்வது தக்கது.

இச்சேதனனிடம் இத்தனை ருசிமாத்திரம் உண்டானாலும், இவ்வளவே கொண்டு அவனே விரோதியையும் போக்கித்தன்னையும் தந்தருளுவான் என்பதற்கு திருஷ்டாந்தம் சொல்லுகிறார் மேலே: (வனத்திடரை) காடு எழுந்து கிடக்கும் அதிகடினமான மேட்டு நிலத்தை. (ஏரியாம் வண்ணம் இயற்றும் இது வல்லால்) பெய்கிற மழைஜலம் வெளியிலே சென்றுவிடாமல், இவ்விடத்திலே தேங்கியிருக்கலாம்படி ஏரியாகவெட்டி வைத்துக்கொள்ளும் இவ்வளவையே செய்யலாமேயொழிய.(மாரி பெய்கிற்பார் ஆர்)மழையைப்பெய்வித்து

தாயிற்று. அன்றிக்கே, ஏரியாம் வண்ணமியற்றுமது:, மற்று வர்ஷிப்பிக்குமது. இரண்டும் செய்யப்போமோ? என்னவுமாம். ருச்யுத்பாத₃கனுந்தானே, ப்ராப்தியைப்பண்ணிக் கொடுப்பானுந்தானே யென்னவுமாம்.

---

அங்ஙனன்றிக்கே, (மனத்தடைய வைப்பதாம் மாலை) 'அவன் ஶேஷி. தான் ஶேஷப்' என்னுமிடத்தைச் சேதனன் தான் அறியமாட்டானேயாகிலும் "यद्यदाचरति श्रेष्ठः" (யத்₃ யத₃₃ாசரதி ஶ்ரேஷ்ட₂:) என்கிறபடியே, தனக்கு ருசியின்றிக்கேயிருக்கச் செய்தேயும், செய்வார் செய்யும் முறைபாடு கண்டாகிலும் ஸர்வேஶ்வரனை ஹ்ருத₃யத்திலே வைத்துக்கொள்வது, இவ்வளவு கொண்டே அவன்தானே விரோதியையும் போக்கி, ப்ராப்தியையும் பண்ணிக்கொடுக்கும். அதுக்கு த்₃ருஷ்டாந்தம்சொல்லுகிறது —(வனத்திடரை யித்யாதி₃) காட்டுத்திடரை ஏரியாம்படி கல்லுகையொழிய மற்றும் மழைபெய்விப்பார் ஆர்? என்று யோஜிக்கவுமாம்.

---

ஏரியை நீர் நிறைந்ததாம்படி செய்ய மனிதர்களாலாகுமோ? மழைக்கு அதி₄தே₃வதையான வருணனும், அவனுக்கு அந்தர்யாமியான பகவானும் ஸங்கல்பித்தாலொழிய ஏரியால் பயன் ஏற்படுமோ? ஏரி மழையை உண்டாக்கிக் கொள்ளுமன்றன்றோ இச்சேதனனால் பகவத் ப்ராப்தியை உண்டாக்கிக் கொள்ளமுடியும்! வனத்திடரை ஏரியாகத் திருத்திவைப்பது போலே இவனும் ருசியாலே தன்னைத் திருத்தி வைத்துக்கொள்ளலாமேயொழியப் பலனை வருவித்துக்கொள்ள இவனாலாகாது என்கை. இவனிடமுள்ள விலக்காமையையும் ருசியையுமே கொண்டு விரோதியைப் போக்கித் தன்னைத்தருபவன் அவனே என்று கருத்து. இத்தால் இச்சேதனனிடமுள்ளதெதுவும் தகுதியைத்தரும் அதி₄காரிவிசேஷணமாகுமேயொழிய "அவனைப் பெற உபாயமாகாது என்றும், அவனே அவனைப்பெற உபாயமாவான் என்றும் அறிவதே அறிவாளிகளுக்குத் தக்கது என்று உணர்த்தப்பட்டதாயிற்று.

சேதனனிடம் ருசிமாத்திரம் உள்ளது கொண்டு பரமசேதனன் தன்னைத்தருகின்றான் என்னும் இந்த நிர்வாஹம் திருமலை நம்பியுடையது: இனி, 'ருசியை விளைப்பானும் அவனே' என்னும் ஆழ்வானுடைய நிர்வாஹம் விவரிக்கப்படுகிறது.

அங்ஙனுமன்றிக்கே, (மாலே மனத்தடையவைப்பதாம்) ஸர்வேஶ்வரனை ஹ்ருத₃யத்திலே கொண்டுவந்துஸர்வஶக்தி வையானோ? என்று க்ஷேபம். (வனத்திடரை இத்யாதி₃) மநுஷ்யரை ப்ரேரித்துக் கல்லுவிப்பானும், இந்த்₃ரனை யிடுவித்து மழைபெய்விப்பானும் அவன்ருனேயன்றோ என்கிருர். அப்படியே மனத்திடரில் அவித்₃யாகர்மவாஸநாதி₃களைப் போக்கி ருசியுண்டாக்குவானும் தன் கல்யாண கு₃ணங்களை வர்ஷிப்பானும் அவனேயன்றோ என்னவுமாம், முற்பட்ட யோஜநை திருமலை நம்பியது; இரண்டாம் யோஜனை ஆழ்வானது. 16.

---

(தனக்கு அடிமை பட்டது தான் அறியானேலும்..............) தன்னுடைய ஸ்வரூபம் ஶேஷத்வமே என்பதைத் தான் அறியா விட்டாலும், தன்னால் எது இயலும், எது இயலாது என்பதையாவது அறியலாகாதோ? (மனத்து அடைய வைப்பதாம் மாலை) ஸர்வேஶ்வரனை எலியெலும்பனன இவன் தன் நெஞ்சிலே கொண்டு வந்து நன்கு வைத்து விடுவானோ? மால்-மிகப்பெரியவன். எல்லாம் அவனாலே வருவதொழிய, இவன் செய்யலாவது ஒன்றில்லை என் பதற்கு த்₃ருஷ்டாந்தம் சொல்லுகிறது மேலே: (வனத்திடரை ஏரியாம் வண்ணம் இயற்றும் இது, அல்லால் மற்று மாரி பெய்கிற்பார் ஆர்?) மனிதரைத்தூண்டிக் காட்டிலுள்ள மேட்டு நிலத்தை வெட்டுவிப்பதும், அதற்கும் மேலே இந்திரன் வருணன் முதலானரைத் தூண்டி மழைபொழிவிப்பதும் ஸர்வேஶ்வரனைத்தவிர வேறு யார்? வெளிப்பார்வைக்குச் சில மனிதர்கள் ஏரி வெட்டுகிருர்கள், இந்திரன் முதலானேர் மழைபொழிகிருர்கள் என்று தோன்றினும், இவர்கள் அனைவரையும் தூண்டிவிட்டு ஏரியை வெட்டுவிப்பதையும், மழைபொழிவிப்பதையும் செய்பவன் ஸர்வேஶ்வரனன்றோ. அப்படியே இச்சேதனன் ருசியை விளைவித்துக் கொள்வதாகவும், அப்பரமசேதனன் அருள் மழையைப் பொழிவதாகவும் தோன்றின போதிலும், இச்சேதனனுடைய மனத்திடரிலேயுள்ள அவித்யை (அஜ்ஞானம்), கர்மம், வாஸனை முதலான புதர்களை அழித்து ருசியாகிற விதையை விதைத்து, அது வளருவதற்காகத் தன் கல்யாண கு₃ணங்களாகிற மழையைப் பொழிவான் அப்பரமபுருஷனேயன்றோ என்கை. "வித்தும் இடவேண்டுங்கொலோ விடையடர்த்த

17. மற்று ரியலாவார் வானவர்கோன் மாமலரோன்
சுற்றும் வணங்குந் தொழிலானை — ஒற்றைப்
பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று மாலைக்
குறையிரந்து தான்முடித்தான் கொண்டு.

---

பத்தியுழவன் பழம் புனத்து'' (நான்-திருவ 28) என்றுரன்றே மற்றேராழ்வாரும்.

எல்லாம் அவனாலேயாகில், இவன் செய்யவேண்டியது ஒன்று மில்லையோ? எனில், இவன் சேதனனாக வாசிக்கு விலக்காமையும், ருசியும் உடையவனாயிருக்கவேண்டியதே. அநாதிகாலமாகத் தான் நின்ற நிலையையும், எந்நின்றயோனியுமாய்ப் பிறந்து அவன் படும் பாடுகளையும் ஆராயும்போது இவ்விலக்காமையும், ருசியுங் கூட அவனாலே வந்தது என்று இருக்கவேணும் என்று கருத்து. ஆகையாலேயே திருமலை நம்பியின் நிர்வாஹத்துக்கும், ஆழ்வாருடைய நிர்வாஹத்துக்கும் அந்வயக்ரமத்தில் பேதமுண்டேயொழிய அர்த்தத்தில் விரோதமில்லை. உபாயாந்தரங்களுக்குப் பலகரணத்வம் உண்டென்று சாஸ்திரங்களில் சொல்லாநிற்க, இத்தலையில் ஒன்றுமே இல்லையென்று கழிக்கலாமோ? எனில்: பரம புருஷனையே உபாயமாகக்கொண்ட ப்ரபன்னனுடைய அநுஸந்தாந ப்ரகாரத்தை இப்பாசுரம் கூறுகின்றதாகையாலே குறையில்லை உபாயாந்தர நிஷ்டர்கள் பக்தி முதலான உபாயாந்தரங்களில் உபாயத்வ (பலகரணத்வ) புத்திவைக்கையாலே, ஸர்வேஶ்வரனும் அவற்றுக்குப் பலகரணத்வத்தை இசைந்து தான் பலப்ரதனாக மாத்திரம் நிற்கிறான்; ஆகையால் அவற்றுக்குள்ள பலகரணத்வமும் ஔபாதிகம் (செயற்கை) ஆனது. ப்ரபன்னர்கள் திறத்திலே ஸர்வேஶ்வரனுக்குள்ள பலகரணத்வம் நிருபாதிகம் (இயற்கை) ஆனது. அதனாலேயே பட்டரும் ''உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம் ந து குணௌ'' [ர-ஸ்த 2-87] [உபாயத்வமும், உபேயத்வமும் உனக்கு ஸ்வரூபநிருபகமாயிருப்பவை; மற்ற சில குணங்கள் போலே குணங்களாய் (நிருபிதஸ்வரூபவிசேஷணமாய்) இருப்பவையல்ல] என்றார். மேலும்-மோக்ஷபலத்தின் பெருமையைக் காணும்போது பக்தி முதலானவையும் வியாஜம் என்றே சொல்லத் தக்கவையாயுள்ளன. ஆகையால்ப்ரபன்னனை முமுக்ஷு விஷயத்தில் இத்தலையில் ஒன்றுமில்லையென்றும் எல்லாம் அவனாலே என்றும் அநுஸந்திப்பது எவ்வகையிலும் பொருந்தியதே என்று அறியத்தக்கது 16

வானவர்கோன் — எல்லா தேவர்களுக்கும் தலைவனான இந்திரனும், மா மலரோன்—(எம்பெருமானுடைய) சிறந்த (திருநாபிக்) கமலத்தை இருப்பிடமாகவுடைய பிரமனும், சுற்றும் வணங்கும் தொழிலானை-பக்கங்களிற் சூழ்ந்து நின்று ஆஶ்ரயிப்பதற்குரிய செயலையுடையனான, மாலை — எம் பெருமானை, கொண்டு—( நெஞ்சில் ) கொண்டு, ஒற்றை பிறை இருந்த செம் சடையான் — ஒரு கலாமாத்திரமான சந்திரனைத் தரித்த சிவந்த சடையையுடைய ருத்ரன், பின் சென்று-பின்பற்றி நின்று, இரந்து-(பல்லைக்காட்டி) யாசித்து, கூறை — ( பிரம்மஹத்திதோஷமாகிற ) தனது குறையை, தான் முடித்தான்-தான் தீர்த்துக் கொண்டான்; (ஆனபின்பு) இயல் ஆவார் — ஆஶ்ரயிக்கலாம்படியான தகுதியுடையவர், மற்று ஆர்—அந்த ஸர்வேஶ்வரனைத் தவிர வேறுயாவர்?

பெரி-அவ:—( மற்றார் ) இவனே ஆஶ்ரயணீயனென்பானென்னென்னில்; வேறொருவரில்லாமையென்கிறது.

வ்யா:—( மற்றாரியலாவார் ) மற்றாஶ்ரயணீயராவாரார்? ( வானவரித்யாதி₃ ) லோகத்தில் ப்ரத₄ாநனான இந்த்₃ரனோடு

---

அவ:— இப்படியிருக்கிற அவனையொழிய மற்று ஆஶ்ரயணீயரில்லையென்கிறார்.

உரை:—முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கெல்லாம் நிர்வாஹகனான இந்த்₃ரனும் ஶ்லாக்₄யமான திருநாபீ₄கமலத்தை

---

அவ:— இப்படி நிரபேக்ஷோபாயமாயிருக்கும் அவனைத் தவிர ஆஶ்ரயிக்கத்தக்கவர் யார்? என்கிறார்.

வ்யா:— (மற்றார் இயல் ஆவார்?) வேறொருவர் இவனைப்போலே ஆஶ்ரயிக்கத்தக்கவர் உண்டோ? விஶேஷமான ஜ்ஞானசக்திகளையுடைய ப்ரஹ்மருத்ராதிகள் ஆஶ்ரயணீயராகலாமே? என்ன, அவர்களும் இவனை வணங்கியும் யாசித்தும் தங்கள் விருப்பங்களைப் பெற்றுப் போகிறவர்களாயன்றோ இருக்கிறார்கள் என்கிறார் மேலே- (வானவர்கோன்) முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் தலைவன்

கூடின ப்₃ரஹ்மாதி₃களிறே; அவர்களுமவனை ஆஶ்ரயித்திறே தந்தாமுடைய அபி₄மதங்கள் பெறுகிறது. இந்த்₃ரன், ப்₃ரஹ்மா, நேர்கொடு நேராஶ்ரயிக்கப் போகாதே பாடே பக்கேசென்று வணங்குமாஶ்ரயணப்ரகாரங்களை உடையனானவனை; ஈஶ்வர னுடைய சேஷ்டிதங்களை அவர்கள் சுற்றி வணங்குவார்

---

வாஸஸ்த₂ானமாகவுடைய ப்₃ரஹ்மாவும், நேர்கொடு நேரே சென்று கிட்டமாட்டாமல் பாடேபக்கே நின்று திருவடி களிலே பி₄ந்நாபி₄மானராய் விழுந்து ஆஶ்ரயிக்கைக்குறுப் பான ஸௌந்த₃ர்யஶீலாதி₃ கு₃ணசேஷ்டிதங்களாகிற ப்ர காரங்களையுடையனாய், ஸர்வாதி₄கனானவனை, கலாமாத்ர

---

என்று பிரஸித்திபெற்ற இந்திரனுமன்றோ அவனை ஆஶ்ரயித்திருப் பது. (மாமலரோன்) எம்பெருமானுடைய திருவுந்தியிலிருந்து தோன்றிய சிறப்பையுடைய உந்தித்தாமரையை இருப்பிடமாகவு முடைய பிரமனுமன்றோ இவனை ஆஶ்ரயித்திருப்பது. தேவர்களில் இவனுக்கு மேற்பட்டார் இல்லையன்றோ. இவர்கள் ஆஶ்ரயிப்பது தான் எப்படியெனில்;— (சுற்றும் வணங்கும் தொழிலானை) அந்தரங் க₃ர்க்கும் 'அபி₄த: பாவகோபமம்' [ரா-அ99-26] [சுற்றிலும்தீயைப் போல் அணுகவொண்ணாதவனை] என்று அணுகவொண்ணாமலிருப் பவனை, "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக் கமலந்தன்னை அயன்" [மு-தி 56] எனப்படும் இவர்களால் அணுக முடியாதாகையாலே, பரிஸரத்திலே நின்று. "ஈஶ்வரோஹம்" என் னும் தங்கள் அபிமானமழிந்து திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயிக்க லாம்படியான ஸௌந்தர்யஸௌஶீல்யாதியாகிற குணங்கள், அவற்றால் ஏற்படும் திவ்ய சேஷ்டிதங்கள் ஆகியவற்றை உடைய வனை; தொழில் என்று சேஷ்டிதங்களைச் சொன்னது அவற்றுக்கு அடியான குணங்களுக்கும் உபலக்ஷணம். (மாலை) குணசேஷ்டி தங்களின் பெருமையைப்பார்த்தால் இவனே ஸர்வேஶ்வரன் என்று அஹங்காரிகளும் அறுதியிடவேண்டியிருக்கிறது. இனி பேசநின்ற சிவனும் ஆஶ்ரயிக்கப்படுபவன் இவனே என்று காட்டுகிறார்.— (ஒற்றைப்பிறையிருந்த செஞ்சடையான்) தக்ஷசாபத்தால் கலை குறைந்து வந்து ஆஶ்ரயித்த சந்த்ரனை வரமளித்து ரக்ஷித்துத் தன் சிவந்த சடையிலே வைத்துக்கொண்டு தானும் சிலர்க்கு ஆஶ்ரயணீ யன் என்று உலகிற்குக் காட்டி நிற்பவன். போகத்திற்காக எப்போ

என்னவுமாம். (ஒற்றைப்பிறையித்யாதி₃) சடையிலே பிறையை தரித்தானாய் ஸு²க²ப்ரதாநனான ருத்ரன்.(பின்சென்று) அநுவர்த்தித்து.(மாலே) ஸர்வேஶ்வரனே. (கொண்டு) ஹ்ருதயத்திலே கொண்டு (குறையிரந்து) குறைகளையிரந்து. (தான் முடித்தான்) தன்னுடைய அபேக்ஷிதங்களைப் பெற்றான். 17.

---

மான சந்த்₃ரனை த₄ரித்திருக்கிற சிவந்த ஜடையையுடையனான ருத்₃ரன், தன் ஹ்ருத₃யத்திலே அநுஸந்தி₄த்துக் கொண்டிருந்த து₃ர்மானத்தைவிட்டுப் பின்பற்றி அநுவர்த்தித்து, அநந்தரம் பல்காட்டி அர்த்தி₂த்துத் தன்னுடைய குறையைத் தான் தலைக்கட்டிக்கொண்டான். ஆனபின்பு அவனையொழிய வேறு ஆர்தான் ஸத்₃ருஶ ஸமாஶ்ரயணீயராயிருப்பார்? 17.

---

தும் தண்மதியைச் சூடிநிற்பவன் என்றுமாம். (பிறையிருந்த செஞ்சடையான்) இவன் சிலரால் ஆஶ்ரயிக்கப்பட்டபோதிலும், இவன் ஒருவனைக் குறித்துத் தவம் செய்பவன் என்பதை இவனுடைய சடையே விவேகிகளுக்குக் காட்டித்தருகிறது என்று கருத்து. இப்படி சிலர்க்கு ஆஶ்ரயணீயனாயிருப்பவன் தனக்கு ஓர் துன்பம் நேர்ந்தால் ஆஶ்ரயிப்பது திருமாலையே என்று காட்டுகிறார்மேலே,— (பின்சென்று) தகப்பன் தலையைக் கிள்ளிவிட்டுப் பாட்டன் முகத்திலே விழிக்கவொண்ணாமையாலே பின் சென்று வேண்டினான் போலும்! (பின்சென்று) நெஞ்சிலேயிருந்த து₃ரஹங்காரத்தை விட்டுப் பின்பற்றி அனுவர்த்தித்து என்றுமாம். (மாலைக்கொண்டு) ஸர்வேஶ்வரனை அவனை நெஞ்சில்கொண்டு. (இரந்து) ப்₃ரஹ்மஹத்தி பாபம் தீரவேண்டும் என்று அவனிடம் பல்லைக்காட்டி யாசித்து, (தான் குறை முடித்தான்) ப்ரஹ்மஹத்திபாபமாகிற தன் குறையைத் தான் தீர்த்துக்கொண்டான். (குறையிரந்து) அந்தந்தக்காலங்களில் ஏற்பட்ட ப₄ஸ்மாஸுர ப₄யமோசனம், கபால மோக்ஷம் முதலான தன்னுடைய அபேக்ஷிதங்களை யாசித்து, (தான் முடித்தான்) அந்தந்த அபேக்ஷிதங்களை நிறைவேற்றிக் கொண்டான் என்றுமாம். இப்படி ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் இவன் ஆஶ்ரயிக்கத்தக்கவனாயிருக்கும்போது.(மற்றார் இயலாவார்)இவனைப் போலே ஆஶ்ரயிக்கத்தக்கவர்கள் வேறு யார் இருக்கிறார்? என்று கீழோடே கூட்டிப் பொருள் கொள்ளவேணும். 17.

18. கொண்ட துலகம் குறளுருவாய்க் கோளரியாய்
ஒண்டிறலோன் மார்வத் துகிர்வைத்தது — உண்டதுவும்
தான்கடந்த வேழுலகே தாமரைக்கண் மாலொருநாள்
வான்கடந்தான் செய்த வழக்கு.

குறள் உரு ஆய்-வாமநரூபியாய் (மாவலியிடஞ் சென்று யாசித்து) உலகம்-பூமி முதலிய உலகங்களை, கொண்டது— ஆக்ரமித்துக்கொண்டதும், கோள் அரி ஆய்—பஉலத்தை யுடைய நரசிங்கமாகி, ஒண் திறலோன் மார்வத்து—மஹா பலசாலியான இரணியனுடைய மார்பிலே, உகிர் வைத்தது- தனது நகங்களையழுத்திக் கிழித்து அழித்ததும், ஒருநாள்— ஒருகாலத்திலே, தான் கடந்த—தான் அளந்து கொண்ட, ஏழ் உலகே—எல்லாவுலகங்களையும், உண்டதுவும்-(பிரளயங் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்துக்கொண்டதும், (ஆகிய இச்செயல்கள்) வான் கடந்தான்—ஆகாசத்தை அளவிட்டாலும் அளவிடமுடியாதபடியுள்ள பெருமையை யுடையவனும், தாமரை கண்—செந்தாமரைக் கண்ணனு மாகிய, மால்-எம்பெருமான், செய்த-செய்தருளின, வழக்கு- நியாயமான செயல்களாம்.

பெரி அவ:— (கொண்டது) அதாவது-இவன் ஜக$_3$த்$_3$ ரக்ஷணம் பண்ணும்படி சொல்லுகிறது.

வ்யா:-(குறளுருவாய்க்கொண்டது உலகம்) ஸ்ரீவாமநனாய் லோகமளந்து கொண்டது (கோளரி இத்யாதி$_3$) கைதொட்டு

---

அவ:—இப்படி ஸமாஶ்ரயணீயனாய், ஸர்வாதி$_4$கனா யிருந்துவைத்துத் தன்னை அழியமாறியும் ஆஶ்ரிதரை நோக்கும் ஸ்வபா$_4$வன் என்கிறார்.

உரை:-ஆகாஶத்தை அளவிடினும் அளவிடவொண்ணாத பெருமையை உடையனாய், இவனே ஸர்வஸ்மாத்பரன்

---

அவ:—இப்படி ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$களுக்கும் ஆஶ்ரயிக்கத்தக்கவ னாய், அவர்களுக்கும் ஈஶ்வரனாயிருந்தும், தன்னை அழியமாறியும் அடியாரை ரக்ஷிக்கும்தன்மையை உடையவனாயிருக்கிறான் என்கிறார்.

ஆஶ்ரிதவிரோதிகளைப் போக்கும்படி. (தான்கடந்த வேழுலகே யுண்டதுவும்) தன் திருவடிகளிலே அடங்கின லோகங்களையே திருவயிற்றிலே வைத்ததுவும். (தாமரைக்கண்மால்) புண்டரீகாக்ஷனான ஈர்வரன். (ஒருநாள் வான்கடந்தான்) நித்ய

---

என்னுமிடத்தைக் கோட்சொல்லித்தருகிற தாமரைபோன்ற கண்ணழகையுடையனான ஸர்வேஶ்வரன் 'நம்முடைமையை நாமே நம்மை அழியமாறி ரக்ஷிக்கை நமக்கு ஸ்வரூபப்ராப்தமன்றோ' என்று ந்யாயமாகச் செய்த செயல்களிருந்தபடி: ஸ்ரீவாமனனாய்த் தன்னை அழியமாறி அர்த்தித்து பூமி முதலான லோகத்தை வாங்கிக்கொண்டதும், மிடுக்கையுடைத்தான நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு அழகிய மிடுக்கையுடையனான ஹிரண்யனுடைய மார்விலே உகிரை நாட்டிப்

---

வ்யா:— (கொண்டதுலகம் குறளுருவாய்) தனக்குத்தகாத வாமனரூபத்தை எடுத்துக்கொண்டு, ஸகலபலப்ரதனான தன் ஸ்வரூபத்தை அழியமாறி தன்னுடையதான பூமி முதலான உலகத்தைத் தானே யாசித்துப்பெற்றானன்றோ! (கோளரியாய் ஒண்திறலோன் மார்வத்து உகிர்வைத்தது) ஸர்வேஶ்வரனான தன் நிலைமைக்குச்சேர இருந்தவிடத்திலிருந்தே இவனை ஸங்கல்பத்தாலே அழிக்கவேண்டியிருக்க, ப்ரஹ்மாதிகள் கொடுத்த வரம் வீணாகக்கூடாது என்னும் பக்ஷபாதத்தாலே, சிறந்தபலத்தையுடைய ஹிரண்யனை அழிப்பதற்காக அவனுக்கும் மேற்பட்ட பலத்தையுடைய நரசிங்கமாகி, அவனுடைய மார்விலே நகத்தையூன்றிக் கைதொட்டு அழித்தானன்றோ! ப்ரஹ்லாதன் பக்கல் பண்ணின அபசாரங்களாலே கடுங்கோபங்கொண்டு கைதொட்டு அழித்தான் என்றுமாம். தன் ஸ்வரூபத்தை அழியமாறி உருவெடுத்துப் புழுப்பூச்சிகள்போன்ற இவர்களைக் கைதொட்டு அழிப்பதே! என்கிறார். (ஒருநாள் தான் கடந்த ஏழுலகே உண்டது) ஒருநாள் தானே அளந்துகொண்ட ஏழுலகங்களும் ப்ரளயஜலத்தாலே நோவுபட்டவன்று அவற்றின் ஏற்றத்தாழ்வுகளைப் பாராமல் தன்வயிற்றிலேயே வைத்து ரக்ஷித்தானன்றோ! என்கிறார். தன் உடைமையில்பக்ஷபாதத்தாலே தன் அடிபட்டதையும் விழுங்கினான் என்கை, இப்படியெல்லாம் செய்கைக்குக் காரணம்சொல்லுகிறதுமேலே. (தாமரைக்கண்மால்) தன்னுடைய ஆஶ்ரிதபக்ஷபாதத்தையும், ஸர்வஸ்வாமித்வத்தையும் கோட்சொல்லித்

ஸூரிகளுக்கு அவ்வருகானவன். ஸ்வர்க்கத்தை அளந்தவ னென்றுமாம். (செய்த வழக்கு) தன்னுடைமையை ரக்ஷிக்க ப்ராப்தமிறே. 18.

19. வழக்கன்று கண்டாய் வலிசகடம் செற்றாய்
வழக்கென்று நீமதிக்க வேண்டா—குழக்கன்று
தீவிளவின் காய்க்கெறிந்த தீமை திருமாலே
பார்விளங்கச் செய்தாய் பழி.

---

பிளந்து பொகட்டதும், ஒரு நாளிலே தான் அளந்துகொண்ட ஸப்தலோகங்களைத் தரதமவிபாகம் பாராதே திருவயிற் றிலே எடுத்து வைத்து நோக்கியும் செய்த செயல் இவை கள்கிடீர்! வழக்கு—ந்யாயம்; ப்ராப்தமென்றபடி. பிறர்க்கு ஒரு கார்யம் செய்தானாயிருக்கையன்றிக்கே, தனக்கு அடைத்த கார்யம் செய்தானாயிருக்கை. உடையவன் உடைமையை ரக்ஷிக்க ப்ராப்தமிறே. 18.

---

தரும் செந்தாமரைக் கண்ணையுடையவனன்றோ இவன். (வான் கடந்தான்) ஆகாசத்தை அளவிட்டாலும் இவனுடைய தன்மைகளை ஒருவரால் அளவிடமுடியுமோ? என்கிறார். வான்— ஆகாசம். 'வான்' என்று நித்யவிபூதியைச் சொல்லிற்றாய், அங்குள்ள நித்யஸூரிகளாலும் அளவிடமுடியாதபடியிருப்பவன் என்றும் பொருள்கொள்ளலாம்; (ஒருநாள் வான்கடந்தான்) என்று கூட்டி முன்னொருநாள் சுவர்க்கம் முதலான மேலுலகங்களை ஓரடி யாலே அளந்தவன் என்றும் பொருள்கொள்ளலாம். (செய்தவழக்கு) வழக்கு-நியாயம். தக்கது, "நம் உடைமையை நாமே நம்மை அழிய மாறியும் ரக்ஷிப்பது நமக்குத்தக்கதன்றோ" என்னும் நினைவாலே ஸர்வரக்ஷகனான இவன் நியாயமாகச்செய்த செயல்கள் இவை. இவை யெல்லாம் அடியார் காரியமானாலும் அவர்கள் காரியம் செய்ததாக நினையாமல் தன் காரியம் செய்ததாகவே உகந்திருந்தான் என்று கருத்து. "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்| க்ருதக்ருத்யஸ் ததா ராம:விஜ்வர:ப்ரமுமோத ஹ||" [ரா-பா1-85] [இலங்கையில் விபீஷணனை அரக்கரரசனாக அபிஷேகம் செய்வித்த பின்பு இராமபிரான் தன்காரியம் செய்தவனாய், கவலைநீங்கி இன்புற்றான்] என்றாரன்றோ வால்மீகியும். உடைமையை ரக்ஷிப் பது உடையவனுக்கே ப்ராப்தமன்றோ. 18.

திருமாலே!- நீ- (கண்ணனுயிருந்தபோது) வலி சகடம்- பலமுள்ள சகடத்தை, செற்றய்—உதைத்து முறித்துத் தள்ளினுய்; வழக்கு அன்று கண்டாய் — இது உனக்குத் தகுதியன்று காண்; வழக்கு என்று நீ மதிக்க வேண்டா — இது நமக்குத் தகுந்ததேயென்று நீ எண்ணலாகாது; (இந்த ஸாஹஸச் செயல் செய்ததோடு நில்லாமல்) குழ கன்று — (அஸுரனை) இளங்கன்றை, தீ விளவின் காய்க்கு எறிந்த- (அஸுரனைகையாலே) தீய விளங்காயை அழிக்கும் பொருட்டு வீசின, தீமை— இந்தத் தீம்பான செயல், பார் விளங்க—பூமியிலே பிரகாஶிக்கும்படி, பழிசெய்தாய்—தவறு செய்தாய்.

பெரி. அவ:— (வழக்கன்று) நீ ஜக₃த்₃ரக்ஷணம் பண்ணு கிறது பழியாய்விட்டது.

வ்யா:— (வலிசகடஞ்செற்றய் வழக்கன்றுகண்டாய்) பிள்ளையாயிருந்து பெரிய சகடத்தை முறித்ததும் வழக்கன்று.

---

அவ:— 'நம்மை அழியமாறியும் நம் உடைமையை நோக்குகை நமக்கு ப்ராப்தம்' என்று அவன் நினைத்திருக்க, இவர் அவனுடைய ஸௌகுமார்யத்தைஅநுஸந்தித்து 'இது அப்ராப்தம்' என்று வயிறெரிகிருர்.

உரை;— பெரியபிராட்டியார் 'என் புகுருகிறதோ' என்று வயிறெரிந்து ''मङ्गलान्यभिदध्युषी'' (மங்க₃ளாந்யபி₄

---

அவ:— ''நம் ஸ்வரூபம் மாறினாலும் நம்முடைய உடைமையை ரக்ஷிப்பது நம் கடமை'' என்று ஸர்வேஶ்வரன் நினைத்திருக்கிருன் என்னும் விஷயம் சென்ற பாசுரத்தில் ப்ரஸ்துதமானதாலே, அவனுடைய திருமேனியின் மென்மையை நினைத்து 'உன்னுடைய ஜக₃த்₃ரக்ஷணச் செயல்கள் தகுமோ?'' என்று வயிறெரிகிருர்,

வ்யா:— (வழக்கன்று கண்டாய்) பிரானே! நியாயமன்று கிடாய்! எதுவென்னில்: (வலிசகடம் செற்றய்) ''பிறந்த எழுதிங்க ளில்'' ''சேடன்'' [பெரியதிரு 10-7-9] [சேடன்—இளம்பிள்ளை]

அதுசெய்தோமிறேயென்னில்; இதிறே நானும் வேண்டா வென்கிறது. (வழக்கென்று நீ மதிக்கவேண்டா) இது வழக் கென்று நீ பு₄த்₃தி₄பண்ணியிருக்கவேண்டா. (குழக்கன்றித்

---

த₃த்₄யுஷீ) என்று மங்க₃ளாஶாஸனம் பண்ணி நோக்க வேண்டும்படி நிரதிஶயஸுகுமாரனானவனே! இப்படியிருக் கிற நீ சிறுபிள்ளையாய்க்கொண்டு, அதிஸுகுமாரமான திருவடிகளாலே அதிப்ரப₃லமான ஶகடத்தை உதைத்து முறித்து விழவிட்டாய். 'பிரானே! இது ப்ராப்தமன்று கிடாய்!' ரக்ஷகனான நமக்கு விரோதி₄களைப்போக்கி நோக் குகை ப்ராப்தமன்றோவென்று இந்த ஸாஹஸப்ரவ்ருத்தி

---

என்கிறபடியே மிகச்சிறிய பிராயத்தோடு எதிரிகளுண்டென்னும் அறிவுமில்லாமல், ஆயுதம்பிடிக்கவுமறியாத பச்சிளங்குழந்தையாய் மென்மைமிக்க திருவடிகளாலே, "மலைபோல் ஓடும் சகடத்தை" [பெரியதிரு 10-7-9] என்கிறபடியே மலைபோல் மிக்க உறுதியும் பலமுமுள்ளதாய், வேகத்தையுமுடையதாய், "கள்ளச்சகடம்" என் கிறபடியே மாய வண்டியாயிருந்த ஶகடாஸுரனை உதைத்து முறித்து, அழிந்து விழும்படி செய்தாயன்றோ! (திருமாலே) என்றும் அகல கில்லாத அலர்மேல்மங்கையும், இச்செயலைக்கண்டு வயிறெரிந்து, "மங்க₃ளாந்யபி₄த₃த்₄யுஷீ" [ரா-அ 16-21] [மங்க₃ளாஶாஸனம் செய்பவளாய்] என்றாப்போலேமங்களாசாஸனம் செய்தாள்போலும்! "சேடன் திருமறுமார்பன் கிடந்து திருவடியால் மலைபோல் ஓடும் சடத்தைச் சாடிய" [பெரியதிரு 10-7-9] என்று இச்செயலை அநுஸந்திக்கும்போது லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டினாரன்றோ திருமங்கையாழ்வாரும். தலைநீர்ப்பாட்டிலேயிருந்து ஸர்வேஶ்வர னுடைய பெருமையையெல்லாமறியும் பிராட்டியே அஸ்த₂ானே ப₄ய ஶங்கையாலே வயிறுபிடித்தாளென்றால், ஆழ்வார்கள் வயிறெரியச் சொல்லவேண்டாவே. (திருமாலே) இருவருமான சேர்த்திக்குப் பல்லாண்டு பாடுகிறாராகவுமாம்.

"ஸர்வரக்ஷகனான நான் ஜக₃த்₃ரக்ஷணத்திற்காகவன்றோ அது செய்தது; அதை வழக்கன்று என்பது எப்படி?" என்று எம்பெரு மான் திருவுள்ளமாக, அருளிச்செய்கிறார் (வழக்கென்று நீ மதிக்க வேண்டா) 'ரக்ஷகனான நமக்கு ஆஶ்ரிதவிரோதி₄களைப் போக்கி ரக்ஷிப்பது கடமையன்றோ' என்று நீ எண்ணவேண்டா.

யாதி₃)அஸுரனை கன்றும் விளாவான அஸுரனும்தன்னிலே யொத்து உள்ளறிந்து உன்னை நலிந்ததாகில் செய்வதென்? என்று பயப்படுகிறார். (திருமாலே) இருவருங்கூட விருக்கவன்றே தகுவது. (பாரித்₃யாதி₃) பூ₄மியடங்கலும்

யிலே அநுதாபங்கூட அற்றிருக்கிற நீ பு₃த்₃தி₄பண்ண வேண்டா. அதுக்குமேல், அஸுரனை குழக்கன்றைக் கொண்டு அஸுரவடிவாய்த் தீதான விளாவின் காய்க்கு எறிந்த இந்தத் தீம்பான செயலானது பூமியிலே ப்ரகாசிக்கும்படி தப்பாகச் செய்தாய். அவன் புகழ் என்றிருக்க,

(நீ மதிக்கவேண்டா) ஸாஹஸத்தைச் செய்துவிட்டு ஸாஹஸத்தைச் செய்தோமே என்னும் அனுதாபமும் அற்றிருக்கிற நீ இச்செயலை நியாயமென்றெண்ணுவது சரியல்ல. உன் ஐஶ்வர்யத்தில் ஒரு திவலையை ரக்ஷித்துக்கொள்வதற்காக அனைவர்க்கும் உயிரான உனக்கேயன்றோ பேராபத்தை விளைத்துக்கொள்ளப்பார்த்தாய்! இது எப்படி நியாயமாகும்? என்று கருத்து.

சிறுபிள்ளையாயிருந்தபோது செய்ததாகையாலே இச்செயலையாவது 'முலைவரவு தாழ்த்து உதைத்தபடிபோலும்' என்று ஒரு வகையில் சேர்த்துக்கொள்ளலாம்; வயது முதிர்ந்தபின் நீ செய்த ஸாஹஸச் செயல் உலகில் எவராலும் ஒப்புக்கொள்ளமுடியாததாயன்றோ இருக்கிறது என்கிறார் மேலே — (குழக்கன்று தீவிளவின் காய்க்கு எறிந்த தீமை) இளங்கன்றுயிருந்த வத்ஸாஸுரனைச் சுழற்றியெறிந்து, அஸுரனுகையாலே தீய விளாம்பழமாயிருந்த கபித்தா₂ஸுரன்மேலே வீசியது எத்தகைய ஸாஹஸச்செயல்! சகடாஸுர நிரஸனம் பண்ணின செயல்போலன்றுகிடாயிது. அங்கு ஓரஸுரன்; இங்கு இரண்டஸுரர்கள் மறைந்து நின்றார்கள். ஒவ்வொருவனையும் தனித்தனியாய் அழித்திருக்கக்கூடாதோ? ஒருவனை மற்றவன் மேல் வீசினல் இருவரும் கூடிச் சிறுவனை கண்ணன்மேல் விழுந்திருந்தால் என்ன செய்வோம்! என்று அன்று நடந்த செயலுக்கு இன்றிருந்து வயிறெரிகிறார் பொங்கும் பரிவாலே. "பொன்றச் சகடமுதைத்தாய் புகழ்போற்றி" என்று சகடாஸுரநிரஸனத்துக்குப் பல்லாண்டுபாடியவுடன், அதிலும் ஸாஹஸம்மிக்கதான கபித்த₂ வத்ஸாஸுர பு₄ஞ்ஜனத்தை நினைத்து, "கன்று குணிலாவெறிந்தாய் கழல்போற்றி" என்று பல்லாண்டு பாடினரன்றே நாச்சியாரும்

ப்ரகாசிக்கும்படி பழிசெய்தாய். விபூ₄தியில் ஏகதேசத்தை ரக்ஷிக்கப்புக்கு அவ்விபூதியையும் அழிக்கப்பார்த்தாய். 19.

20. பழிபாவம் கையகற்றிப் பல்காலும் நின்னை
வழிவாழ்வார் வாழ்வராம் மாதோ!—வழுவின்றி
நாரணன்றன் நாமங்கள் நன்குணர்ந்து நன்கேத்தும்
காரணங்கள் தாமுடையார் தாம்.

---

இவர் பழியென்று வயிறுபிடிக்கிறார். 'விபூ₄தியில் ஏகதே₃ஶத்தை நோக்கப்புக்கு உப₄யவிபூ₄தியையும் அழிக்கப் பார்த்தாய்' என்று இன்னாதாகிறார். 19.

---

(தீமை பார்விளங்கப் பழி செய்தாய்) இந்தத் தீம்பான செயலானது உலகினர் அனைவருமே ஸாஹசச்செயலென்று வயிறெரியும்படி விளங்காநின்றது. தம் தன்மை உலகினர்க்கும் உண்டென்று நினைக்கிறார். (பழி) அவன் புகழ் என்று எண்ணியிருப்பதை ப₄யஶங்கையாலே 'பழி' என்று வயிறெரிகிறார் இவர். உன் ஐஶ்வர்யத்தில் ஒரு துளியான ஆநிரைகளை ரக்ஷிப்பதற்காக உப₄ய விபூ₄திக்கும் உயிரான உனக்கே ஆபத்தை விளைத்துக்கொண்டு உப₄யவிபூ₄தியையும் அழிக்கப்பார்த்தாயே என்கிறார். (திருமாலே பார் விளங்கச் செய்தாய் பழி) "மார்பில் இருக்கிறவர்களோடு மண்ணில் கிடக்கிறவர்களோடு வாசியற 'பழிகேடன்' என்று சொல்லும்படியிறே செய்த தீம்பு" என்று திருப்பாவை (24) ஆறாயிரப்படி வ்யாக்யானத்திலே அழகியமணவாளப்பெருமாள் நாயனார் கருத்தருளிச் செய்தார். வேறேரவதாரச் செயலையெடுக்காமல் சகடாஸுரநிரஸனம், கபித்த₂வத்ஸாஸுரப₄ஞ்ஜநம் என்று கண்ணன் செய்த இரண்டு செயல்களை எடுத்து வயிறெரியக் காரணமென்னென்னில்: க்ருஷ்ணாவதாரத்தில் மாதாபிதாக்கள் ஸாது இடையர்களாய், ஊர் இடைச்சேரியாய், கம்ஸாதிகள் எதிரிகளாய், ஸ்ரீப்ருந்தாவனத்தில் முளைத்தெழும் பூண்டுகளெல்லாம் அஸுரர்களாய், தமையன் ஒருகணம் தப்பில், தான் பாம்பின் வாயில் விழும் தீம்பனாய், பூதனாதிகளால் பிறந்த அபாயங்களுக்கு ஒரெல்லையில்லாமையாலே, க்ருஷ்ணாவதாரத்தில் மங்களாசாஸனமொழியக் காவலில்லாமையாலே ஆழ்வார்கள் கண்ணனுக்கு மங்களாசாஸனம் செய்வதிலேயே மண்டியிருப்பர்கள் என்று பட்டர் அருளிச்செய்யும் வார்த்தையை நினைப்பது. 19.

பழி — அபகீர்த்தியையும், பாவம் — அறிந்து செய்யும்தீச் செயல்களையும், கை அகற்றி-போக்கி, பல்காலும்-எப்போதும், நின்னை — உன்னை, வழி வாழ்வார்—சாஸ்திரவழியில் ஆஶ்ர யிக்குமவர்களும், நாரணன்தன்-நாராயணனுன உன்னு டைய, நாமங்கள் — திருநாமங்களை, நன்குஉணர்ந்து-நன்ருக அறிந்து, வழுஇன்றி—பிழையின்றி, நன்கு ஏத்தும்' காரணங் கள் தாம் உடையார் தாம் — அழகாகத் துதிப்பதற்கேற்ற காரணபரம்பரைகளையுடையவர்களும், (ஆகிய இவ்விருவகை யதிகாரிகளும்) வாழ்வராம் — மகிழ்ந்து வாழப்பெறுவர்கள். மாதோ — இதோர் ஆச்சரியம் இருந்தபடியென்!

பெரி அவ: (பழிபாவம்)ஜகத்ரக்ஷணத்தை அநுஸந்தித்து அவனை ஆஶ்ரயித்தவர்களன்றோ வாழ்வார்களென்கிறது.

வ்யா:- (பழிபாவங்கையகற்றி) அடியுண்டாயும் அடியின் றிக்கேயுமுள்ள விரோதிகளைப்போக்கி. (பல்காலுமித்யாதி) என்றும் உன்னை ஆஶ்ரயித்து வாழ்வார் வாழ்ந்தேபோவர்.

---

அவ:— பகவத்ஸமாஶ்ரயணத்திலே 'முதலடியிட்டா ரோடு, முடியத் தலைக்கட்டப்பெற்ருரோடு வாசியற க்ருத க்ருத்யர் என்கிருர்.

உரை:- தாங்கள் அறியாதிருக்கப் பிறர் அறிந்து ஏறிடும் அபகீர்த்தியையும், அறிந்து அநுஷ்டிக்கப்பட்ட பரஹிம் ஸாதிரூபமான பாபத்தையும் கைகழிய விட்டு ஸர்வகால

---

அவ:—பரமபுருஷனைப் பரிபூர்ணமாக ஆஶ்ரயிக்கப் பெற்றவர் களோடு, அவனை ஆஶ்ரயிக்கத்தொடங்கியிருப்பவர்களோடு வாசி யற அனைவருமே வாழ்ச்சிபெறுவர் என்கிருர்.

வ்யா:— முதலில் அவனைப் பரிபூர்ணமாக ஆஶ்ரயிக்கப்பெற்ற வர்கள் வாழ்ச்சிபெறுவதைக் கூறுகிருர். (பழி பாவம் கையகற்றி) பழியாவது:— தாங்கள் உண்மையில் ஒரு பாவமும் செய்யாதிருக்க, பிறர் பாவமுண்டென்று எண்ணி ஏறிட்ட அபகீர்த்தி; பாவமாவது- தானே அறிந்து செய்த பரஹிம்ஸை முதலான தீச்செயல்கள்.

"न सुखाल्लभ्यते सुखं" (ந ஸுகா²ல்லப்⁴யதே ஸுக²ம்) என்கிற திவனேயாகாதே! மாதோவென்பது இடைச்சொல்லு. (வழுவித்யாதி³) வழுவின்றிக்கேயிருக்கிற நாராயணனுடைய திரு நாமங்களை பக்தியாலேயுணர்ந்து நன்றாக ஏத்தும்.(காரணங்கள்

---

மும் உன்னை ஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிற கட்டளையிலே வழிபட்டுநின்று பே₄ாகரூபமாக ஆஶ்ரயிக்குமவர்களும், நாராயணஶப்₃த₃வாச்யனுகையாலே ஸர்வரக்ஷகனுயிருக்கிற உன்னுடைய திருநாமங்களை விச்சே₂த₃ம் இல்லாதபடி ப்ரேமயுக்தராய்க்கொண்டு அழகிதாக அறிந்து, ப்ரேம பரவஶராய்க்கொண்டு அழகிதாக ஏத்துகைக்கு ஹேதுக்க

---

இவ்விரண்டையும் குறிக்கொண்டு அகற்றியிருப்பவர்கள் இவ்வதிகாரிகள். தாங்கள் அறிந்தும் ஒரு தீச்செயலைச் செய்யாமல், பிறர் ஒன்றை ஏறிடவும் ஒண்ணாதபடி பரிசுத்தமான வாழ்க்கையை நடத்துபவர்கள் என்று கருத்து. (பல்காலும் நின்னை வழி வாழ்வார்) எல்லாக்காலமும் உன்னை சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற கர்ம ஜ்ஞான பக்தியோகங்களாகிற முறையாலே ஆஶ்ரயித்து வாழ்ச்சிபெறுகிறவர்கள். (வழி வாழ்வார்) "ஸுஸுக²ம் கர்த்துமவ்யயம்" [கீதை 9-2] [(பக்தியோகமானது) அநுஷ்டிப்பதற்கு மிக இனியதாயிருப்பது; (ஸாத்⁴யம் கைப்பட்டபின்னும்) அழியாதிருப்பது.] என்கிறபடியே, பாலே மருந்தாமாப்போலே, ஸாதன தசையிலும் மிகவினிதாயிருப்பது. (வாழ்வராம்) வாழ்ச்சிபெற்றே தீருவர்கள். இவ்வுலகிலும் "நல்லபதத்தால்மனைவாழ்வர்கொண்ட பெண்டிர் மக்களே" [திருவாய் 8-10-11] என்கிறபடியே வாழ்ச்சி பெற்று, அவ்வுலகிலும் பேரின்ப வாழ்ச்சிபெறுவர்; "ந ஸுகா²ல்லப்⁴யதே ஸுக²ம்" [இன்பத்திற்குப் பின் (எப்போதும்) இன்பமே உண்டாகும் என்பதில்லை: (துன்பமும் உண்டாகும்)] என்னும் நியாயம் பகவத்விஷயத்திலில்லை என்று கருத்து. (மாதோ) உலகநியாயம் இங்கில்லை என்னும் ஆச்சரியத்தைக்குறிக்கும் சொல்; பொருளற்ற அவ்யயமாகவுமாம். பின் சொல்லப்போகின்றதின் ஆச்சரியத்தைக் குறிக்கும் சொல்லாகவுமாம்.

அவ்வாச்சரியம்தான் என்னவெனில்: ஸர்வகாலமும் உன்னை ஆஶ்ரயிப்பார் பெரும்பேற்றை உன்னை ஆஶ்ரயிக்கத்தொடங்கியிருப்பாரும் பெறும்படியிருப்பதே அது என்கிருர் மேலே:—

நாமுடையார்தாம் ) காரணங்கள்-ஹேதுக்கள். ஏத்துகைக்கு அடியானபக்தி, ருசி, ஆநுகூல்யம், பகவத்கடாக்ஷம், ஸுக்ருதம். ''நாரணங்கள் தாமுடையார்'' என்றபோது தாரணமென்று த்ருதியுடையாரென்றபடி. 20.

---

ளர்ன ப்ரேமம், தத்தேதுவான உத்பஜநம், தந்நிதானமான ருசி, தந்நிதானமான ஸுக்ருதம், அதுக்கடியான உன் கடாக்ஷம் என்றுப்போலே சொல்லுகிற இவற்றைத் தாங்கள் பெற்றுடையராயிருக்கிறவர்களுமான இவ்விரண்டு அதிகாரிகளும் ஸுகோத்தரராய் வாழப்பெறுவர்கள். ''மாதோ'' என்கிறவிது ஓரவ்யயமாய், 'இதோர் ஆஶ்சர்யமிருந்தபடியென்!' என்னும் பொருள் பெற்றுக்கிடக்கிறது. 20

---

( நாரணன் தன் நாமங்கள் வழுவின்றி நன்குணர்ந்து நன்கேத்தும் காரணங்கள்தாமுடையார்தாம் வாழ்வராம்மாதோ)நாராயணன்என்னும் தனிப்பெரும் பெயரையுடையவனுகையாலே ஸர்வரக்ஷகனை உன்னுடைய ஓராயிரமாய் உலகேழளிக்கும் பேராயிரங்களை இடைவெளியில்லாமல் ( அல்லது பிழையில்லாமல் ) அன்புடன் கூடி நின்று அர்த்தபர்யந்தமாக அழகாகஅறிந்து, பக்திவசப்பட்டவர்களாய் அழகாகத் துதிப்பதற்குக் காரணமான அன்பு, அதற்குக் காரணமான அவனைப்பற்றிய மிகுதியான பஜனம் செய்வது, அதற்குக்காரணமான ருசி, அதற்குக் காரணமான புண்ணியம், அதற்குக் காரணமான உன்னுடைய (ஜாயமானகால) கடாக்ஷம் என்றுற்போலே சொல்லப்படும் காரணபரம்பரைகளைப் பெற்றிருப்பவர்களும் முற்பட்ட அதிகாரிகளைப்போலே வாழ்ச்சி பெற்றே தீருவர்கள். (மாதோ) உன்னைப் பரிபூர்ணமாக ஆஶ்ரயிக்கப்பெற்றவர்கள் வாழ்ச்சிபெறுவது நிச்சயமாயிருப்பதுபோலே, உன்னை ஆச்ரயிப்பதற்குரிய காரணங்களையுடையவர்கள் வாழ்ச்சிபெறுவதும் நிச்சயமாயிருப்பது ஓராச்சரியமன்றோ என்கிறார். ஆச்ரயிக்கைக்குறுப்பான ருசி முதலான காரணபரம்பரைகளையுடையவர்களுக்கும், அக்காரணபரம்பரைகள் பக்தியிலோ ப்ரபத்தியிலோ மூட்டிப் பேற்றைப் பெறுவிப்பது நிச்சயமாகையாலே, பரிபூர்ணமாக ஆஶ்ரயித்தவர்களைப்போலே இவர்களும் பேற்றைப் பெறுவது நிச்சயம் என்று கருத்து.''நேஹாபிக்ரமநாஶோஸ்தி''[கீதை 2-40]

21. தாமுளரே தம்முள்ள முள்ளுளதே தாமரையின்
பூவுளதே யேத்தும் பொழுதுண்டே—வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரே செவ்வே
அருநரகம் சேர்வ தரிது.

**தாம் உளரே**—(எம்பெருமானைப் பணிவதற்குப் பாங்கான தேஹேந்த்ரியங்களையுடைய) சேதநரான தாங்கள் ஏற்கனவே இருக்கின்றார்களே; **தம் உள்ளம் உள் உளதே**—(எம்பெருமானைச் சிந்திப்பதற்கான) தங்களுடைய மனமும் (வெளியேபோய்த் தேடவேண்டாதபடி) தமக்குள்ளேயே யிருக்கின்றதே; **தாமரையின் பூ உளதே** — (எம்பெருமான் திருவடிகளில் சாத்த) தாமரைப்பூ (நீர்நிலைகள் தோறும்) நிறைந்து கிடக்கின்றதே; **ஏத்தும் பொழுது உண்டே**-அவனை வாய்விட்டுத் துதிப்பதற்கு ஏற்ற காலம் ஏராளமாக இருக்கின்றதே; **வாமன்**-(எல்லார் தலையிலும் காலைவைத்த) வாமநமூர்த்தியான ஸர்வேஶ்வரனுடைய, **திருமருவு தாள்**-அழகிய திருவடிகளை, **மருவு** - பணிவதற்குப்பொருத்தமான, **சென்னியரே**—தலையையுடையவர்களாக இருக்கின்றார்களே; (இப்படி ஒன்றாலும் குறையின்றியேயிருக்கவும் இவ்வுலகத்தவர்கள்) **செவ்வே** — நேராக, **அருநரகம்** — கொடிய நரகத்தை, **சேர்வது**—அடைவதானது, **அரிது**—செய்வதற்கு அரிய செயலாயிருக்கின்றது.

---

(இட்டபடை கற்படை) என்று கண்ணன் தானே அருளிச்செய்தானன்றோ. காரணங்கள் என்று காரணபரம்பரையைச் சொல்லுகிறது. "தாரணங்கள் தாமுடையார் தாம்" என்று மோனையின்பத்திற்குச் சேரப் பாடங்கொள்ளும்போது, 'த₄ாரணம்' என்னும் வடசொல்லாகக்கடவது. த்₄ருதியெனப்படும் மனவுறுதியை உடையவர்கள் அவனையடைவது நிச்சயம் என்று கருத்து. "நாயமாத்மா ப₃லஹீநேந லப்₄ய:" [மநோபலமற்றவனால் இப்பரமாத்மா அடையப்படமாட்டான்] என்று வேதம் வ்யதிரேகமுக₂த்தாலே சொன்னதை "தாரணங்கள் தாமுடையார் தாம் வாழ்வராம்" என்று அந்வயமுக₂த்தாலே சொல்லுகிறார். 20.

பெரி வ்யா; (தாமுளரே) ஏத்தும்போது தானுண்டாக வேணுமேயென்னில்: (தாமுளரே) இவன்தான் தன்னையுண் டாக்கவேண்டியிருந்ததோ?'' पूर्वमेव कृता ब्रह्मन् हस्तपादादिसंयुता । विचित्रा देहसंपत्तिरीश्वराय निवेदितुम् ॥ '' (பூர்வமேவ க்ருதா ப்₃ரஹ்மந்ஹஸ்தபாத₃ாதி₃ஸம்யுதா। விசித்ரா தே₃ஹஸம்பத்திரீஶ்வராயநிவேதி₃தும் ॥) அன்றே.(தம்முள்ளமுள்ளுளதே) தனக்குப் புறம்பன்றே ஹ்ருத₃யம். (தாமரையின் பூவுளதே) இவனுடைய

அவ:—எம்பெருமானை பூ₄ஜிக்கைக்கு ஈடான கரணஸம்பத்தில் குறைவற்றிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரிகள் விலக்கடி தேடிக்கொண்டுபோய்ப் புகுகிறபடி எங்ஙனே! என்று விஸ்மயப்படுகிறார்.

உரை:-ஆஶ்ரயணோபகரணமான கரணகளேப₃ர விஶிஷ்டரான தாங்கள் முந்துறமுன்னம் உளராயிருந்தார்கள்; அநுஸந்த₄ாந பரிகரமான தந்தாமுடைய மநஸ்ஸு புறம்பே

அவ:-பகவத் விஷயத்தில் முதலடியிட்டவர்களும் வாழ்ச்சி பெறும் ஆச்சரியத்தை அருளிச்செய்தார் சென்ற பாசுரத்தில். ஸர்வேச்வரனிடம் அன்பு செலுத்துவதற்கு வேண்டிய உபகரணங்களெல்லாம் நிறைந்திருந்தும் ஸம்ஸாரிகள் வலியச்சென்று தீயவழிகளிலே சென்று ஸம்ஸாரத்தில் விழுகின்ற பேராச்சரியத்தைக் கண்டு வியப்படைகிறார் இப்பாசுரத்தில். 'நாவாயிலுண்டே' [முதல் திருவ 95 ] என்னும் முதலாழ்வார் பாசுரத்தை அடியொற்றிப் பாடுகிறார்.

வ்யா:—(தாம் உளரே) தன்னைத்தான் உண்டாக்கிக்கொள்ள வேண்டியதில்லையே! தந்தாமைத் தேடவேண்டியதுமில்லையே!

''விசித்ரா தே₃ஹஸம்பத்திரீஶ்வராய நிவேதி₃தும் ।
பூர்வமேவ க்ருதா ப்₃ரஹ்மந் ஹஸ்தபாத₃ாதி₃ஸம்யுதா ॥''
[விஷ்ணுதத்வம்-6.]

[அந்தணரே! கைகால் முதலானவற்றோடு கூடிய விசித்திரமான தேஹமாகிற செல்வம், ஈச்வரனுக்கு ஸமர்ப்பிப்பதற்காக முன் காலத்திலேயே படைக்கப்பட்டுள்ளது.] என்கிறபடியே, ஈச்வரனை

விபூ,திக்குப்புறம்பே தேடிப்போகவேண்டாவே பூ. (ஏத்தும் பொழுதுண்டே) ஏத்துகைக்குக் காலம் ஈஶ்வரனேயுண்டாக்கி

---

தேடவேண்டாதபடி உண்டாயிருந்ததே; திருவடிகளிலே பணிமாறுகைக்கு உறுப்பான கைக்கெட்டின தாமரைப்பூ உண்டாயிருந்ததே; வாய்விட்டுப் புகழுகைக்கீடான காலம் உண்டாயிருந்ததே. தன் உடைமை பெறுகைக்குத் தன்னை

---

ஆச்ரயிப்பதற்குக் கருவிகளான தேஹேந்திரியங்களோடு கூடிய தாங்கள் முதன்முதலில் உளராயிருந்தார்களே! (தம் உள்ளம் உள்ளுளதே) 'எனக்குச் சிறிதுநேரத்திற்கு பகவத்விஷயத்தை நினைப்பதற்கு நெஞ்சு தரவேணும்' என்று ஒருவரிடம் சென்று கடன்வாங்கவேண்டாமே! தாம் உண்டானால் உளதாயிருப்பதாய், பரமபுருஷனை நினைக்கக்கருவியாயிருக்கும் நெஞ்சும், வெளியே போய்த்தேடவேண்டாதபடி தமக்குள்ளேயேயிருக்கின்றதே! (தம் உள்ளம் உள்ளுளதே) இது, 'நாவாயிலுண்டே' [முதல்திருவ 95] என்கிற நா முதலான மற்ற இந்திரியங்களுக்கும் ஹஸ்தபாதாதிகளான அவயவங்களுக்கும் உபலக்ஷணம். (தாமரையின் பூ உளதே) ஸர்வேச்வரன் திருவடிகளிலே இடலாம்படியான தாமரைப்பூ இவ்வுலகிற்குப் புறம்பே சென்று தேடவேண்டும்படி அரிதாயிருப்பதன்றே. கண்ட கண்ட குளங்களிலெல்லாம் கைக்கெட்டலாம்படியிருக்கின்றதே. இங்கு 'தாமரையின் பூ' என்றது, "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார்முளரியும் ஆம்பலும்" [பெரியதிரு 11-7-6] "செண்பகமல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி எண்பகர்பூவும்" [பெரியாழ்திரு 2-7-10] என்னும் பூக்களுக்கெல்லாம் உபலக்ஷணம். "பத்ரம் புஷ்பம்" [கீதை 9-26] "புரிவதுவும் புகைபூவே" [திருவாய் 1-6-1] என்கிறபடியே எம்பெருமானுக்கு ஆகாத பூவில்லையன்றே. "ந கண்டகாரிகா புஷ்பம் தே₃வாய விநிவேத₃யேத்" என்று முள்ளுடைய கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்கு இடலாகாது என்று சாஸ்திரம் தள்ளியதும் பறிக்கிற ஆச்ரிதன் கையில் முள் தைக்குமே என்னும் கருத்தாலேயே என்று பட்டர் அருளிச்செய்வாராம். எம்பெருமானுடைய புஷ்பஹாஸ ஸுகுமாரமான திருமேனிக்கு முள்ளுடன் கூடிய இப்பூ பொருந்தாது என்னும் இவன் நினைவாலே நிஷேதித்ததாகவுமாம். (ஏத்தும்பொழுதுண்டே) வாய்விட்டுப்புகழுவதற்கு இடங்கொடுக்கும் காலத்தைக் கடன் வாங்கவேண்டாமே; ஸர்வேச்வரனே யதேஷ்ட

ஞனே. (வாமனித்யாதி₃) எல்லார் தலையிலும் காலைவைத்த வனைத் தன்னுடைமையைப் பெறுகைக்கு அர்த்தி₂யுமா யிருந்தவனுடைய ஐஶ்வர்யம் பொருந்தின திருவடிகளை வைக்க விலக்காததொரு தலையுமுடையரே. (செவ்வே அரு

---

இரப்பாளனுக்கும் நீர்மையை உடையனை ஸர்வேஶ்வர னுடைய ஐஶ்வர்யப்ரகாஶகமாய், த்₄வஜாரவிந்த₃ாதி₃ சிந் ஹிதமான திருவடிகளிலே ஶேஷத்வாநுரூபமாகச் சேரு கைக்கு அநுரூபமான தலையை உடையராயிருந்தார்கள். இப்படியிருக்க, நேர்கொடுநேரே கொடிதான ஸம்ஸாரத்

---

மாக உண்டாக்கி வைத்திருக்கிறனே (தாமரையின் பூவுளதே ஏத்தும் பொழுதுண்டே) இவை "நாராயணேதி ஶப்₃தே₃ாஸ்தி" "நமோ நாரணவென்று ஓவாதுரைக்கும் உரையுண்டே" [முதல் திருவ 95] முதலான மற்ற ஆஶ்ரயணோபகரணங்களுக்கும் உபலக்ஷணம். (வாமன்) இவையெல்லாம் வேண்டுமோது அவன் அவனல்லவாகிலன்றோ. தன் உடைமையைப் பெறுகைக்குத்தானே யாசகனாய்ச்சென்று, உறங்குகிற குழந்தையைத் தானே சென்று அணைத்துக்கொள்ளும் தாயைப்போலே, எவருடைய அபேக்ஷை யையும் எதிர்பாராமல், அனைவரையும் தன் தேனே மலரும் திருப் பாதத்தாலே தானே சென்று தடவிக்கொடுத்தவனன்றோ அவன். (திருமருவு தாள்) "வடிவிணையில்லாமலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" [திருவாய் 9-2-10] என்கிறபடியே பெரிய பிராட்டியார் பிடிக்கும் திருவடி. புருஷகாரபூ₄தையும் அருகிலேயே இருக்கிறளே என்கை. அன்றிக்கே, திரு-என்று செல்வமாய், உப₄யவிபூ₄திச்செல்வத்தையும் உடைய ஸர்வலோக சக்ரவர்த்தி இவனே என்று காட்டித்தரும் திருவடிகள் என்றுமாம். "ஶங்க₂-ரத₂ாங்க₃ கல்பகத்₄வஜாரவிந்த₃ாங்குஶவஜ்ரலாஞ்ச₂நம்த்ரிவிக்ரம த்வச்சரணாம்பு₃ஜத்₃வயம்" [ஸ்தோ ர 31] [திரிவிக்ரமனே! ஶங்கம். சக்ரம், கல்பகம், கொடி, தாமரை, அங்குசம், வஜ்ரம் ஆகிய அடையாளங்களையுடைய உன் திருவடித் தாமரையிணை] என்கிற படியே ஐஶ்வர்யத்தைக்காட்டும் அடையாளங்கள் அனைத்தையும் உடையதன்றோ இவன் அடியிணை. (வாமன் திருமருவு தாள்) அமரர் சென்னிப்பூவான திருவடிகளை நித்யஸம்ஸாரிகள் தலை யிலும் வைப்பவனாயிருந்தானே! (தாள் மருவு சென்னியரே) தன் சேஷித்வத்தையும், இவனுடைய சேஷத்வத்தையும் நிறப்பெறச்

நரகஞ்சேர்வதரிது) இப்படி உபகரணங்கள் குறைவற்றிருக்கச் செய்தே நரகத்துக்கு நேர்வழிகிடையாது. 21.

---

தைச் சென்று கிட்டுகை அரிது. இங்ஙனேயிருந்தபின்பு இவர்கள் விலக்கடி தேடிக்கொண்டு திரிகிறபடி எங்ஙனே யோ? என்று ஆஶ்சர்யப்படுகிறார். 21.

---

செய்வதற்கு அவன் இவனுடைய தலையிலே தன் திருவடியை வைக்க வந்தால், அதை விலக்கவறியாததொரு தலையையும் உடையவர்களாயிருக்கிறார்களே! இதையும் இவர்கள் தேடிப்போக வேண்டாதபடி அவனே உண்டாக்கி வைத்தானே! (செவ்வே அருநரகம் சேர்வது அரிது) இவ்வண்ணமாக எம்பெருமானை அடைவதற்கு வேண்டிய உபகரணங்கள் அனைத்தும் குறைவற்றிருக்கும்போது, கொடிய நரகமான ஸம்ஸாரத்தில் நேர்வழியில் சென்று இந்த ஸம்ஸாரிகள் விழுவது அரிய செயலாகும். வழியல்லா வழியைத் தேடிச்செல்வதாலேயே இந்த ஸம்ஸாரிகள் இன்னமும் ஸம்ஸார நரகத்திலே அழுந்திக்கிடக்கிறார்கள். எப்படித்தான் இவர்கள் இவ்வருஞ்செயலை ஸாதிக்கிறார்களோ! என்று ஆஶ்சர்யப்படுகிறார்.

"நாராயணேதி ஶப்₃தோ₃ऽஸ்தி வாக₃ஸ்தி வஶவர்த்திநீ ।
ததா₂ऽபி நரகே கோ₄ரே பதந்தீத்யேதத₃த்₃பு₄தம் ॥"

[நாராயண என்னும் ஶப்தம் உள்ளது; வாக்கு வசப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் கோரமான நரகத்தில் விழுகிறார்கள் என்பது மிகவாச்சரியம்.]

"நாவாயிலுண்டே நமோ நாரணவென்று
ஓவா துரைக்கு முரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும் திறம்" [முதல்திருவ 95.[

என்று மற்ற ஞானிகளும் இதுகண்டு ஆஶ்சர்யப்பட்டார்களன்றே. (அருநரகம்) ரௌரவாதி நரகங்கள் நினைக்கும்போதே அஸஹ்யமாயிருக்குமாகையால், அவற்றை எவனும் விரும்பி அடையமாட்டான்; அடைந்தவன் அவற்றிலிருந்து விடுபடவே எண்ணுவான். இந்த ஸம்ஸாரமோவெனில், எத்தனை துன்பங்களை விளைத்தாலும் ஸம்ஸாரிகளால் விரும்பப்படுகிறது; இதிலிருந்து விடுதலை

22. அரிய தெளிதாகு மாற்றலால் மாற்றி
பெருக முயல்வாரைப் பெற்றால்—கரியதோர்
வெண்கோட்டு மால்யானை வென்றி முடித்தன்றே
தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து.

ஆற்றலால்-தன்னுடைய சக்தியினால், மாற்றி-(சேதனன் செய்யும் முயற்சியாகிற) தடையை விலக்கி (சேதநனுக்கு ஹிதமான ஸகல கார்யங்களையும் தானே செய்வதாக ஏற்றுக்கொண்டு), பெருக முயல்வாரை—மிகவும் முயற்சி கொண்டிருக்கின்ற மஹாபுருஷனை எம்பெருமானை, பெற்றால்-கிடைக்கப்பெற்றால், அரியது-பெறுவதற்கு அருமையான மோக்ஷமும், எளிது ஆகும்—லகுவாய்விடும்; (இதை எங்கே கண்டோமென்னில்), வெண் கோடு—வெண்ணிறமான தந்தங்களையுடைய, மால்—பெரிய, கரியது ஓர் யானை — கருநிறமுள்ள ஒப்பற்ற கஜேந்த்ராழ்வான், வென்றி முடித்து — (முதலையை) ஜயித்து அழித்து, தண் — குளிர்ந்த, கோடு — பொய்கைக்கரையிலே, மா—சிறந்த, மலரால் — தாமரைப் பூக்களைக்கொண்டு, தாழ்ந்து அன்றே -- (எம்பெருமானை) வணங்கி அடிமைசெய்யப்பெற்றதன்றோ.

பெரிய அவ:—(அரியது) ஸத்தையேபிடித்து நோக்கிக் கொண்டு போருவானொரு ஸமாஶ்ரயணீயனைப் பெற்றால் எல்லாம் ஸுலபமிறே என்கிறது.

---

யடையும் விருப்பத்தையும் விளையவொட்டாமல் தடுக்கிறது. ஆகையால் இது எல்லா நரகங்களிலும் கொடிதான 'அரு நரகம்' என்னத்தக்கது. (செல்வே சேர்வது அரிது) பகவானை அடைவதற்காக ஏற்பட்ட உபகரணங்களையே அவனிடமிருந்து விலகுவதற்கு உறுப்பாகக் கொள்கின்றதைக் கண்டு ஆச்சர்யப்படுகிறார், 21.

அவ:—தங்களுக்கு அவனை அடைவதற்குரிய உபகரணங்கள் ஒன்றுமில்லாவிடினும் அவனிடத்திலே தங்களுடைய பரத்தை வைத்து ஶரணமடைந்தவர்களுக்கு அவனை ஆஶ்ரயிப்பதோடு அவனை அடைவதோடு வாசியற எல்லாமே எளிதாயிருக்கும் என்பதை திருஷ்டாந்தங்காட்டி விளக்க அவனுடைய நீர்மையின்

வ்யா: - (அரியதெளிதாகும்) அரிதாவது ப₄க₃வல்லாப₄மும் ப₄க₃வத்₃ப₄ஜநமும்; இவை இரண்டும் எளிதாகும். (ஆற்றலா லித்யாதி₃) இவன் தலையிலே ஒரு தேவையிடுகிறதென்? எல்லாம் நாமே ஏறிட்டுக்கொண்டு செய்வோமென்பானொரு

---

அவ:— தங்களுக்கு ஒரு பரிகரஸம்பத்தியற்றிருந்ததே யாகிலும், அவன் பக்கலிலே ந்யஸ்தப₄ரராயிருப்பார்க்கு எளிதாக ஆம்ரயிக்கலாம்படியன்றோ அவன் நீர்மையின் ஏற்றமிருப்பது என்கிறார்.

உரை:— வஸ்துவை வஸ்த்வந்தரமாக்கவல்ல மக்தி யோக₃த்தாலே. "உன் பேற்றுக்கு உறுப்பாக நீ ஒன்றும் யத்நித்துச் செய்யவேண்டா" என்று, ஸ்வரக்ஷணார்த்த₂மாக இவன் பண்ணும் ப்ரவ்ருத்திகளை அடைய மாற்றி, ஜ்ஞாநம் ப்ரேமம் முதலாகக் கைங்கர்யபர்யந்தமாக இவனுக்குச் செய்யவேண்டும் ஸர்வகார்யமும் தன் தலையிலே ஏறிட்டுக்

---

சிறப்பை அருளிச்செய்கிறார். ப்ரபத்திபரமான இந்நிர்வாஹத்திற்குப் பின் ப₄க்திபரமான மற்றொரு பொருளும் இப்பாசுரத்துக்கு விவரிக்கப்படும்.

வ்யா:—(அரியது எளிதாகும்) பகவானைப் பெறுவதாகில் அப் பயனும் மிக எளிதில் பெறத்தக்கதாகும். எப்போது? எனில்: (ஆற்றலால் மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்றால்) தன் சக்தி யாலே தடைகளைப்போக்கிப் பெருமுயற்சி செய்கின்றவன் ஒருவனை அடைந்தால் அரியதும் எளிதாகும். (ஆற்றலால்)ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாக ஆக்கவல்ல அக₄டிதக₄டநாமக்தியை நினைக் கிறார். (மாற்றி) தடைகளைப் போக்கி. இங்கு தடையாவது—பகவான் தான் முயல்வதற்கு விரோதியாயிருக்கும் சேதநனின் முயற்சியே யாகும். "ப₄க₃வத் ப்ரவ்ருத்தி விரோதி₄ ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" [பகவானுடைய முயற்சிக்கு விரோதியான தன் முயற்சி யினின்றும் நீங்கப்பெறுகையே ப்ரபத்தியாகும்] என்றல்லவோ ப்ரபத்தி லக்ஷணம் சொல்லப்படுகிறது. தன் முயற்சியாயிருக்கும் உபாயாந்தரங்களில் கைவைத்தால் ப்ரபத்திநிஷ்டை₂ நழுவும் என்று சாஸ்திரமும் சொல்லிற்றன்றோ. "நெறி காட்டி நீக்குதியோ" [பெரியதிருவ 6] என்றாரன்றோ நம்மாழ்வாரும். ஆகையால், இச்

ஸாக்ஷாச்சக்தியைப்பெற்ருல். 'ஸூகலாபம்நம் மதானபின்பு எல்லா வற்றையும் ஈச்வரன் பக்கலிலே விடுகிறதென்? நாமே வழிப்போம்' என்பாரொரு அதிகாரியைப் பெற்ருலென்றுமாம். மேலிருக்குந்த்ருஷ்டாந்தம்-(கரியதோரித்யாதி) கறுத்த வடிவையும் வெளுத்த கொம்பையுமுடைத்தான பெரிய ஆனை.

---

கொண்டு, இவனுக்குப் பலத்திலே அந்வயமாம்படி தன் பேருக ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகையிலே மிகவும் உத்ஸாஹியாநிற்கும் மஹாபுருஷரைப் பெற்ருல், பெறுதற்கரிதான புருஷார்த்தமும் எளிதாகாநிற்கும். அது எங்கே கண்டோம்? என்னில்: கறுத்த நிறத்தையும், வெளுத்த கொம்பையும், பெரிய வடிவையுமுடைத்தான ஆனையானது, அருமைக்குக் காற்கட்டான முதலையை ஜயித்து அழியச் செய்தன்றே குளிர்ந்த பொய்கைக்கரையிலே ச்லாக்யமான தாமரைப்பூக்களைக்கொண்டு, அரைகுலையத் தலைகுலைய

---

சேதனனின் முயற்சியை, ப்ரபன்னன் பகவானைப் பெறத் தடையாகக் குறையில்லை. (மாற்றி) "நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" [கீதை 2-5] [எவனும் ஒரு கணநேரமும் ஒரு கர்மத்தைச் செய்யாமலிருக்க முடியாது] என்கிறபடியே, தன் முயற்சியினின்றும் நீங்குவதும், செய்யும் காரியத்தில் உபாயபுத்தி வைக்காமலிருப்பதும் இச்சேதனன் தன்னால் ஸாதித்துக்கொள்ள முடியாத காரியமாகையாலே, அதையும் அந்த ஸர்வேச்வரன் தானே ஸாதித்துத் தரவேணும் என்று கருத்து. "ஸர்வதர்மாந்" என்னும் சரமச்லோகத்திலே, "நீ என்னை அடைவதற்கு உறுப்பாக ஒரு முயற்சியையும் செய்யவேண்டா; நானே எல்லா முயற்சியையும் செய்கிறேன்" என்ருனன்றே. (பெருக முயல்வாரைப் பெற்ருல்) அறிவு, அன்பு முதலானவை தொடக்கமாகக் கைங்கர்ய மீருக இவனுக்கு விளையவேண்டிய எல்லா நன்மைகளையும் தன் காரியமாக ஏற்றுக்கொண்டு, இவனுக்குப் பலத்தில் மாத்திரம் அந்வயமாம்படி தன் பேருக எல்லாவிதமான ரக்ஷைகளையும் செய்கையிலே பெருமுயற்சிகொள்ளும் மஹாபுருஷனை உபாயமாகப் பெற்ருல், அரியகாரியமும் எளியதாகும், பலப்ரதனுயிருக்கும் ஸர்வேச்வரனையே பலகரணமாகவும் ஆகவேண்டுமென்று சரணமடைந்தால் அரியதான மோக்ஷபலமும் மிகவும் எளிதாகும் என்று கருத்து.

(தண்கோட்டித்யாதி₃) கோட்டென்று கரையிலே என்கிறது. "தண் தோட்டுமாமலர்" என்று பாட₂மானபோது. இதழை யுடைத்தான பெரிய புஷ்பத்தாலே என்கிறது. (மாமலரால் தாழ்ந்து வென்றி முடித்தன்றே) புஷ்பத்தைக்கொண்டு திருவடிகளிலே பணிந்தன்றோஆனை வென்றியை முடித்தது; விஜயத்தைப்பெற்றது அவன் ப்ரஸாத₃த்தாலேயன்றோ என்கிறது. 22.

---

வந்து தோன்றி விரோதி₄யைப் போக்கி ரக்ஷித்தருளின அவன் திருவடிகளிலே தாழ்ந்து அடிமை செய்யப்பெற்றது. தாழ்ந்து-தாழ்ந்தது என்றபடி. கோடென்று கரைக்குப் பேர். தட்டம்-குளிர்த்தி; குளிர்ந்த பொய்கைக்கரையிலே என்றபடி. 'தண்தோட்டு மாமலர்' என்று பாட₂மானபோது குளிர்ந்த இதழை உடைத்தான பெரிய புஷ்பத்தாலே என்று பொருளாகக்கடவது. 22.

---

இதை எங்கே கண்டோம்? என்னில்: கஜேந்திராழ்வானிடத்திலே கண்டோம் என்று திருஷ்டாந்தம் காட்டுகிறார் இனி; (கரியதோர் வெண்கோட்டு மால்யானை...தாழ்ந்து) கறுத்த நிறத்தையும் ஒப்பற்ற வெளுத்த கொம்பையும், பெரிய வடிவையுமுடையதான கஜேந்திரனானவன், தான் பரமபுருஷனுடைய திருவடிகளிலே மலரிட்டுப் பணிபுரிவதற்கு இடையூறாயிருந்த முதலையை ஜயித்து அழியச்செய்து, குளிர்ந்த கரையிலே மலரையிட்டு அவன் திருவடிகளிலே வணங்கி அடிமைசெய்யப் பெற்றானல்லவோ. கரியது—உடம்பில் கருமை; ஓர்—அன்பிலே ஒப்பற்றிருக்கை. வெண்கோட்டு—தந்தம் வெளுத்திருக்கை. மால் யானை—வடிவு பெருத்திருக்கும் யானை. (வென்றி முடித்து) அரைகுலையத் தலைகுலைய வந்து நின்ற அவனாலேயே அநிஷ்ட நிவ்ருத்தியைப் பெற்றது. (தண்கோட்டு மாமலரால் தாழ்ந்தன்றே) அழகிய கரையிலே சிறந்த மலரால் வணங்கி அடிமைசெய்யப் பெறுகையாகிற இஷ்டப்ராப்தியையும் அவனாலேயே பெற்றது. தாழ்ந்து—தாழ்ந்தது என்றபடி. கோடு என்று இங்கு கரைக்குப் பெயர்; தண்கோடாவது-(நீர்நிலையின்) குளிர்ந்த கரை. (தண்தோட்டு மாமலர்) என்று பாட₂மானபோது, குளிர்ந்த இதழையுடைய பெரிய புஷ்பத்தாலே என்று பொருள்படுகிறது. தோடு—பூவிதழ்.

''பரமாபத₃மாபந்ந: மநஸாசிந்தயத் ஹரிம்|
ஸ து நாக₃வர: ஸ்ரீமாந் நாராயணபராயண:||
[வி-த₄ர்-68]

[மேலான ஆபத்தை அடைந்ததாய், அநந்யோபாயத்வச்செல்வத்தையுடைய அந்த கஜேந்திரன், நாராயணனையே மேலான உபாயமாகக்கொண்டு, அந்த ஹரியையே மனத்தினுல் சிந்தித்தது.] என்கிறபடியே அவனையே உபாயமாக நினைத்தபடியாலே பெறற்கரிய இஷ்டப்ராப்தியையும் அநிஷ்டநிவ்ருத்தியையும் பெற்ற கஜேந்திரனைப்போலே பகவானையே உபாயமாகப் பெற்ருல் அரிய பலனுன பகவத்ப்ராப்தியும் எளிதாகும் என்றதாயிற்று. (தாழ்ந்தன்றே வென்றிமுடித்து) என்று கூட்டி, பகவானைத் தான் பணிந்ததாலேயோ வெற்றி பெற்றது? அவன் அருளாலல்லவோ வெற்றி பெற்றது என்றும் பொருள் கொள்ளலாம். ஆக, இவ்வளவால் ப்ரபத்திபரமான நிர்வாஹம் விவரிக்கப்பட்டது. இனி, பக்திபரமான நிர்வாஹம் விவரிக்கப்படுகிறது.

அவ:—ஜந்மாந்தரத்தில் பகவத்பக்தனுயிருந்த ஓரரசனே சாப விசேஷத்தால் கஜேந்திரனுகப்பிறந்து பூர்வஜந்ம ஸ்ம்ருதியோடு கூட பகவானைத் தினந்தோறும் புஷ்பங்களையிட்டு ஆராதித்து வந்தானென்றும், அப்படி ஒருநாள் பூப்பறிக்கவந்தவனை முதலை கவ்விற்றென்றும், அத்தடையை எம்பெருமானைச் சரணடைந்து போக்கிக்கொண்டு, எம்பெருமான் திருவடிகளிலே மலரையிட்டுத் தன் பக்தியைப் பூர்த்திசெய்து கொண்டு மோக்ஷமடைந்தான் என்றும் விருத்தாந்தமாகையாலே அதுக்குச்சேரவும், ''தாழ்ந்து வென்றி முடித்தன்றே'' என்ற சப்தஸ்வாரஸ்யத்தைப்பற்றவும் பக்தி பரமாகவும் இப்பாசுரத்துக்கு ஒரு நிர்வாஹமுண்டு; அதை விவரிப்போமினி.

வ்யா:—(அரியது எளிதாகும்) பெறவரியதான பகவத்பக்தியும் பெற மிகவும் எளியதாகும். எப்போது? எனில்: (ஆற்றலால் மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்ருல்) ''ஸ்ஙகலாபம் நம்முடையதாயிருக்கும்போது எல்லா முயற்சியையும் ஈச்வரனே செய்து கொள்ளட்டும் என்று விடலாமோ? நாமும் முயன்று பக்திசெய்வோம்'' என்று நினைத்துத் தன் சக்தியாலே தடைகளை மாற்றி மிகவும் முயற்சிசெய்கின்றவனுன ஓரதிகாரியைப் பெற்ருல் அரிய

23. தாழ்ந்து வரங்கொண்டு தக்க வகைகளால்
வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் — தாழ்ந்த
விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய் ஞாலம்
அளந்தடிக் கீழ்க் கொண்ட வவன்.

தாழ்ந்த— (பழத்தின் கனத்தினல் கிளைகள்) தாழ்ந்து கிடந்த, விளம்—விளாமரத்தினுடைய, கனிக்கு—பழங்களை உதிர்ப்பதற்காக, கன்று எறிந்து—(கன்றை எறிதடியாகக் கொண்டு) வீசியெறிந்தவனும், வேறு உரு ஆய்-(கொடுத்து

---

தான பகவத்பக்தியும் எளியதாய்விடும் என்று கருத்து. இதை எங்கே கண்டோம்? எனில்: (கரியதோர் வெண்கோட்டு மால் யானை...மாமலரால் தாழ்ந்து வென்றி முடித்தன்றே) கறுத்ததாய், வெளுத்த தந்தத்தையுடைய பெரிய யானை, பெரிய புஷ்பங்களைக் கொண்டு நெடுங்காலம் ஸர்வேஶ்வரனை வணங்கியன்றோ தன் காரியத்தை ஸாதித்துக்கொண்டது, நெடுங்காலம் எம்பெருமானை வணங்கியதின் பலனாகவே எம்பெருமானைச் சரணடைந்து முதலையால் ஏற்பட்ட தடையை நீக்கிக்கொண்டு தன் பக்திஸித்தியை அடைந்தது என்று கருத்து. முதல் நிர்வாஹத்தில் சரணாகதியாலேயே பகவத்ப்ராப்தி விரோதியான முதலையை அழியச்செய்து பகவானையும் பெற்றது என்று கொள்ளவேண்டும். இவ்விரண்டாம் நிர்வாஹத்தில் நெடுங்காலம் இந்த கஜேந்திரன் செய்துவந்த பகவத்பக்தியாகிற முயற்சியே சரணாகதியிலே மூட்டித் தடையையும் போக்கி பக்தியோகத்தையும் பூர்த்தி செய்வித்து பகவத்ப்ராப்தியைக்கொடுத்தது என்று கொள்ளவேண்டும். முதல் நிர்வாஹத்தில் ஸ்வதந்த்ர ப்ரபத்தியாலே இஷ்டப்ராப்தியையும், அநிஷ்ட நிவ்ருத்தியையும் கஜேந்திரன் பெற்றான் என்கிறது. இரண்டாவது நிர்வாஹத்தில் அங்கப்ரபத்தியாலே முதலையால் வந்த தடையைப் போக்கிக்கொண்டு பக்தியாலே பகவத்ப்ராப்தியை அடைந்தான் கஜேந்திரன் என்கிறது. இப்படி இரண்டு நிர்வாஹங்களிருந்தபோதிலும், "நாராயணபராயண:" என்னும் ரிஷிவாக்யத்திற்கும், "பிடிசேர் களிறளித்தபேராளா" [முதல் திருவ-97] என்று கஜேந்திரன் பக்த்யங்கமான வைராக்யமற்றவனாயிருந்தான் என்று முதலாழ்வார் அருளிச் செய்திருப்பதற்கும் மிகப்பொருந்தியிருக்கையாலே முதல் நிர்வாஹமே ஆசார்யர்கள்ால் மிகவும் ஆதரிக்கப் பட்டது.

22.

நீண்ட கையை உடைய தனக்குத்) தகாத யாசகனை வாமநவடிவமாய், ஞாலம்-பூமியை, அளந்து-அளந்து, அடி கீழ்-தனது திருவடியின் கீழே, கொண்ட - அடங்கும்படி கொண்டவனுயுமுள்ள, அவன் - அந்த எம்பெருமான், தாழ்ந்து-தனது திருவடிகளிலே வணங்கி, வரம் கொண்டு— தனது திருவருளைப்பெற்று, தக்க வகைகளால் - (தங்கள் தங்கள் நிலைமைக்கு) ஏற்ற விதத்தில், வாழ்ந்து-ஐச்வரி யத்தையோ கைவல்யத்தையோ பகவத்ப்ராப்தியையோ பெற்று, கழிவாரை-மேன்மேலும் ஸுகத்தை மிகுத்துக் கொள்ள வேணுமென்றிருக்கிற அந்தந்த அதிகாரிகளை, வாழ்விக்கும்— வாழ்விப்பான்.

பெரி அவ:—தன்னை ஆஶ்ரயிப்பார்க்கு ப்ரதிபந்தகத்தை யும் போக்கித் தானும் ஸுலப₄னுமென்கிறது.

வ்யா:—(தாழ்ந்தித்யாதி₃) வரங்கொண்டு - அவன் ப்ர ஸாதத்தைக்கொண்டு; சாஸ்த்ரங்களில் சொல்லுகிற வகை

---

அவ:—தன்னை ஆஶ்ரயித்தார்களுடைய விரோதி₄களைப் போக்கி, அபி₄மத ஸித்₃தி₄யையும் பண்ணிக்கொடுத்துத் தத்தத₃தி₄காராநுகு₃ணமாக ரக்ஷிக்கும் என்கிறார்.

உரை: - கனியப்பழுத்துக்கிடக்கையாலே தரையளவும் வரத்தாழ்ந்து கிடக்கிற அஸாரமயமான விளாவினுடைய பழங்களுக்கு அஸாரமயமான கன்றை எறிகோலாக எடுத்

---

23. அவ:— தன்னை ஆஶ்ரயிப்பவர்கள் ப்ரபந்நராகவுமாம், உபாயாந்தர நிஷ்ட₂ர்களாகவுமாம், அநந்யப்ரயோஜநராகவுமாம், ப்ரயோஜநாந்தரபரராகவுமாம், அவர்களுக்குத் தானே எளியனுகி, விரோதியையும் போக்கி, இஷ்டப்ராப்தியையும் செய்துகொடுத்து அவரவர்கள் விருப்பத்துக்குத் தக்கபடி அவரவர்களை ரக்ஷிப்பான் என்கிறார்.

வ்யா:-(தாழ்ந்து) "த்₃விதா₄ப₄ஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்| ஏஷ மே ஸஹஜோ தோ₃ஷ: ஸ்வபா₄வோ து₃ரதிக்ரம:||" [ரா-யு 36-11] [இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனே

களாலே தாழ்ந்து - ஆஶ்ரயித்து, அதுதானே வாழ்வாகக் காலத்தைப் போக்குவாரை ரக்ஷிக்கும்; ப்ரதிபந்தகஞ் செய்வதென்னென்னில், தாழ்ந்த விளங்கனிபட்டது படுமத்தனை. (தாழ்ந்தவித்யாதி$_3$) ''வேற்றுருவாய்'' என்கிறது சிறுகாலைக்

---

தெறிந்து, ஶ்ரிய:பதியான தன் உருவை விட்டு, அர்த்தி$_2$யான வாமனரூபத்தை உடையனாய்க்கொண்டு பூமியை அளந்து, தன் காற்கீழே இட்டுக்கொண்ட அந்த ஸர்வேஶ்வரன், **''न नमेयं''** (ந நமேயம்) என்கிற ஸ்வாதந்த்ர்யத்தைப் பொகட்டுத் தன் திருவடிகளிலே வணங்கி, 'எங்கள் அபி$_4$மதம் நீயே பண்ணித்தரவேணும்' என்று தன் ப்ரஸாத$_3$த்தைக் கைதொடுமானமாகப் பிடித்துக்கொண்டு, தந்தா

---

யொழிய ஒருவனுக்கு வணங்கமாட்டேன்; இது இயற்கையாகவே எனக்கு அமைந்துள்ள தோ$_3$ஷம்; அவனவனுடைய இயற்கைக் குணம் மீறமுடியாததொன்றன்றோ ] என்கிற தன் ஸ்வாதந்திரியத்தைக் கைவிட்டு சாஸ்திரங்களிற்சொன்ன ரீதியிலே பக்தி முதலான உபாயாந்தரங்களையோ, ப்ரபத்தியையோ பற்றிநின்று அவனை வணங்கி. (வரங்கொண்டு) அவனுடைய அருளாகிற மேலான பலனைப்பெற்று. வரம்-மேலானது; இத்தால், உபாயாந்தரநிஷ்ட$_2$ர்களோடு, ப்ரபந்நர்களோடு வாசியற அவனருளாலேயே பலனைப்பெறுகிறார்கள் என்று உணர்த்தப்படுகிறது. (வரங்கொண்டு தாழ்ந்து) என்று கூட்டி, 'அவன் அருளையே பற்றாசாகக்கொண்டு வணங்கி' என்றும் பொருள் கொள்ளலாம். (தக்க வகைகளால் வாழ்ந்து) தங்கள் அதிகாரத்துக்குத் தக்கபடி தாங்கள் விரும்பும் ஐச்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகளில் ஒன்றைப்பெற்று, அதையே பெருவாழ்வாகக்கொண்டு. (கழிவாரை) காலங்கழிப்பவர்களை என்றுமாம்; கழிதல் மிகுதலாகையாலே, 'இப்படி வாழ்ந்து இன்ட மிகுதியைப் பெறவேணும் என்றிருப்பவர்களை' என்றுமாம் (வாழ்விக்கும்) அந்தந்த அதிகாரிகளை அவரவர்களை அநுஷ்டிக்கும் உபாயத்துக்கும் அவரவர்களுடைய ருசிக்கும் தக்கவாறு அவரவர் விரும்பும் பலன்களைக்கொடுத்து வாழ்விப்பான். இவர்களுடைய வாழ்ச்சிக்குத் தடைகள் நேரிட்டால் என் செய்வது? எனில்: அவை விளங்கனிபட்டதும் மாவலியின் அபிமானம் பட்டதும்படும் என்கிறார் மேலே. (தாழ்ந்த விளங்கனிக்குக் கன்றெறிந்து) கனியப் பழுத்;

காட்டிப் பெரியவடிவைக் கொண்டளந்தது; ஶ்ரிய: பதியான வன் அர்த்திᵒயாய் நின்றதென்றுமாம். பூமியையளந்து தன் திருவடிகளிலே இட்டுக்கொண்டவன் வாழ்விக்கும். 23.

24. அவன் கண்டாய் நன்னெஞ்சே யாரருளும் கேடும்
அவன் கண்டா யைம்புலனாய் நின்றான்-அவன் கண்டாய்
காற்றுத்தீ நீர்வான் கருவரைமண் காரோதச்
சீற்றத்தீ யாவானும் சென்று.

நல் நெஞ்சே-நல்ல மனமே!, ஆர் அருளும்-பரிபூர்ண க்ருபையாலே உண்டாகக் கூடிய மோக்ஷமும், கேடும்—நிக்ரஹத்தால் வரக்கூடியதான ஸம்ஸாரமும் (ஆகிய இரண்டுக்கும் நிர்வாஹகன்), அவன் கண்டாய்-அந்த எம்பெருமானேயாவன்; ஐம்புலன்-பஞ்சேந்திரியங்கள், காற்று தீ நீர் வான் மண் ஆய் நின்றான் அவன் கண்டாய் பஞ்ச

---

முடைய அதிᵍகாரங்களுக்குத் தகுதியாயிருந்த ப்ரகாரங்களாலே ஐஶ்வர்யம், ஆத்மலாபᵍம், ஸ்வப்ராப்தியாகிற ஸ்வஸ்வாமிᵍமதங்களைப் பெற்று ஸுகேᵒாத்தரராய்த் தலைக் கட்டவேணுமென்றிருக்கும் அவ்வவதிᵍகாரிகளையும் அவர்கள் ருசிக்கும் உபாஸனத்துக்கும் ஈடான தத்தத்பᵒலங்களைக் கொடுத்து ரக்ஷியாநிற்கும். 23.

---

கனிகள் நிறைந்து நிற்கையாலே தரைவரையில் தாழ்ந்திருந்த அஸுராவேசமுள்ள விளாமரத்தின் பழங்களை உதிர்ப்பதற்கு அஸுராவேசமுள்ள கன்றை எறிதடியாக எடுத்து எறிந்தவனாய். இனி, தன் உடைமையை ஆக்ரமித்த மாவலியின் அபிமானத்தை அழித்துத் தன் உரிமையை நிலைநாட்டிக்கொண்ட செயலை அருளிச் செய்கிறார். (வேற்றுருவாய்) ஶ்ரிய:பதியாய், ஸகலபᵒலப்ரதᵌனான தன் ஸ்வரூபத்துக்குத் தகாத யாசக வடிவைக் கொண்டு என்னுதல்; சிறிய வடிவைக் காட்டி தானம் பெற்று, பெரிய வடிவாலே அளந்ததைச் சொல்லுதல். (ஞாலம் அளந்து அடிக்கீழ்க் கொண்ட அவன்) தன்னதான பூமியைத் தானே அளந்து தன் அடிக்கீழே ஆக்கிக்கொண்ட அந்த ஸர்வேஶ்வரன் வாழ்விக்கும் என்று கீழோடே அந்வயம். 23.

பூதங்கள் ஆகியவற்ருல் உண்டான உடலாய் நிற்பவனும் ஸர்வேஶ்வரனே யாவன்; கரு வரை-கறுத்த மலைகளும், (அவன் கண்டாய்)-அவனேயாம்; சென்று-(இந்தப் பிரபஞ் சத்தையழிக்கத் திருவுள்ளம்) ப்ரஸரித்து, கார் ஓதம் சீற்றம் தீ ஆவானும்-கறுத்த கடலைச் சீறிச்சுடவல்ல படபாமுகாக்னி யாகின்றவனும், அவன் கண்டாய் — அந்த எம்பெரு மானேயாம்.

பெரி. வ்யா:—(அவனித்யாதி₃) ஸம்ஸார ப்ரவர்த்தகனு மவனே என்கிறது; ''मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते''

---

அவ:—இவன் உண்டானவன்று இவன் அபேக்ஷிதங் கொடுத்து ரக்ஷித்தான் என்னுமிது ஓரேற்றமோ, அடியே தொடங்கி இவனுடைய ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகிறவனுக்கு? என்கிருர்.

உரை:—ப₄க₃வத்₃வைப₄வம் கேட்டால் உகக்கும் நல்ல நெஞ்சே! பரிபூர்ணமான க்ருபையாலே உண்டாகக்கடவ மோக்ஷமும், நிக்₃ரஹகார்யமாய் வரக்கடவ ஸம்ஸாரமாகிற மஹாநர்த்த₂முமாகிற இவற்றுக்கு நிர்வாஹகன் அவன்

---

24. இச்சேதனன் உண்டானபின்பு இவன் விரும்புவதைக் கொடுத்து ரக்ஷித்தான் என்பது பெரிதல்ல; இவனுடைய ஸத்தைக் (இருப்புக்)கும் காரணமாய், முதலிலிருந்து எல்லாவற்றையும் இவனுக்குச்செய்து வருகின்றவனன்ரோ அந்த ஸர்வேஶ்வரன் என்கிருர்.

வ்யா:—(நல்நெஞ்சே) பகவானுடைய பெருமையைச் சொன்ருல் வயிறெரிகிற பாவிகள் நிறைந்து கிடக்கும் இவ்வுலகிலே, அவ னுடைய பெருமையைச் சொன்ருல் உகக்கின்ற தன்மையையுடைய நெஞ்சே! (அவன் கண்டாய் ஆரருளும் கேடும்; ஸர்வேஶ்வர னுடைய பரிபூர்ணமான கிருபையாலே ஏற்படும் மோக்ஷமும், இச்சேதனனுக்கு ஸ்வரூபநாசமாகிற பெருங்கேட்டை விளைக்கும் ஸம்ஸாரமும் இந்த ஸர்வேஶ்வரனுலே ஏற்படுவது கிடாய்! (ஆரருள்) நிறைந்த அருளாலே ஏற்படும் மோக்ஷம் 'ஆரருள்' என்று சொல்லப் படுகிறது. காரணவாசிசப்தத்தாலே கார்யத்தைச் சொல்லுகிற

(மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே) என்கிற படியே அவனைப்பற்றி ஸம்ஸாரபந்த மறுக்கவேணுமென்கிறது. "காரோதச்சிற்றத்தீ" என்று படபை₃யைச் சொல்லுகிறது. 24.

---

கிடாய்! இரண்டுக்கும் பொதுவான ஶரீரத்துக்கும் ஆரம்ப₄க மான வாயு அக்₃னி ஜலம் ஆகாஶம் பூ₄மிகளாகிற பூ₄த பஞ்சகம், தத்கார்யமான பெரிய பர்வதங்களாகிற இவற்றை அடியிலே உண்டாக்குவானும் அவன்கிடாய்! ஸம்ஸார காலத்திலே இவற்றை யழிக்கவொருப்பட்டுத் திருவுள்ளஞ் சென்று, அதுக்கு உபகரணமாய், கறுத்த கடலைச் சீறிச் சுடக்கடவ ப₃ட₃பா₃முகா₂க்₃னிக்கு நிர்வாஹகனாயிருப்பானும் அவன் கிடாய்! ஆக, த்யாஜ்யோபாதே₃யங்கள் இரண்டுக்கும்

---

படி. (கேடு) என்று இவன் ஸ்வருபத்தைக் கெடுக்கும் ஸம்ஸாரம் சொல்லப்படுகிறது. அன்றிக்கே, அவரவருடைய நிலைக்குத் தக்க வாறு அவரவர்கள் விரும்பியதைக் கொடுத்து இவர்களைப் படிப் படியாக முன்னேற்றவேண்டும் என்னும் பரமகிருபையாலே ஏற்படும் ஸம்ஸாரத்தையே 'ஆரருள்' என்றும், "மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே" [கீதை 7-14] [என்னையே எவர்கள் சரணடைகிறார்களோ அவர்கள் இந்த ஸம்ஸாரத்தைத் தாண்டு கிறார்கள்.] என்கிறபடியே, இந்த ஸம்ஸாரம் கெடும் நிலையாகிற மோக்ஷத்தை 'கேடு' என்றும் சொல்லுவதாகவும் கொள்ளலாம். "ஆரருள்" என்று அருளுக்குக் காரணமான புண்யமும், 'கேடு' என்று நிக்ரஹகாரணமான பாபமும் அவனதீனமே என்கிறதாகவு மாம். (அவன் கண்டாய்) "ஸம்ஸாரப₃ந்த₄ஸ்தி₂திமோக்ஷஹேது:" [ச்வே] என்கிறபடியே ஸம்ஸாரமோக்ஷங்களும், "கர்ம காரயதி" [கௌஷீ] என்று புண்யபாபகர்மங்களும் இவனால் ஏற்படுகையாலே, இந்த நிர்வாஹகநிர்வாஹ்யபா₄வஸம்பந்தத்தைப் பற்ற, இவற்றை அவனோடு ஒரே வேற்றுமையில் படிக்கிறார். ஆக, கைவிடத்தக்கவை யான பாபஸம்ஸாரங்களுக்கும், கைக்கொள்ளத்தக்கவையான புண்ய மோக்ஷங்களுக்கும் நிர்வாஹகன் அவனேயென்றதாயிற்று. இனி, புண்யபாபங்களுக்கும் ஸம்ஸாரமோக்ஷங்களுக்கும் ஸாதனமான இந்திரியங்களும் சரீரமும் இவனதீனமேயென்கிறார்: (அவன் கண் டாய் ஐம்புலனாய் நின்றான்) "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப₃ந்த₄மோக்ஷயோ:" [வி-பு 6-7-28] [மனிதர்களுடைய ஸம்ஸார

நிர்வாஹகன் என்றபடி. 'ஆரருள்' என்று அருளின் கார்ய மான மோக்ஷத்தை லக்ஷிக்கிறது. அன்றிக்கே, அநுக்ரஹ ஹேதுவான புண்யத்தையும், நிக்ரஹஹேதுவாய், அநர்த்த கரமுமான பாபத்தையும் சொல்லவுமாம். 24.

---

பந்தத்துக்கும், மோக்ஷத்திற்கும் காரணம் மனமேயாகும்.] என்கிற மனத்திற்கும், அதற்கு வசப்பட்ட ஐந்து ஞானேந்திரியங்களுக்கும் நிர்வாஹகனாய் நிற்பவன் அவன் கிடாய்!

''ஹ்ருஷீகாணீந்த்ரியாண்யாஹுஸ்
தேஷாமீசோ யதோ பவாந்।
ஹ்ருஷீகேசஸ் ததோ விஷ்ணு:
க்யாதோ தேவேஷு கேசவ:॥''

[இந்திரியங்களை ''ஹ்ருஷீகங்கள்'' என்று சொல்லுகின்றார்கள்; அவற்றுக்கு ஈசனாயிருக்கையாலே, கேசவனாய், விஷ்ணுவெனப்படும் தேவரீர் ஒருவரே தேவர்களுக்குள் ஹ்ருஷீகேசன் என்று பிரஸித்தி பெற்றிருக்கிறீர்.] என்கிற ஹரிவம்சவசனத்தின்படியே ஹ்ருஷீகங்களாகிற இந்திரியங்களுக்கும் ஈசனாயிருப்பதாலன்றோ இவன் ஹ்ருஷீகேசன் என்று பெயர்பெற்றிருக்கிறான். (அவன் கண்டாய் காற்றுத் தீ நீர் வான் மண்) சரீரத்துக்கு உபாதானமான ஐந்து பூதங்களுக்கு உத்பாதகனாயிருப்பவன் அவனே கிடாய்! (கருவரை) இந்த ஐம்பெரும் பூதங்களாலான பெரியமலை முதலான எல்லாப் பொருள்களும் அவனால் உண்டாகின்றவையே என்கை. (கருவரை மண்) கருமை நிரம்பியதாய், மலைபோலே கடினமான பூமியென்று பூமிக்கு விசேஷணமாகவுமாம். இப்படி எல்லாப்பொருள்களும் உண்டாவதற்குக் காரணமாவதோடன்றியில். ஸம்ஹாரகாலத்தில் இவை அழிவதற்கும் காரணமாயிருப்பவன் அவனே என்கிறார் மேலே: (சென்று) இவற்றை அழிக்கத்திருவுள்ளம் சென்றபோது. (காரோதச் சீற்றத் தீயாவானும் அவன் கண்டாய்) கறுத்த கடலைச் சீறிச் சுடுகின்றதாய் ஸம்ஹாரத்துக்குக் கருவியாயிருக்கும் படபா முகாக்நியாக நிற்பவனும் அவனே கண்டாய்! ஆகவிப்படி ஸத்தைதொடக்கமாக ஸம்ஹாரமீறாக எல்லாமே அவனதீனமா யிருக்கும்போது அவன் தன்னை அடைந்தார்க்கு விருப்பங்களைக் கொடுத்து ரக்ஷிக்கிறான் என்பது ஓர் வியப்பல்ல என்றதாயிற்று. 24.

25- சென்ற திலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்
கொன்ற திராவணனைக் கூறுங்கால்—நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து.

விண்ணவர்தம் வாய்—தேவர்களின் வாயினால் துதிக்கத் தக்க, ஓங்கு தொல் புகழான்-உயர்ந்த பழமையான குணங்களையுடைய எம்பெருமான், செவ்வே—நேராக, சென்றது—சீறிச்சென்றது, இலங்கை மேல்—இலங்காபுரியின் மேலாகும்; தன் சீற்றத்தால்-தன்னுடைய கோபத்தால், கொன்றது-ஸம்ஹரித்தது, இராவணனை-ராவணனையாம்; கூறுங்கால்-சொல்லுமிடத்து, வந்து நின்றதுவும்-(சேதநர் எக்காலத்தும் உய்யவேணுமென்று கருதி) வந்து நின்றவிடமும், வேய் ஓங்கு தண் சாரல் வேங்கடமே-மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ள குளிர்ந்த சாரலையுடைய திருவேங்கடமலையேயாம்.

பெரி அவ:-(சென்றதித்யாதி₃) உத்பத்யாதி₃களேயோ? உத்பந்நங்களானால் ப்ரதிப₃ந்த₄கங்களைப் போக்குவானுமவனென்கிறது.

வ்யா:—(சென்றதிலங்கைமேல் செவ்வே) ஸங்கல்பத்தாலன்றியே நேரே கால்நடையே லங்கையிலே நடந்தது.

---

அவ:—இப்படி ஸர்வஸாத₄ாரணனாய் நின்று ரக்ஷிக்குமளவன்றிக்கே, ஆஶ்ரிதவிஷயத்தில் அஸாத₄ாரணனாய் நின்று பக்ஷபதித்து ரக்ஷிக்கும்படியை அருளிச்செய்கிறார்.

---

25. அவ:—ஆத்மாக்கள் அனைவர்க்கும் பொதுவாகச்செய்யும் ரக்ஷணங்களைச் சொன்னார் சென்ற பாசுரத்தில். தன் அடியார்களிடம் பக்ஷபாதத்தாலே அவர்களுக்குச் செய்யும் விசேஷரக்ஷணங்களை அனுஸந்திக்கிறார் இப்பாசுரத்தில். உற்பத்தி முதலானவை அவனதீனம் என்றார் சென்ற பாசுரத்தில்; உண்டானவைகளுக்கு ஏற்படும் விரோதிகளைப்போக்கி ரக்ஷிப்பவனும் அவனேயென்கிறார் இதில் என்றும் கொள்ளலாம்.

(தன்சீற்றமித்யாதி₃) கோபம் தானிட்ட வழக்காயிருக்கிறவன் தானே கோபத்தின் வழக்காய் முடித்தது ராவணனை. (கூறுங்கால்) பேசுங்கால். (விண்ணவரித்யாதி₃) நித்யஸூரிகளால் ஸ்துதிக்கப்படா நின்ற பழைய புகழையுடையவன்; கீழ்

---

உரை: பரமபத₃வாஸிகளான நித்யஸூரிகள் தங்கள் வாய்விட்டு ஏத்துகைக்கு விஷயமாகையாலே உத்துங்க₃மாய், ஸ்வாப₄ாவிகமான கல்யாணகு₃ணங்களையுடைய ஸர்வேஶ்வரன் அங்கு நின்றும் வந்து அவதரித்து, ஸங்கல்பத்தாலன்றிக்கே நேர்கொடு நேரே ''अभियाता'' (அபி₄யாதா) என்னும்படி எடுத்துவிட்டுச்சென்றது இந்த்₃ராதி₃கள் கேட்கவே வயிறுபிடிக்கும்படியான லங்கையிலே. ''प्रहर्ता च''(ப்ரஹர்த்தா

---

வ்யா:—(சென்றது இலங்கைமேல் செவ்வே) ஸங்கல்பத்தாலேயே இராவணனை அழித்துவிடலாயிருக்கச் செய்தேயும், அடியார்களின் விரோதியான இவனைச் சித்ரவதை செய்யவேண்டும் என்னும் கருத்தாலே, பரமபதத்தில் நின்று அவதரித்து வந்து நேரே இலங்கைமேலே படையெடுத்துச் சென்ருன் என்றபடி. (இலங்கைமேல்) இந்திரன் முதலான தேவர்கள் கேட்டாலே நடுங்கும்படியான இலங்கைமேலன்றே தன் அடியார்க்காக இவன் படையெடுத்துச்சென்றது. (செவ்வே சென்றது) பயங்கொள்ளியான இராவணனைப்போலே எதிரியில்லாத சமயம் பார்த்து வேறுவேஷத்தோடு செல்லாமல், சிங்கத்தின் குகையில் சென்று அதன் பிடரியைப் பிடிப்பாரைப்போலே நேரே சென்ருன். சென்றபின் செய்ததென்ன? எனில்: (கொன்றதிராவணனை) எவராலும் கொல்ல முடியாத வரப₃லமுடைய இராவணனைக் கொன்ருன். (தன் சீற்றத்தால் கொன்றது) ''க்ரோத₄மாஹாரயத் தீவ்ரம்'' [ரா-ஆ 24-34] [கடுமையான கோபத்தை வரவழைத்துக்கொண்டான்] என்கிறபடியே கோபத்தைத்தானே வரவழைத்துக்கொள்ள வேண்டும்படி கோபத்தை வென்றிருப்பவனுயிருந்தும், இராவணன் ஆஶ்ரிதவிரோதி₄யாகையாலே ''கோபஸ்ய வஶமேயிவாந்'' [ரா-யு 59-136] [கோபத்தின் வசப்பட்டான்] என்கிறபடியே கோபமிட்ட வழக்காகிக் கொன்ருன் இராவணனை என்கை. (தன் சீற்றத்தால்) புழுப்போன்ற இராவணனைக் கொல்லக் கோபம் தேவையில்லாததானாலும், தன் மனிதநிலைக்குச் சேர, வேண்டிய சமயத்தில் வந்து

ராமாவதாரமாகையாலே ராவண வத₄ஸமநந்தரம் ப்₃ரஹ்மாதி₃களாலே ஸ்துதிக்கப்படுகிற புகழையுடையவனென்றுமாம். (விண்ணவர்தம் வாயோங்கு தொல்புகழான்வந்து நின்றதுவும் வேயோங்கு தண்சாரல் வேங்கடமே) அவதாரத்துக்குப் பிற்பாடரானவர்களிழக்கவொண்ணாதென்று அவர்கள் விரோதி₄யைப் போக்குகைக்காகத் திருமலையிலே வந்துநின்றது 25.

---

ச) என்கிறபடியே அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே அபேக்ஷிதஸமயத்திலே உதவி முகங்காட்டக்கடவதான கோபத்தாலே கொன்று விழவிட்டது அவத்₄யனாக வரம்பெற்றுடைய ராவணனை. அவன் படிகளைச் சொல்லப்புக்கால் அவதாரகாலத்தில் இழந்தவர்கள் இழவைப் பரிஹரிக்கைக்காகஎழுந்தருளி நின்றதுவும் மூங்கில் வளர்ந்திருக்கிற குளிர்ந்த பர்யந்தங்களையுடைத்தான திருமலையிலே. ''விண்ணவர்'' இத்யாதி₃க்கு ராவணவத₄ஸமநந்தரம் ப்₃ரஹ்மாதி₃களாலே ஸ்துதிக்கப்படுகிற புகழையுடையவன் என்று பொருளாகவுமாம். 25.

---

உதவும் கோபத்தைவரவழைத்துக்கொண்டு இராவணனைக் கொன்றான் என்றுமாம். (சென்றது—கொன்றது) ''அபி₄யாதா ப்ரஹர்த்தா ச'' [ரா—அ 1-29] [படையெடுத்துச் சென்று அடிப்பவன்] ''சென்று கொன்று வென்றி கொண்ட வீரன்'' [திருச்சந்த 56] என்கிறபடியே எதிரியானவன்படையெடுத்துவரப்பார்த்திருந்து பிறகு சண்டை செய்யும் அத₄மவீரனாயிராமல், தானே படையெடுத்துச் சென்று கொன்று வென்றிகொள்ளும் உத்தமவீரனாயிருக்கை. (கூறுங்கால்) அவனுடைய ஸௌலப்₄யாதி₃ குணங்கள் இவ்வளவுபட்டவையன்று; ஸர்வவிஷயத்திலும் சென்று வெள்ளமிடும் அவற்றைப் பேசவொண்ணாது. ஓரளவு பேசப்பார்த்தால். (நின்றதுவும் வேங்கடமே) அவதாரகாலத்தில் பெருமல் இழந்தவர்களும் தன்னை இழக்கவொண்ணாதென்று, அவர்களுடைய விரோதி₄களைப் போக்கி விருப்பங்களைத் தருவதற்காக நின்றவிடமும் திருவேங்கடமலையே. (வேயோங்கு தண்சாரல் வேங்கடமே). மூங்கில் வளர்ந்திருக்கிற குளிர்ந்த மலைச்சாரல்களையுடைய இதினுடைய இனிமையைப் பார்த்தால், இதில் வாழ்ச்சி

26. வந்தித் தவனை வழிநின்ற வைம்பூதம்
ஐந்து மகத்தடக்கி யார்வமாய் - உந்திப்
படியமரர் வேலையான் பண்டமரர்க் கீந்த
படியமரர் வாழும் பதி.

படி அமரர்—ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழும்-நித்யவாஸம் பண்ணுகிற. பதி—திருப்பதியாகிற திருமலையென்பது, வழிநின்ற-(எம்பெருமானை ஆஶ்ரயிப்பதற்குத் தடையாகக்) குறுக்கே நிற்பனவான, ஐம்பூதம் ஐந்தும்—பஞ்ச பூதங்களை யும் பஞ்சேந்திரியங்களையும், அகத்து அடக்கி — வெளியிற் போகவொண்ணாதபடி அடக்கி, அவனை — அவ்வெம்பெரு மானை, வந்தித்து-வணங்கி, ஆர்வம் ஆய்—அன்பே வடிவான வர்களாய், உந்தி -ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு மேல் விழுந்து, படி—வந்து வணங்குகின்ற, அமரர்—தேவர் களுக்காக, வேலையான்-திருப்பாற் கடலிலுள்ள பெருமான், பண்டு அமரர்க்கு ஈந்த —முன்னைத் தேவர்களான நித்ய ஸூரிகளுக்குக் கொடுத்த தலமாகும்.

---

யொழிய வேறொரு அபேக்ஷிதமும் வேண்டியதில்லை என்னும்படி யுள்ளது. இப்படிச் சென்று கொன்று நிற்பவன் யாரென்னில்—(விண்ணவர்தம் வாயோங்கு தொல்புகழான்) நித்யஸூரிகள், தங்கள் வாய் விட்டுத்துதிக்கைக்கு விஷயமாகையாலே மிக உயர்ந் தவையாய், அநாதி₃ஸித்₃த₄மான கல்யாணகுணங்களையுடையவன் கிடீர் இப்படி ஸௌலப்₄ய ஸௌஶீல்யாதி₃ கு₃ணங்களை வெளிப் படுத்திக்கொண்டு சென்று கொன்று நின்றான் என்கிறார். (ஓங்கு) குணங்களின் உயர்த்தியைக் காட்டுகிறது. (தொல் புகழ்) அநாதி ஸித்தமாகையாலே குணங்கள் வந்தேறியல்லாமல் இயற்கையாகவே யுள்ளவை என்கிறது. (வந்து) நித்யஸூரிநாதன் வந்து இவ் வுலகில் அவதரித்துச் சென்று கொன்று நின்றான் என்று கீழோடே கூட்டுவது. ராமாவதாரப்ரஸ்தாவம் இப்பாட்டில் உள்ளதாகை யாலே, "விண்ணவர்தம" என்று, ராவணவத₄மானதும் இராமனை வாய்விட்டுப் புகழ்ந்த பிரமன் உருத்திரன் முதலான தேவர்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். 25

பெரி-அவ:—(வந்தித்து) திருமலை ப்ரஸ்துதமாகையாலே பின்னையுந்திருமலைக்குள்ளே ப்ரஸ்துதஞ்சொல்லுகிறது.

வ்யா:—(வழிநின்ற இத்யாதி₃) பகவத்ப்ராப்தி விரோதி₄யான பூதங்களைந்தையும் அவித்து. (ஆர்வமாய்) அபி₄நிவேஶத்தையுடையராய் (அவனைவந்தித்து) அவனையாஶ்ரயித்து. (உந்திப்படியமரர் வேலையான்) அஹமஹமிகயா ப்₃ரஹ்மாதி₃

அவ:—கீழ் ப்ரஸ்துதமான திருமலைதான் பின்னையும் இவர்க்கு ஆகர்ஷகமாய், அங்கே திருவுள்ளஞ்சென்று திருமலைக்குள்ள வைலக்ஷண்யம் சொல்லுகிறார்.

உரை:-அபி₄மானஶூந்யராய்க்கொண்டு திருவடிகளிலே தலைமடுத்து. அவனை ஆஶ்ரயித்து, தத்ப்ராப்திப்ரதிப₃ந்த₄கங்களாய்க்கொண்டு நடுவே நின்று தகைகிற ப்ருதி₂வ்யாதி₃ பஞ்சபூ₄தங்களையும் ஶ்ரோத்ராதி₃களான இந்த்₃ரியபஞ்சகத்தையும் ப்ரத்யகா₃ர்த்த₂ப்ரவணமாம்படி நியமித்து, அவன் பக்கலிலே அபி₄நிவேஶத்தை உடையராய்க்கொண்டுஒருவர்க்

26. அவ:—கீழ்ப்பாட்டில் திருமலையைப் பற்றிய ப்ரஸ்தாவம் வருகையாலே அம்மலையிலே ஈடுபட்டு அதன் சிறப்பைப்பேசுகிறார்.

வ்யா:—(அவனை வந்தித்து) "ஈஶ்வரோஹம்" என்றிருக்கும் தங்கள் அபிமானத்தை விட்டு அவன் திருவடிகளிலே தங்கள் தலையை வைத்து வணங்கி அவனை வழிபட்டு. அவனை ஆஶ்ரயிக்கத்தடையாயிருக்கும் கரணகளேப₃ரங்களை (தேஹேந்திரியங்களை) என்ன செய்தார்கள்? எனில்: (வழிநின்ற ஐம்பூதம் ஐந்தும் அகத்தடக்கி) அவனை அடையத்தடையாயிருக்கும் ஐந்து பூதங்களாலான சரீரத்தையும், மெய்வாய்கண்மூக்குச்செவிகளாகிற ஐந்து இந்திரியங்களையும் சப்தம் முதலான வெளிவிஷயங்களில் சென்று மேயாமல், தம் ஆத்மாவிலும், அந்தராத்மாவிலும் சென்று ஈடுபடும்படி அடக்கினார்கள் என்கை. தடைகளைப் போக்கின அளவேயோ? எனில்: (ஆர்வமாய்) அவனை அடைவதற்கு உறுப்பான ஆர்வமே வடிவெடுத்தவர்களானார்கள். (உந்திப்படியமரர்) அந்த ஆர்வத்தாலே 'நான் முந்தி நான் முந்தி' என்று ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு வந்து வணங்கும் பிரமன் முதலிய தேவர்கள். (படி அமரர்) வணங்கும் தேவர்கள். (படி அமரர்

களாஶ்ரயிக்கத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற வன். (பண்டபரர்க்கீந்த) நித்யஸூரிகளுக்குப் பரிசில் கொடுத்தது. படி-பூ₄மி. (படியமரர் வாழும்) பூமியில் ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுகிற திருமலை. 26.

---

கொருவர் முற்கோலி வந்து ஆஶ்ரயிக்கும்படி ப்₃ரஹ்மாதி₃ தே₃வர்களுக்காகத் திருபாற்கடலில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன், ''यत्र पूर्वे साध्याः सन्ति देवाः'' (யத்ர பூர்வே ஸாத்₄யா: ஸந்தி தே₃வா:) என்னும்படி முற்பாடரான நித்யஸூரிகளுக்கு ஸர்வஸ்வதா₃னம் பண்ணுவாரைப் போலே கொடுத்தருளிற்று, பூ₄ஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுப₄வித்து அடிமை செய்துவாழுகிற திருமலை. முன்பு நித்யஸூரிகளுக்குக் கொடுத்தது என்றுமாம். 26.

---

வேலையான்) அந்த ப்ரஹ்மாதி தேவர்களுக்காகத் திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன். வேலை—கடல்; இங்கு திருப்பாற்கடல்.(பண்டமரர்க்கீந்த)''யத்ர பூர்வே ஸாத்₄யா: ஸந்தி தே₃வா:'' [பு-ஸூ][எந்தப் பரமபதத்தில் பழையவர்களாய் ப்ராப்யர்களான நித்யஸூரிகள் எழுந்தருளியிருக்கிறார்களோ.] என்கிற படியே பழையவர்களான நித்யஸூரிகளுக்கு ஸர்வஸ்வதானம் பண்ணுவாரைப் போலே கொடுத்தது. (பண்டு அமரர்) பழையரான நித்ய ஸூரிகள். 'பண்டு ஈந்த' என்று கூட்டி, முன்பு நித்யஸூரிகளுக்குக் கொடுத்தது என்றும் பொருள் கொள்ளலாம். கொடுத்தது யாதெனில்: (படியமரர் வாழும் பதி) இவ்வுலகிலுள்ள தேவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுபவித்து அடிமை செய்து வாழ்கிற திருமலையே ஸர்வேச்வரன் நித்யஸூரிகளுக்குக் கொடுத்த பரிசு என்கிறது. பரமபதத்தில் ஸௌலப்ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய காருண்யாதி குணங்களை அநுபவிக்க இடமில்லையாகையால், நித்யஸூரிகள் குறைபட்டிருப்பர்கள். அக்குறைதீர அக்குணங்கள் வெள்ளமிடும் திருமலையை அவர்களுக்குப் பரிசாகக் கொடுக்கிறான் ஸர்வேஶ்வரன். அவர்களும் பெருப்பேறு பெற்றுக்களிக்கிறார்கள் என்று கருத்து. ''மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான்'' [அமலனாதி-3] ''தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு'' [நான் திருவ-45] ''கண்ணா வான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட

27. பதியமைந்து நாடிப் பருத்தெழுந்த சிந்தை
மதியுரிஞ்சி வான்முகடு நோக்கி—கதிமிகுத்தங்
கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே
மால்தேடி யோடும் மனம்.

பதி—திருமலைத் திருப்பதியிலே, அமைந்து—பொருந்தி நின்று, நாடி—ஆராய்ந்து, பருத்து எழுந்த சிந்தை—மிகவும் வளர்ந்து மேற்கிளர்ந்த மனோரதத்தையுடையதாய், மதி உரிஞ்சி—சந்திரபதத்தையும் கடந்து, வான் முகடு நோக்கி-(அப்பால்) அண்ட முகட்டையும் பார்த்துவிட்டு, (அங்கும் நில்லாமல்) மால் தேடி—பரமபதநாதனைத் தேடிக்கொண்டு, கதி மிகுத்து ஓடும்—விரைவுமிகுந்து செல்லுகின்ற, மனம்-என்னெஞ்சமானது, அம் கோல் தேடி ஓடும்—அழகிய கொள் கொம்பைத் தேடிக்கொண்டு பரவிச்செல்லுகின்ற, கொழுந்து அது போன்றது-கொடியை ஒத்திராநின்றது.

பெரி அவ:-(பதியமைந்து நாடி) கீழ் திருமலையில் நின்ற படியை அநுஸந்தித்தார். அங்கு நினைத்த பரிமாற்றங் கிடையாமையாலே நினைத்தபடி பரிமாறலாம் பரம பதத்திலிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடாநின்றது என்னெஞ்சு என்கிறார்.

வ்யா:—(பதியமைந்தித்யாதி₃) திருமலையிலே பொருந்தி ஆராய்ந்து விஸ்த்ருதமாய்க் கிளர்ந்த மநோரத₂த்தை

---

அவ:-இப்படி திருமலையிலே நிலையை அநுஸந்தி₄த்தவர் அங்கு நினைத்த பரிமாற்றம் பெருமையாலே, நினைத்தபடி பரிமாறலாம் பரமபதத்திலிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடா நின்றது என் நெஞ்சு என்கிறார்.

---

விண்ணோர் வெற்பனே!" [திருவாய் 1-8-3] என்று மற்றையாழ்வார்களும் இக்கருத்தைக் காட்டியருளினார்கள். 'படி.' என்னும் சொல் உலகைக் குறிக்குமாகையாலே, இங்கு படியமரர் என்னும் சொல் இவ்வுலகிலுள்ள தே₃வதுல்யரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் குறிக்கிறது. (பதி) என்றது சென்ற பாசுரத்தில் ப்ரஸ்துதமான திருமலையைக் காட்டுகிறது.

யுடைத்தாய். (மதியுரிஞ்சி) சந்த்ரனைக்கடந்து. (வான் முகடு நோக்கி) அண்டபித்தியை நோக்கி. (மால் தேடி யோடும் மனம்) கரைகட்டாக்காவேரிபோலே ஸர்வாதிகனை ஸர்வேஶ்வரனைத் தேடியோடாநின்ற நெஞ்சு.

---

உரை:— திருமலையாகிற ஸ்தானத்திலே வேரூன்றி நின்று, அபிநிவேஶம் தோற்ற 'எங்கே எங்கே' என்று தேடிக்கொண்டு, ஶதஶாகமாகப் பணைத்துக் கிளம்பின மநோரதத்தையுடைத்தாய், சந்த்ரபதத்தையும் உரோசிக் கொண்டு அவ்வருகுபட்டு, அண்டபித்தியிலே செல்லக் கடாக்ஷித்து, ஸமஸ்தகல்யாண குணபரிபூர்ணனைக்கொண்டு பரமபதத்திலே தன் மேன்மை தோற்ற எழுந்தருளி யிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடி விட்டவிடத்தில் விடாதே பற்றிச் செல்லுகிற என்னுடைய நெஞ்சானது

---

அவ:—சென்ற பாசுரத்தில் திருமலையில் நின்ற நிலையை அநுஸந்தித்தார். அங்கு தான் நினைத்தபடி அனுபவிக்கப்பெறுமை யாலே, நினைத்தபடி அனுபவிக்கக்கூடிய பரமபதத்திலிருக்கும் பரம பதநாதனைத் தேடாநின்றது என்நெஞ்சு என்கிறார்.

வ்யா:—(பதி அமைந்து) திருமலையாகிற திவ்யதேசத்திலே பொருந்தி நின்று. (நாடி) பகவானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஆராய்ந்து. தன் ஆர்வமிகுதி தோற்ற 'எங்கே எங்கே' என்று அவனைத் தேடிக்கொண்டு என்றுமாம். (பருத்து எழுந்த சிந்தை) ஒன்று பத்து நூறுயிரமாகப் பெருகி, எங்கும் வியாபித்து நிறைந்து, மேலே கிளம்பிய மநோரதத்தை உடைய தாய். (மதி உரிஞ்சி) சந்திரனையும் உரசிக்கொண்டு கடந்து. (வான் முகடு நோக்கி) அண்டச் சுவரையும் அடையப் பாரித்துக் கொண்டு. (மால் தேடி ஓடும் மனம்) எல்லாக்கல்யாண குணங்களாலும் நிறைவுபெற்றவனைப் பரமபதத்திலே தன் மேன்மைதோற்ற எழுந்தருளியிருக்கும் ஸர்வேஶ்வரனைத் தேடித் தொடர்ந்து விடாது பற்றிச் செல்லும் என் நெஞ்சானது.

(கதிமிகுத்தித்யாதி₃) வேகத்தையுடைத்தாய், அழகியதோர் கொம்பைத் தேடாநின்ற கொடி போன்றிருந்தது. ''கதிர்'' என்று பாடமான போது ஒளியையுடைத்தான கொடி. 27.

28. மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் மற்றும்
நினைப்பரிய நீளரங்கத் துள்ளான்—எனைப்பலரும்
தேவாதி தேவ னெனப்படுவான் முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன்.

எனை பலரும்—கணக்கில்லாத வைதிகபுருஷர், வேத புருஷன் ஆகிய அனைவராலும், தேவாதி தேவன் எனப் படுவான் — தேவர்கட்கும் தேவனென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படாநிற்பவனும், மா கடலான்—பரந்த திருப்பாற்

---

க₃மநவைஶக்₄ர்யத்தை உடைத்தாய்க்கொண்டு, அழகிய கொம்பைத்தேடிப் பரந்து செல்லுகிற கொழுந்துபோலேயிரா நின்றது. * மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகம் எண்ணுமாபோலே. 27.

---

மால்—பெருமைமிக்கவனான பரமபதநாதன். (மால் தேடி ஓடும் மனம்) அரங்கனைத் தேடி ஓடும் கரைகட்டாக்காவேரிபோலே, பெரியோனான பரமபதநாதனைத் தேடி ஓடும் நெஞ்சு. இந்த நெஞ்சுக்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறார் யேலே: (கதி மிகுத்து) மிகுந்த வேகத்தையுடையதாய். 'கதிர் மிகுத்து' என்று பாடமான போது 'ஒளி மிகுந்ததான கொடி' என்று பொருள்படும். (அம் கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே) அழகிய கொள் கொம்பைத் தேடிப் பரந்து செல்கின்ற கொடிபோலே இரா நின்றது ''மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும் இராப்பகல் இன்றியே'' [திருவாய் 9-8-7] என்றாப்போலே, என் மனம் பரமபதநாதனைக் காண்பதற்கு அதிதீவ்ரமாக ஆசைப்படா நிற்கிறது என்று கருத்து. கொடியானது அழகிய கொள்கொம் பைத் தேடி மேல் நோக்கி விரைந்து செல்வதுபோலே, மன மானது அழகியானான ஸர்வேஶ்வரனைத் தேடிப் பரமபதத்தளவும் விரைந்து செல்கின்றது என்பது பாட்டின் திரண்ட பொருள். 27.

கடலிலே பள்ளிகொண்டிருப்பவனும், முன் ஒரு நாள்—முன்பொரு காலத்தில் (ஸ்ரீகிருஷ்ணனாயவதரித்தபோது) மா வாய் பிளந்த —குதிரையுருக்கொண்டு வந்த கேசியின் வாயைக் கிழித்த, மகன்-சிறு பிள்ளையானவனும், மற்றும்-பின்னும், வேங்கடத்தான் – திருமலையிலே (ஸர்வ ஸுலப₄னாய்க்கொண்டு) எழுந்தருளி நிற்பவனும், நினைப்பு அரிய நீள் அரங்கத்து உள்ளான்-நினைப்பதற்கும் ஒண்ணாத இனிமை மிக்கிருந்துள்ள கோயிலிலே பள்ளிகொள்பவனுமானவன், மனத்து உள்ளான்-என் மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணா நின்றான்.

பெரி அவ:—(மனத்துள்ளான்) இவர் அவன் பிரியாத நிலத்தை விரும் பப்புக்கவாறே அவன் இவருடைய மநஸ்ஸையே விரும் பா நின்றானென் கிறது.

வ்யா:—(எனைப்பலருந் தேவாதி தேவனெனப்படுவான்) விவக்ஷித ரெல்லாம் * அயர்வறுமமரர்களதிபதியென்ன ப்ர

அவ:— தன் திருவுள்ளம் இப்படி அபி₄நிவேஶித்த வாறே, அவனும் அத்யபி₄நிவிஷ்டனாய்க்கொண்டு, கோயில் திருமலை முதலான தன் இருப்பிடங்களை உபேக்ஷித்துத் தன் திருவுள்ளத்தே வந்து புகுந்தான் என்கிறார்.

உரை:— அஸங்க்₂யாதரான வேத₃வைதி₃கபுருஷர்கள் பலரும், 'நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான பெரிய மேன்

28. அவ:-இவருடைய மனமானது அவன் நித்யவாஸம் செய்யும் பரமபதத்தைத்தேடிப் பெருத்த ஆசையோடே ஓடப்புக்கவுடன், அவனும் அதனில் பெரிய அவாவோடே பரமபதம், கோயில், திருமலை முதலான எல்லாவிடங்களையும் உபேக்ஷித்து இவருடைய மனத்தைத் தேடி ஓடிவந்தான் என்கிறார்.

வ்யா: -(எனைப்பலரும் தேவாதிதேவன் எனப்படுவான்) அளவிட முடியாத வைதிகபுருஷர்களும், வேத₃புருஷனுமான அறிவாளிகள் அனைவராலும், 'ஸாத்₄யதே₃வர்களான நித்யஸூரிகளுக்கும்

ஸித்₃த₄னவன், ஜக₃த்₃ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து க்ருஷ்ணனாய் அவதரித்து விரோதி₄ நிரஸனம் பண்ணி, வருவதுபோவதாக வொண்ணாதென்று திருமலை

---

மையை உடையவன்' என்று சொல்லப்படாநிற்பானாய், ஜக₃த்₃ரக்ஷணார்த்த₂மாக அங்கு நின்றும் வந்து, பரப்பை யுடைத்தான திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டருளா நிற்பானாய், முன்பே ஒரு நாளிலே க்ருஷ்ணனாய் வந்து

---

நாதனாயிருக்கும் பெரிய மேன்மையை உடையவன்' என்று கொண்டாடப்படும் பரமபதநாதன். ''யத்ர பூர்வே ஸாத்₄யா: ஸந்தி தே₃வா:''[பு-ஸூ][எந்தப் பரமபதத்தில் ஸாத்₄ய (ப்ராப்ய) தேவர்கள் எனப்படும் நித்யஸூரிகள் வாழ்கிறார்களோ] ''யோ தே₃வேப்₄ய ஆதபதி, யோ தே₃வாநாம் புரோ ஹித:'' [பு-ஸூ] [எவன் தேவர்களான நித்யஸூரிகளுக்காகவே பிரகாசிக்கிறானோ, எவன் அவர்களுக்கு அநாதிகாலமாக நன்மையைச் செய்கிறானோ] ''ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:'' [வி-ஸூ][நித்ய ஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்] என்று வேதங்களும், ''அயர்வறும் அமரர்கள் அதிபதியவனவன்'' [திருவாய் 1-1-1] என்று வைதிகோத்தமர்களும் கோஷிக்கிறார்களன்றோ. (மாகடலான்) ''த்ரிபாதூ₃ர்த்₄வ உதை₃த் புருஷ: பாதே₃ாஸ்யேஹாப₄வாத் புந:'' [பு-ஸூ][மூன்று வியூஹங்களையுடைய பரவாஸுதேவன் ஸங்கல்பித்தான். அவனுடைய ஒரு வியூஹமான அநிருத்தன், இவ்வுலகில் மறுபடியும் க்ஷீராப்திநாதனாக அவதரித்தான்.]'அம்ப₄ஸ்யபாரே'' ''யமந்தஸ் ஸமுத்₃ரே கவயோ வயந்தி'' 'ஸமுத்₃ரேந்தம் விஶ்வஶம்பு₄வம்'[தை-நா] [உலகின் நன்மையின் பொருட்டுக் கடலிலே கண்வளருமவன்] என்கிறபடியே பிரமன் முதலானோரின் குறை கேட்டு உலகை ரக்ஷிப்பதற்காகப் பரமபதத்தினின்றும் வந்து பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன்.(முன்னொரு நாள் மாவாய் பிளந்த மகன்) அங்கு நின்றும் வந்து முன்னொருநாள் கண்ணனாய் அவதரித்து, குதிரையுருக்கொண்டு வந்த கேசி என்னும் அசுரனின் வாயை விளையாட்டாகப் பிளந்த சிறுபிள்ளை. ''ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாநஶநே அபி₄'' [பு-ஸூ] [அதன் பிறகு ஸகல ஜீவராசிகளின் பொருட்டு அவதாரம் செய்வதன் மூலம் வியாபித்தான்.] என்கிற விப₄வாவதாரங்கள் அனைத்துக்கும் இது உபலக்ஷணம். இனி, இப்படி வருவது போவதாகவொண்ணாது

யிலே வந்து நின்ற தேவாதி தேவன், என்றும் பரிச்சேதிக்கப் போகாத பரப்பையுடைத்தான கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறவன். என்நெஞ்சை விரும்பிப்புறம் புபோகிறிலன்.28

---

அவதரித்துக் கேசிவாயை அநாயாஸேந பிளந்து பொகட்ட சிறுபிள்ளையாய், அதுக்கு மேலே நினைக்கவரிதான நீர்மையேற்றத்தை உடையனாய்க்கொண்டு. போக்யதை மிக்கிருக்கிற கோயிலிலே, 'ஸம்ஸாரிகளை ரக்ஷித்தல்லது பேரேன்' என்று கண்வளர்ந்தருளுமவனாய், திருமலையிலே ஸர்வ ஸுலபனாய்க்கொண்டு எழுந்தருளிநிற்கிறவன், என்னைப்

---

என்று ஸ்தாவரப்ரதிஷ்டையாய் நிற்கும் அர்ச்சாவதாரங்களைச் சொல்லுகிறது; (வேங்கடத்தான்) ''மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான்'' [அமலனாதி 3] ''கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்'' [நான் திருவ 47] என்கிறபடியே எத்தனையேனும் தாழ்ந்தவர்க்கும் எளியனாய்த் திருமலையில் நிற்கின்றவன். (நினைப்பரிய நீளரங்கத்துள்ளான்] திருவேங்கடமுடையான் நின்ற திருக்கோலமாகையாலே எங்கேயோ புறப்படும் அவஸரம் போலேயிருக்கும். அப்படியல்லாமல் கோயிலில் கிடந்த திருக்கோலமாகையாலும், வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை, கொண்டல் மீதணவும் சோலை, குயிலினம் கூவும் சோலையாகையாலே என்றும் அளவிடமுடியாத இனிமையுடைய சோலைப்பரப்பையுடைய தேசமாகையாலும் இதைவிட்டு என்றுமே எழுந்திருக்கமாட்டான் என்று தோற்றியிருக்கும். அப்படிப்பட்ட கோயிலிலே 'ஸம்ஸாரிகள் அனைவரையும் ரக்ஷித்தாலல்லது பேரேன்' என்று கண்வளர்ந்தருளுமவன். (நினைப்பரிய) அரங்கத்தின் இனிமை அளவிடவொண்ணாதது என்றுமாம்; அரங்கத்துள்ளானின் நீர்மை அளவிடவொண்ணாதது என்றுமாம். (மனத்துள்ளான்) என்னைப்பெறுவதற்காக முன்பு தான் விரும்பின பரமபதம், வ்யூஹ ஸ்தலமான திருப்பாற்கடல், விபவஸ்தலங்கள், அர்ச்சாஸ்தலங்கள் ஆகிய எல்லாவிடங்களையும் உபேக்ஷித்து, என் நெஞ்சைப் பெற்ற இப்போது அந்த நெஞ்சைக்காட்டிலும் மிகுந்த அவாவுடன் அந் நெஞ்சிலே நித்யவாஸம் பண்ணுநின்றான். மற்றவிடங்களை நெஞ்சமாகிற பெருங்கோயிலைப் பெறுவதற்குமுன் எம்பெருமான் தங்கியிருக்கும் இளங்கோயில்கள் (பாலாலயங்கள்) என்று கூறி,

29. மகனாகக் கொண்டெடுத்தாள் மாண்பாய கொங்கை
அகனார வுண்பனென் றுண்டு — மகனைத்தாய்
தேறாத வண்ணம் திருத்தினாய் தென்னிலங்கை
நீறாக வெய்தழித்தாய் நீ.

---

பெறுகைக்காக முன்பு விரும்பின அவ்வவ ஸ்தலங்களை உபேக்ஷித்து, இப்போது அத்யபிநிவிஷ்டனாய்க்கொண்டு என் மனஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணாநின்றான். 28.

---

''உளங்கோயில் உள்ளம் வைத்துள்ளினேன் வெள்ளத்து
இளங்கோயில் கைவிடேல் என்று'' [54] என்று

இவ்வாழ்வாரே 'அந்த பாலாலயங்களைக் கைவிட வேண்டாம்' என்று எம்பெருமானைப் பிரார்த்திக்கப் போகிறாரன்றோ.

''அனந்தன்பாலும்கருடன் பாலும் ஐதுநொய்தாகவைத்தென்
மனந்தன்னுள்ளே வந்து வைகிவாழச் செய்தாய் எம்பிரான்''

''பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ''

''வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும்
இடவகைகள் இகழ்ந்திட்டு என்பால் இடவகை
கொண்டனையே''

[பெரியாழ்திரு 5-4-8, 9, 10]

என்று பெரியாழ்வாரும்

''கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம் — வெல்ல
நெடியான் நிறம் கரியான் உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத்தகம்'' [பெரியதிருவ 68]

என்று நம்மாழ்வாரும் இப்பாசுரத்தை விவரித்தனரன்றோ. பாட க்ரமத்தைக்காட்டிலும், அர்த்தக்ரமம் பலமுடையதாகையாலே ''எனைப்பலரும் தேவாதிதேவன் எனப்படுவான், மாகடலான், முன்னொரு நாள் மாவாய் பிளந்த மகன், வேங்கடத்தான், மற்றும் நினைப்பரிய நீளரங்கத்துள்ளான் மனத்துள்ளான்'' என்று பரவ்யூஹாதிக்ரமத்திலே கூட்டிப்பொருள் கொள்ளப்பட்டது. 28.

தென் இலங்கை—அழகிய லங்காபுரி, நீறு ஆக-சாம்பலாகியொழியும்படி, எய்து—அம்புகளை எய்து, அழித்தாய்—ஒழித்தவனே!. நீ— ; , மகன் ஆக கொண்டு எடுத்தாள்—உன்னைப் புத்திர பாவனைசெய்து (பரிவுகாட்டி முலை கொடுக்க) எடுத்துக்கொண்ட பூதனையினுடைய. மாண்பு ஆய கொங்கை—அழகான முலை, அகன் ஆர உண்பன் என்று உண்டு — வயிறார உண்ணக்கடவேனென்று சொல்லி (பாலோடு அவளுயிரையும்) குடித்து, மகனை—புத்ரனை உன் விஷயத்திலே, தாய்-உனது தாயாகிய யசோதை, தேருத வண்ணம்-நம்பிக்கையற்றிருக்கும்படி, திருந்திஞய்-செய்துவிட்டாய்.

பெரி அவ:—(மகனுக) க்ருஷ்ணுவதாரம் ப்ரஸ்துதமாகையாலே அதிலே சுழியாறுபடுகிறுர்.

வ்யா:—(மகனித்யாதி) பிள்ளையாக எடுத்து; தாயார் ஓசழக்காக வெடுக்குமாபோலே எடுத்து; நஞ்சாலே நிறைந்தத்தைப் பாலாலே நிறைந்ததாகப்பண்ணி அத்தாலே தூர்ஈ

---

அவ:—'மாவாய் பிளந்த மகன்' என்று ப்ரஸ்துதமான க்ருஷ்ணுவதாரத்திலே கால்தாழ்ந்து சுழியாறுபடுகிறுர்.

உரை:— பக்வமான தசையிலே கட்டளைப்பட்ட லங்கையை பஸ்மஸாத்தாக மநஸ்ஸுக்கு ஏகாந்தமான

---

29. அவ:— 'மாவாய் பிளந்த மகன்' என்று ஸ்ரீக்ருஷ்ணுவதாரத்தைப் பற்றிய பேச்சு வந்தவுடன், அனைவரையும் அகப்படுத்தும் சுழல்களையுடைய பெருக்காறுபோன்ற அவ்வவதாரத்திலே ஆழங்காற்படுகிறுர் இப்பாசுரத்திலே.

வ்யா:—(மகனுகக் கொண்டெடுத்தாள்) யசோதைப் பிராட்டி தன் மகனிடத்தில் காட்டும் சூதற்ற பரிவைத் தானும் காட்டி, அவள் பிள்ளையை எடுப்பதுபோலே தானும் அதிமிருதுவாக எடுத்த (வஞ்சனையே வடிவானவளான) பூதனையினுடைய. (மாண்பாய கொங்கை) உண்மையில் நஞ்சாலே நிறைந்த முலையைத் தன்

நீயமான கொங்கையை, (அகனித்யாதி₃) அவள் நிலையிறே யிவனது. அவள் முலைகொடுத்தல்லது த₄ரியாளாய் நின்முற் போலே இவனுமுண்டல்லது த₄ரியாளுய் வயிருரவுண்ப னென்றுண்டு. (மகனித்யாதி₃) மகனென்றுலும் தாயென் ருலும் க்ருஷ்ணன் பக்கலிலும்வசோதைப்பிராட்டிபக்கலிலும் நிற்கும்; புத்ரஸ்நேஹமென்ருல் சக்ரவர்த்தி பக்கலிலே கிடக்கு மாபோலே. அவனும் விரும்பி முலையுண்ணுநிற்க, இவளும் விரும்பி முலைகொடா நிற்கிலும், பூதனைமடியிலேயிருந்தா ளுகக்கொண்டு துணுக்குத்துணுக்கென்னும்படியாகத் தாயா

---

திருவில்லாலே திருச்சரங்களை நடத்தி முடித்துப் பொகட்ட வனே! இப்படியிருக்கிற நீ பருவம் நிரம்புவதுக்கு முன்னே யஶோதைப்பிராட்டியைப்போலே புத்ரனைகவே புரையற ஸ்நேஹித்துக்கொண்டு, பரிவுதோற்ற ஓசழக்காகத் தூக்கி யெடுத்த பூதனையுடைய பாலின் க₄னத்தாலே விம்மி ஒளி விடுகிற அழகிய முலையை 'வயிறு நிறையத்தக்கதாக

---

மாயையாலே பாலாலே நிறைந்தது போலே ஒளிவிடச்செய்து கொண்டு வந்தாள் அவள். அப்படிப்பட்ட அவளுடைய (நஞ்சு கலந்த) பாலின் கனத்தாலே விம்மி ஒளிவிடும் முலையை. (அகனுர உண்பன் என்று) 'வயிருர உண்பேன்' என்று ஆதரந்தோற்ற உண்டான். அகன்—வயிறு. அவள் முலைகொடுத்தல்லது உயிர் தரிக்கமாட்டாதவள்போலே நின்ருற்போலே இவனும் முலை யுண்டாலல்லது உயிர்தரியாதவன்போலே 'வயிருர உண்பேன்' என்னும் அபி₄நிவேஶம் முகத்திலே தோற்ற அமுது செய்தான். (உண்டு) நஞ்சுகலந்த பாலோடே, அவளுடைய உயிரும் போம்படி உண்டு. அவளுடைய தீயநினைவை அவளோடே போம்படி உண்டு. (மகனைத்தாய் தேருத வண்ணம் திருத்தினுய்) புத்ரனை உன்னைத் தாயான யசோதைப்பிராட்டி நம்பமுடியாதபடி செய்தாய். தன் மடியிலே வைத்துத் தான் பால்கொடுக்கும்போது, அவனும் விரும்பிப் பால்குடிக்கத்தானும் விரும்பிப் பால் கொடுத்தபோதிலும், 'பூதனையின் மடியிலே விஷப்பால் குடிக்கிருனே' என்று அவள் துணுக்குத்துணுக்கென்று அஸ்த₂ானே ப₄யஶங்கை கொள்ளும்படி செய்துவிட்டாய். (மகனைத்தாய்) புத்ரஸ்நேஹத்தின் எல்லைநிலம்

ரைத் தொட்டுவிட்டாய். (தென்னிலங்கை) ஒரு தாயாரை மார்பிலே கையைவைத்து உறங்கும்படி பண்ணின நீ. ''कीर्तिभूतां पताकां यो लोके भ्रमयति प्रभुः। किं नाम दुर्लभं तस्य'' (கீர்த்திபூ4தாம் பதாகாம் யோ லோகே ப்4ரமயதி ப்ரபு4:|கிந்நாம து3ர்லப4ம் தஸ்ய) என்று சொல்லும்படி பண்ணின நீ. பருவம் நிரம்பி ஆயுதா4ப்4யாஸங்களும் பண்ணிச்செய்தாய். பருவம் நிரம்புவதற்கு முன்னே இச்செயலைச் செய்தாயென்று. 29.

---

உண்பன்' என்று அபி4நிவேசம் தோற்றப் பாலோடே ப்ராணனும் போம்படி அமுதுசெய்து. புத்ரனை உன்னைத் தாயாரான யசோதைப்பிராட்டிவிச்வஸியாதே துணுக்குத் துணுக்கென்று வயிறுமறுகும்படி சிக்ஷித்துவிட்டாய். 29.

---

தசரதசக்ரவர்த்தியாயிருப்பது போலே, மாத்ருஸ்நேஹத்துக்கும், புத்ரஸ்நேஹத்துக்கும் எல்லைநிலமாயிருப்பவர்கள் கண்ணனும் யசோதையுமாகையாலே, அவர்களை 'மகன்' என்றும், 'தாய்' என்றும் நிர்த்தேசிக்கிறார். முன் அவதாரத்திலே தன் செயல்களாலே தாய்மார்களை மார்பிலே கைவைத்து உறங்கும்படி விச்வஸிக்கச் செய்த நீயன்றோ இவ்வவதாரத்திலே இச்செயலாலே இத்தாயை இப்பாடு படுத்தினாய் என்கிறார் மேலே. (தென்னிலங்கை நீறாக எய்தழித்தாய் நீ) ஒழுங்கு முறையில் அமைக்கப்பெற்ற அழகிய இலங்கையைச் சாம்பலாகும்படி, தன் நியமனப்படி நடக்கும் திருச்சார்ங்கத்தாலே அம்புகளை எய்து அழித்தவனான நீ. (தென்) ஒழுங்கு முறையையும், அழகையும் குறிக்கும். ''கீர்த்திபூ4தாம் பதாகாம் யோ லோகே ப்4ரமயதி ப்ரபு4: || கிந்நாம து3ர்லப4ம் தஸ்ய'' [ரா-அ 44-7] [புகழாகிற கொடியை ஈச்வரனாகிற எந்த ராமன் உலகிலே பறக்கவிடுகிறானோ, அவனுக்கு எதுதான் அடையவரியது?] என்று ராமாவதாரத்தில் பருவம் நிரம்பினபிறகு ஆயுதம் தாங்கிவீரச்செயல்களைச் செய்தானாகையாலே ஸுமித்ரை முதலான தாய்மார் ராமனிடம் விச்வஸித்திருந்தார்கள். இவன் பருவம் நிரம்புவதற்கு முன்னமே செய்த ஸாகஸச்செயலாகையாலே இவள் 'என் வருமோ?' என்று அஸ்தா2னே பயப்படுகின்றாள் என்று கருத்து. 29.

30. நீயன் றுலகளந்தாய் நீண்ட திருமாலே
நீயன் றுலகிடந்தா யென்பரால் — நீயன்று
காரோத முன்கடைந்து பின்னடைத்தாய் மாகடலை,
பேரோத மேனிப் பிரான்.

பேர் ஓதம் மேனி பிரான் — பெரிய கடல்போன்ற திருமேனியையுடைய உபகாரகனே!, நீண்ட திருமாலே — நினைப்பதற்கு அரிய பெருமையுடைய திருமாலே!, நீ — இப்படிப்பட்ட நீ, அன்று — முன்பொருகால், உலகு — உலகங்களை, அளந்தாய்-(திரிவிக்கிரமனாகி) அளந்துகொண்டாய் (என்றும், நீ — நீ அன்று — மற்றுமொரு காலத்தில், உலகு — பூமியை, இடந்தாய் — (மஹாவராஹமாகி) அண்டபித்தியில் நின்றும் குத்தி எடுத்தாய் (என்றும்), நீ அன்று —, கார் ஓதம் முன் கடைந்து — கரிய கடலை முன்னே கடைந்தருளி, மா கடலை — (அதுபோன்ற) பெரியதொரு கடலை, பின் — பிறகு (ராமாவதாரத்திலே) அடைத்தாய் — அணைகட்டி அடைத்தாய் (என்றும்), என்பர்-(மஹர்ஷிகள்) கூறுகின்றனர்; ஆல் — இவையும் சில ஆச்சரியச்செயல்களே!

பெரி அவ : (நீயன்று) எல்லார் தலையிலும், ஒக்கத் திருவடிகளைவைத்த அவதாரத்தைச் சொல்லுகிறது.

---

அவ :— இப்படி க்ருஷ்ணவிஷயமும், ராமவிஷயமும் அநுஸந்தித்த ப்ரஸங்கத்திலே, அவற்றோடே சேர்ந்த அவதாரங்களையும், பல சேஷ்டிதங்களையும் அநுஸந்தித்து ப்ரீதராகிறார்.

---

30. அவ:- சென்ற பாசுரத்தில் கிருஷ்ணனைப்பற்றியும், ராமனைப்பற்றியும் பேச நேர்ந்தபடியாலே, அவ்வவதாரங்களோடு பலபடியில் ஸாம்யமுள்ள மற்றையவதாரங்களையும் அந்தந்த அவதாரங்களிற்செய்த செயல்களையும் அநுஸந்தித்து இனியராகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நீண்ட திருமாலே நீயன்றுலகளந்தாய்) அபரிச்சேத₂்₃யனும் ஶ்ரிய:பதியான நீ பெருதது பெற்றுப்போலே பூ₄மியையளந்தாய்; (நீயன்றித்யாதி₃) அதுக்கடியாக பூமியையிடந்தாய். (பேரோதமேனிப்பிரான் நீ அன்றுகாரோத முன்கடைந்து

---

உரை:— பெரிய கடல்போலே இருண்டு குளிர்ந்த திருமேனியையுடையனும், அவ்வழகை முற்றூட்டாக என்னை அனுப₄விப்பித்த உபகாரகனும், அபரிச்சேத₂்₃யவைப₄வனான ஶ்ரிய:பதியே! இப்படி ஸர்வாதி₄கனான நீ ஆஶ்ரிதனான இந்த்₃ரன் ஐஶ்வர்யத்தையிழந்து கண்ணும் கண்ணீருமாய்த் திருவடிகளிலே வந்து விழுந்தவன்று, மஹாப₃லிபக்கலிலே அர்த்தி₂யாய்ச் சென்று இரந்து ஜக₃த்தைத் திருவடிகளாலே அளந்துகொண்டாய் என்றும், பூ₄மியானது ப்ரளயத்திலே

---

வ்யா:— (நீயன்றுலகளந்தாய்) உன் அடியானான இந்திரன் தன் செல்வத்தையெல்லாம் மாவலியிடம் பறிகொடுத்துக் கண்ணும் கண்ணீருமாய்த் திருவடிகளிலே வந்து விழுந்தவன்று, மாவலியிடம் உனக்குத் தகாத யாசகவடிவை எடுத்துக்கொண்டு சென்று யாசித்து மூவடிமண்ணைப் பெருதது பெற்றுப்போலே பெற்று உலகைத் திருவடிகளாலே அளந்துகொண்டாய். எப்படிப் பட்டவன் இச்செயலைச் செய்தான்? எனில்: (நீண்ட திருமாலே) அளவிடவொண்ணாத ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திப் பெருமைகளை உடையவனும், அனைவர்க்கும் தன் கடைக்கண்நோக்காலே எல்லாச் செல்வங்களையும் அருளும் பெரிய பிராட்டியார்க்குப் பதியாயிருப்பவனன்றோ இவ்விழிதொழிலைச் செய்தான் என்கை. அளவிடவொண்ணாத ரக்ஷகத்வத்தையும் ஸௌலப்₄யஸௌஶீல்ய வாத்ஸல்யாதி₃கு₃ணங்களையும், புருஷகாரபூ₄தையான பிராட்டியோடு நித்ய யோக₃த்தையும் உடையவனுகையாலே இச்செயலைச் செய்தான் என்றுமாம். இப்படிப்பட்ட பெருமையையுடைய நீயன்றோ இந்த கு₃ணயோகத்தாலும், புருஷகாரச்சேர்த்தியாலும் உனக்குத் தகாத மற்றொரு காரியத்தையும் செய்தாய் என்கிறார் மேலே. (நீ அன்று உலகிடந்தாய்) இவ்வுலகானது ப்ரளயத்திலே அமிழ்ந்து அண்டச் சுவரிலே சென்று ஒட்டிக்கிடந்தவன்று, நீருக்கும் சேற்றுக்கும் கலங்கித்தயங்காத மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம் தேசுடையவனும், அவ்வுலகைப் பிரளயத்திலேமுழுகி, தந்தத்தாலே

மாகடலைப் பின்னடைத்தாய்) பெரிய கடல்வெள்ளம் போலே ஶ்ரமஹரமான வடிவையுடையையாய் உபகாரகனான நீ. கறுத்த நிறத்தையுடைத்தான கடலை முற்படக் கடைந்து, அது தன்னைப் பின்பு அடைப்பதும் செய்தாய். ''பேரோத மேனிப்

---

கரைந்து அண்டபி₄த்தியிலே சென்று ஒட்டினவன்று. நீருக்கும் சேற்றுக்கும் இருயாத வடிவைக்கொண்டு ரக்ஷக னான நீ அந்த பூ₄மியை ப்ரளயத்திலே முழுகி இடந் தெடுத்துக்கொண்டு ஏறினாயென்றும், துர்வாஸஶ்ஶாபத் தாலே நஷ்டஶ்ரீகராய்க்கொண்டு இந்த்₃ராதி₃கள் ஶரணம் புக்கவன்று ஸர்வஶக்தியான நீ கறுத்த நிறத்தையுடைத் தான கடலை, பிராட்டியை லபி₄க்கைக்காக முற்படக் கடைந்து, பின்பொரு காலத்திலே அவள் முகமலர்ச்சி காண்கைக்காகத் தத்ஸஜாதீயமான பெரிய கடலை அடைத்

---

குத்தியெடுத்துக்கொண்டு மேலே ஏறி பூமியைத் தன் ஸ்தானத் திலே வைத்தாய். (நீ அன்று காரோதம் முன் கடைந்து) உருத் திரனின் அம்சங்கொண்ட து₃ர்வாஸரின் சாபத்தாலே செல்வமிழந்து இந்திரன் முதலான தேவர்கள் சரணம் புகுந்தவன்று அளவிட வொண்ணாத சக்தியையுடைய நீ, பிராட்டியைப் பெறுவதற்காக முதலில் கறுத்த நிறத்தையுடைய கடலைக் கடைந்தாய். (பேரோத மேனிப்பிரான் நீ காரோதம் கடைந்து) பெரிய கடல்போலே இருண்டு குளிர்ந்த திருமேனியை உடையவனான நீ கறுத்த கடலைக் கடைந்தாய்! கடைகிறபோது ஒரு கடலை ஒரு கடல் நின்று கடைந் தாற்போலேயிருந்தது என்கை. (பின்னடைத்தாய் மாகடலை) பிராட்டியைப் பெறுகைக்காக முன்னொரு காலத்தில் கடைந்த அக்கடலைப் போன்ற மற்றொரு பெரியகடலை, ராமனாய் அவதரித்த காலத்தில் சீதையான அவளை ராவணனிடமிருந்து மீட்பதற்காகவும், புஷ்பகவிமானத்தில் திரும்பிவரும்போது காட்டி முகம் மலரச் செய்வதற்காகவும் அடைத்தருளினாய். (பேரோத மேனிப் பிரான்) பெரிய கடல் வெள்ளம் போலே கண்டார் களைப்பையாற்றும் வடிவையுடையவனாய், அவ்வடிவழகு முழுவதையும் என்னை அனுப₄ விக்கச்செய்த உபகாரகனே! நீயன்றோ இச்செயல்களைச் செய்தாய்; (என்பரால்) இப்படிச் சொல்லுகிறவர்கள் ஸாமான்யர்களன்று. உன் ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄தி சேஷ்டிதங்களை உள்ளபடி அறிய

பிரான்'' என்று கடைகிறபோது ஒருகடலை ஒருகடல் நின்று கடைந்தாற்போலேயிருக்கை.

31. பிரானென்று நாளும் பெரும்புலரி யென்றும்
குராநற் செழும்போது கொண்டு — வராகத்
தணியுருவன் பாதம் பணியுமவர் கண்டீர்
மணியுருவம் காண்பர் மகிழ்ந்து.

பிரான் என்றும்—'மஹோபகாரங்கள் பண்ணினவனே!' என்றும், பெரு புலரி என்றும்— 'இன்றே நல்விடிவு' என்றும் (கொண்டாடிக்கொண்டு), நாளும்—நாள்தோறும், நல்—மணம்மிக்க, செழு — அழகிய, குரா போது கொண்டு — குரா மரப் புஷ்பங்களைக்கொண்டு, வராகத்து அணி உருவன் பாதம்—அழகிய வராஹவுருக்கொண்ட பெருமானுடைய திருவடிகளை, பணியுமவர் கண்டீர் — வணங்குபவர்களே, மணி உருவம் — (அப்பெருமானுடைய) திவ்யமங்கள விக்ரஹத்தை, மகிழ்ந்து காண்பர்—உகப்புடன் ஸேவிப்பர்கள்.

பெரி அவ:— (பிரானென்றும்) தன்னையே வணங்கும்படி பண்ணினவனையும் வணங்குகைக்கிடான காலத்தையுங் கொண்டாடுகிறார்.

---

தருளினுயென்றும் உன் படியை அறியக்கடவ ப்ராமாணிகரான ரிஷிகள் சொல்லாநின்றார்கள். இவை சில சேஷ்டிதங்களிருக்கும்படியே! என்று வித்₃த₄ராகிறார். 30.

அவ :— இப்படி ஆபத்ஸக₂னானவன் திருவடிகளைப் புஷ்பாத்₃யுபகரணங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்குமவர்கள் அப்ராக்ருதமான அவன் திருமேனியை ப்ரீதிபூர்வகமாக அனுப₄விக்கப்பெறுவர் என்கிறார்.

---

வல்ல பரமப்ராமாணிகர்களானவ்யாஸபராஶராதி₃மஹரிஷிகளன்றோ உனக்கு இப்பெருமைகளைக் கூறுகிறார்கள். (ஆல்) 'இப்படியும் சிலசெயல்களிருக்கும் படியென்!' என்று ஆச்சர்யப்படுகிறார். 30.

வ்யா:— (நாளும் பிரானென்றும்) கைகழிந்துபோன என்னைத் தன் பக்கலிலே ஆபி₄முக்₂யம் பண்ணுவித்து ருசியைப் பிறப்பித்த உபகாரகனென்றும். (பெரும்புலரியென்றும் குராநற்செழும்போதுகொண்டு) குராவினுடைய நன்ருய்ச்

---

உரை:— இவ்வாத்மாவுக்கு வகுத்த ஶேஷியானவனே! என்றும். இதர விஷயாநுப₄வத்துக்கு உறுப்பாய்க்கொண்டு பாழே கழிகிற நாளிலே, "सुप्रभाता च मे निशा" (ஸுப்ரப₄ாதா ச மே நிஶா) என்கிறபடியே ப₄க₃வத₃நுப₄வத்துக்குயோக்₃யமாய்க்கொண்டு அடிக்கழஞ்சு பெற்றுச்செல்லுகிற பெரியதொரு நல்விடிவு உண்டாவதே! என்றும் ஆத₃ரித்துக்

---

31, அவ:— இப்படி உலகிற்கு ஆபத்து வந்துற்றபோதெல்லாம் உதவும் ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளைப் பூக்கள் முதலான ஆராத₄நோபகரணங்களைக்கொண்டு வணங்குகிறவர்கள் அப்ராக்ருதமான அவனுடைய திருமேனியை உகப்புடன் அனுப₄விக்கப் பெறுவர்கள் என்கிருர்.

வ்யா:— (நாளும் பிரான் என்றும்) ஸம்ஸாரத்திலே அநாதி₃ காலமாக அழுந்திக் கைதவறிப் போன எனக்கு தன்னிடம் ஈடுத்பாட்டைப் பிறப்பித்து, ருசியை ஏற்படுத்திய உபகாரகன் என்றும்; (நாளும் பிரான்) ஸத்தையே பிடித்து செய்யும் உபகாரங்களையெல்லாம் நினைக்கிருர். (பிரான்) இவ்வாத்மாவுக்கு இயற்கையான தலைவனுயிருப்பவன் என்றுமாம். இப்படித்தன்னையே வணங்கும்படி பண்ணின அவனைக் கொண்டாடினபின், அவனை வணங்க ஏற்றதாயமைந்த காலத்தையும் கொண்டாடுகிருர் அடுத்தபடியாக— (பெரும் புலரியென்றும்) சப்தஸ்பர்ஶரூபரஸகந்தங்களாகிற இதர விஷயங்களை அனுபவிப்பதற்கே உறுப்பாகிக்கொண்டு பாழாகக் கழிந்து வருகிற நாளிலே, "ஸுப்ரப₄ாதா ச மே நிஶா" [வி-பு 5-17-3] [எனக்கு இன்றே இரவு நன்ருக விடிந்தது] என்கிறபடியே பகவானை அனுபவிக்கத் தகுதியுடைமையாகிற பெருமையையுடைய நல்விடிவுகாலம் உண்டாவதே! என்றும் ஆதரம் தோற்றச் சொல்லிக்கொண்டு; புலரி-பொழுது புலரும் விடிவுகாலம். (குராநற்செழும்போது கொண்டு) குராமரத்தினுடைய அழகியதாய், செழு

செவ்வியையுடைத்தான பூவைக்கொண்டு. (வராகத்தித்யாதி) இன்ன புஷ்பங் கொண்டு என்னை ஆஶ்ரயிக்கவேணுமென்றிராதே, நாட்டில்புஷ்பத்துக்கு ஸஜாதீயமான வடிவையுடையவன் திருவடிகளைப் பணியுமவர்கள். (மகிழ்ந்து மணியுருவங் காண்பர்) பலத்துக்குப் பலமிறே. "सुसुखं कर्तुमव्ययं" (ஸுஸுகம் கர்த்துமவ்யயம்) என்கிறபடியே ஸாதநதஶை யிலே இனிதாயிருக்கை. 31.

---

கொண்டு. குராவினுடைய அழகிதாய் விலக்ஷணமான செவ்வியையுடைத்தான பூவை ஸம்பாதித்துக்கொண்டு வராஹஸஜாதீயமாய், அழகுதான் ஒரு வடிவு கொண்டாப் போலேயிருக்கிற திவ்யவிக்ரஹத்தையுடையவன் திருவடிகளை, பக்தநாபிமானராய் ஆஶ்ரயிக்குமவர்கள் கிடீர் நீல ரத்நம் போலே இருண்டு குளிர்ந்த வடிவழகை உகந்து கண்டு அநுபவிக்கப்பெறுவர்கள். 31.

---

மையையுடைய பூவைத் தேடியெடுத்துக்கொண்டு. (வராகத்து) நாட்டிலுள்ள மல்லிகை முதலான பூக்களைக்கொண்டே தன்னை ஆஶ்ரயிக்கவேண்டும் என்னும் நியமமில்லாமை தோற்ற, காட்டிலுள்ள குராமலரைக்கொண்டும் அர்ச்சிக்கலாம்படியான வராக வுருவை ஏற்றுக்கொண்டவன். (அணியுருவன்) அழகுதான் ஒரு வடிவுகொண்டாற்போலேயிருக்கை. (பாதம் பணியுமவர்) திருவடிகளிலே அஹங்காரமமகாரமற்று வணங்குகிறவர்கள். (அணியுருவன் பாதம் பணியுமவர் கண்டீர்) பாலே மருந்தாமாபோலே ஸம்ஸாரவியாதி தீர இவ்வழகியான் பாதத்தைக் கிடீர் பணியவேண்டுவது! பணிவதால் கிடைக்கும் பலனேதென்ன —(மணியுருவம் மகிழ்ந்து காண்பர்) நீலரத்னம் போலே இருண்டு குளிர்ந்த வடிவழகை உகப்புடன் கண்டு அனுபவிக்கப் பெறுவர்கள். (அணியுருவன் பாதம் பணியுமவர் மணியுருவம் மகிழ்ந்து காண்பர்) உலகில் சிரமமானதொரு ஸாதனத்தையனுஷ்டித்தால், ஸுகமானதொரு பலன் கிட்டுகையாலே ஸாதனத்துக்குப் பலன் என்பார்கள். இங்கே "ஸுஸுகம் கர்த்துமவ்யயம்" [கீதை 9-2] என்கிறபடியே ஸாதனதஶையோடு ஸாத்யதஶையோடு வாசியற இனிதாயிருக்கையாலே பலத்துக்குப் பலம் என்னலாம் என்பர் பெரியவாச்சான்பிள்ளை. 31.

32. மகிழ்ந்தது சிந்தை திருமாலே மற்றும்
மகிழ்ந்ததுன் பாதமே போற்றி—மகிழ்ந்த
தழலாழி சங்க மவைபாடி யாடும்
தொழிலாகம் சூழ்ந்து துணிந்து.

திருமாலே — லக்ஷ்மீபதியே! சிந்தை — என் நெஞ்சமானது, சூழ்ந்து — மநோரதித்து. துணிந்து — உறுதி கொண்டு, மகிழ்ந்தது — ஆநந்தமுற்றது; மற்றும்—நெஞ்சுக்கு அடுத்ததான வாக்கும், உன் பாதமே போற்றி—உன் திருவடிகளையே துதித்து, மகிழ்ந்தது — ஆநந்திக்கப் பெற்றது; ஆகம்—என்னுடைய தேஹமானது, அழல் — எதிரிகளின் மீது நெருப்பை உமிழ்கின்ற, ஆழி — திருவாழியையும், சங்கம் — ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், அவை—மற்றுமுள்ள திவ்யாயுதங்களையும், பாடி ஆடும் — கொண்டாடிப் பாடி ஆடுகையாகிற, தொழில் — செயலிலே, மகிழ்ந்தது— களிக்கப்பெற்றது.

பெரி அவ:— (மகிழ்ந்தது) இவ்விஷயத்தில் நீர்செய்ததென்னென்னில்; மநோவாக்காயங்கள் அங்கே ப்ரவணமாயிற்றென்கிறார்.

வ்யா;-(திருமாலே!சிந்தைசூழ்ந்து துணிந்து நின்பாதமே போற்றி மகிழ்ந்தது) என்னுடைய மநஸ்தத்வம்,மநோரதித்து,

---

அவ—இப்படி உபதேஶித்தவனந்தரம் தம்முடைய கரணங்கள் உபதேஶநிரபேக்ஷமாக அங்கே ப்ரவணமான படியை அருளிச்செய்கிறார்.

---

32. அவ:— இவ்வுபதேசப்படி நீர் பண்ணிந்தீரோ? என்ன, இவ்வுபதேசத்தை எதிர்பாராமலே தம்முடைய மநோவாக்காயங்கள் பகவத்விஷயத்திலே ஈடுபட்டிருக்கும்படியை அருளிச்செய்கிறார். "முடியானே" [3-8] என்னும் திருவாய்மொழியில் ஆழ்வாரின் கரணங்கள் பட்டபாட்டைப் படுகின்றன இவருடைய கரணங்கள் இங்கு.

அத்₄யவஸித்து, ஶ்ரிய:பதியானவனுடைய திருவடிகளைப் போற்றி மகிழ்ந்தது. (மற்றும்)என்றது-வாக்கும் என்றபடி.

---

உரை: — இச்சேர்த்தியழகாலே அநுஸந்தித்தவர்களை மகிழப்பண்ணும் ஶ்ரிய:பதியானவனே! ப்ரீதிதத்வம் புதியதுண்டறியாத என் மநஸ்ஸானது உன்னை அநுஸந்தி₄த்து ப்ரீதியுக்தமாய்த்து. "मनः पूर्वो वागुत्तरः" (மந: பூர்வோ வாகு₃த்தர:) என்னும்படி அநந்தரம் எண்ணப்படும் என் வாகி₃ந்த்₃ரியமானது ஶ்ரிய:பதியான உன்னுடைய திருவடிகளை ஏத்தி மகிழப்பெற்றது.

---

வ்யா:— (திருமாலே) பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியழகைக் கண்டால், அசேதனமான மநோவாக்காயங்களும் சேதந ஸமாதி₄யாலே ஈடுபடச் சொல்லவேணுமோ? என்று கருத்து. (சிந்தை சூழ்ந்து துணிந்து மகிழ்ந்தது) என்னுடைய மனமானது அவனை அனுப₄விக்கப் பாரித்து, உறுதிகொண்டு மகிழ்ச்சியுற்றது. (சிந்தை மகிழ்ந்தது) பகவத்விஷயத்தில் ஈடுபடுமளவும் மகிழ்ச்சியேயறியாதிருந்த என் மனம், பகவத் விஷயத்தில் ஈடுபட்டவுடன் மகிழ்ச்சி பெற்றது. அசேதனமாயினும் சேதனஸமாதி₄யாலே ஆனந்தத்தை அனுபவித்தது.(மற்றும்)"மந: பூர்வோ வாகு₃த்தர:" என்ற வேத வாக்யத்தின்படி மனத்திற்கு அடுத்தபடி செயல்படுகையாலே, மநோவாக்குகள் என்று அதற்கு அடுத்தபடியாக எண்ணத்தக்க வாக்கும். (உன் பாதமே போற்றி மகிழ்ந்தது) உன் திருவடிகளையே வாயாரத் துதித்து மகிழ்ந்தது. நெஞ்சுக்கும் போற்றுவதில் அந்வயமுண்டாகையாலே, "உன் பாதமே போற்றி" என்பதைச் சிந்தைக்கும் கூட்டுவார் பெரியவாச்சான்பிள்ளை. "சூழ்ந்து துணிந்து" என்றது காயமாகிற உடம்புக்கு ஒட்டாதாகையால் அதையும் சிந்தைக்கே கூட்டுவர். சிந்தைக்கு மாத்திரம் எப்படிப்பொருந்தும்? எனில்: அது ஜ்ஞானப்ரஸரத்₃வாரமாயிருக்கையாலே பொருந்தும். அப்பெருமையற்ற உடலுக்குப் பொருந்தாது. உடம்பிற்கு மகிழ்ச்சி எப்படிப்பொருந்தும் எனில்: மகிழ்ச்சியின் காரியமான மயிர்க்கூச்செறிகை முதலானவை உடம்பில் ஏற்படுவதையிட்டுச் சொல்லுகிறது.

(மகிழ்ந்ததழலாழிசங்கமவைபாடி) மிகவும் ப்ரதிபக்ஷத்திலே அக்₃நியுமிழாநின்ற திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் பாடிமகிழ்ந்தது;ஆகம் ஆடுகையாகிறதொழிலிலே மகிழ்ந்தது; மகிழ்கையே தொழிலாயிற்று. 32.

33. துணிந்தது சிந்தை துழாயலங்கல் அங்கம்
அணிந்தவன்பே ருள்ளத்துப் பல்கால்—பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல் விறல்வேங் கடவனையே
வாய்திறங்கள் சொல்லும் வகை.

---

என் ஹ்ருத₃(கா?)யமானது, ப்ரதிபக்ஷத்தின்மேலே அழலை உமிழா நின்றுள்ள திருவாழி ஸ்ரீபாஞ்சஜந்யமாகிற இவற்றைப் பாடி ஆடுகையாகிற தொழிலிலே வ்யாப்தமாய்க்கொண்டு அத்₄யவஸித்து உகக்கப்பெற்றது. 32.

---

(அழலாழிசங்கம் அவை பாடி) என்பதைப் பெரியவாச்சான்பிள்ளை வாக்குக்கும், அப்பிள்ளை காயத்துக்கும் அந்வயிப்பர்கள். (ஆகம்) காயமாகிற உடம்பு. அப்பிள்ளையுரையில் 'என் ஹ்ருத₃யமானது' என்றிருப்பது அபபாட₂மாயிருக்கவேண்டும். 'என் காயமானது' என்பதே சுத்தபாடமாயிருக்கத்தகும். அவதாரிகையில் 'தம்முடைய கரணங்கள்' என்று குறித்து, 'சிந்தை' என்றதற்கு 'என் மனஸ்ஸானது' என்று உரையிட்டுவிட்டபடியாலே 'ஆகம்' என்னும் பதத்துக்கு 'என் ஹ்ருத₃யமானது' என்று பொருள் கொள்ள ப்ரஸக்தியில்லை. (அழலாழி சங்கம் அவை பாடி ஆடும் தொழில் மகிழ்ந்தது) எதிரிகளின் மேலே நெருப்பை உமிழ்கின்ற ஸுதர்சனத்தையும், ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் பாடி ஆடும் தொழிலிலே மகிழ்ச்சியுற்றது. (ஆகம் பாடியாடும் தொழில் சூழ்ந்து துணிந்து மகிழ்ந்தது) 'சங்கசக்ரங்களைப் பாடியாடுகையாகிற தொழிலிலே வியாபித்து, அத்₄யவஸித்து உகக்கப்பெற்றது' என்று உள்ளபடியே அந்வயித்துப் பொருள் கொள்வர் அப்பிள்ளை. ஶரீரம் பாடியாடுவதையே யாத்ரையாகக் கொண்டிருப்பதையிட்டு மனத்தினுடைய அத்₄யவஸாயத்தை (உறுதியை) அதன்மேல் ஏறிட்டுச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். அடுத்த பாசுரத்திலுமிப்படியே. 32.

சிந்தை—என் மனமானது, துழாய் அலங்கல் (அங்கம்) அணிந்தவன் பேர்—திருத்துழாய் மாலையை (திருமேனியில்) அணிந்துள்ள பெருமானுடைய திருநாமங்களை, பல்கால் — பலமுறை, உள்ளத்து — நினைப்பதில், துணிந்தது — உறுதியாக அத்₄யவஸாயங் கொண்டது; அங்கம் — எனது உடலும், (பல்கால்)—எப்போதும், பணிந்தது—வணங்குவது, வேய் பிறங்கு சாரல்—மூங்கில் மிக்கிருக்கும் தாழ்வரையை யுடைய, விறல் வேங்கடவனையே—திருமலையில் எழுந்தருளியிருக்கிற மிடுக்குடைய பெருமானையே; வாய்—வாயும், (பல்கால்) திறங்கள்—(அவனுடைய) தன்மைகளை, சொல்லும் வகை — சொல்லுகிற விதத்திலே, (துணிந்தது)—துணிவு கொண்டதாயிற்று.

பெரி அவ:— (துணிந்தது) மகிழ்ந்த மாத்ரமேயோ? வேறொரு இடத்துக்கு ஆகாதபடியாயிற்று என்கிறார்.

வ்யா:— (துழாயலங்க லங்க மணிந்தவன் பேருள்ளத்துப் பல்கால் சிந்தை துணிந்தது) திருத்துழாய் மாலையைத் திரு மேனியிலே அணிந்தவனுடைய பேரைப் பலகாலும் உள்ளு

அவ:— கீழ் அநுப₄வத்தாலே பிறந்த ஹர்ஷப் சொல்லிற்று. இதில் அவனை அநுப₄விக்கையாலே மநோ வாக்காயங்கள் அத்₄யவஸித்தபடியை அருளிச்செய்கிறார்.

உரை: — திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனுடைய ஒப்பனையழகுக்கு வாசகமான திருநாமங்களை ஹ்ருதயத்தில் மநோரத₂மானது உத்தரோத்தரம் அநுஸந்தி₄க்க

33. அவ:—கீழ்ப்பாசுரத்தில் சொன்னதுபோலே அநுப₄வத்தாலே மகிழ்ச்சியுற்றதோடன்றியில், அவனை உகப்புடன் அனுபவிக்கையாலே முக்கரணங்களும் வேறொருவர்க்காகாதபடி உறுதி பூண்டன என்கிறார்.

வ்யா:— (சிந்தை) கரணங்களில் முக்கியமானதான மனம் (துழாய் அலங்கல் அங்கம் அணிந்தவன் பேர் உள்ளத்துப் பல்

கையிலே சிந்தை துணிந்தது. (அங்கம் பணிந்ததுவும், வேய் பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே) ஶரீரம் பணிந்தது வும், திருமலையிலே நிற்கிற ஸர்வேஶ்வரனையே. (வாய் திறங் கள் சொல்லும்வகை துணிந்தது) வாக்கானது அவனுடைய திறங்களைச் சொல்லுகையிலே துணிந்தது. 33.

---

வேணுமென்று அத்₄யவஸித்தது. இனி, ஶரீரமானது ஸர்வ காலமும் வணங்குவது மூங்கில்கள் மிக்கிருந்துள்ள பர்யந் தத்தையுடைய திருமலையிலே வர்த்திக்கிற, அழகாலே நம்மை எழுதிக்கொள்ளும் மிடுக்கையுடைய திருவேங்கட முடையானை, என்னுடைய வாகி₃ந்த்₃ரியமானது அவனு னுடைய ஸ்வரூபகு₃ணாதி₃களான ஸ்வபா₄வங்களைச் சொல் லும் ப்ரகாரத்திலே அத்₄யவஸித்தது. 33.

---

கால் துணிந்தது) திருத்துழாய் மாலையைத் திருமேனியிலே அணிந் தவனாய், இவ்வழகுக்கு வாசகமான பற்பல திருநாமங்களை உடைய வனான ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைப் பலகாலும் நினைப் பதிலே உறுதி பூண்டது. 'உள்ளத்து' என்றது 'உள்ளுகை யிலே' என்று பொருள்படுகிறது. அன்றிக்கே (உள்ளத்து சிந்தை) என்று கூட்டி, மனத்திலுள்ள மநோரத₂ம் என்றும் கொள்ளலாம். 'அங்கம்' என்னும் பதத்தை மேலேயும் கூட்டிக்கொள்ள வேண்டும். (அங்கம் பல்கால் பணிந்ததுவும் வேய் பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே) என் ஶரீரமானது எல்லாக் காலத்திலும் வணங்குவதும்—மூங்கில்கள் மிகுந்த தாழ்வரைகளை யுடைய திருமலையிலே வாழ்கிறவனாய், அழகாலே நம்மை வெல்லும் ப₃லத்தையுடையவனான திருமலையப்பனையே; விறல்=ப₃லம்; இங்கு ப்ரகரணாநுகுணமாக அழகால் வந்த ப₃லம். 'வேங்கடவனையே' என்ற ஏகாரத்தாலே வேறொருவர்க்காகாமலிருக்கையாகிற ஶரீரத் தின் அத்₄யவஸாயம் சொல்லப்படுகிறது. (வாய் திறங்கள் சொல்லும் வகை துணிந்தது) என்னுடைய வாக்காகிற கரணம் அவனுடைய ஸத்யத்வ ஜ்ஞாநத்வாதி₃ ஸ்வரூபநிரூபககுணங்களை யும், ஸௌஶீல்ய வாத்ஸல்யாதி₃ நிரூபிதஸ்வரூபவிஶேஷணமான குணங்களையும் சொல்லும் வகைகளிலே உறுதிபூண்டது. 'துணிந்தது' என்னும் வினைச்சொல்லைச் சிந்தைக்கும் வாக்குக்கும் கூட்டிக்கொள்ளவேண்டும். 33.

34. வகையா லவனி யிரந்தளந்தாய் பாதம்
புகையால் நறுமலரால் முன்னே—மிகவாய்ந்த
அன்பாக்கி யேத்தி யடிமைப்பட் டேனுனக்கு
என்பாக்கி யத்தா லினி.

முன்னே—முற்காலத்திலே, வகையால்-உபாயத்தினால், அவனி—பூமியை, இரந்து—(மாவலிபக்கல்) யாசித்து, அளந்தாய்— அளந்துகொண்ட உன்னுடைய, பாதம்— திருவடிகளை, புகையால்—தூபங்கொண்டும், நறு மலரால்— நல்ல மணமுள்ள புஷ்பங்களைக் கொண்டும், மிக வாய்ந்த அன்பு ஆக்கி—மிகுதியாகப் பொருந்திய அன்பை உடையவனாய், ஏத்தி—துதித்து, இனி—மேலுள்ள காலமெல்லாம், என் பாக்கியத்தால் — நீ என் மேல் பண்ணின விசேஷ கடாக்ஷமாகிற பாக்யத்தாலே, உனக்கு அடிமை பட்டேன்— உனக்குத் தொண்டனாய்விட்டேன்.

பெரி அவ:— (வகையால்) ''உன் ஸௌந்தர்யத்₃துக்குத் தோற்று அடிமைப்படும்படி நீயே முன்னே க்ருஷிபண்ணினாய்'' என்கிறது.

வ்யா:— (வகையித்யாதி₃) ''ராவணனைப்போதி வத்₄யனாயிருக்க மஹாப₃லியும், இவன்பக்கல் ஔதா₃ர்யகு₃ணம் கிடக்

---

அவ:— ஏவம்வித₄மான இப்பெரிய பேறுதான் தேவருடைய கடாக்ஷத்தாலே பெற்றேன் என்கிறார்.

உரை:-வடிவழகு,முக்₃த₄ஜல்பிதம்,மநோஹரமான தி₃வ்ய சேஷ்டிதம் தொடக்கமான ப்ரகாரங்களாலே, ஆஶ்ரிதனை

---

34. அவ:—இப்படி என் முக்கரணங்களும் உன்னிடத்தில் ஈடுபட்டு மகிழ்ந்து உறுதிபூண்டு உனக்கேயாம்படியிருக்கும் பெருமை நீ அவதாராதி₃முகத்தாலே செய்த முயற்சிகளின் ப₂லனாகும் என்கிறார்.

வ்யா:— (வகையால் அவனி இரந்து அளந்தாய்) ஹிரண்ய ராவணாதி₃களைப்போலே மாவலியையும் ஸம்ஹரிக்க ப்ராப்₁தமா

கையாலே அவனும் தன்னதாக்கித் தருவானாஞன்; நாமும் பூ₄மியை அவனதாக்கிக் கொள்ளுவோம்; ஆஶ்ரயித்த இந்த்₃ர னும் தன் கார்யம்பெறுவான்'' என்கிற வகைகளாலே அவனி யிரந்தளந்த உன் திருவடிகளை (புகையால் நறுமலரால்) உன் திருவடிகளைப் புகையால் நறுமலரால். (மிக வாய்ந்த

இந்த்₃ரன் திருவடிகளிலே வந்து விழுந்த முற்காலத்தில் பூ₄மியை மஹாப₃லி பக்கலிலே ஶ்ரிய:பதியான பெருமையை அழியமாறிச் சென்று அர்த்தி₂த்து அளந்து கொண்டாயான உன்னுடைய திருவடிகளை தூ₄பத்தால் செவ்விய பூ முதலான உபகரணங்களைக்கொண்டு, மிகவும் செறிந்த ப்ரேமத்தை

யிருந்தபோதிலும், அவனிடம் சில குணங்கள் கிடக்கையாலே, வகைகளாலே இப்பூமியை அவனிடமிருந்து யாசித்து அளந்து கொண்ட உன்; வகைகளாவன— 'ராவணாதி₃களிடம் இல்லாத ஔதா₃ர்யமாகிற குணம் மாவலியிடமிருக்கிறது; ஆகையாலே அவன் தன்னதல்லாத பூமியைத் தன்னதாக நினைத்துத்தருவான்; நாமும் நம்முடைய பூமியை அவனுடையதாகவே இசைந்து அவனிட மிருந்து யாசித்துப் பெறுவோம்; நம்மையண்டிய இந்திரனும் தன் குடியிருப்புப்பெற்றவனாவான். இவ்வகைகளாலே நாம் காரி யம் செய்தால் எல்லாருக்கும் நன்மையாகும்' என்று எம்பெருமான் திருவுள்ளத்தில் ஓடிய சிந்தநா ப்ரகாரங்கள். அன்றிக்கே, ''கடலைக் குளம்படியிலே அடக்கினாற்போலேயுள்ள வடிவழகு,'கொள்வன் நான் மாவலி மூவடி தா' என்றாற் போன்ற குழந்தைப்பேச்சு, யஜ்ஞவாடத் தில் வேதமோதிக்கொண்டு நடந்து வருவது முதலானநெஞ்சையிழுக் கும் திவ்யசேஷ்டிதங்கள் முதலான வகைகளாலே மாவலியை ஈடு படுத்தி, திருவுக்கும் திருவாகிய தன் பெருமைக்குத்தகாதபடி தன்ன தான பூமியை அவனிடமிருந்துயாசித்து அளந்துகொண்டஉன்''என் கிறதாகவுமாம். எப்போது இச்செயலைச் செய்தது? எனில்: (முன்னே) அடியானான இந்திரன் திருவடிகளிலே வந்து விழுந்து 'மாவலி அபஹரித்த என் குடியிருப்பைப் பெற்றுத்தரவேணும்' என்று வேண்டிய முற்காலத்தில் என்கிறது. அன்றிக்கே (முன்னே) என்று உன் ஸந்நிதி₄யிலே என்கிறதாகவுமாம். (பாதம் புகையால் நறுமலரால் முன்னே ஏத்தி) உன்னுடைய திருவடிகளை தூ₄பத் தாலும், செவ்விமாறுமையாலே மணம் மிக்க மலர்களாலும் உன்

வன்பாக்கி யேத்தி அடிமைப்பட்டேன்) புஷ்பாத்₃யுபகரணங்களைக்கொண்டு மிக்க அன்பையுடையேனாய், ஸௌந்த₃ர்யத்துக்குத் தோற்று அடிமைப்பட்டேன். (இனி என் பாக்கியத்தால்) இப்போது என்னுடைய ஸுக்ருதத்தாலே. இஸ்ஸுக்ருதத்துக்கு அடியாக முன்னே பூ₄மியை அளந்து க்ருஷி பண்ணிவைத்தாய். 34.

35. இனிதென்பர் காம மதனிலு மாற்ற
இனிதென்பர் தண்ணீரு மெந்தாய் — இனிதென்று
காமநீர் வேளாது நின்பெருமை வேட்பரேல்
சேமநீ ராகும் சிறிது.

---

உடையனாய், ஸௌந்த₃ர்யஶீலாதி₃களுக்குத் தோற்று ஸ்துதித்து, வகுத்த ஶேஷியான தேவர்க்கு இனிமேலுள்ள காலம் தேவர் என்பக்கல் பண்ணின விஶேஷகடாக்ஷமாகிற பா₄க்₃யத்தாலே அடிமைசெய்யுமவனாய்விட்டேன். என்னுடைய விலக்காமையாகிற பா₄க்₃யத்தாலே என்னுதல். (முன்னே) ஸந்நிதி₄யில் என்றுமாம். 34.

---

திருமுன்பே துதித்து. இங்கு புகையையும், நறுமலரையும் சொன்னது நீர் சுடர் முதலான மற்ற ஆராத₄நோபகரணங்களுக்கும் உபலக்ஷணம். (மிக வாய்ந்த அன்பாக்கி ஏத்தி அடிமைப்பட்டேன் உனக்கு) மிகவும் செறிவுடைய அன்பை உடையவனாய் உன்னைத் துதித்து, நீ வகுத்த ஶேஷியாகையாலும், உன் அழகுக்குத் தோற்றும் உனக்கு அடிமைப்பட்டேன். அடிமைப்பட்டது எத்தனை காலத்துக்கு? எனில்: (இனி) இனிமேலுள்ள காலமெல்லாம் அடிமைப்பட்டேன். இப்படி அடிமைப்பட்டதற்கு உம் பக்கல் ஏதேனும் கைம்முதல் உண்டோ? எனில்: உன்னுடைய விசேஷகடாக்ஷமாகிற பாக்கியமே கைம்முதல் என்கிறார் (என் பாக்கியத்தால்) உன்னுடைய நிர்ஹேதுககிருபை என்பக்கல் வெள்ளமிட்டதாகிற அதிருஷ்டத்தாலே; அன்றிக்கே, (என் பாக்கியத்தால்) என்று என்னுடைய அப்ரதிஷேத₄ம் (விலக்காமை), ஆநுகூல்யம் ஆகிற புண்ணியத்தால் என்றுமாம். இப்புண்ணியத்துக்கும் மூலகாரணம் நீ அவதாராதி₃முக₂த்தாலே பட்ட பாடுகளே என்பதை 'வகையால் அவனி இரந்தளந்தாய்' என்னும் விளியாலே காட்டுகிறார். 34.

எந்தாய் -என் ஸ்வாமியானவனே! (பாமரர்கள்) காமம்-தாழ்ந்த சப்தாதி விஷயங்களை, இனிது என்பர் — பே₄ாக்₃ய மாகக் கொள்வர்; (விரக்தர்களுங்கூட) தண்ணீர் அதனிலும் ஆற்றவும் இனிது என்பர்— அந்த சப்தாதி விஷயங்களிற் காட்டிலும் தண்ணீர் மிகவும் பே₄ாக்₃யமென்பார்கள்; காமம் நீர் — (கீழ்ச்சொல்லப்பட்ட)காமத்தையும் தண்ணீரையும், இனிது என்று வேளாது — பே₄ாக்₃யமாகக் கொண்டு அவற்றிலே ஆசைகொள்ளாமல், நின் பெருமை சிறிது வேட்பர் ஏல்-உன்னுடைய பே₄ாக்₃யதையையே சிறிதேனும் விரும்புவார்களாயின் (அது), சேமம் நீர் ஆகும் — (எல்லா நிலைமையிலும்) ரக்ஷகமான தன்மையை உடையதாகும்.

பெரிய அவ: — (இனிதென்பர்) இவ்விஷயங்கிடக்க சப்தாதி விஷயங்கள் இனிதென்றிருப்பதே! என்று வெறுக்கிறார்.

வ்யா:-(காமமினிதென்பர்)காமத்தையும் அழகியதென்பர். ''என்பர்'' என்கிறத்தாலே தமக்கு இதில் அந்வயமின்றிக்கே இருக்கிறபடி. காமதந்த்ரம் போமவர்கள் காமதந்த்ரத்தை இனி

---

அவ: — 'இப்படி அல்பாநுகூல்யம்பற்றாசாகத் தானே மேல்விழுந்து ஸர்வரக்ஷைகளையும் பண்ணும் உன்னைவிட்டுச் சேதநர் ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலேமண்டி அந்தரப்படுவதே!' என்று வெறுக்கிறார்.

உரை: — ''எல்லாம் கண்ணன்'' என்கிறபடியே த₄ாரக போஷகபே₄ாக்₃யங்கள் எல்லாம் நீயேயாம்படி என்னைட்புகுர

---

35. அவ: — இப்படி விலக்காமையே பற்றாசாகக் கொண்டு தானே மேல்விழுந்து ஸர்வரக்ஷணங்களையும் பண்ணும் உன்னை விட்டுச் சேதனர்கள் ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலே ஈடுபட்டு அநர்த்த₂ப்படுகிறார்களே! என்று வெறுக்கிறார்.

வ்யா: — (காமம் இனிது என்பர்) ஸ்த்ரீ புருஷர்கள் ஒருவர்க்கொருவர் கொள்ளும் ஆசையை மிகவும் இனியது என்று காமத்தில் ஈடுபட்ட பாமரமக்கள் சொல்லுவர். 'காமம்' என்று ஶப்₃த₃

தென்றுசொல்லுவர்கள். (அதனிலுமித்யாதி₃) காமத்திலும் மிகவினிது தண்ணீரென்று சொல்லாநிற்பர்கள். விரக்தர்க்கும் வேணுமிறே தண்ணீர; "आप एव हि सुमनसः" (ஆப ஏவ ஹி ஸுமநஸ:) என்கிறபடியே விரக்தரோடு அவிரக்தரோடு வாசியறத் தண்ணீரில் வந்தால் எல்லாரும் ஸுமநஸ்ஸுக்களாயிருப்பர்கள். (எந்தாய்) இவருடைய தண்ணீரும்காமமும்; "वासुदेवस्सर्वं" (வாஸுதே₃வஸ்ஸர்வம்) 'உண்ணும்சோறு' இத்யாதி₃வத்.

---

நிறுத்தின என்ஸ்வாமியானவனே! அல்பமாய் அஸ்தி₂ரமாய் அபோ₄க்₃யமான ஶப்₃தா₃தி₃விஷயங்களை போ₄க்₃யங்களாக ப்₄ரமித்து, 'இவை இனிதாயிருக்கிறது' என்று விஷயாநுப₄வத்துக்கு ஶ்ரமம் செய்திருக்கும் நாட்டார் சொல்லாநின்றார்கள்; விரக்தரோடு அவிரக்தரோடுவாசியற ஸர்வரும் விரும்பும்படியிருக்கையாலே, அந்தவிஷயங்களைக் காட்டிலும் மிகவும் இனிதென்று தண்ணீரைச் சொல்லாநின்றார்கள்.

---

ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்களாகிறவிஷயங்களையோ, அல்லது அவற்றில் அவிவேகிகளுக்குள்ள ஈடுபாட்டையோகுறிக்கிறது என்றும்கொள்ளலாம். 'என்பர்' என்று கூறுகையாலே தமக்குஇதில் அந்வயம்இல்லையென்பதும், அற்பமாய், நிலையற்றதான இதையும் இனிதென்று சிலர் சொல்லுவதே! என்னும் வெறுப்பும் தோற்றுகிறது. (அதனிலும் ஆற்ற இனிது என்பர் தண்ணீரும்) வைராக்₃யமற்றவர்களே ஈடுபடும் அக்காமத்தைப்போலல்லாமல், வைராக்₃யமுள்ளவர்களும் ஈடுபடுவதாகையாலே, அனைவருமே அக்காமத்தைக் காட்டிலும் மிகவும் இனியது தண்ணீர் என்பர்கள். "ஆப ஏவ ஹி ஸுமநஸ:" என்று சாஸ்திரமும் தண்ணீரிலே அனைவருமே அபேக்ஷையுடையவர்களாயிருப்பார்கள் என்றதன்றோ. உமக்கு நீரும் தேவையில்லையோ? எனில்: (எந்தாய்) எனக்கு 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை'யாகிய த₄ாரகபோஷகபோ₄க்₃யங்கள் எல்லாமாயிருப்பவன் நீயன்றோ என்கிறார். "வாஸுதே₃வஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" [கீதை 7-19] [வாஸுதேவனே த₄ாரக போஷக போ₄க்₃யங்களெல்லாம் என்னுமவனே எனக்கும் கிடைத்தற்கரிய மஹாத்மா] என்றானன்றோ அவனும்.

இனிதென்று காமநீர் வேளாது சிறிது நின் பெருமை வேட்ப ரேல் சேமநீராகும்) ப₄ாக்₃யஹாநியடியாகவிறே அதஸ்மிந் தத்₃பு₃த்₃தி₄பண்ணி ஶப்த₃ாதி₃விஷயங்களிலே ருசிபிறப்பது; ஸ்வப₄ாவத: இனிமையின்றிக்கேயிருக்கும் காமத்திலும் தண்ணீரிலுமாசைப்படாதே, உன்னுடைய கு₃ணங்களிலே

---

பரீக்ஷகர் ஹேயமாகவே அறுதியிட்டிருக்கிற விஷயங்களை யும், தண்ணீரையும், அதஸ்மிந் தத்₃பு₃த்₃தி₄யாலே போ₄க்₃ய மென்று புத்திபண்ணி, அவற்றை மேல் விழுந்து ஆசைப்

---

(இனிதென்று) உண்மையில் இனியதல்லாத இக்காமநீர்களை இனி தென நினைத்து. ஆராய்ந்து பார்த்தால், இனிமை இவற்றிற்கு இயற்கையல்லவே;

"ததே₃வ ப்ரீதயே பூ₄த்வா புநர்து₃:க்கா₂ய ஜாயதே।
ததே₃வ கோபாய யத: ப்ரஸாதா₃ய ச ஜாயதே॥
தஸ்மாத்₃து₃:க்கா₂த்மகம் நாஸ்தி ந ச கிஞ்சித்
ஸுகா₂த்மகம்॥"
[வி. பு. 2-6-46, 47]

[ஒருவிஷயமே ஒரு காலத்தில் இன்பத்தைத் தந்து பிறிதொரு காலத்தில் துன்பத்தையும் தருகிறது; ஒன்றே முதலில் கோபத் திற்கும், பிறகு உகப்புக்கும் காரணமாகிறது. ஆகையால் இவ் வுலகில் இயற்கையில் துன்பமயமாயிருப்பதோ, இன்பமயமா யிருப்பதோ ஒன்றுமில்லை.] என்றல்லவோ சாஸ்திரம் சொல்லு கிறது. "ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் ப₄வதி" [ப்₃ருஹ 6-5-6] என்று பகவத் ஸங்கல்பத்தால் இவற்றுக்கு அவ்வப்போது ஏற்படும் இனிமையும், அற்பமாயும் அஸ்தி₂ரமாயும் (நிலையற்றதாயும்) இருக்கையாலே, அறிவாளிகள் இவற்றைத் தாழ்ந்ததாகவன்றோ அறுதியிட்டிருக்கின்றார்கள். இப்படி இனியதல்லாத இவ்விஷயங் களை இனிதென்று இச்சேதனன் மயங்குவதற்குக் காரணம் இவனு டைய பாபமன்றோ. (காமநீர் வேளாது) இப்படி இயற்கையில் இனி மையற்றவையாய், தாழ்ந்தவையான காமத்திலும் தண்ணீரிலுமாசை வைக்காமல். (நின் பெருமை சிறிது வேட்பரேல்) எல்லாக் கல்யாண குணங்களும் நிறைந்தவனாய், எல்லையற்ற இனிமையை இயற்கை யிலேயே உடையவனான உன்னுடைய இனிமைச்சிறப்பிலே ஒரு சிறிது ஆசைவைப்பார்களாகில். (காமநீர்—நின்பெருமை) விஷத்

அல்பமாசைப்படுவராகில் ரக்ஷையே ஸ்வபா₄வமாம். ''बुद्धिनाशात्प्रणश्यति'' (பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணஶ்யதி) என்கிறபடியே ஶப்₃தா₃தி₃களிலாசை விநாஶத்தைப் ப₂லிப்பிக்கும்; ''मित्रभावेन'' (மித்ரபா₄வேந) என்று ப₄க₃வத்₃விஷயத்திலே போலியான ஆசையுண்டாகில் ''न त्यजेयं कथञ्चन'' (ந த்யஜேயம் கத₂ஞ்சந) என்றிருக்கும் அவன். எல்லா ஆசையுண்டாகிலும் கிடையாது ஶப்₃தா₃தி₃கள். ஓரடி வர நிற்கில் அவனதேயாம் ப₄க₃வத்₃ விஷயம். 35.

---

படாதே, ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகனாய், நிரதிஶயபோ₄க்₃யபூ₄தனான உன்னுடைய போ₄க்₃யதாப்ரகர்ஷத்தை ஏக

---

துக்கும் அமுதத்துக்கும், கரிக்கட்டிக்கும் ரத்னத்திற்கும், கள்ளிப் பாலுக்கும் தாய்ப்பாலுக்கும் உள்ள வாசியன்றோ காமநீர்களுக்கும் நின்பெருமைக்கும் உள்ளது. (சிறிது வேட்பரேல்) அவற்றில் வைக்கும் ஆசையில் ஒரு சிறிதை உன் விஷயத்தில் வைத்தாலும் போதுமே!

'' யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ ।
த்வாமநுஸ்மரத: ஸா மே ஹ்ருத₃யாந் மாபஸர்ப்பது ॥''
[வி-பு 1-20-19]

[அவிவேகிகளுக்கு விஷயங்களில் எத்தனை அழிவற்ற ஆசை உள்ளதோ, அத்தனை ஆசையும் உன்னை நினைக்கும் போது என் நெஞ்சில் நீங்காதிருக்கவேண்டும்.] என்ற ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே அத்தனை ஆசையையும் வைக்காவிடிலும், ஒரு சிறிதாவது வைக்கலாமே. (நின் பெருமை சிறிது வேட்பரேல் சேமநீராகும்) உன் ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திப்பெருமைகளில் ஒரு சிறிதை அனுபவிக்க ஆசைப்பட்டாலும், அவ்வாசை ஸர்வதே₃ஶஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் இவனை ரக்ஷிப்பதையே இயற்கையாகக் கொண்டதாயிருக்கும்.

த்₄யாயதோ விஷயாந் பும்ஸஸ்
ஸங்க₃ஸ் தேஷூபஜாயதே ।
ஸங்கா₃த் ஸஞ்ஜாயதே காம:
காமாத் க்ரோதோ₄ऽபி₄ஜாயதே ॥

36. சிறியார் பெருமை சிறிதின்க ணெய்தும்
அறியாரும் தாமறியா ராவர் — அறியாமை
மண்கொண்டு மண்ணுண்டு மண்ணுமிழ்ந்த மாயனென்று
எண்கொண்டென் னெஞ்சே யிரு.

---

தே₃ஶம் ஆசைப்படுவார்களாமாகில். அது ஸர்வத₃ஶை யிலும் ரக்ஷகமான ஸ்வப₄ாவத்தை உடைத்தாகா நிற்கும். 35.

---

க்ரோத₄ாத்₃ப₄வதி ஸம்மோஹ:
ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்₄ரம: |
ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்₃பு₃த்₃தி₄நாஶோ
பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணஶ்யதி ॥ [கீதை-2-62, 63]

[ சப்தம் முதலான ஐந்து புலன்களையுமே, (அநாதி வாஸனை யினால்) சிந்திப்பவனாய் (என்னை தியானிக்காத) அதிகாரிக்கு, அப்புலன்களில் பற்று வளர்கிறது; அப்பற்றினால், (விஷயங்களைப் பெற்றாலல்லது தரிக்கமாட்டாமைக்குறுப்பான) காமம் அதிகமாக ஏற்படுகிறது; காமத்தினாலே கோபம் பரவலாக உண்டாகிறது; கோபத்தினாலே பகுத்தறிவின்மை ஏற்படுகிறது; பகுத்தறிவின்மை யால் நினைவின் அழிவு ஏற்படுகிறது; நினைவின் அழிவினாலே அறிவின் அழிவு உண்டாகிறது. அறிவின் அழிவினாலே (ஸம் ஸாரத்தில் மூழ்கி) அழிகிறான்.] என்கிறபடியே சப்தாதிவிஷயங் களில் ஆசை வைத்தால் அழிவையே உண்டாக்கும்.

''மித்ரப₄ாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந''
[ரா-யு 18-3]

[நண்பனுடைய வேஷத்தோடு ஒருவன் வந்தாலும் அவனை ஒருபோதும் விடமாட்டேன் ] என்கிறபடியே பகவத்விஷயத்தில் போலியான ஆசையுண்டானாலும், எக்காலத்துக்கும் சேமமாகும். எல்லா ஆசையும் உண்டானாலும் சப்தாதிவிஷயங்கள் இவன்விரும்பு மளவு கிடைக்கமாட்டா; அற்பமாசையுண்டானாலும் இவனுக்குக் கையாளாய் நிற்பான் பரமபுருஷன் என்னும் பல அரிய கருத்துக் களை உள்ளடக்கியது இப்பாசுரம். 36.

சிறியார் — (இயற்கையான மேன்மை சிறிதுமில்லாத) அற்பரான ஸம்ஸாரிகளுடைய, பெருமை — ('எனக்கு நிகரில்லை' என்று அஹங்கரிப்பதால் வருகிற) மேன்மை யானது, சிறிதின் கண் எய்தும் - (மேன்மேலும்) தாழ்விலேயே கொண்டு சேர்ப்பிக்கும்; அறியாரும் — நன்மை தீமைகளைப் பகுத்து அறியாத அவிவேகிகளும் (தங்களை ஸர்வஜ்ஞராக நினைத்திருந்தார்களாகிலும்), தாம் அறியார் ஆவர் — தாங்கள் மேன்மேலும் அறியாதவர்களாகவே ஒழிந்திடுவர்; என் நெஞ்சே — என் மனமே!, அறியாமை — பிறர் அறியாதபடி, மண்கொண்டு — (மாவலியிடத்தில்) பூமியைப் பெற்றவனை யும், மண் உண்டு — அந்தப்பூமியை (ப்ரளயத்திலே) திரு வயிற்றில் வைத்தவனையும், மண் உமிழ்ந்த — (பிறகு) அந்தப் பூமியை வெளிப்படுத்தினவனையுமிருக்கிற, மாயன் என்று — ஆஶ்சர்யபூ₄தனை எம்பெருமான் என்று, எண் கொண்டு — இடைவிடாது நினைத்து, இரு — (அவனைப்பற்றின நமக்கு ஒரு குறை இல்லையென்று) ப₄யமற்று இருப்பாயாக.

பெரி அவ: — (சிறியார்) "ப்₄ரமிப்பார் ப்₄ரமிக்கிறார்; நீ இவ்வர்த்த₂த்தை புத்திபண்ணியிரு" என்கிறார்.

வ்யா — (சிறியாரித்யாதி₃) தாங்களே சிறியராயிருந்து வைத்துத் தங்களைச் சொல்லும் பெருமை ஸ்வரூபத்திலே

---

அவ: — "நாட்டார் செய்தபடி செய்கிறார்கள்; நெஞ்சே! நீ முந்துறமுன்னம் அவனுடைய வ்யாபாரங்களை அநு ஸந்தி₄த்துக்கொண்டு ஸுக₂மேயிருக்கப்பார்" என்கிறார்.

---

36. அவ:— "நின் பெருமை சிறிது வேட்பரேல் சேமநீராகும்" என்று சென்ற பாசுரத்தில் அநுஸந்தித்தவுடன், உலகினர் பரம புருஷனிடம் சிறிதும் ஈடுபாடில்லாமல் விஷயாந்தரங்களையும், அவற்றை அடைவதற்காக தே₃வதாந்தரங்களையும் பற்றி நிற்பதை நினைத்து, "உலகினர் எக்கேடு கெட்டுப்போகட்டும்; நெஞ்சே! நீ முதன்முதலில் அவனுடைய தி₃வ்யசேஷ்டிதங்களை அநுஸந்தித்து இன்புறுவாயாக" என்கிறார்.

ஞிற்கும் (அறியாருமித்யாதி₃) அவ்விடத்திலே தமக்குமிடை யில்லை. (அறியாமையித்யாதி₃) நெஞ்சே! நீ பெரியார்கோடி

உரை:- ஸ்வத: உத்கர்ஷக₃ந்த₄மின்றிக்கே, அதிக்ஷு॰த்₃ரராயிருக்கிறஸம்ஸாரிகளுடைய ''ஈ₃ச்வரோऽஹம்'' (ஈஶ்வரோऽஹம்) என்றிருக்கும் து₃ர்மானத்தாலே வந்த பெருமையானது, ஸ்வத:ப்ராப்தமான பழைய க்ஷு॰த்₃ரதையிலே சென்று பர்யவஸித்துவிடும்; ஸ்வத: க்ருத்யாக்ருத்யவிவேகம்பண்ண க்ஷமரன்றிக்கேயிருக்கிற அறிவுகேடரானவர்களும் தங்கள் நினைவாலே ஸர்வஜ்ஞராக அபி₄மானித்திருந்தார்களாகிலும்

வ்யா:— (சிறியார் பெருமை சிறிதின்கண் எய்தும்) இயற்கையில் சிறிதும் பெருமையில்லாதவர்களாய், விஷயாந்தரதே₃வதாந்தரபரர்களான அற்பர்கள், தமக்கு நிகரில்லை என்று தம்மைத்தாமே அபி₄மானித்திருப்பது. அவர்களுக்கு இயற்கையில் அமைந்த பழைய சிறுமையிலேயே சென்று சேர்ந்துவிடும். (சிறியார் பெருமை) தங்களுடைய சிறுமைக்குச்சேர்ந்தவிஷயாந்தரங்களிலும், தேவதாந்தரங்களிலும் ஈடுபட்டு இவ்வுலகச் செல்வங்களைப்பெற்று.

''ஈஶ்வரோऽஹமஹம் போ₄கீ₃
ஸித்₃தோ₄ऽஹம் ப₃லவாந் ஸு॰கீ₂ ।
ஆட்₄யோऽபி₄ஜநவாநஸ்மி
கோऽந்யோऽஸ்தி ஸத்₃ருஶோ மயா ॥''[கீதை 16-14,15]

[நானே அனைவரையும் நியமிப்பவன்; இயற்கையில் போ₄கத்தையுடையவன்; ஸித்திபெற்றவன்; பலத்தையுடையவன்; ஸு॰கத்தையுடையவன்; செல்வங்கள் நிறைந்தவன்; நற்குலத்தில் பிறந்தவன்; எனக்கு நிகர் யார்?] என்கிறபடியே தனக்கு நிகரில்லை என்று தன்னைத்தானே அபிமானித்திருப்பது. (சிறிதின்கண் எய்தும்) இவ்வபிமானம் நரகம் முதலான லோகங்களிலும், ஸம்ஸாரத்திலும் இவன் உழலும்படி செய்துவிடும். (சிறியார் பெருமை...எய்தும்) பிரமன், உருத்திரன் முதலான க்ஷு॰த்ரதெய்வங்களின் பெருமை சிறிய விஷயங்களை அளிப்பதோடு நின்றுவிடும் என்றும் கொள்ளலாம். (அறியாரும் தாம் அறியாராவர்) நன்மை தீமைகளைப் பகுத்தறிய மாட்டாத தங்களுடைய அறியாமையாலே இந்த விஷயாந்தரங்களையும், தே₃வதாந்தரங்களையும் பற்றுகிறவர்கள். தங்களைத் தாங்களே எல்லாமறிந்தவர்களாக அபி₄மானித்திருந்தார்களாகி

யிலேயிரு. ''பேராளன் பேரோதும் பெரியோரை'' என்னும்படி யொருவனு என்கிறது. ''மா ஶுச:'' (மா ஶுச:) என்னும்படியே. 36.

பழைய அறிவுகேட்டை உடையராயே விடுவர்கள்; நான் அவன் படிகளைச் சொன்னால் அறிகைக்குப் பாங்கான என் மநஸ்ஸே!, நீ அறிவுகேடரான நாட்டார் படியைக் கைவிட்டு, 'ஶ்ரிய:பதி இப்படி இரப்பாளனாய் வந்தான்' என்று ஒருவரும் அறியாதபடி பூமியை இரந்து அளந்துகொண்டு.

லும், மேன்மேலும் அறிவுகேட்டையே அடைவார்கள். (அறியாரும்) விஷயாந்தரங்களும், தேவதாந்தரங்களும் பற்றத்தகாதவைகள், பகவத்விஷயமே பற்றத்தக்கது என்று அறியாமலிருப்பவர்கள்.

''ப்₃ரஹ்மாணம் ஶிதிகண்ட₂ஞ்ச யாஶ்சாந்யா தே₃வதா: ஸ்ம்ருதா: ।
ப்ரதிபு₃த்₃தா₄ ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப₂லம்॥''
[பாரதம் சாந்தி 350-36]

[பிரமனையும், சிவனையும், மற்ற தெய்வங்களையும் அறிவாளிகள் ஸேவிப்பதில்லை; ஏனெனில், அவர்கள் அளிக்கும் பயன் அளவுபட்டது.] என்று பாரதத்திலும் மற்ற தேவதைகளையும், அவர்கள் அளிக்கும் அல்பாஸ்திரமான விஷயாந்தரங்களையும் அறிவாளிகள் பற்றமாட்டார்கள் என்று கூறப்பட்டதன்றோ. (தாம்) இவர்கள் தங்களைத் தாங்கள் எல்லாமறிந்தவர்களாக நினைத்திருந்தாலும்; (அறியாரரவர்) இந்த தே₃வதாந்தர விஷயாந்தர ஸம்பந்தத்தாலே மேன்மேலும் அறிவுகேட்டை உடையவர்களாகவே ஆவர்கள். இனி, தன் நெஞ்சை விளித்து, 'நீ இப்படி சிறியார் அறியார் கோடியிற் சேராமல், பெரியோர் அறிவார் கோடியிற் சேர்ந்திரு' என்கிறார்—(என் நெஞ்சே) அவர்களைப்போலே தேவதாந்தரஸ்பர்சமும், விஷயாந்தரஸ்பர்சமும் அற்றிருக்கும் என் நெஞ்சே! நான் பகவத் விஷயத்தில் ஈடுபடமுற்பட்டால், நீ விஷயாந்தரங்களிடமும், தேவதாந்தரங்களிடமும் இழுத்துச்செல்ல முற்படாமல் எனக்கு வசப்பட்டு நிற்கும் நெஞ்சே! இந்நிலை நிலைத்து நிற்கச் செய்யவேண்டியதைக் கூறுகிறார்.— (அறியாமை மண்கொண்டு) ''திருவுக்கும் திருவாயிருப்பவன் இப்படி யாச

ப்ரளயத்தில் அழியாதபடி அந்த பூமியைத் திருவயிற்றிலே வைத்து நோக்கி, அநந்தரம் உள்ளுக்கிடந்து தளராதபடி அந்த பூமியை வெளிநாடுகாணப் புறப்படவிட்டவ(ன)ய், இவ்வளவன்றிக்கே ஆஸ்ரிதவிஷயத்திற்பண்ணும் ரக்ஷணத்துக்கு எல்லைகாணவொண்ணாத ஆஸ்சர்யபூதனுமாயிருப்பான் ஒருத்தன் என்று அநவரதம அநுஸந்தித்துக்கொண்டு 'அவனைப்பற்றின நமக்கு இனி ஒரு குறையுண்டோ?' என்று நிர்ப்பயமாயிரு. 36.

---

கனாய் வந்தான்' என்று உலகினர் அறியாதபடி வாமன ப்ரஹ்மசாரிவேஷத்தை எடுத்துக்கொண்டு வந்து மாவலியிடம் தன்னுடையதான பூமியைத் தானே யாசித்துப்பெற்று அளந்துகொண்டு. (மண்ணுண்டு) ப்ரளயத்திலே இவ்வுலகம் அழியாதபடி இதைத் தாயிருக்கும் வண்ணமே தன் திருவயிற்றிலே வைத்து உய்யக்கொண்டு. (மண்ணுமிழ்ந்த மாயன்) நெடுங்காலம் அசேதனத்தோடு சேதனரோடு வாசியற உள்ளே கிடந்து தளராதபடி இவ்வுலகை மறுபடியும் வெளிப்படுத்திய ஆஸ்சர்ய பூதன், (மாயன்) பொதுவான முற்கூறிய செயல்களைச் செய்ததோடன்றியில், அடியார்க்காகச் செய்யும் செயல்களுக்கு ஒரு எல்லைகாணவொண்ணாதபடியான ஆச்சரியமான செயல்களை உடையவன், (மண்கொண்டு மண்ணுண்டு மண்ணுமிழ்ந்த மாயன்) பிரமன் திருவடி விளக்க, திருவடிகழுவிய நீரைச் சிவன் தலையிலே தரிக்க, எல்லார் தலையிலும் காலைவைத்த செயலாலும், நளிர்மதிச் சடையனும், நான்முகக்கடவுளும், தளிரொளி இமையவர் தலைவனும் முதலான எல்லா தேவர்களையும் உண்டுமிழ்ந்ததாலும் இவனே தேவாதிதேவனான பரம்பொருள் என்று விளங்குகையாலே, மற்ற தேவர்களையும் அவர்களளிக்கும் மற்ற விஷயங்களையும் பற்ற இடமில்லை என்று கருத்து. (என்று எண்கொண்டு இரு) இவ்விஷயத்தை நீ என்றும் அறிவிற்கொண்டிருந்தாயானால், நீ சிறியார் அறியார் வரிசையிற் சேராமல், பெரியார் அறிவார் வரிசையிலேயே என்றும் சேர்ந்திருப்பாய். "பேராளன் பேரோதும் பெரியோர்" [பெரியதிரு 7-4-4] என்றாரன்றோ மங்கைமன்னனும். (இரு) இனி நமக்கொரு குறையில்லை என்று பயமற்றிரு. "மாஶுச:" என்று கண்ணன் அர்ஜுனனுக்கு அபயமளித்தது போலே இவர் தன் நெஞ்சுக்கு பயமற்று வாழ வழிகாட்டுகிறார். 36.

37. இருந்தண் கமலத் திருமலரி னுள்ளே
திருந்து திசைமுகனைத் தந்தாய்—பொருந்தியநின்
பாதங்க ளேத்திப் பணியாவேல் பல்பிறப்பும்
ஏதங்க ளெல்லா மெமக்கு.

இரு—பெரிய, தண்—குளிர்ந்த, கமலத்து—திருநாபிக் கமலத்தின், இரு மலரின் உள்ளே—பெருமை பொருந்திய பூவில், திருந்து—திறமையுடைய, திசைமுகனை-நான்முகனை, தந்தாய்—உபகரித்தருளின பெருமானே! பொருந்திய—எல்லாரோடும் பொருந்தியிருக்கிற, நின்—உன்னுடைய, பாதங்கள்—திருவடிகளை, ஏத்தி-வாயாரத்துதித்து, பணியா ஏல்—தலையார வணங்கித் தொழுவதற்கு உறுப்பாகா விட்டால், எமக்கு—எங்கட்கு, பல் பிறப்பும் எல்லாம்—பலவகையாகப் பிறக்கின்ற பிறவிகளெல்லாம், ஏதங்கள்—பயனற்றவையேயாம்.

பெரி அவ:—(இருந்தண்) ஶரண்யனைப்பற்றி ஆஶ்ரயியா வாகில் ஜந்மங்களெனக்கு து₃:க்க₂மென்கிறார்.

வ்யா:—(இருந்தணித்யாதி₃) ப்₃ரஹ்மாவுக்கு இருக்கப் பரப்பும் போந்து குளிர்ந்து விலக்ஷணமான பூவினுள்ளே

---

அவ:—இப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியாத ஜந்மங்களெல்லாம் வ்யர்த்த₂ம் என்கிறார்.

உரை:-பரந்து குளிர்ந்த திருநாபீ₄கமலத்தினுடைய விஸ்தீர்ணமான பூவினுள்ளே, மறுத்துக்கேள்வி கொள்ளாதே

---

37. அவ:—இப்படி ஸர்வேஸ்வரனும், ஸர்வஶரண்யனுமிருப்பவனைப் பற்றுக பிறப்புக்களெல்லாம் வீண் என்கிறார்.

வ்யா:—(இரும் தண் கமலத் திருமலர்) லோகஸ்ரஷ்டாவான நான்முகன், இருக்கத்தக்க பரப்பையுடையதாய், குளிர்ந்திருப்பதாய், பெருமையை உடையதான உந்தித்தாமரை மலர்.

ஸ்ருஷ்டிக்கவும் ப்₄ரமித்துப்போய்க் கேட்டுவரவும் வேண்டாத படி தானே ஸமர்த்த₂னான ப்₃ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவன் பொருந்திய உன் திருவடிகளை ஏத்திப் பணியாவாகில். (எனக்குப்பல்பிறப்பெல்லா மேதங்கள்) பல ஜந்மங்களையும் நீ பண்ணுவிக்கிறது ஒன்றல்லாவொன்று பகவத்ஸமாஶ்ரயணத் துக்கு உறுப்பாமென்று. ''ஏதங்கள்'' என்கிறது-புருஷபே₄த₃ங் கள்தோறும் து₃:க்க₂ங்களும் பே,தி₃த்திறேயிருப்பது.ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம்-நீ நினைத்தபடியன்றாகில் அப்புருஷர்களுக்கெல்லா முண்டான து₃:க்க₂ங்கள் எனக்கொருவனுக்குமுண்டாம். ப்₃ரஹ்

---

சொன்ன கட்டளையிலே ஜக₃த்தை ஸ்ருஷ்டிக்கைக்கு ஸமர்த்த₂னான சதுர்முக₂னை ஸ்ருஷ்டிப்ரயோஜனம் எனக்கே யாம்படி உபகரித்தருளினவனே! அஶேஷலோகஶரண்யனாய்க் கொண்டு எல்லாரோடும் பொருந்தியிருக்கிற உன்னுடைய திருவடிகளை வாயார ஏத்தித் தலையார வணங்கி ஆஶ்ர

---

(இரும்) உலகெங்கும் பரவித் தொழில் செய்யவேண்டிய நான் முகனுக்குத் தக்க இடமுடையதாயிருக்கை. (தண்) ராஜகுமாரர் களை அரசர்கள் அவர்களுடைய ஸௌகுமாரத்தன்மைக்குத்தக்கபடி குளிர் சோலைகளிலே வைத்திருப்பதுபோலே குளிர்ந்த மலரிலே வைத்துத் தன் பிள்ளையை ரக்ஷிக்கிறபடி. (கமலத்திருமலர்) ''புஷ்கரபர்ணே ஸமப₄வத்'' [தாமரையிதழில் பிரமன் தோன்றினான்] என்று வேதமும் புகழும்படியான பெருமையையுடைய மலர். (மலரி னுள்ளே திருந்து திசைமுகனைத் தந்தாய்) அவ்வுந்தித்தாமரை யினுள்ளே திருந்திய அறிவுடைய நான்முகனை உபகரித்தருளினாய்! (திருந்து) ஒருதடவை எம்பெருமான் ஸ்ருஷ்டிக்ரமத்தை உபதேசித்து விட்டால், மறுபடியும் வந்து ஸந்தேஹம் கேட்கவேண்டாதபடி யான திருந்திய ஞானத்தையுடையவன். (திசைமுகன்) நாலுவேதங் களையும் ஓதுவதற்கும், நாலுதிசைகளிலும் வியாபித்துத் தொழில் நடத்துவதற்கும் தக்கபடி நாலு முகங்களை உடையவன். (தந்தாய்) நான்முகனை எனக்கே பயனும்படி உபகரித்தவனே! நான்முகனை எம்பெருமான் படைப்பது 'இவன் படைக்கும் உலகினரில் எவரா வது நம்மை அடையமாட்டார்களா' என்னும் நப்பாசையாலேயே யாகையாலும், தன்விஷயத்திலே இப்படைப்பு பயனுடையதாகை யாலும் நான்முகனைத் தனக்கே உபகரித்ததாயிருக்கிறார். (திசை

மாவை ஸ்ருஷ்டித்தாயென்கிற இத்தாலே ஶரண்யனென்கிறது. "यो ब्रह्माणं विदधाति पूर्वं" (யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ர்தி பூர்வம்) "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये"(முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே) என்கிறபடியே. 37.

---

யிக்கைக்கு உறுப்பல்லவாமாகில், எங்களுக்குக் கர்மாநுகு₃ணமாக மேலே மேலே உண்டாய்ச் செல்லுகிற ஜந்மங்களடங்கலும் வ்யர்த்த₂ங்கள்; ஜந்மத்துக்கு ப்ரயோஜனம் உன்னை ஆஶ்ரயிக்கையிறே; அதுக்கு உறுப்பல்லாதபோது அவையடங்க நிஷ்ப்ரயோஜநமென்கை. 37.

---

முகனைத் தந்தாய்) "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்-முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே" [ச்வே 6-18] [எவன் பிரமனைப் படைக்கிருனே, அவனையே மோக்ஷமடைய விரும்பும் நான் சரணமடைகிறேன். ] என்று வேதாந்தம் ஓதுகையாலே, இவனே சரணடையத்தக்கவன் என்று உணர்த்துகிருர். (பொருந்திய) அந்தத் திசைமுகன் பற்றிநிற்கும் என்னவுமாம்; இப்படி அனைவர்க்கும் சரணமடையத்தக்கவனுகையாலே, அறிவாளிகள் அனைவரும் பொருந்திநிற்கும் என்னவுமாம். அறிவாளிகளோடு, அறிவற்ருரோடு வாசியற அனைவரோடும் நீர்மையாலே பொருந்திநிற்கும் என்னவுமாம். (நின் பாதங்கள் ஏத்திப் பணியாவேல்) இத்தகைய உன்னுடைய திருவடிகளை வாயாரத் துதித்துத் தலையார வணங்கி ஆஶ்ரயிப்பதற்குக் காரணமாகாவெனில்; (பல்பிறப்பும் எல்லாம்) அநாதிகாலமாகத் தொடர்ந்துவரும் தேவர், மனிதர், திர்யக், ஸ்தாவரம் என்கிற பலவகைப்பட்ட எல்லாப் பிறப்புகளும். (எமக்கு ஏதங்கள்) எம்மைப்போன்ற ஜீவர்களுக்கு வீணனவையேயாகும். பிறப்புக்குப் பயன் ஸர்வேஶ்வரனைப் பற்றுகையேயாகையாலே, பிறப்பு அதற்குக் காரணமாகாதபோது வீணேயாகின்றதன்ருே. (பல் பிறப்பும் எல்லாம்) பல பிறப்புக்களையும் எம்பெருமான் கொடுப்பதும் ஏதாவது ஒரு பிறப்பிலாவது தன்னையடையமாட்டார்களா என்னும் ப்ரத்யாசையாலேயன்ருே. (எமக்கு ஏதங்கள்) நீ இப்படி ஆசைப்பட்டு இச்சேதனர்களைப் படைத்தும், அவர்கள் உன்னை அடையாமலிருப்பதைப் பார்த்து அவர்கள் அத்தனைபேரும் ஸம்ஸாரத்தில் படும் துன்பங்களை நான் ஒருவனே கருணையாலே படுகிறேன் என்கிருராகவுமாம். பரது₃:க்க₂து₃:க்கி₂த்வம் (பிறர் துன்பங்கண்டு துன்புறுகை) அன்ருே கருணையின் மேலெல்லை. 37.

38. எமக்கென் றிருநிதிய மேமாந் திராதே
தமக்கென்றும் சார்வ மறிந்து—நமக்கென்றும்
மாதவனே யென்னும் மனம்படைத்து மற்றவன்பேர்
ஓதுவதே நாவினு லோத்து.

இரு நிதியம்—பெருஞ்செல்வத்தை, எமக்கு என்று—தங்களுடையதாக நினைத்து, ஏமாந்து இராதே—இறுமாப்புக் கொண்டிராமல், தமக்கு என்றும் சார்வம் அறிந்து—தங்களுக்கு எப்போதும் ரக்ஷகமாயிருக்கக்கூடிய பொருளை அறிந்து, நமக்கு என்றும் மாதவனே என்னும் மனம்படைத்து-'நமக்கு எக்காலத்திலும் எம்பெருமானே எல்லாம்' என்று துணிந்திருக்கும் நெஞ்சையுடையராய், மற்று—அதற்குப் பின்பு, அவன் பேர் — அத்திருமாலின் திருநாமங்களை, ஓதுவதே—ஸங்கீர்த்தநம் பண்ணுவதே, நாவினுல் ஓத்து-நாவுக்கு வேதம்போலே ஓதுவதற்கு உரிய விஷயம்.

பெரி அவ:—(எமக்கென்று) அர்த்தத்தைப் புருஷார்த்தமாக புத்தி பண்ணியிராதே ஶ்ரிய:பதியை ஆஶ்ரயித்திரு என்கிறார்.

வ்யா:— (எமக்கித்யாதி) கழஞ்சு பொன்னுண்டென்றறிந்து, ஸர்வேஶ்வரனைப்பற்றி நிர்ப்பரராயிருப்பாரைப்போலே

---

அவ:— அநர்த்தகரமான அர்த்தத்தைப் புருஷார்த்தமென்றிராதே, ஶ்ரிய:பதியை நினைப்பது ஏத்துவதாய்க் கொண்டு ஆஶ்ரயிக்கையே ஸர்வருக்கும் கர்த்தவ்யம் என்கிறார்.

---

38. அவ:—அஹங்காரிகளுக்கு நெருப்பைப்போலே தீமையை விளைக்கும் செல்வத்தைப் பெரும்பயனென்று நினைத்து இறுமாப்புடனிராமல், ஸ்ரீமந்நாராயணன் விஷயத்தில் நினைப்பது, துதிப்பது முதலான செயல்களைச்செய்து அவனைப் பற்றுவதே அனைவரும் செய்யவேண்டியது என்கிறார்.

யிராதே. (தமக்கித்யாதி₃) தமக்கு நித்யமான ஆஶ்ரயமெ(ா)ன் றறிந்து. (நமக்கித்யாதி₃) நமக்கென்று அநுபவ₄ாவ்யன் ஶ்ரிய:பதி

உரை:— பிறர் இடம் பார்த்து அறிந்து விநியோகம் கொள்ளவேணும் என்று கருதும்படி, தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கிற மஹாத₄நத்தை, து₃ர்வாஸநையாலே 'நமக்கு வேணும்' என்று அபி₄மாநித்துக்கொண்டு, ''न बिभेति'' (ந பி₃பே₄தி) என்னும் விஷயத்தைப் பற்றினுப்போலே அறிவுகெட்டு நிர்ப்ப₄ரனுயிராதே, தந்தாமுக்கு அறிந்த போதோடு அறியாதபோதோடு வாசியற ஸர்வகாலத்திலும், நித்யமான அபாஶ்ரயமெ(ா)ன்று சாஸ்த்ராப்₄யாஸாதி₃

வ்யா:—(இருநிதியம்) பெருஞ்செல்வம். ''கொள்ளென்று கிளர்ந் தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு'' [திருவாய் 4-9-4] என்கிற படியே ஞானிகளுடைய வெறுப்புக்கு விஷயமாயிருப்பது. (எமக்கு என்று) இவன் இவ்வுலகில் தோன்றியபோது இதைக் கொண்டு வந்ததுமில்லை; போகும்போது கொண்டு செல்லப் போவதுமில்லை; இடையிலே சிலகாலம் உள்ள ஸம்பந்தத்தாலே 'என்னுடையது, என்னுடையது' என்று இவன் அஹங்கரிப்ப தற்கே விஷயமாயிருக்கிறது இப்பெருஞ்செல்வம். (எமக்கு என்று) உள்ள சிலகாலமும் இவனுக்கேயாயிருப்பதுமன்று இது; சமயம் பார்த்துப் பிறரால் பல வழிகளில் தமக்கு ஆக்கிக்கொள்ளலாம் படி இவனுக்கும் பிறர்க்கும் பொதுவாகவேயிருப்பது இது. அப்படி யிருப்பதை இவன் தனக்கே உரியது என்று நினைக்கிறன் அநாதி பாபவாஸனையாலே. நல்லவழியிலே செலவிட்டு இம்மைமறுமை களிலே நற்பயன்களை அடைந்தாலாவது இது நமக்கு நற்பயனை விளைத்தது என்னும் திருப்தி ஏற்படலாம். அதையும் செய்யாமல் பூதம்போலே இதைக்காத்து நின்று 'எனக்கு எனக்கு' என்று எண்ணுவதையே பெரும்பேருகக்கொள்கின்றன். 'எனக்கு' என்று எண்ணுவதோடு நிற்கிருனே? (ஏமாந்திராதே) ''ந பி₃பே₄தி குதஶ்சந'' [தை-ஆ9] என்கிறபடியே பரமபுருஷனைப்பற்றியிருப்ப வன் எதைக்கண்டும் பயப்படாமலிருப்பதுபோலே, 'இச்செல்வத்தை யுடைய நமக்கு ஒரு ப₄யமுமில்லை; நமக்கு நிகரில்லை' என்று இறுமாந்திருக்கிறன்; இப்படியெல்லாம் இருக்காதீர்கள் என்கிறர் சேதனர்களுக்கு நன்மையையே விரும்பும் ஆழ்வார். விடத்தக்கதைக்

யென்னும் நெஞ்சைப் படைத்து அம்மிதுநத்துக்கு வாசகமான சப்தத்தைச் சொல்லுகை வாகிந்த்ரியத்துக்கு ஓத்தாவது. 38.

39. ஓத்தின் பொருள்முடிவு மித்தனையே உத்தமன்பேர்
ஏத்துந் திறமறிமி னேழைகாள்—ஓத்ததனை
வல்லீரேல் நன்றதனை மாட்டீரேல் மாதவன்பேர்
சொல்லுவதே யோத்தின் சுருக்கு.

உத்தமன்பேர்—புருஷோத்தமனான எம்பெருமானுடைய திருநாமங்களைக்கொண்டு, ஏத்தும் திறம்—துதிக்கும் செயலாகிற, இத்தனையே—இவ்வளவே, ஓத்தின்பொருள்முடிவும்—வேதப்பொருளின் ஸாரமாகும்; ஓத்து அதனை வல்லீரேல் — வேதப்பொருளை அறியவல்லவர்களானால், அறிமின்—அறிந்து

---

களாலே அறிந்து 'இனி நமக்குக் காலதத்வமுள்ளதனையும் ஶ்ரிய:பதியானவனே ஆஶ்ரயணீயனும் ப்ராப்யனும் என்று துணிந்திருக்கும் மநஸ்ஸையுடையராய், அதுக்குமேலே அந்த ஶ்ரிய:பதியானவனுடைய அச்சேர்த்திக்கு வாசகமான திருநாமங்களைச் சொல்லுகையே வாகிந்த்ரியத்தால் உச்சரிக்கப்படும். 38.

---

கூறினார் இதுவரையில்; கைக்கொள்ளத்தக்கதைத் காட்டுகிறார் இனி. (தமக்கு என்றும் சார்வம் அறிந்து) சேதனர் அனைவர்க்கும், அறிந்த நிலையோடு, அறியாத நிலையோடு வாசியில்லாமல் எல்லாக்காலத்திலும் நிரந்தரமான பற்றுக்கொம்பாயிருப்பவன் பரமபுருஷனே என்று ஶாஸ்த்ரங்களைக்கேட்பது, ஆசார்யோபதேசம் முதலானவற்றாலே அறிந்து, (நமக்கு என்றும் மாதவனே என்னும் மனம் படைத்து) அறிந்தவளவோடு நில்லாமல், "இனி நமக்கு எல்லாக்காலத்திலும் ஸ்ரீமந்நாராயணனே தாரகபோஷகபோக்யங்களாகவும், உபாயோபேயங்களாகவும் இருப்பவன்" என்னும் துணிவையுடைய மனத்தையுடையவராகவேணும். (மற்று...) "மந: பூர்வோ வாகுத்தர:" [மனம் முதலில் நினைத்ததை வாக்கு சொல்லுகிறது] என்கிறபடியே இத்துணிவானது மனத்தளவில் நில்லாதாகையாலே, வாக்கின் தொழிலைக் கூறுகிறது. (அவன் பேர் ஓதுவதே நாவினால் ஓத்து) அவனும் அவளுமாகச் சேர்ந்திருக்கும் அச்சேர்த்தியைக் கூறும் மாதவன், ஸ்ரீதரன் முதலான பெயர்களைக் கூறுவதே நாவுக்கு வேதம்போலே ஓதத்தக்கது. ஓத்து—வேதம் 38.

கொள்ளுங்கள்; ஏழைகாள் — அறிவிற்குறைந்தவர்களே! நன்று அதனை மாட்டீரேல் — நன்றாக அப்பொருளை அறிய வல்லமையற்றவராகில், மாதவன்பேர்சொல்லுவதே-ஸ்ரீமந் நாராயணனின் திருநாமங்களை உச்சரிப்பதே, ஓத்தின் சுருக்கு- வேதத்தின் சுருக்கம்; அறிமின் — இதையாவது அறியுங்கள்.

*பெரி அவ:— (ஓத்தின் பொருள்) இந்த்₃ராதி₃களையும் ஆஶ்ரயணீயராகச் சொல்லாநிற்கச்செய்தே நீரும் ப்ராமாணிகராயிருந்து லக்ஷ்மீபதியையே ஸமாஶ்ரயணீயனென்று சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்: உங்களுக்கு அபி₄த₄ாநவ்ருத்தியேயாய், தாத்பர்யஜ்ஞாநமில்லாமையாலே சொல்லுகிறிகோள்; தாத்பர்யஜ்ஞாநமுண்டாகில் அவர்களைச் சொல்லுகிறது விபூ₄தித்வேந; விபூ₄திமானாய் ஸமாஶ்ரயணீயனாயிருப்பான் லக்ஷ்மீபதியே என்றிருங்கோளென்கிறார்.

வ்யா:— (ஓத்தின்பொருள்முடிவு மித்தனையே) வேதா₃ர்த்த₂த்தின் முடிவுமிதுவே. அதேதென்னில், (உத்தமன் பேரேத்தும்திறம்) எல்லாத்துக்கும் ப்ரகாரியாயிருந்துள்ளவனுடைய திருநாமத்தை யேத்துகை. (அறிமினேழைகாள் ஓத்த

*39. அவ:— "வேதங்களில் இந்திரன் முதலான மற்றும் பல தேவதைகளையும் ஆஶ்ரயிக்கத்தக்கவர்களாகச் சொல்லியிருக்க, வைதி₃கரான நீர், மாதவன் ஒருவனே பற்றத்தக்கவன் என்று கூறுவது எப்படி ஒட்டும்?" என்னும் கேள்வியெழ, "இப்படிக் கேட்பவர்கள் வேதத்தில் மேலெழத்தோன்றும் பொருளையே பற்றிக் கொண்டு, அதன் உட்பொருளை அறியாமல் இடர்ப்படுகிறார்கள். மற்ற தெய்வங்களைச் சொல்லுவது அவர்கள் அவனுடைய செல்வமாயிருப்பதாலே; அவர்களைச் செல்வமாக உடையவனாய், முமுக்ஷுக்களால் பற்றத்தக்கவனாயிருப்பவன் அவன் ஒருவனே என்பதே வேதத்தின் உட்பொருள்" என்கிறார்.

வ்யா:— (ஏழைகாள்) வேதப்பொருளறியாத தரித்திரர்களே! (ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே) வேதா₃ர்த்த₂நிஷ்கர்ஷம் இவ்வளவே. அது எது? என்னில்: (உத்தமன் பேர் ஏத்தும் திறம்)

* இப்பாசுரத்துக்குப் பெரியவாச்சான் பிள்ளையும், அப்பிள்ளையும் வெவ்வேறு விதமாக உரையிடுகையால், நம்மாலும் இரண்டு விதமாக உரையிடப்படுகிறது.

தனை வல்லீரேல்) ஸாங்க₃ாத்₃யயநத்தைப் பண்ணி. "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" (வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:) என்கிறபடியே வல்லீர்களாகில் அறியுங்கோள். (நன்றதனை மாட்டீரேல்) அப்படி அறியமாட்டிகோளாகில்; (மாதவனித் யாதி₃) ஓத்தினுடைய ஸங்க்₃ரஹம் லக்ஷ்மீபதியினுடைய திரு நாமத்தைச் சொல்லுகை. அவன் ப்ரஸாத₃மடியாகப் பிறந்த ஜ்ஞாநமுடையார் சொன்னத்தை அர்த்த₂மென்றிருங்கோள்39.

---

எல்லா தெய்வங்களையும் தனக்கு அங்க₃மாகக் கொண்டிருக்கும் திருமாலுடைய திருநாமத்தை ஏத்துகை என்பதே அது. இந்திரன் முதலான அந்தந்த வேத சப்தங்களெல்லாம், நேரேயும், அந்தந்த தேவதைகளுக்கு இவன் அந்தர்யாமியாயிருப்பதாலேயும் இவனையே குறிக்கின்றன என்பதே வேத₃ார்த்த₂ஸாரம்.

"வேத₃ாக்ஷராணி யாவந்தி படி₂தாநி த்₃விஜாதிபி₄: |
தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி ந ஸம்ஶய: ||"

[அந்தணர்களால் எத்தனை வேதாக்ஷரங்கள் படிக்கப்படுகின்றனவோ, அத்தனை ஹரிநாமங்கள் கீர்த்திக்கப்பட்டதாகிறதென்பதில் ஐயமில்லை.] என்று உபப்₃ரும்ஹணங்களிலும் கூறப்பட்டதன்றோ. இதை உணர்த்துவதற்கேயன்றோ அந்தணர்கள் அனைவரும் வேதத்தைத் தொடங்கும்போதும், முடிக்கும்போதும், "ஹரி: ஓம்" என்று ஓதுகிறார்கள். (ஓத்து அதனை வல்லீரேல் அறிமின்) அங்கங்களோடு கூடிய வேதத்தை அத்யயனம் செய்து மீமாம்ஸாந்யாயங்களையும், தர்க்கங்களையும், உபப்₃ரும்ஹணங்களையும் கொண்டு, "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீதை 15-15] [எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே] என்று கண்ணன் சொன்னதே வேத தாத்பர்யம் என்பதை அறியவல்லவர்களாகில், அறியுங்கள். (ஏழைகாள் நன்றதனை மாட்டீரேல்) அத்தனை அறிவுச்சிறப்பைப் பெற்றிராத ஏழைகளாயிருக்கையாலும், அதி₄காரமின்மையாலும் நல்லதான அவ்வேதத்தின் தாத்பர்யத்தை அறியமாட்டீர்களாகில். (மாதவன் பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு அறிமின்) லக்ஷ்மீ பதியின் பெயரைச் சொல்லுவதே வேதத்தின் சுருக்கம் என்று அறிவாளிகள் சொல்லுவதையாவது அறிந்து அநுஷ்டியுங்கள். உங்களுக்கு அறிவில்லையாகிலும், அவனுடைய அருளாலே அறிவுபெற்றவர்களுடைய வார்த்தையைக் கொண்டாவது திருமாலான அவனுடைய பெயரைச் சொல்லுவதே வேத₃ஸாரம் என்று அறியுங்கள். 39.

அவ:— நாவினால் ஓதுகையாவதுதான்ஏதென்ன; ஸகல வேத₃ஸங்க்₃ரஹமான திருமந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டு வேதா₃ந்தத்திற் சொல்லுகிற மர்யாதை₃யாலே ப₄க்தி மார்க்க₃த்திலே நின்று ஆஶ்ரயியுங்கோள் என்றும் அது மாட்டாதார் த்₃வயத்திற் கட்டளையிலே ஶ்ரிய:பதியானவன் திருநாமத்தைச் சொல்லிஆஶ்ரயியுங்கோள் என்றும் இரண்டு வகையாகஆஶ்ரயணத்தை அதி₄காரானுகு₃ணம் விதி₄க்கிறார்.

உரை:— வகுத்த விஷயத்தை இகழ்ந்து இதரவிஷயத்தில் ப்ரவணராய்த் திரிகிற சபலர்காள்! ஸாங்க₃வேதா₃த்₄யயநம் பண்ணி அதிற்சொல்லுகிற அர்த்த₂ங்களையுமறிந்து அறிந்தபடியே ஸாக்ஷாத்காரரூபமான ப₄க₃வத்₃ப₄க்தியைப் பேற்றுக்கு உபாயமாக அநுஷ்டி₂க்கவல்லிகோளாகில்.

---

இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். இனி, அப்பிள்ளையுரையின்படி இப்பாசுரத்தின் பொருள் விவரிக்கப்படுகிறது.

39. அவ:— "நாவினால் ஓத்து" என்று சென்ற பாசுரத்திற் சொன்னது இரண்டு வகைப்பட்டதாகும் என்று விவரித்துக் காட்டுகிறார். ஸகலவேத₃ஸங்க்₃ரஹமான திருமந்திரத்தைச் சொல்லிக்கொண்டு, வேதாந்தங்களில் சொல்லுகிற முறையிலே ஸாத₄நப₄க்தியைக்கொண்டு அவனை அடையலாம் என்றும், அந்த ப₄க்தியை அநுஷ்டிக்கமாட்டாதார், த்₃வயத்திற் சொன்னபடியே ஸ்ரீமந்நாராயணனின் பெயரைச் சொல்லி அவனை சரணமடையலாம் என்றும், இரண்டுவிதமான அதிகாரிகளுக்கு அனுகுணமாக நாவினால் பேர் ஓதுவதை இரண்டு விதமாக விவரிக்கிறார்.

வ்யா:— (ஏழைகாள்) அடைதற்குரிய பகவத் விஷயத்தைவிட்டு சப்தாதி விஷயங்களில் மண்டி நிற்கும் அறிவுகேடர்களே! (ஓத்து அதனை வல்லீரேல்) அங்கங்களோடு கூடிய வேதங்களை அத்₄யயனம் செய்து, அதிற்சொல்லுகிற அர்த்த₂ங்களையும் அறிந்து அதில் பரக்கச் சொல்லப்பட்டிருக்கிறதாய், பரமபுருஷனை இடைவிடாமல் நேரே காண்பதாகிற ஸாத₄னப₄க்தியை அவனை அடைய உபாயமாக அநுஷ்டி₂க்க வல்லீராகில், 'வல்லீரேல்' என்னும் பதம் வேதத்தின் அத்யயனத்தை மாத்திரமல்லாமல், அதன் அர்த்த₂ ஜ்ஞானத்தையும், அவ்வர்த்தத்தை அநுஷ்டிப்பதையும் குறிக்கிறது. அர்த்த₂ ஜ்ஞானமும், அநுஷ்டா₂னமும் பிறந்தாலன்றோ வேதா₃த்₄யயனம் பயனுடையதாய், நிறைவுபெறுகிறது.

ஸர்வவித₄ரக்ஷகனாய், ஸர்வப்ரகாரியான புருஷோத்தமனுடைய ஸர்வரக்ஷகத்வாதி₃யான ஸகலார்த்த₂ங்களுக்கும் வாசகமான திருமந்த்ரமாகிற திருநாமத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணும் ப்ரகாரமான இத்தனையே வேத₃த்திற் சொல்லுகிற அர்த்த₂ங்கள் எல்லாவற்றிலும் தாத்பர்யமாக நிர்ணயித்துத் தலைக்கட்டின அம்ஶம். இப்படி நன்றாக அத்தை அறியமாட்டிற்றிலிகோளாகில், ஶ்ரிய:பதியினுடைய திருநாமத்தைச் சொல்லுகையே

---

(உத்தமன்பேர் ஏத்தும் திறமறிமின்) அனைவரையும், எல்லாவிதத்திலும் ரக்ஷிப்பவனாய, அனைத்தையும் தனக்கு ப்ரகாரமாகக் கொண்டவனாயிருக்கையாலே உத்தமபுருஷனென்றும், புருஷோத்தமனென்றும் கோஷிக்கப்படும் அவனுடைய ஸர்வரக்ஷகத்வம், ஸர்வசரீரித்வம் முதலான குணங்களைச் சொல்லும் திருமந்திரமாகிற திருநாமத்தை அநுஸந்திக்கையாகிற அந்த பக்தி யோகத்தை அறிந்து அநுஷ்டியுங்கள். பக்திக்கு அங்கமான அஷ்டாக்ஷரஜபத்தைக் கூறுவதன் மூலம் பக்தியைக்காட்டுகிறார். "கர்மஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவர்களுக்குவிரோதியைப்போக்கிஅவற்றைத்தலைக்கட்டிக் கொடுக்கும்" [ஸூத்ரம்-20] என்று முமுக்ஷுப்படியிலே திருமந்திரமானது பக்திக்கு அங்கமாயிருப்பதென்பதைக் காட்டினாரன்றோ பிள்ளையுலகாசிரியர். (ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே) இதுவே வேதத்திற் சொல்லுகிற எல்லாப்பொருள்களிலும் ஸாரமாக முடிவுகட்டப்பெற்ற அர்த்தம். (நன்றதனை மாட்டீரேல்) உங்களுடைய அஜ்ஞாநாஶக்திகளாலோ, ஸ்வரூபஜ்ஞானத்தாலோ, பக்தி பாரவஶ்யத்தாலோ அந்த பக்தியோகமானது உங்களுக்கு நல்லதென்று நீங்கள் நினைக்கமாட்டீர்களானால். "இதில் ப்ரபத்தி பண்ணுமர் அதிகாரிகள் மூவர். அஜ்ஞரும், ஜ்ஞாநாதி₄கரும், ப₄க்திபரவஶரும். அஜ்ஞானத்தாலே ப்ரபந்நர் அஸ்மதா₃தி₃கள்; ஜ்ஞாநாதி₄க்யத்தாலே ப்ரபந்நர் பூர்வாசார்யர்கள்; ப₄க்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நர் ஆழ்வார்கள்... 'அவித்₃யாத:' என்கிற ஶ்லோகத்திலே இம் மூன்றும் சொல்லிற்று. 'இத₃ம் ஶரணமஜ்ஞாநாம்'" [ஸூத்ரம் 41...60] என்னும் ஸ்ரீவசநபூஷண ஸூத்ரங்களும், அவற்றின் வ்யாக்யானமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. (மாதவன் பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு) ஸ்ரீமந்நாராயணனின்

40. சுருக்காக வாங்கிச் சுலாவிநின்று ஐயார்
நெருக்காமுன் நீர்நினைமின் கண்டீர் திருப்பொலிந்த
ஆகத்தான் பாதமறிந்தும் அறியாத
போகத்தா லில்லை பொருள்.

---

அந்த வேதப்பரப்பெல்லாவற்றுலுங்கூட ஸங்க்ஷேபித்துத் தலைக்கட்டு; இவ்வர்த்தூம் பூகவத்ப்ரஸாதூத்தாலேதெளியக் கண்ட நான் சொன்ன வார்த்தையாகையாலே இத்தைத் தப்பாது என்று விஶ்வஸித்து அறியுங்கோள். இத்தைச் 'சுருக்கு' என்கையாலே கீழ்ச் சொன்னது வேதத்திற் பரக்கச் சொன்ன பொருள் என்று தோற்றுகிறது. 39.

---

பெருமையைச் சொல்லும் த்வயத்தை அநுஸந்திப்பதே வேதப் பரப்பு அனைத்தின் சுருக்கமாகும். (மாதவன் பேர்) மா-லக்ஷ்மி; மாதவன் லக்ஷ்மீநாதன். 'மாதவன் பேர்' என்று "ஸ்ரீமந்நாராயண" என்று தொடங்கும் த்வயத்தைக் காட்டுகிருர். (சொல்லுவதே) மாநஸப்ரபத்தியே முக்யமாலும், வாக்காலே சொல்லுவதற்கும் பலன் கொடுக்கக்கூடிய ஔதார்யத்தையுடையவன் பரமபுருஷன் என்று காட்டுகிருர். (ஓத்தின் சுருக்கு) வேதத்தில் அதிரஹஸ்ய மாகச் சுருங்கச் சொல்லப்பட்டது இந்த ப்ரபத்திநிஷ்டையே. இதைச் சுருங்கச் சொல்லப்பட்டதென்கையாலே, கீழே சொன்ன த்யானம், வேதநம், உபாஸனம் எனப்படும் பக்தியோகம் வேதத்தில் விரிவாகச் சொல்லப்பட்டது என்று உணர்த்துகிருர். (ஓத்தின் பொருள் முடிவு மித்தனையே) இதுவே வேதத்திற் சொல்லுகிற எல்லாப்பொருள்களிலும் ஸாரமாக முடிவுகட்டப்பெற்ற அர்த்தம். "தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" [தை-நா] [ஆகையால், 'ந்யாஸம்' எனப்படும் சரணாகதியை எல்லா உபாயங்களிலும் சிறந்ததென்று கூறுகின்றனர்.] என்று வேதாந்தத்தின் தலையான பாகமான நாராயணவல்லியும் கூறி முடித்ததன்றே. (அறிமின்) வேதப்பரப்பிலே அதிரஹஸ்யமாகப் பொதிந்து கிடக்கும் இவ்வர்த்தத்தைக் காண்பது அரிது; பரமபுருஷனுடைய அருளாலே இதைத் தெளிவாகக் கண்ட நான் சொன்ன வார்த்தையாகையாலே 'இது ஒருநாளும் தவருது' என்னும் நம்பிக்கையோடு இதை அறியுங்கள். 39.




ஐயார் கோழையானது, சுருக்காக வாங்கி-சரீரத்தைச் சுருங்கச்செய்து, சுலாவி நின்று – உடம்பு முழுதும் சூழ்ந்து கொண்டுநின்று, நெருக்கா முன் — துன்புறுத்துவதற்கு முன்பே, திரு பொலிந்த ஆகத்தான் பாதம்—பிராட்டியாலே விளங்குகின்ற திருமார்பையுடைய பெருமானுடைய திருவடிகளை, நீர் நினைமின் கண்டீர்-நீங்கள் நினையுங்கள்; அறிந்தும்-பகவத்விஷயத்தை அறிந்தவர்களாயிருந்தும், அறியாத-அறியாதவர்களாகவே உங்களைச் செய்யவல்ல, போகத்தால் — சப்தாதி விஷயங்களை அனுபவிப்பதால், பொருள் இல்லை — ஒரு பயனுமில்லை.

பெரி அவ: (சுருக்காக) நீங்கள் நிற்கிற நிலைபொல்லாது; கடுக ஶ்ரிய:பதியினுடைய திருவடிகளை நினையுங்கோள்.

வ்யா:— (சுருக்காகவித்யாதி) பஞ்சதாவான ஶரீரத்தைச் சுருங்கவலித்து உடம்பெங்கும் தானேயாம்படி வ்யாபித்து.

---

அவ :— இப்படியானபின்பு ஸமஸ்தவேதங்களுக்கும் தாத்பர்யபூதனை ஶ்ரிய:பதியைச் சரமதஶாபந்நராவதற்கு முன்னே கடுக ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை :— ஶரீரமெங்குமொக்கப் பூர்வத்தில் வ்யாபித்து நின்ற ஶ்லேஷ்மாவானது ஶரீரவிஶ்லேஷதஶையிலே கண்டஸ்தானத்தில் வந்து செறியத்தக்கதாகச் சுருங்க

---

40. அவ: — "முன் பாசுரத்தில் சொன்னபடியே எல்லாவேதங்களுக்கும் பொருளாயிருப்பவன் ஸ்ரீமந்நாராயணன்; உங்கள் ஆயுளோ மிகக் குறைவாயிருக்கிறது; ஆகையால் அந்திமகாலம் வருவதற்குள் அவனுடைய திருவடிகளைப் பற்றுங்கள்" என்று விஷயங்களிலே மண்டியிருக்கும் ஸம்ஸாரிகளைப் பார்த்துக் கூறுகிறார்.

உரை :— (சுருக்காக வாங்கி) பஞ்சபூதங்களின் கூட்டரவாய் வாலிபத்திலே பெருத்து நிற்கும் சரீரத்தைச் சுருங்கும்படிவலித்து, (சுலாவி நின்று) உடம்பெங்கும் தானேயாம்படி வியாபித்து

ஶ்லேஷ்மாவானது நெருக்குவதுக்கு முன்பே நினையுங்கோள். அர்த்த2ஸுக2ம் ஸுக2மன்றோவென்னில்; உத்3தே3ஶ்யத்தையறியாதபடி அநர்த்த2த்தைப்பண்ணும். (திருப்பொலிந்தவித்யாதி3) ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை அறிந்திருக்கச்செய்தே அறிந்ததாகவொட்டாத போகத்தால். (அறிந்து மறியாத

---

வலித்திழுத்துக்கொண்டு, வாக்3வ்யவஹாரயோக்3யதையில்லாதபடி மிடற்றை அடைத்து மிறுக்குப்படுவதுக்கு முன்னே, பெரியபிராட்டியாராலே ஸம்ருத்3த4மாய் விளங்கா நின்றுள்ள திருமேனியையுடையனான ஸர்வேஶ்வரன் திருவடிகளை நீங்கள் அநுஸந்தி4த்துக்கொண்டு நில்லுங்கிடிகோள். பகவத்விஷயத்தை அறிந்துவைத்தும் அறியாதார்

---

நின்று. (ஐயார் நெருக்காமுன்) 'ஶ்லேஷ்மா' எனப்படும் கோழையானது உங்களைச் சித்திரவதை செய்வதற்கு முன்னே. இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். (சுலாவி நின்ற ஐயார்) ஆரோக்யநிலையில் சரீரம் முழுவதிலும் ஸமமாகப் பரவியிருக்கும் கோழையானது (சுருக்காக வாங்கி நெருக்காமுன்) சரீரம் உயிரைவிட்டுப் பிரியும்போது கழுத்திலே வந்து சுருங்கிச்சேர்ந்து வலித்து இழுத்துக்கொண்டு வாய் பேசமுடியாதபடி துன்புறுத்துவதற்கு முன்னே. இது அப்பிள்ளை நிர்வாஹம். (ஐயார் நெருக்காமுன் நீர் நினைமின்) "ப்ராணப்ரயாணஸமயே கப2வாத பித்தை: கண்ட2ாவரோத4நவிதௌ4 ஸ்மரணம் குதஸ்தே" [முகுந்தமாலை] [உயிர் போகும்காலத்தில் கபம், வாயு, பித்தம் முதலியவற்றால் கழுத்து அடைபட்டு நிற்கும்போது உன்னை எப்படிச் சிந்திக்க முடியும்?] என்கிறபடியே அந்திமகாலத்தில் கழுத்தைக் கபம் அடைக்கும்போது நினைக்கமுடியாதாகையாலே, இப்போதே நினையுங்கள். எதை நினைப்பது? எனில்: (திருப்பொலிந்த ஆகத்தான் பாதம் நீர் நினைமின் கண்டீர்) திருவினால் விளங்கி நிற்கும் திருமார்பையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை நீங்கள் நினைக்கவேண்டுமன்றோ. (திருப்பொலிந்த ஆகத்தான்) "ஶ்ரத்3த4யா தே3வோ தே3வத்வமஶ்நுதே" [சிரத்தை எனப்படும் லக்ஷ்மீ தேவியினால் தேவனான நாராயணன் தேவனாயிருக்கும் தன்மையை அடைகிறான்] "உத்தமராஜகந்யாயா ஸமேயிவாந் அதீவராமः ஶுஶு பே4 விபு4: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர:" [ரா-பா 77-39] [தேவர்

போகத்தாலில்லை பொருள்) பொல்லாதென்றிருக்கச் செய்தே கைவிடப்போகாத அர்த்த2ஸுக2த்தால் ப்ரயோஜநமில்லை என்றுமாம். (நெருக்காமுன் திருப்பொலிந்த வாகத்தான் பாதம் நீர் நினைமின்கண்டீர்) "நினைமின்" என்கிறவிது இரண்டிடத்திலும் கிடக்கிறது. 40.

---

கணக்காம்படி பண்ணக்கடவ ஶப்3த3ாதி3போ4க3ங்களால் வரக்கடவ ப்ரயோஜநம் இல்லை. "சுலாவிநின்ற ஐயார் சுருக்காகவாங்கி நெருக்காமுன் திருப்பொலிந்த ஆகத்தான் பாதம் நீர் நினைமின் கண்டீர்" என்று அந்வயம். 40.

---

கோனாய் ஸர்வேஶ்வரனான விஷ்ணுவானவர் ஸ்ரீதேவியாலே விளங்கி நிற்பதுபோலே, உத்தமராஜகந்யையான அந்த ஸீதையோடு கூடியவனாய் ராமபிரான் மிக விளங்கிநின்றான்.] "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற"[திருப்பல் 2] "திகழ்கின்ற திருமார்பில் திருமங்கைதன்னோடும் திகழ்கின்ற திருமாலார்"[திருவாய் 10-6-9] என்கிறபடியே திருவெனப்படும் லக்ஷ்மீதேவியினால் மிக விளங்கி நிற்கும் திருமார்பையுடையவன். நம்மை நெருங்கவிடுகைக்குப் புருஷகாரபூ4தையுண்டு என்று கருத்து. (பாதம் நீர் நினைமின்) கைக்குழந்தைக்குத் தாய்முலைபோலே மோக்ஷபூ4தனுக்கு போ4க்3யமான திருவடிகளை நினையுங்கள். 'இவ்வுலகில் நாங்கள் அநுபவிக்கும் ஶப்தாதி விஷயங்களால் உண்டாகும் ஸுகமே எங்களுக்கு இனியதாயிருக்கிறதே' என்ன -(பாதம் அறிந்தும் அறியாத போகத்தால் பொருள் இல்லை) ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளின் பெருமையை அறிந்திருக்கச் செய்தே, அறியாதாரைப்போலே உங்களைச் செய்யவல்ல விஷயபோகத்தால் ஒரு பயனுமில்லை. (அறிந்தும் அறியாத போகத்தால் பொருள் இல்லை) இவ்விஷயஸுகம் பொல்லாதது என்று அறிந்திருந்தும், அதைக் கைவிட முடியாதபடியிருக்கும் விஷயபோகத்தால் பயனில்லை என்றுமாம். 'அறியாத' என்று அறிவின் பயனான விடுகையைச் சொல்லுகிறது. (நினைமின்) விஷயபோகத்தால் பயனில்லையென்னும் இதையும் நினையுங்கள், விஷயபோகத்தைக் கைவிட்டுத் திருப்பொலிந்த ஆகத்தான் பாதத்தை சரணடையுங்கள் என்று கருத்து. 40.

41. பொருளா லமருலகம் புக்கியல லாகாது
அருளா னறமருளு மன்றே—அருளாலே
மாமறையோர்க் கீந்த மணிவண்ணன் பாதமே
நீமறவேல் நெஞ்சே நினை.

அமருலகம்—தேவருலகத்தை, பொருளால்-தனத்தால், புக்கு இயலல் ஆகாது—போய்ச் சேர முயல்வது தகாது; அருளான்—கருணையே உருவான எம்பெருமான், அறம்—புண்ணியத்தின் பயனான அவ்வுலகத்தை, அருளும் அன்றே—தன் க்ருபையாலே கிடைக்கச்செய்வனும்; அருளாலே—கிருபையினாலே, மா மறையோர்க்கு பரமவைதிகர்களுக்கு, ஈந்த—தன்னையே அளித்த, மணி வண்ணன் பாதமே—நீல மணி நிறத்தவனான எம்பெருமானது திருவடிகளையே, நெஞ்சே—நெஞ்சமே!, நீ மறவேல்—நீ மறவாதே; நினை—தியானித்துக்கொண்டிரு.

வ்யா:-(பொருளித்யாதி₃) பொருளாலே ஸ்வர்க்க₃த்தில் புக யத்நம் பண்ணப்போகாது. (அருளாலித்யாதி₃) க்ருபையாலே, இவை ஸ்வர்க்க₃த்தை ஆசைப்பட்டதாகில் ஸ்வர்க்க₃த்தைக்

---

அவ:—கீழ், பிறர்க்குத் தாம் உபதேசித்த உபதே₃சம் அவர்கள் திருந்துகைக்கு உடலன்றிக்கே, தம் வைசத்₃யத்துக்கு உடலாய்த் தம் திருவுள்ளத்தைக் குறித்து 'ச்ரமஹரமான ஸர்வேச்வரன் திருவடிகளை நீ முந்துற முன்னம் மறவாதே கிடாய்!' என்கிறார்.

உரை:— சாஸ்த்ரஸித்₃த₄மாகையாலே மோக்ஷதசதா பாதி இதுவுமொரு புருஷார்த்த₂மன்றோ என்று புத்தி

---

41. அவ:—முன் பாசுரங்களில் தாம் பிறர்க்கு உபதேசித்தது அவர்கள் திருந்துவதற்கு உறுப்பாகாமல் தம் மனத்தெளிவுக்கே உறுப்பாகையாலே, தம் திருவுள்ளத்தைக் குறித்து, "கண்டார் களைப்பை ஆற்றும் ஸர்வேச்வரனுடைய திருவடிகளை நீ முதல் முதலில் மறவாமலிரு" என்கிறார்.

கொடுப்போமென்றிருக்கும். (அருளாலே இத்யாதி₃) தன் க்ருபையாலே தன்னைக் கொடுக்குமவன் திருவடிகளை மற

---

பண்ணி, ப்₃ரஹ்மாதி₃லோகங்களிலே புக்கு அநுப₄விக்க வேணுமென்று அதுக்கீடாக யத்நிக்லாகாது; அதுக்கு அடி நிரவதி₄க க்ருபாவானான ஸர்வேஶ்வரன் த₄ர்மப₂லமான ஸ்வர்க்கா₃தி₃களைத் தந்தருளுமவனன்றோ. ஆனபின்பு, ஸம்ஸாரபோ₄கங்களில் விரக்தராய்த் தன்னைப்பெற்று அநுப₄

---

வ்யா:—(பொருளால் அமருலகம் புக்கு இயலல் ஆகாது) 'அர்த்தம்' [பொருள்] எனப்படும் பணத்தாலே பிரமன் முதலான தேவர்களின் உலகத்தையோ, நித்யஸூரிகளின் உலகமான பரமபதத்தையோ பெற விரும்பி முயற்சி செய்வது பயனற்றது. கீழ்ப் பாசுரத்தில் "போகத்தால் இல்லை பொருள்" என்று காமபுருஷார்த்தத்தால் பயனில்லை என்றார். இங்கு அர்த்தம் என்னும் புருஷார்த்தத்தாலும் பயனில்லை என்கிறார். 'அமரருலகம்' என்பது 'அமருலகம்' என்று கிடக்கிறது. ப்ரஹ்மாதி லோகங்களைக் கால்கடைக் கொண்டிருக்கும் ஆழ்வார் 'அமருலகம் புக்கு' என்று அதை ஒரு பெரிய புருஷார்த்தமாகக் கூறுவரோவெனில்: 'அமருலகம்' என்பதை அயர்வறும் அமரர்களான நித்யஸூரிகளுடைய உலகம் என்று கொண்டால் இந்த தோ₃ஷமில்லை. ப்ரஹ்மாதிலோகமென்றே கொண்டாலும், "பொருளாலே ப்ரஹ்மாதிலோகங்களைக் கூடப் பெறமுடியாது" என்று கூறுவதன் மூலம் "மோக்ஷத்தைப் பெறவே முடியாது" என்று உணர்த்துவதாகக் கொள்ளவேண்டும். அன்றிக்கே, (பொருளால் அமருலகம் புக்கு இயலல் ஆகாது) என்று, "ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கையாலே மோக்ஷத்தைப் போலே இதுவும் ஒரு பொருள் (புருஷார்த்தம்) அன்றோ என்று எண்ணி பிரமன் முதலானோரின் உலகங்களிலே புகுந்து இன்புற நினைத்து அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வது பயனற்றது" என்று பொருளாகவுமாம். 'பொருளால் அமருலகத்தை ஸாதிக்க முடியாதெனில், இவற்றை ஸாதித்துத்தருவது எது?' எனில்: (அருளான் அறம் அருளும் அன்றே) எல்லையற்ற அருளே வடிவெடுத்தவனான ஸர்வேஶ்வரனன்றோ ஸ்வர்க்கமோக்ஷ ஸாத₄னங்களான த₄ர்மங்களையும், அவற்றின் ப₂லமான அந்த ஸ்வர்க்க₃ மோக்ஷங்களையும் அளிக்கிறான். அறம்—தர்மம்; இங்கு அஜஹல்லக்ஷணையாலே த₄ர்மப₂லத்தையும் குறிக்கிறது. அர்த்த₂ காம

வாதே கொள்; அவற்றை நினை. ''மாமறையோர்'' என்றது ''शुको मुक्तो वामदेवोऽपि मुक्तः''(ஶுகோ முக்தோ வாமதேவோபி முக்த:) என்றவர்கள்; ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகளென்றுமாம். ஸ்ரீமார்க்கண்டேயனென்றுமாம். 41.

---

விக்கவேணும் என்றிருக்கும் ஶுகவாமதேவாதிகளான பரமவைதிகருக்கு. 'ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:'' என்னும்படி தன்னுடைய க்ருபையாலே மோக்ஷத்தைக் கொடுத்தருளினவனாய், அவர்களுக்கு அநுபாவ்யமாய், நீலரத்நம்போலே பரமஹாரமான வடிவையுடைய ஸர்வேஶ்வரனுடைய — திருவடிகளையே அறிவுக்குப் பிறப்பிடமான நெஞ்சே! நீ மறவாதேகொள்; எப்போதும் நினைத்தபடியேயிரு. 'அறம்' என்று லக்ஷணையாலே தத்பலத்தை நினைக்கிறது; அன்றிக்கே, அர்த்தத்தை ஸாதநமாக்கிக் கொண்டு, நித்யஸூரிகள் நிரந்தராநுபவம் பண்ணி வாழுகிற பரமபதத்திலே போய்ப் புகவொண்ணாது; ஸ்வர்க்காபவர்க்கங்கள் இரண்டும் தன் க்ருபையாலே கொடுக்கும் ஸர்வேஶ்வரனை மறவாதேகொள் என்றுமாம்.

---

புருஷார்த்தங்கள் பயனற்றது என்றார் கீழே; தர்மமோக்ஷ புருஷார்த்தங்கள் அவனதீனம் என்கிறார் இங்கு. அருளான்— அருளே வடிவெடுத்தவன்; 'அருளால்' என்று பாடமான போது 'க்ருபையாலே (மணிவண்ணன்) அருளும்' என்று பொருள் இப்படியிருக்கும்போது தம் நெஞ்சு செய்யவேண்டிய காரியத்தைக் கூறுகிறார் இனி. (அருளாலே மாமறையோர்க்கீந்த மணிவண்ணன் பாதமே நீ மறவேல் நெஞ்சே) நெஞ்சே! பரமவைதிகர்களுக்கு அருளாலே தன்னையே கொடுக்கும் மணிவண்ணனுடைய திருவடிகளை நீ மறவாதே; (அருளாலே) அவன் கிருபையே நன்மைக்கெல்லாம் காரணமாயிருக்கையால் நீ அதையே பற்றுசாகக்கொள். (மாமறையோர்க்கு) ஸம்ஸார இன்பங்களில் பற்றற்றவராய், ஸர்வேஶ்வரனையே பெற்று அனுபவிக்கவேண்டும் என்னும் எண்ணச் சிறப்பையுடைய வைதிகர்களான சுகர் வாமதேவர் முதலானோர்க்கு. ராமாவதாரம் நெஞ்சில் ஓடுவதாகக் கொண்டால், அப்போது தண்டகாரண்யத்திலிருந்த மஹரிஷிகளைச் சொல்லுகிறதாகவுமாம்.

இப்போது இவ்வுடம்போடே அவனை மறவாதே அநுபவிக்கப்பெறில் பரமபதமும் அநபேக்ஷிதம் என்று கருத்து. அன்றிக்கே, ''மாமறையோர்க்கு'' என்று ஸ்ரீ தண்டகாரண்யத்தில் ரிஷிகளையாய், அவர்களுக்கு ''ददृशुर्विस्मिताकाराः'' (தத்ருஶுர் விஸ்மிதாகாரா:) என்னும்படி தன் விக்ரஹத்தை அநுபவிப்பித்தவன் என்றுமாம். ''மாமறையோற்கு'' என்று றகரவொற்றான போது மார்க்கண்டேயனுக்கு நித்யத்வம் கொடுத்தபடியைச் சொல்லுகிறது. 41.

---

(மாமறையோற்கு) என்று றகரவொற்றுப் பாடங்கொண்டால், பரமவைதிகனான மார்க்கண்டேயனை ப்ரளயத்திலே தன் வயிற்றிலே யிருத்தித் தன்னையும் தன் வயிற்றிலுள்ள உலகங்களையும் காட்டினதாக மஹாபாரதத்திலே சொல்லும் விருத்தாந்தத்தை நினைக்கிறாராகவுமாம். (அந்த) ''ஶுகோ முக்தோ வாமதேவோபி முக்த:'' [சுகர் முக்தியடைந்தார். வாமதேவரும் முக்தியடைந்தார்] என்று சாஸ்திரங்கள் கோஷிக்கும்படி அவர்களுக்கு மோக்ஷத்தை அளித்த. ராவணனாலே நலிவுபட்ட தண்டகாரண்ய ரிஷிகளுடைய துன்பமெல்லாம் நீங்கும்படி அவர்களுக்குத் தன்னைக் காட்டின.

''ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்|
தத்ருஶுர் விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந:||''

[ரா-ஆ 1-13]

[ராமனுடைய உருவ அமைப்பு, அழகு, மென்மை, அலங்காரம் ஆகியவற்றைக் காட்டில் வசிக்கும் ரிஷிகள் ஆச்சர்யத்தோடு கண்டனர்.] (மாமறையோற்கீந்த) பரமவைதிகனான மார்க்கண்டேயனுக்கு நித்யத்வம் கொடுத்துப் பிரளயகாலத்திலும் தன்னைக் காட்டின. (மணிவண்ணன்) கண்டார் களைப்பை ஆற்றும் நீலமணிபோன்ற நிறத்தையுடையவன். நிறம், சுடர், பெருவிலையனாயிருக்கை, முந்தானையிலே முடிந்து ஆளலாம் ஸௌலப்யத்தையுடைத்தாயிருக்கை முதலான தன்மைகளாலே நீலமணியை ஒத்திருப்பவன். (பாதமே நினை) மற்ற அவயவங்களிருக்க, நம் ஸ்வரூபத்துக்குச்சேர்ந்திருக்கும் அவனுடைய திருவடிகளையே நினைப்பாயாக. ஒருகால் நினைத்தால் போதுமோ? என்னில் (நீ மறவேல்) என்றுமே மறக்காமலிருப்பாயாக. இப்போது இவ்வுடம்போடு மறக்காதே அவனை அனுபவிக்கப்பெற்றோமாகில் நமக்குப் பரமபதமும் வேண்டியதில்லை என்று கருத்து. (நெஞ்சே) அறிவு பெருகுமிடமாயிருக்கும் நீ அறிவாளிகளுடைய செயலைச் செய்யவேணும். 41.

42. நினைப்பன் திருமாலை நீண்டதோள் காண
நினைப்பார் பிறப்பொன்றும் நேரார்— மனைப்பால்
பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்ப மெல்லாம்
துறந்தார் தொழுதாரத் தோள்.

திருமாலை — லக்ஷ்மீநாதனான எம்பெருமானை, நீண்ட தோள் காண நினைப்பன்-(அவனுடைய)இனிய திருத்தோள்களைக் கண்டு அநுபவிப்பதற்காக நினைக்கின்றேன்; நினைப்பார்– இப்படி நினைப்பவர்கள், பிறப்பு ஒன்றும்— எவ்வகைப் பிறப்பையும், நேரார்— அடையமாட்டார்கள்; அத் தோள்— அந்தத் திருத்தோள்களை, தொழுவார்—தொழுமவர்கள், மனைப்பால் பிறந்தார் பிறந்து எய்தும் பேர்இன்பம் எல்லாம்— ஸம்ஸாரத்தில் பிறந்தவர்கள் பிறப்பெடுத்ததனால் அடையக் கூடியசிற்றின்பங்களையெல்லாம், துறந்தார்-வெறுப்பவராவர்.

பெரி. வ்யா —(நினைப்பன் திருமாலை) அத்ரிபகவான் ஆஶ்ரமத்தில் பிராட்டியோடே வந்தாற்போலே நினையா நின்றேன். எதுக்கு நினைக்கிறதென்னில்; அவளோட்டைக்

அவ:— புறம்புள்ள ஸம்ஸாரபோகங்களைத் துறந்து அவனை அநுஸந்திக்குமவர்களிறே ஜந்மங்களில் ப்ரவேஶியாதார் என்கிறார்.

உரை:-இவ்வாத்மாவுக்குப்ரியஹிதங்கள் தானும்அவனுமாய்க்கொண்டு நடத்திக்கொண்டு போரும் பெரியபிராட்டியாரோடுகூடிக்கொண்டிருக்கும் ஸர்வேஶ்வரனை அவளோட்

42. அவ:— தம் நெஞ்சைக்குறித்து அவனை ஆஶ்ரயிக்கச் சொன்னார் சென்ற பாசுரத்தில் ; அவனை அடைந்தவர்கள் இப் பிறப்பில் ஸம்ஸாரத்திலுள்ள சிற்றின்பங்களைத் துறந்து, மேலும் பிறப்புக்களையும் அடையாமலிருப்பர்கள் என்கிறார் இதில்.

வ்யா:—( நினைப்பன் திருமாலை) தாயாகையாலே தன் குழந்தைகளுக்குப் பிரியத்தை அளிப்பதிலே ஈடுபட்டிருக்கும் பெரியபிராட்டியாரோடு கூடியவனாய், தந்தையாகையாலே ஹிதத்தையே அளிப்பவனான ஸர்வேஶ்வரனை நினைப்பேன். ஆக, இவனை

கலவியாலே போ₄க்₃யதை அளவிறந்த தோளேக்காண; ஸ்வர்க்கா₃தி₃களுக்கன்று. (நினைப்பார் பிறப்பொன்றும் நேரார்) அத்தோளை நினைக்குமவர்கள் ஸம்ஸாரத்தை ஒருநாளும்

---

டைக்கலவியாலே அளவிறந்தபோ₄க்₃யதையை உடைத்தான திருத்தோள்களைக் கண்டு அநுப₄விக்கைக்காக நினையாநின்றேன். இப்படி நினைக்குமவர்கள் இவ்வநுப₄வத்துக்கு இடைச்சுவரானதொரு ஜந்மத்தையும் கிட்டார்கள். அந்த அழகிய தோளைத் தொழுவார்கள் ஓரோ மனையிடத்துப் பிறந்தவர்கள் பிறந்து ப்ராபிக்கும் நிரவதி₄கஸுகமும் எல்லாவற்றையும் பரித்யஜித்தவர்களானவர்கள் கிடீர்! தோளழகுதானே மற்றுள்ள இன்பங்களைத் துறக்கும்படி பண்ணும் என்கை. பேரின்பமெல்லாம் துறந்தவர்களிறே

---

முன்னிட்டுக்கொண்டு அவனைப் பற்றுகிறவர்களுக்குப் பிரிய ஹிதங்களிரண்டும் ஸித்திக்கும் என்று கருத்து. நீர் நினைப்பது எதற்கு? எனில்: (நீண்டதோள் காண) "உத்₃த்₄ருதாஸி வராஹேண க்ருஷ்ணேந ஶதபா₃ஹுநா" [தை-நா] [ஆநந்தநிலயனாய், நூறு கைகளையுடையவனான வராஹத்தால் பூதேவியாகிற நீ தூக்கப் பட்டாய்] 'தடம்பெருந்தோளாரத்தழுவும் பாரென்னும் மடந்தையைமால்" [திருவாய் 2-8-7] "ப்ரஹர்ஷயந்தம் மஹிஷீம் மஹாபு₄ஜம்'[ஸ்தோ-ர 44] [நீண்ட தோளாலே பிராட்டியை உகப்பிப்பவனை] என்கிறபடியே அவனை அணைத்திருக்கையாலே நீண்டுபணைத்திருக்கும் அவனுடைய அளவற்ற இனிமையோடு கூடிய திருத்தோள்களைக் காணவே நினைக்கின்றேன். பிராட்டியோடு கூட இராமபிரான் அத்ரியின் ஆஶ்ரமத்திற்கு எழுந்தருளியதுபோலே எழுந்தருளுவதைக் காண நினைக்கின்றேன். (நினைப்பார் பிறப்பு ஒன்றும் நேரார்) இப்படி நினைப்பவர்கள் இவ்வனுபவத்துக்கு விரோதியான எவ்வகையான பிறப்பையும் இனி அடைய மாட்டார்கள். (பிறப்பென்றும் நேரார்) என்று பாடமானபோது 'இனி எல்லாக்காலத்திலும் பிறப்பை அடையமாட்டார்கள்' என்று பொருளாகிறது. இப்பிறப்பிலே இன்பமென்னும் பெயரிலே அடையும் துன்பங்களுக்கு என் செய்வது? எனில், அவற்றையும் துறந்து விடுவார்கள் இவர்கள் என்கிறார் இனி. (அத்தோள் தொழுதார்) முற்கூறிய எம்பெருமானுடைய நீண்டதோளைத் தொழுதவர்கள்.

கிட்டார்கள். (மனைப்பாலித்யாதி₃) ஸம்ஸார ஸுகூ₂த்தைத் துறந்தவர்கள் அத்தோளைத் தொழப்பெறுவர்கள். 42

---

அத்தோள்கள் தொழுவாராகிறுர் என்னவுமாம். அன்றிக்கே, ஒரு ஸ்ம்ருதிமாத்ரமே பற்றுசாக அவன்தானே தன்னைக் கொண்டுவந்து காட்டுமதொழிய, ஆர்தான் இவற்றைத் துறந்து அத்தோளைத் தொழுவார் என்றுமாம். ''பிறப் பென்றும் நேரார்'' என்று பாட₂மானபோது, எல்லாக் காலத்திலும் ஜந்மத்தைக் கிட்டார்கள் என்று பொருளாகக் கடவது. 42.

---

(மனைப்பால் பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பம் எல்லாம் துறந்தார்) ஒவ்வொரு வீட்டிலே பிறந்திருக்கும் ஸம்ஸாரிகள், அப்பிறப்பினுலே அடையும் எல்லாச்சிற்றின்பங்களையும் துறந்து விடுவார்கள். 'பேரின்பம்' என்று விபரீதலக்ஷணையாலே சிற்றின் பத்தைக் குறிக்கிறது. அல்லது, இவ்வின்பங்களையே பேரின்ப மாக நினைத்திருக்கும் அவர்கள் நினைவாலே கூறுகிருராகவுமாம். (பேரின்பம் எல்லாம் துறந்தார்) ''எத்தனை கோடி இன்பம் வைத் தாய்'' என்று அவர்கள் மயங்கும் எல்லா இன்பங்களும், இவனு டைய நீண்டதோள் காணும் இன்பத்தில் பலகோடியில் ஒரு பங்குக்கும் இணையாகாமையாலே, இத்தோளழகைக் கண்டவுடன் அவையனைத்தையும் துறந்துவிடுவார்கள். ''மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு'' [மூன்திருவ 14] என்கிறபடியே. (துறந்தார் அத்தோள் தொழுதார்) என்று கூட்டி, ''இவ்வுலகச் சிற்றின்பங்களை விட்டவர்களே அவனுடைய தோளை அனுபவிக்கப் பெறுவர்கள்'' என்று முமுக்ஷுவுக்கு வைராக்யத்தின் இன்றி யமையாமையைக் கூறுகிருராகவுமாம். ''கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவை காண்கொடானே'' [திருவாய் 8-2-8] என்கிறபடியே. (மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்து அத்தோள் தொழுவார் ஆர்) என்று அந்வயங்கொள்ளும்போது, ''நினைப்பன் என்ற நினைவையே பெரிதாகக் கொண்டு, அப்பரமபுருஷன் தானே தன்னைக் கொண்டுவந்து காட்டவேண்டுமேயொழிய, ஆர்தான் தங்கள் முயற்சியாலே இச்சிற்றின்பங்களையெல்லாம் துறந்து அத் தோளைத் தொழப் பெறுவர்?'' என்று பரக₃தஸ்வீகாரபரமான பொருள் தேறுகிறது. 42

43. தோளிரண் டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும்
தாளிரண்டும் வீழச் சரந்துரந்தான் – தாளிரண்டும்
ஆர்தொழுவார் பாத மவைதொழுவ தன்றோஎன்
சீர்கெழுதோள் செய்யுஞ் சிறப்பு.

தோள் இரண்டு எட்டு ஏழும் மூன்றும் — இருபதுதோள் களும், முடி அனைத்தும் — (முளைத்தெழுந்த) எல்லாத்தலை களும், தாள் இரண்டும் — இரண்டு கால்களும், வீழ — அழி யும்படி, சரம் துரந்தான் — அம்புகளைச்செலுத்தின பெரு மானுடைய, தாள் இரண்டும் — இரண்டு திருவடிகளையும், தொழுவார் ஆர் — தொழுகிறவர்கள் எவரோ (அவர்களது) பாதம் அவை — திருவடிகளை, தொழுவது அன்றே — ஸேவிப்ப தன்றோ, என் சீர்கெழு தோள் செய்யும சிறப்பு — எனது நன்மைமிக்க தோள்கள் (எனக்குச்) செய்யும் உதவி.

பெரி அவ— (தோளிரண்டு) தோளைத்தொழவறியோம்; அத்தோளைத் தொழுவார் தாளைத்தொழுமித்தனையென்கிறார்.

வ்யா:—(தோளித்யாதி) எட்டு மிரண்டும் ஏழும் மூன்று மாக இருபது தோள்களும், முடியனைத்தும் தாளிரண்டும்

---

அவ — "எனக்கு அவன் தோள் தொழவேண்டா; தொழுவார் தொழ அமையும்; அத்தோள் தொழுவார் தாளைத் தொழுமித்தனை நாம்" என்கிறார்.

உரை:— பிராட்டியைத் தனிச்சிறை வைத்து நலிந்த ராவணனுடைய இருபது தோள்களும், அறுக்க அறுக்க

---

43. அவ:—'எனக்கு அவனுடைய தோளைத் தொழவேண்டு மென்பதில்லை; தொழுபவர்கள் தொழுது கொள்ளட்டும்; அவ னுடைய தோள்களைத் தொழுபவர்களுடைய தாள்களைத் தொழுவதே எனக்குரியது' என்று கூறுவதன் மூலம் பகவச்சேஷத்வத்தைக் காட்டிலும் பாகவதசேஷத்வத்தின் சிறப்பைக் காட்டுகிறார்.

மற்றும் விழும்படிக் கீடாகச் சரத்தை விட்டவன், ஆச்ரித விரோதியாகையாலே நம்மாலே ஸ்ருஷ்டனென்றும் பாராதே முடியச்செய்தவனுடைய திருவடிகளிரண்டையும் யாவர் சிலர்

---

முளைக்கையாலே ஒரு ஸங்க்யையில் அடங்காத தலைகளும், இவை எல்லாவற்றுக்கும் ஆதாரமான கால்கள் இரண்டும் அறுப்புண்ணும்படிக்கீடாகத் திருச்சரங்களை ப்ரேரித்து நடத்தின பெருவீரனை சக்ரவர்த்தித்திருமகனுடைய திருவடிகளிரண்டையும் தொழுமவர்களாய், அபிமானஹேது வல்லாத ஏதேனும் ஜந்மவ்ருத்தாதிகளை உடையராயிருக்கும் மஹாபுருஷர்களுடைய பரமோத்தேஶ்யமாக ப்ரமாண ப்ரஸித்தமான அந்தத் திருவடிகளைத் தொழுமதன்றோ

---

வ்யா:—(தோளிரண்டு எட்டேழும் மூன்றும்) பிராட்டியை எம்பெருமானிடமிருந்து பிரித்து அசோகவனத்திலே சிறைவைத்துத் துன்புறுத்திய பாவியான ராவணனுடைய இரண்டும் எட்டும் ஏழும் மூன்றுமாக இருபது தோள்களும். ஒவ்வோரம்பே இரண்டு எட்டு ஏழு மூன்று தோள்களை அறுக்கையாலே பிரித்துச் சொல்லுகிறார். (முடியனைத்தும்) பத்துத்தலைகளும் என்னாதே எல்லாத் தலைகளும் என்றது, சரத்தாலே அறுக்க அறுக்க வரத்தாலே முளைக்கையாலே ஓர் எண்ணிக்கையில் அடங்காதிருந்ததைப் பற்ற. (தாளிரண்டும்) இக்கைகள், தலைகள் ஆகிய அனைத்துக்கும் ஆதாரமான இரண்டு கால்களும். (வீழச் சரந்துரந்தான்) இவையனைத்தும் நிலத்திலே விழும்படியாக அம்புகளை எய்த பெருவீரனை சக்ரவர்த்தித் திருமகனுடைய. (சரம் துரந்தான்) தன்னால் படைக்கப்பட்டவனுயிருந்தும், தன்னடியார்களான பிராட்டி, ரிஷிகள் முதலானோர்க்குத் தீங்கு புரிகையாலே, அவனை அழியச்செய்த ஆஶ்ரிதவத்ஸலன். (தாளிரண்டும் ஆர் தொழுவார்) அவனுடைய திருவடிகளிரண்டையும் தொழுமவர் எத்தகையவராயினும். (ஆர் தொழுவார்) குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும். ஊனமாயினகள் செய்யும் ஊனகாரகர்களேலும். 'உயர்குலம், உயரொழுக்கம், உயர்ந்தஅறிவு' என்று அஹங்காரம் கொள்ளுவதற்கு உறுப்பல்லாத எத்தகைய தாழ்ந்த குலத்தையும், தாழ்ந்த ஒழுக்கத்தையும், தாழ்ந்த அறிவையும் உடையவர்களானாலும். (பாதம் அவை தொழுவதன்றே சிறப்பு)

தொழுதார்கள். ஏதேனும் ஜந்மமாகிலும் அவர்களுடைய தாளைத்தொழுகையன்றோ புருஷார்த்தம் தர வந்த தோள் செய்யுமுபகாரம். 43.

44. சிறந்தார்க் கெழுதுணையாம் செங்கண்மால் நாமம்
மறந்தாரை மானிடமா வையேன்—அறந்தாங்கும்
மாதவனே யென்னும் மனம்படைத்து மற்றவன்பேர்
ஓதுவதே நாவினா லுள்ளு.

(நெஞ்சே!) சிறந்தார்க்கு — ஸ்ரீவைஷ்ணவோத்தமர் களுக்கு, எழு துணை ஆம்—உய்வதற்குக்காரணமான துணை யாகின்ற, செம் கண் மால்—செந்தாமரைக் கண்ணனை பெருமானுடைய, நாமம்—திருநாமத்தை, மறந்தாரை— மறப்பவர்களை, மானிடம் ஆ —மானிடப்பிறவியில் பிறந் தவர்களாக, வையேன்—என்னெஞ்சில் கொள்ளமாட்டேன்; அறம் தாங்கும் மாதவனே என்னும் மனம் படைத்து—

---

அவர்களில் வ்யாவ்ருத்தனை என்னுடைய ததீயரைத் தொழவென்றால் பல்கிப்பணைக்கும் அழகு சேர்ந்த தோள் களானவை எனக்குச்செய்யும் உபகாரம். 43.

---

பரம ப்ராப்யமாக சாஸ்திரங்களிலே பிரஸித்திபெற்ற அவர் களுடைய திருவடிகளைத் தொழுவதல்லவோ சிறப்பு. (என்) "ஸித்திர் பவதி வா நேதி ஸம்ஶயோச்யுதஸேவிநாம் | ந ஸம்ஶ யோஸ்தி தத்பக்த பரிசர்யாரதாத்மநாம்" [அச்யுதனை ஸேவிப்ப வர்களுக்கு மோக்ஷம் கிடைக்குமோ கிடைக்காதோ என்பது ஸந் தேஹமே; அவனடியார்க்குக் கைங்கர்யம் செய்யும் இயல்வை யுடையவர்களுக்கு அதில் ஐயமில்லை.] "வேறாக ஏத்தி இருப் பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" [நான் திருவ 18] என்கிறபடியே அவர்களிலும் சிறப்புப் பெற்ற என் னுடைய. (சீர் கெழு தோள்) நாம் சிறந்த பயனைப் பெறுவதற்காகவே படைக்கப்பட்ட தோள்; அவனடியார்களைத் தொழ நினைத்தால் பூரித்து எழும் அழகுடைய தோள். (செய்யும் சிறப்பு) அவனுடைய தோள் தொழுவாருடைய தாள் தொழுவதே என் தோள் எனக்குச் செய்யும் பேருபகாரம். 43.

"த4ர்மத்தை நிலைநிறுத்தும் திருமாலே!" என்று கூவி யழைக்கும்படியான நெஞ்சைக்கொண்டு, மற்று—மேலும், அவன் பேர் – அவனது திருநாமத்தை, நாவினால் ஓதுவதே— நாவினால் சொல்லுவதையே, உன்னு—(நமக்குரியதென்று) அநுஸந்தித்திரு.

வ்யா:—(சிறந்தாரித்யாதி3) திருநாமத்தைச் சொன்ன வர்களுக்கு ப்ராக்ருதங்களில் அருசியைப் பண்ணு வித்து உத்க்ரமணத3சையிலே ஆதிவாஹிகர்க்கு முன்னே தானே துணையாகக் கொண்டுபோகக் கடவனும்

அவ:—இப்படி அசல்காககும்படி பண்ணவல்ல விஷ யத்தை ஆஶ்ரயியாதே மறந்திருக்குமவர்கள் சேதனரல்லா கிடீர் என்கிறார்.

உரை:—"ज्ञानी त्वात्मैव मे मतं" (ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்) என்று தான் உகக்கும்படி தன் திருவுள்ளத்துக்கு அநுரூபமாக ஆஶ்ரயித்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்து ஜ்ஞாநவிகாஸத்தை உடையவராய் உஜ்ஜீவிக்கைக்குப் போம் அர்ச்சி ராதி3மார்க்க3த்துக்கு ஆதிவாஹிகர் முன்னே "नयामि" (நயாமி) என்கிறபடியே துணையாமவனாய்,

44. அவ:—முன் பாசுரத்தில் சொன்னபடியே தன்னை அடைந் தாருடைய ஸம்பந்திஸம்பந்திகளையும் ரக்ஷிக்கவல்ல பகவத்விஷ யத்தைப் பற்றாமல் மறந்திருப்பவர்கள் அறிவுடையார் அல்லர் என்கிறார்.

வ்யா:-(சிறந்தார்க்கு)"த்4ருவாஸோ அஸ்யகீரயோ ஜநாஸ:" [ருக்வேதம்-விஷ்ணுஸூக்தம்] [விஷ்ணுவை ஸங்கீர்த்தனம் செய் பவர்கள் நிலையாயிருப்பவர்கள்] என்கிறபடியே திருநாமஞ்சொல்லு வதையே பொழுதுபோக்காகக் கொண்டிருக்கையாலே சிறந்தவர் களுக்கு "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்"[கீதை7—18] [ஞானி யோவெனில் எனக்கே உயிர்நிலை என்பது என் முடிவு.] என்று தானே சொல்லும்படி தன் திருவுள்ளத்துக்கு உகப்பாகத் தன்னை அண்டியிருப்பவர்களுக்கு. (எழு துணையாம்) பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பமெல்லாம் துறக்கச்செய்து, ஸம்ஸார ஸம்பந் தத்தை அறுத்து, ஞானவிரிவு பெற்றவர்களாய், மோக்ஷமடையப் போகும் வழியான அர்ச்சிராதிகதியில் துணையாயிருப்பவன்.

வாத்ஸல்யத்தாலே சிவந்த கண்களையுடைய ஈஶ்வரனுடைய திருநாமத்தை மறந்தாரை மநுஷ்யராக புத்திபண்ணியிரேன். அஜ்ஞரை ஸர்வஜ்ஞரென்றிருப்பன் அறிகைக்கு யோக்₃யதையுண்டாயிருக்கையாலே. குருவிந்தக்கல்லை மாணிக்கமென்று நினைத்திருந்தால் ரத்நமாகாதிறே; ரத்ந பரீக்ஷகன் ரத்நமாமென்றதிறே ரத்நமாவது; அப்படியே

---

அவர்கள் விஷயத்தில் வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த திருக்கண்களையுடைய வ்யாமுக்₃த₄னவனுடைய வாத்ஸல்யாதி₃கு₃ணங்களுக்கு வாசகமான திருநாமத்தை விஸ்மரித்திருக்குமவர்களை ஶாஸ்த்ரவஶ்யமான மநுஷ்யஜந்மத்திலே பிறந்தவர்களாய் என் மநஸ்ஸிலே நினைத்திரேன்.

---

"நயாமி பரமாம் க₃திம்" [வராஹசரமச்லோகம்] [நானே அவனை உயர்கதிக்கு அழைத்துச்செல்கின்றேன்.] என்கிறபடியே அர்ச்சிராதிகதியில் ஆதிவாஹிகர்கள் இவனை அழைத்துச் செல்லுமுன் தானே முற்படுமவன். இப்படி முற்படுகைக்குக் காரணமென்ன? எனில்: (செங்கண் மால்) அன்றீன்ற கன்றின் பக்கல் வாத்ஸல்யமுடைய பசுவைப்போலே, இன்றே தன்னையடையவிருக்கும் இச்சேதனனிடம் வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த திருக்கண்களையுடையவனாயிருக்கையே என்கிறார். மால்-வாத்ஸல்யமுடையவன்; ஸர்வேஶ்வரனென்றுமாம். உடையவனாயிருக்கையாலே உடைமையை விடமாட்டாத வாத்ஸல்யமுடையவனாயிருக்கிறான் என்கை. (மால் நாமம்) அவனுடைய வாத்ஸல்யம், ஸர்வேஶ்வரத்வம் முதலானவற்றைச் சொல்லும் திருநாமங்களை. (மறந்தாரை மானிடமாவையேன்) தாயிலும் அன்பனான இவனுடைய திருநாமங்களை மறந்தவர்களை சாஸ்திரவஶ்யரான மனிதஜன்மத்தில் பிறந்தவர்களாக நான் நினைக்கமாட்டேன். (வையேன்) அறிவற்றவர்கள் அவர்களை மனிதர்களாக நினைத்துக்கொள்ளட்டும். எப்படி வேண்டுமானாலும் நினைக்க முடிகையாலே, அறிவிலியொருவனையும் எல்லாமறிந்தவனாக எண்ணிக்கொள்ளலாம். காவிக்கல்லை அறிவிலியொருவன் மாணிக்கமென்று நினைத்தால் அது ரத்னமாகிவிடாதே. ரத்தினத்தைப் பரீட்சிக்கவல்லவன் எதை ரத்தினமென்கிறானோ அது தானே ரத்தினமாகும். அப்படியே மனிதத்தன்மையையறிந்த என்

நெஞ்சிலே மனிசரென்று வைக்கப்பட்டவர்கள் மநுஷ்யராவரென்கிறார். "மானிடவரல்லரென்று என்மனத்தே வைத்தேனே" என்கிறபடியே. (அறந்தாங்குமித்யாதி₃) ஆந்ருஶம்ஸ்யத்(தை?)தாலே தரியாநின்ற ஶ்ரிய:பதியினுடைய திருநாமத்தை நாவினாலே ஓதவுள்ளு. 44.

---

ஆந்ருஶம்ஸ்யமாகிற பரமத₄ர்மத்தை த₄ரியாநிற்கும் ஸ்ரிய:பதியானவனே! என்று ஆதரிக்கும் புத்தியை உண்டாக்கிக்கொண்டு அதுக்குமேலே அந்த ஸ்ரிய:பதியானவனுக்கு வாசகநாமமான த்₃வயத்தை நாவாலே சொல்லுகையிலே மநஸ்ஸே! அநுஸந்தி₄. மநஸ்ஸை அத்₄யாஹரித்துக் கொள்ளுவது. கீழ் ப₄ாக₃வதர்களை விரும்பினார். இதிலே அப₄ாக₃வதர்களை அநாதரித்தார. 44.

---

நெஞ்சில் மனிதராக வைக்கப்பட்டவர்களே மனிதராவர்; மற்றையோர் ஆகார் என்கிறார். "மானிடவர் அல்லரென்று என் மனத்தே வைத்தேனே" [பெரியதிரு 11-7-9] என்ற திருமங்கையாழ்வாரைப்போலே, (அறம் தாங்கும்) "ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்ம:" [ரா-ஸு 38-41] [இரக்கமே மேலான அறம்] என்கிறபடியே மேலான த₄ர்மமாகையாலே 'அறம்' என்னும் சொல்லுக்கு முக்₂யார்த்த₂மான இரக்கத்தை த₄ரிக்கும். (மாதவனே) இவ்விரக்கத்தைத் தான் தரித்து நிற்பதோடன்றியில் "த்வத்த ஏவ மயா ஶ்ருத:" [ரா-ஸு 38-41] என்று பிராட்டி தானே அருளியபடியே அவளுக்கும் உபதேசிப்பவன். (மாதவனே) "லகு₄தரா ராமஸ்ய கோ₃ஷ்டீ₂க்ருதா" [ஸ்ரீகுண] என்கிறபடியே அவனிலும் விஞ்சிய க்ஷமாதிகுணங்களை உடையவளாகையாலே, 'மா' எனப்படும் அவளோடு ஸம்பந்தத்தாலே இவன் அறந்தாங்குமவனுனன் என்றுமாம். (மாதவனே என்னும் மனம் படைத்து) லக்ஷ்மீநாதனுயிருப்பவனே என்று உகக்கும் புத்தியைப்பெற்று. மனத்தை நோக்கி உபதேசிக்கிறாராகையாலே, இங்கு 'மனம்' என்றது புத்தியை. (மற்று அவன் பேர் நாவினால் ஓதுவதே உள்ளு) ஸ்ரீமந்நாராயணனைச் சொல்லும் த்வயத்தை நாவாலே சொல்லுவதையே நினைப்பாய் மனமே! என்று மனத்தை நோக்கி உபதேசிக்கிறார். 'மனமே!' என்னும் பதத்தைச் சேர்த்துக்கொள்ளவேணும். கீழ்ப்பாட்டில் அவனடியார்களை விரும்பினார். இதில் அவனை அடையாதவர்களை அநாதரித்தார். 44.

45. உளதென் றிறுமாவா ருண்டில்லை யென்று
தளர்த லதனருகும் சாரார் - அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று.

அளவு அரிய வேதத்தான் — அளவிடமுடியாதபடியுள்ள வேதங்களினால் சொல்லப்படுபவனும், வேங்கடத்தான் — திருமலையிலே வந்து நிற்பவனும், விண்ணோர் முடிதோயும் பாதத்தான் - நித்யஸூரிகளின் முடிகள் பணியப்பெற்ற திருவடிகளையுடையவனுமான எம்பெருமானுடைய, பாதம்- திருவடிகளிலே, பயின்று — பழகி (இருக்குமவர்கள்), உளது என்று இறுமாவார் — (தமக்குச் செல்வம்) உள்ளதென்று கர்வம் கொள்ளமாட்டார்கள்; உண்டு இல்லை என்று — (செல்வம்) நேற்று இருந்து இன்று அழிந்து போயிற்று என்று, தளர்தல் அதன் அருகும் சாரார் — தளர்ச்சியடையும் ஸ்வபாவத்தின் கிட்டவும் செல்லமாட்டார்கள்.

பெரி அவ:— (உளதென்று) நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயமானவனுடைய திருவடிகளைப் பயிலுமவர்கள் அர்த்தத்தினுடைய லாபாலாபங்களுக்கு ஈடுபடார்.

வ்யா:-(உளதென்றிறுமாவார்)தரித்ரர் அர்த்தமுண்டானவாறே மாதாபிதாக்களையும் ஆசார்யர்களையும் அவமாநம் பண்ணுவர்கள்; இவர்கள் இப்படிசெய்யார்கள். (உண்டில்லை

அவ:—இப்படி பகவத்பஜநம் பண்ணியிருக்குமவர்கள் இதரவிஷயங்களினுடைய லாபாலாபங்களால் வரும் ஹர்ஷஶோகங்களை உடையரல்லர் கிடீர் என்கிறார்.

உரை:— ஆர்க்கும் அளவிடவொண்ணாதபடி அபரிச்சிந்நமான வேதங்களாலே பரமதனமாக ப்ரதிபாதிக்கப்

45. அவ:—நித்யஸூரிகளும் ஆசைப்படும் பரமபுருஷனுடைய திருவடிகளைத் துதிப்பவர்கள் மற்ற விஷயங்களைப் பெறுவதாலும் இழப்பதாலும் இன்பதுன்பங்களை அடையமாட்டார்கள் என்கிறார்.

யித்யாதி₃) இல்லையென்று தளராரென்னுதே உண்டில்லை யென்று தளராரென்றதென்னென்னில்: நித்யதரித்ரன் சோக மறியான்; ஒருநாளுண்டாய் அதில்லையானவாறே. 'பாவி யேன் பண்டு ஸுகமே ஜீவித்தோம், இப்போது இடிபடா நின்றோம்' என்று மிகவும் த ள ர் த் தி க் குடலாமென்று உண்டில்லையென்று தளராரென்று சொல்லுகிறது. பகவத்

---

படுமவனுமாய், இப்படி ஓலைப்புறத்திலே கேட்டுப்போகை யன்றிக்கே, கண்ணாலே கண்டு அநுப₄விக்கலாம்படி திரு மலையிலே வந்து ஸந்நிஹிதனை ஸௌலப்₄யத்தையுடை யனாய், பரத்வாநுப₄வத்திலே பழுத்திருக்கும் பரமபத₃

---

வ்யா:— (உளது என்று இறுமாவார்) பிறப்பிலிருந்து தரித்திரனா யிருப்பவன், நடுவிலே பெருஞ்செல்வம் வாய்த்தவுடன் 'நாமன்றோ இப்பெருஞ்செல்வத்தைப் படைத்திருக்கிறோம்' என்று நினைத்து தாய்தந்தையரையும், ஆசார்யர்களையும் அவமானம் செய்வதும், எவருமே தன்னை அணுகவொண்ணாதபடியான பெருங்கர்வத்தை அடைவதும் உலக இயல்வு. பரமபுருஷனைப் பற்றியிருப்பவர்கள் பகவத் விஷயத்தில் வைலக்ஷண்யத்தையும், செல்வம் முதலான வற்றின் அல்பாஸ்திரத்தன்மையையும் அறிந்தவர்களாகையாலே இத்தகைய இறுமாப்பை அடையமாட்டார்கள். (உண்டு இல்லை என்று தளர்தல் அதனருகும் சாரார்) 'இல்லை என்று' என்று கூறினாலே போதுமாயிருக்க, 'உண்டுஇல்லை என்று' என்கையாலே, ஒருகாலத்தில் செல்வத்தைப் பெற்றிருந்து அதை இழந்தவனுடைய மனநிலையைச் சொல்லுகிறது. நித்ய தரித்திரனாயிருந்தாலும் வருத்த மறியாமலிருக்கலாம்; ஒருகாலத்தில் செல்வத்தைப் பெற்றிருந்து அதை இழக்கையாலே 'பாவியோம் முன்னம் ஸுகமாக வாழ்ந் தோம்; இப்போது துன்புறுகிறோம்' என்று தளர்ச்சியடைவா னன்றோ. பகவத்விஷயத்தைப் பற்றியவர்கள் இப்படிப்பட்ட தளர்ச்சியின் அருகிலும் செல்லமாட்டார்கள். இது இதரவிஷயத்தில் இவர்கள் நிலை. பகவத்விஷயத்தில் இவர்கள் நிலை நேர்மாறா யிருக்கும். "நினைக்குந் நெஞ்சுடையேன் எனக்கு இனி ஆர் நிகர் நீள் நிலத்தே" [திருவாய் 6-4-7] என்கிறபடியே பகவத்ஸம்பந்தம் உளதென்று இறுமாப்படைவதும் உத்தேஶ்யம்; பகவத்விஷயத் தைப் பெற்று இழந்தபோது தளர்வதும் உத்தேஶ்யம். 'பகவத்

விஷயத்தில் பிரிவும் உத்தேச்யமோவென்னில்; "அழுநீர் துளும்ப வலமருகின்றன வாழியரோ" "किमर्थं तव नेत्राभ्यां वारि स्रवति शोकजम्" (கிமர்த்தம் தவ நேத்ராப்,யாம் வாரி ஸ்ரவதி சோகஜம்). ஸம்ஸாரத்தில் ஸம்ஸாரியிற் காட்டில் ஜ்ஞாநவானுக்கு வாசி விஶ்லேஷத்தில் துவட்சியன்றோ, இத்தையன்றே உண்ணுஞ்சோற்றில் முற்கூறும் துவளில் மாமணியுஞ் சொல்லுகிறது; "முன்னநோற்ற விதிகொலோ முகில்வண்ணன் மாயங்கொலோ" நான் பண்ணின ஸுக்ருதமோ? இடைவீடின்றிக்கே அவன் தன்னுடைய க்ருபையோ? " निर्गुणः परमात्मासौ देहं ते व्याप्य तिष्ठति "

---

ஸ்தூரான நித்யஸூரிகள், அவன் நீர்மைக்குத் தோற்றுத் தங்கள் திருமுடியைத் திருவடிகளிலே மடுக்க, அத்தாலே ஸ்பர்ஶிக்கப்பட்ட திருவடிகளை உடையனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை இடைவிடாமல் செறிந்துவைத்து.

---

விஷயத்தில் பிரிவும் உத்தேஶ்யமாமோ?' எனில்; "அழுநீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ" [திருவிருத்தம்-2] என்று பிரிவுத்துன்பத்தால் வரும் கண்ணீருக்குப் பல்லாண்டு பாடினாரன்றே. "கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி சோகஜம்" [ரா-ஸு 33-4] [தேவரீருடைய திருக்கண்களிலிருந்து, பெருமாளைப் பிரிந்த துன்பத்தால் வடியும் கண்ணீர் யார் அனுபவிப்பதற்காக வடிகிறது?] என்றானன்றே பிராட்டியைக்கண்ட திருவடி. ஸம்ஸாரத்தில் அழுந்தியிருப்பவனைக் காட்டிலும் ஞானிக்குச்சிறப்பு பகவத்விஷயத்தைப் பிரிந்தபோது தளர்ச்சியடைவதேயன்றே. இதையேயன்றே "உண்ணுஞ் சோறு" [6-7] திருவாய்மொழியில் முற்பகுதியும், "துவளில் மாமணி" [6-5] திருவாய்மொழியும் சொல்லுகின்றன. "முன்னம் நோற்ற விதி கொலோ முகில் வண்ணன் மாயங்கொலோ" [திருவாய் 6-5-7] என்று 'நான் பண்ணின புண்ணியபலமோ அல்லது நேரே பரமபுருஷனுடைய நிர்ஹேதுககிருபைதானோ' என்று பிரிவில் தளர்ச்சியைப் பெரும்பாக்கியமென்றாரன்றே. பீமஸேனன் திருவடியைக் கண்டு, அவன் திருமேனியில் துவட்சியாலேயே பகவத் ஸம்பந்தத்தை அறுதியிட்டு, "நிர்க்குணः பரமாத்மாஸௌ தேஹம் தே

(நிர்க்குணா: பரமாத்மாஸௌ தேஹம் தே வ்யாப்ய திஷ்டதி) என்னும் படிகளாலே பிரிவும் உத்தேஶ்யம். 'தளர்தலதனருகுஞ்சாரார்'' என்றது - ஶோகமுண்டாய் அநுதாபம் பிறந்து மீளாரென்கிறது; முதலிலே தளராரென்கிறது - அஸ்திரமென்று நினைத்து, ஒருகால் ஸ்திரமென்று நினைத்து ஒருகால் அஸ்திரமென்று நினைத்திருக்குமவர்களன்றிறே. ஸ்திரமானது அஸ்திரமாயிற்றென்னிலிறே சோகமுள்ளது. (அளவரியவேதத்தான்) அபரிச்சிந்நமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்படுமவன்

---

ஜந்மதரித்ரனுய்த திரியச் செய்தே, * (சருகிலே திறப்வாய்ப்பாலே) நடுவே வந்த திரண்ட தனத்தைக் கண்டு, 'இது நமக்கு உண்டாகப் பெற்றது' என்று பிறர்க்கு ஸஞ்சரிக்கவொண்ணாதபடி கர்வோத்தராயிரார்கள். சில

---

வ்யாப்ய திஷ்டதி''[பர-வந 14-68] [நாணே றிருதவிலேயுடைய பரமபுருஷன் உன் திருமேனி முழுவதும் வியாபித்து விளங்குகிருன்] என்ருனன்றே; ஆகையாலே பகவத்விஷயத்தில் பிரிவும் உத்தேஶ்யம். (தளர்தல் அதன் அருகும் சாரார்) 'செல்வம் முன் நமக்கு இருந்து இப்போது போய்விட்டதே' என்று சோகம் உண்டாகி, பிறகு 'ஐயோ! அஸ்திரமான இச்செல்வத்தைப்பற்றியா வருந்தினோம்' என்று அநுதாபம் பிறந்து அந்த சோகத்திலிருந்து மீள்வர் சிலர்; இவர்கள் செல்வத்தை முதலில் ஸ்திரமென்று நினைத்துப் பிறகு அஸ்திரமென்று அறிந்தவர்களாகையாலே இவர்களுக்கு முதலில் சோகமுண்டாகிப் பிறகு நீங்குகிறது. பகவத்விஷயத்தைப்பற்றினவர்களோவெனில் எப்போதுமே செல்வத்தை அஸ்திரமென்று அறிந்தவர்களாகையாலே 'சோகத்தின் அருகிலும் செல்லமாட்டார்கள்' என்கிருர். இவர்களுக்கு சோகமே உண்டாகாது என்று கருத்து. ஒரு சமயத்தில் செல்வத்தை நிலையானது என்று நினைத்துப் பிறிதொரு சமயத்தில் அதை நிலையற்றது என்று அறிந்தாலல்லவோ சோகமுண்டாக இடமுள்ளது. இவர்கள் எப்போதுமே 'செல்வம் நிலையற்றது' என்று அறிந்தவர்களாயிற்றே. இந்த மனவுறுதிக்குக் காரணம் அநந்தஸ்திரபலமான பகவத்விஷயத்தைப் பற்றியிருக்கையே என்கிறது மேலே. (அளவரியவேதத்தான்) ''அநந்தா வை வேதா:'' [யஜுர்-காடகம் 1-11] [வேதங்கள்

---

* ( ) பாடப்பிறழ்வு ஏற்பட்டுள்ளது என்பர்.

கண்ணாலே காண ஆசைப்படுமவனுக்கு வேத₃ப்ரதிபாத்₃ய னென்றால் என்ன ப்ரயோஜநமுண்டென்னில்: (வேங்கடத் தான்) எல்லாருங்கண்டு ஆஶ்ரயிக்கும்படிக்கிடாகத் திரு மலையிலே நின்றான். எங்களுடைய அர்த்த₂த்தோபாதி உம் முடைய அர்த்த₂மும் ப்ரத்யக்ஷமாயிற்றிறே யென்னில்: (விண் ணோர் முடி தோயும் பாதத்தான்) நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயனானவன். அவனுடைய ஸத்₃பா₄வத்துக்கு இசைந்தால், 'அவர்களுக்குங் கூட ஸ்ப்ருஹணீயனானவனே இங்குவந்து நிற்கிறான்' என்று ஆதரிக்கவேண்டாவோ ப்ரா மாணிகராகில்? (விண்ணோர் முடிதோயும் பாதத்தான் பாதம் பயின்று உளதென்றிறுமாவார்) இவர்களுக்கிறுமாக்கவும் தளரவும் அவஸரமில்லை 45.

---

நாள் குறைவற ஜீவித்தபின்பு வெறுவியரான அன்று 'அங்ஙனே நமக்கு இது உண்டாய்த்து; இன்று இங்ஙனே இல்லையாய்த்து' என்று ஶோகித்துத் தறைப்படுகையாகிற துனருருகுங் கூடக் கிட்டார்கள். 45.

---

அளவற்றவை] என்கிறபடியே எவராலும் அளவிடமுடியாதபடி அளவற்றிருக்கும் வேதத்தாலே மிகச்சிறந்த செல்வமாகச் சொல்லப் படுபவன். "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீதை 15-15] [எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே.] என்கிறபடியே. கண்ணாலே காண ஆசைப்படுகிறவனுக்கு! வேதத்தில் கேட்கப் படுபவன் என்றால் போதாதோ எனில்: (வேங்கடத்தான்) இப்படிக் கேட்டே அறியப்படுமவனாயிராமல் அனைவரும் கண்ணாலே கண்டு அடைந்து அநுபவிக்கலாம்படி திருமலையிலே வந்து நிற்கும் ஸௌலப்யத்தை உடையவன் என்கிறது. இவ்வுலகச் செல்வத்தைப் போலே இவனும் ப்ரத்யக்ஷத்தால் அறியத்தக்கவனாகில் அதைப் போலே இவனும் அஸ்திரமாகவேண்டிவருமே என்னில்: அந்த தோஷம் இவனுக்கில்லை என்கிறார் மேலே,- (விண்ணோர் முடி தோயும் பாதத்தான்) பரத்வத்தை அனுபவித்துக் களித்திருக்கும் பரமபதத்திலுள்ள நித்யஸூரிகள், இங்கு அவன் எழுந்தருளி யிருக்கும் நீர்மைக்குத் தோற்றுத் தங்கள் திருமுடிகளை அவன் திருவடிகளிலே சாய்க்க, அம்முடிகளாலே தொடப்பெற்ற திருவடி

46 பயின்ற தரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னாள் — பயின்ற
தணிதிகழும் சோலை யணிநீர் மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால்.

மணி திகழும் — நீலமணிபோல் விளங்குமவனும், வண் தடக்கை — உதாரமாய், பெரிய திருக்கைகளையுடையனுமான, மால் — எம்பெருமான், பயின்றது — நித்யவாஸம் செய்வது, அரங்கம் திருக்கோட்டி — திருவரங்கத்திலும் திருக்கோட்டியூரிலுமாம்; பல் நாள் — நெடுங்காலம், பயின்றதுவும் — நித்யவாஸம் செய்வதும், வேங்கடமே- திருமலையிலேயாம்; பல் நாள் பயின்றதுவும் — ; அணி திகழும் சோலை — அழகு விளங்குகின்ற சோலைகளையுடையதாய், அணி - இவ்வுலகுக்கு அலங்காரமான, நீர்மலை — திருநீர்மலையிலேயாம்.

பெரி அவ:— (பயின்றது) இவர்களை இப்படிப் பயிலப் பண்ணுகைக்கு இவர்கள் பட்டதன்று அவன் படுவது.

---

அவ:— இப்படி தன்னை ஆஶ்ரயித்தவர்கள் இதர போகங்களின் லாபாலாபங்களால் வரும் விகாரமற்றுத் தன்னைச் செறிந்து அநுபவிக்கையாகிற இந்நினைவு இவர்களுக்கு உண்டாம்படி பல திருப்பதிகளிலும் அவன் வருந்தி க்ருஷிபண்ணினபடியை அருளிச்செய்கிறார்.

---

களை உடைய ஸர்வேஶ்வரன். ப்ரமாணங்களைக்கொண்டு அவனுடைய உண்மையை இசைந்தால், 'நித்யர்களும் ஆசைப்பட விருப்பவனன்றோ இங்கு நமக்கும் ப்ரத்யக்ஷமாயிருக்கிறான்' என்று தெளிந்து ஆதரிக்க வேண்டியிருக்கையாலே, இவனுக்கு ப்ரத்யக்ஷத்வத்தால் வரும் அஸ்திரத்வம் இல்லை என்று கருத்து. 'ப்ரத்யக்ஷமானதெல்லாம் அஸ்திரம்' என்னும் நியமம் சாஸ்திரத்தாலேயே அறியப்படும் இவன் விஷயத்தில் செல்லாது என்றபடி. (பாதம் பணிந்து — இறுமாவார் தளர்தல் அதனருகும் சாரார்) இப்படி அநந்தஸ்திரபலமாயிருப்பவனுடைய திருவடிகளிலே இடைவிடாமல் சேர்ந்திருப்பவர்கள் அல்பாஸ்திரமான இவ்வுலகச் செல்வங்களைப் பெறுவதாலும், இழப்பதாலும் இன்பதுன்பங்களை அடையமாட்டார்கள். 45.

வ்யா: – (பயின்றதித்யாதி₃) மணிபோலே ஶ்ரமஹரமான வடிவையும் உதா₃ரமான கையையுமுடைய ஸர்வேஶ்வரன் பலகால்பயின்றது கோயில், திருக்கோட்டியூர், திருமலை-

உரை:- நீலமணிபோலே ஶ்ரமஹரமாய் ஒளிவிடுகிற வடிவையும், அவ்வடிவை ஸம்ஸாரிகளுக்கு ஸர்வஸ்வதா₃னம் பண்ணுகிற சுற்றுடைத்தான திருக்கைகளையும் உடையனான ஸர்வேஶ்வரன் அவதாரங்கள் போலே தீர்த்த₂ம் ப்ரஸாதி₃யாதே நித்யவாஸம் பண்ணியருளிற்று கோயில் திருக்கோட்டியாகிற திருப்பதிகளிலே. சிரகாலம் செறிந்து வர்த்தித்ததுவும் திருமலையிலே. இப்படியே சிரகாலம்

46. அவ:—முன் பாசுரத்தில் கூறியபடி ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்தவர்கள் மற்ற இன்பங்களால் ஏற்படும் விகாரமில்லாமல், ஸர்வேஶ்வரனாகிற தன்னை அடைந்து அநுபவிப்பதாகிற இந்த நினைவு இவர்களுக்கு உண்டாம்படி பல திருப்பதிகளிலும் நின்று, இவர்களைக்காட்டிலும் படாதபாடுபட்டு முயற்சி செய்வதை அருளிச்செய்கிறார்.

வ்யா:— (பன்னாள் பயின்றது அரங்கம்) 'தன்னைக் கொள்வாருமுண்டோ' என்று நெடுங்காலம் படுகாடுகிடந்து வாழ்வது அரங்கத்திலே. (பயின்றது) விப₄வாவதாரங்கள் போலே சிறிதுகாலம் வாழ்ந்து மறைந்து போகையன்றிக்கே ஸ்தா₂வரப்ரதிஷ்டை₂யாயிருக்கை. (பன்னாள் பயின்றது திருக்கோட்டி) திருவரங்கத்தில் மாத்திரமல்லாமல் திருக்கோட்டியூரிலும் உரகமெல்லணையானாய், சேதனரை வசீகரிப்பதற்காக நெடுங்காலமாகத் தன் கிடையழகைக் காட்டி நிற்கிறான். (பன்னாள் பயின்றதுவும் வேங்கடமே) இப்படிக் கிடையழகைக் காட்டியதோடல்லாமல், நின்ற திருக்கோலத்தைக் காட்டிக்கொண்டு நெடுங்காலம் வாழ்ந்ததும் திருவேங்கடத்திலே. (பன்னாள் பயின்றது அணி திகழும் சோலை அணி நீர் மலையே) இப்படி கிடையழகையும் நிலையழகையும் ஒவ்வோரிடத்தில் காட்டி நிற்பதில் திருப்தியுறாமல், "நின்றானிருந்தான் கிடந்தான் நடந்தாற்கு இடம் மாமலையாவது நீர்மலையே" [பெரியதிரு 2-4-1] என்கிறபடியே, நிலையழகையும், கிடையழகையும் மாத்திரமல்லாமல், இருப்பழகையும் நடையழகையுங்கூட ஒரேயிடத்தில் காட்டி நிற்பது

பலநாள்பயின்றது த₃ர்ஶ நீயமாய்த் திகழாநின்ற சோலையை யுடைத்தாய் ஸம்ஸாரத்துக்கு ஆப₄ரணமாயிருந்துள்ள திருநீர் மலையே. 46

47. மாலை யரியுருவன் பாதமல ரணிந்து
காலை தொழுதெழுமின் கைகோலி—ஞாலம்
அளந்திடந் துண்டுமிழ்ந்த வண்ணலை மற்றல்லால்
உளங்கிடந்த வாற்று லுணர்ந்து.

ஞாலம்-பூமி முழுவதையும், அளந்து- (விளையாட்டாக) அளந்தும், இடந்து - (வராஹமாகி) இடந்தும், உண்டு- (பிரளயத்தில்) திருவயிற்றினுள் வைத்தும், உமிழ்ந்த- பிறகு வெளிப்படுத்தியும் இப்படியெல்லாம் (ரக்ஷணைத்

---

நெருங்கி வாத்தித்ததுவும் அழகு விளங்காநின்றுள்ள சோலைகளை உடைத்தாய், ஸம்ஸாரத்துக்கு ஆப₄ரணமான திருநீர்மலையிலே. இப்படியே ஆஶ்ரிதார்த்த₂மாக அவன் விரும்பி வர்த்திக்கிற திருப்பதிகளுக்கு ஓர் எல்லையில்லை கிடீர் என்கை. 46.

---

திருநீர் மலையிலே. (அணிதிகழும் சோலை) அழகு விளங்காநிற்கும் சோலைகளையுடைய. தன் அழகையெல்லாம் காட்டி வசீகரிப்பதோ டன்றியில் சோலைப்பரப்பின் அழகையும் காட்டி வசீகரிக்கிறுன் என்கை. (அணி நீர் மலையே) இப்படி எல்லாட்பெருமைகளையும் பெற்றிருக்கையாலே இந்த ஸம்ஸாரமண்டலத்திற்கே ஆபரணமா யிருப்பது திருநீர்மலை என்கை. இங்கு நாலு திருப்பதிகளை எடுத்தது எல்லாத்திருப்பதிகளுக்கும் உபலக்ஷணம். முற்கூறிய முறையில் இவன் விரும்பி வாழும் திருப்பதிகளுக்கு ஓர் எல்லை யில்லை என்று கருத்து. சேதனர்களை வசீகரிப்பதற்கு இவனிட முள்ள கருவி ஏதென்னில்; திருமேனியும் திருக்குணங்களுமே என்கிருர். (மணி திகழும் வண்தடக்கை மால்) நீலமணிபோலே கண்டார் கண்ப்பையாற்றும்படி ஒளிவிடுகிற திருமேனியை உடைய வனுய், அந்தத் திருமேனியை அனைவர்க்கும் ஸர்வஸ்வதானம் பண்ணுகிற ஔதார்யத்தையுடையதாய், கொடுத்துக் கொடுத்துப் பூரித்திருப்பதான திருக்கைகளையுடையவனுன ஸர்வேஶ்வரன். 46.

தொழில்) செய்த, அண்ணலை—ஸர்வஸ்வாமியான எம் பெருமானை, மற்று அல்லால்—கீழ்ச்சொன்ன வகையான ரக்ஷணத்தொழில்கள் தவிரவும், உளம் கிடந்த ஆற்றல் — (அன்பருடைய நெஞ்சைஉருக்கிக்கொண்டு அவர்களுடைய) நெஞ்சிலே கிடக்கும் விதங்களோடு கூட, உணர்ந்து — அநுஸந்தித்து, (முன்பொருகால் ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்வதற்காக) அரி உருவன் — நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றின அப்பெருமானுடைய, பாத மலர் — திருவடித்தாமரைகளில், மாலை அணிந்து - மாலைகளாலே அலங்கரித்து, காலை-சிற்றஞ் சிறுகாலையில், கைகோலி தொழுது—கைகூப்பிவணங்கி, எழுமின்—உஜ்ஜீவியுங்கள்.

---

பெரி அவ:—(மாலை) அவன் ஸ்வபாவம் இப்படியான பின்பு எல்லாருமவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறது.

வ்யா:— (அரியுருவன் பாதமலர் மாலையணிந்து கை கோலிக் காலை தொழுதெழுமின்) ஆஶ்ரிதார்த்தமான வடி

---

அவ:— அவன் இப்படி உங்களைப் பெறுகைக்காகப் பல திருப்பதிகளிலும் புகுந்து செறிந்து க்ருஷிபண்ணும் ஸ்வபாவனானபின்பு எல்லாரும் க்ருதஜ்ஞராய் அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:— பூமிப்பரப்பு அடங்கலும்அநாயாஸேந அளந்து அழிந்த தஶையிலே இடந்து எடுத்து, அழிவதற்கு முன்னே திருவயிற்றிலே வைத்து நோக்கி, பின்பு வெளிநாடு

---

47 அவ:— அவன் இவ்வண்ணமாகப் பல திருப்பதிகளிலும் புகுந்து பல திருக்கோலங்களைக் காட்டி உங்களைப் பெற முயல் வதையே இயல்வாகக் கொண்டவனுயிருக்கும்போது நீங்கள் அனைவரும் செய்ந்நன்றியுடன் அவனை அடையுங்கள் என்கிறார்.

வ்யா:— (அரியுருவன் பாதமலர் மாலை அணிந்து) அடியானை ப்ரஹ்லாதனை ரக்ஷிப்பதற்காகத் தன்உருவை நரங்கலந்த சிங்கமாக மாற்றிக்கொண்ட ஸர்வேஶ்வரனுடைய திருவடித்தாமரைகளிலே

வைத் தனக்கு வடிவாக உடையவனுடைய திருவடிகளிலே மலர்மாலையையணிந்து கைகூப்பி ப்₃ராஹ்மமான முஹூர்த் தத்திலே தொழுது உஜ்ஜீவியுங்கோள். "கைகோலி" என்று ஏற்கவே கோலி என்கிறது. "கைகூப்பி" என்றுமாம். (ஞாலமித்யாதி₃) சேதநர்க்கநுப₄வ்யமான குணங்களையுடைய

---

காணப் புறப்பட உமிழ்ந்து. இப்படி ஜக₃த்தை ப₃ஹு முக₂மாக ரக்ஷித்தவனாய், இவ்வோ செயல்களாலே தானே ஸர்வஸ்வாமியென்று தோற்றவிருக்கிறவனே. இப்படிப் பொதுவாகப் பண்ணும் வ்யாபாரங்களொழிய மற்றும் ஆஶ்ரிதவிஷயமாகச் செய்தவையாய், அவர்கள் 'இதொரு நீர்மையே' என்று நெஞ்சுளுக்கும்படி ஹ்ருதயத்தைப்பற்றிக் கிடக்கிற கு₃ணசேஷ்டிதப்ரகாரங்களோடே கூட அறிந்து அநுஸந்தித்துக்கொண்டு, ஆஶ்ரிதனுக்காகத் தன்னை அழியமாறிக்கொண்ட நரஸிம்ஹவேஷத்தை உடையனை

---

செவ்விப்பூமாலைகளை அழகாகச்சாத்தி. (மாலை அரியுருவன்) "அந்தியம்போதில் அரியுருவாகி" [திருப்பல்] என்கிறபடியே மாலைப் பொழுதில் நரசிங்கமாய் அவதரித்ததைச் சொல்லுகிறதாகவுமாம். அப்போது (பாதம் மலர் அணிந்து) என்று 'திருவடிகளிலே செவ்விப்பூக்களைச் சாத்தி' என்கிறது. (காலை கைகோலித்தொழுது எழுமின்) ஸத்வகுணம் தலையெடுக்கும் காலவேளையிலே கை கூப்பித் தொழுது உய்யுங்கள். (கைகோலி) கைகூப்பி. முன்னமே பாரித்துக்கொண்டு என்றுமாம். இப்படி அவனை ஆஶ்ரயிக்க வேண்டிய அவசியமென்னவெனில், அவனே உலகிற்கு ரக்ஷியா யிருக்கையே என்கிறார்,– (ஞாலம் அளந்து) திரிவிக்கிரமாவதாரத் திலே உலகம் முழுவதையும் அளந்து (இடந்து) பிரளய ஜலத் திலே இவ்வுலகம் அழுந்தி அழிந்து கிடந்தபோது வராகமாகிக் குத்தியெடுத்து. (உண்டு உமிழ்ந்த) ப்ரளயத்தாலே இவ்வுலகம் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, பின்பு சேதனர் தன்னையடைந்து உய்வார்களோ என்னும் நப்பாசையாலே இவ் வுலகை வெளியிட்ட. (அண்ணலை) இச்செயல்களாலே இவனே ஸர்வஸ்வாமி என்பது தோற்ற இருப்பவனை; "உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும் கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் மணங்கூடியும் கண்டவாற்றால் தனதே உலகென

ஶேஷியை (மற்றல்லாலித்யாதி₃) மற்று நீங்கள் அநுஸந்திக்கும்படி எல்லாத்தையுமுணர்ந்து காலே தொழுதெழுமின். மற்றெல்லாமிதி பாட₂ாந்தரம். 47.

48. உணர்ந்தாய் மறைநான்கு மோதினாய் நீதி
மணந்தாய் மலர்மகள்தோள் மாலே—மணந்தாய்போய்
வேயிருஞ் சாரல் வியலிரு ஞாலஞ்சூழ்
மாயிருஞ் சோலை மலை.

மாலே-அன்புடையவனே! மறைநான்கும்-நான்குவேதங்களையும், உணர்ந்தாய் — (பிரளயந்தோறும்) நினைவில் வைத்துக் கொண்டிருந்து பிறகு வெளியிடுகின்றாய்; நீதி— அந்த வேதங்களின் பொருளை விவரிக்கவல்ல ஸ்ம்ருதி முதலிய உபப்ருஂஹண நூல்களையும், ஓதினாய் — (மநு முதலிய மஹர்ஷிகள் முகமாக) அருளிச்செய்கின்றாய்; மலர் மகள் —

---

வனுடைய திருவடித்தாமரைகளிலே செவ்விமாலைகளை அழகுபெறச் சாத்தி ஸத்த்வோத்தரமான ப்₃ராஹ்ம முஹூர்த்தத்திலே கையைக் கூப்பிக்கொண்டு ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கள். 47.

---

நின்றான்'' [திருவாய் 4 5-10] என்கிறபடியே. (மற்று அல்லால்) முற்கூறியபடி கைகூப்பித்தொழுவதற்கு மேலே. (உளங்கிடந்த ஆற்றால் உணர்ந்து தொழுது எழுமின்) உங்களுடைய நெஞ்சிலே எப்படியெல்லாம் உங்களால் அநுஸந்திக்கமுடியுமோ அப்படியெல்லாம் அநுஸந்தித்து இவனை ஆஶ்ரயித்து உய்யுங்கள். (மற்றல்லால்)அளந்திடந்து உண்டுமிழ்ந்து ஸகலசேதனர்க்கும் பொதுவாகச் செய்யும் செயல்களுக்கு மேலே சிறப்பாக அடியார்க்குச் செய்யும் காரியங்களை * நினைக்கிறது என்றுமாம். அப்போது (உளம் கிடந்த ஆற்றால் உணர்ந்து...) என்றது 'அடியார்கள் இது ஒரு நீர்மையே' என்று நெஞ்சுருகும்படி அவர்களுடைய நெஞ்சைப் பற்றிக்கிடக்கும் குணம், செயல், பிரகாரம் முதலியவற்றுடன் கூட அறிந்து அநுஸந்தித்துக்கொண்டு, அடியானுக்காகவேயான நரசிங்கனை ஆஶ்ரயித்து உய்யுங்கள் என்றதாகிறது. 47.

பூவிற்பிறந்த பெரியபிராட்டியாருடைய, தோள் — திருத் தோளோடே, மணந்தாய் — கூடி வாழ்கின்றாய்; வேய் இரும் சாரல் – மூங்கில்கள் நிறைந்த தாழ்வரையையுடையதும், வியல் — அற்புதமானதும், இரு ஞாலம் சூழ் பரந்த இப்பூமி யிலுள்ளவர்களால் வலஞ்செய்யப்படுவதுமான, மாயிருஞ் சோலைமலைபோய் — திருமாலிருஞ்சோலைமலையிலே வந்து, மணந்தாய் — திருவுள்ளமுவந்து வாழ்கின்றாய்.

பெரி அவ: — (உணர்ந்தாய்) எல்லாருமுன்னை உணரும் படி எல்லாத்தையும் உண்டாக்கினாய்.

வ்யா: — (உணர்ந்தாய் மறைநான்கும்) ஸம்ஸ்காராத்மக மாக உன் திருவுள்ளத்திலே கிடந்த வேதத்தை ப்ரகாஶிப் பித்தாய். (ஓதினாய் நீதி) வேதோ₂பப்₃ருஂஹணமான இதி

அவ: — 'உளங்கிடந்தவாற்றால்' என்று ஆஶ்ரிதருக்கு மறக்கவொண்ணாதபடியாக நான்செய்த செயல்தான் ஏதென்ன; அதுக்கு ஓர் எல்லையில்லை என்கிறார்.

உரை: — ப்ரளயத₃ஶையிலே ஸங்கோசித்து ஸம்ஸ்கார ரூபேண கிடந்த நாலு வேதங்களையும் ஸுப்தப்ரபு₃த்₃த₄ந்யாயத்தாலே பத₃வர்ணாநுபூர்வி தப்பாதபடி உணர்ந்து அருளிச்செய்தாய். அந்த வேதா₃ர்த்த₂ங்களை ஸம்ஶயவிபர்

48. அவ: — "'உளம் கிடந்த ஆற்றால்' என்று அடியார்க்கு மறக்கவொண்ணாதபடியாக நான் செய்த செயல்தான் எது?" என்ன, "எல்லாரும் உன்னை உணரும்படி எல்லா சாஸ்திரங் களையும் உண்டாக்கி, எல்லார் கண்ணுக்கும் விஷயமாயிருக்கும் உன் செயல்களுக்கு ஓர் எல்லையில்லை" என்கிறார்.

வ்யா: — (உணர்ந்தாய் மறை நான்கும்) ப்ரளய காலத்திலே பரமபுருஷனான உன்னுடைய திருவுள்ளத்திலே ஸம்ஸ்காரரூபமாக ஸங்கோசத்தை (சுருக்கத்தை) அடைந்திருந்த நாலுவேதங்களையும், உறங்கினவன் விழித்தவுடன் முன் நடந்தவைகளை உணர்வது போலே, பதங்கள், வர்ணங்கள், ஆநுபூர்வி (பதவர்ணங்

ஹாஸபுராணங்களை உண்டாக்கினாய். (மணந்தாய் மலர்மகள் தோள்) வேத₃ப்ரதிபாத்₃யையானவளுடைய தோளை ஸம்ஶ்லேஷித்தாய், (போய்வேயித்யாதி₃) வேத₃ப்ரதிபாத்₃யனாகில்

---

யயமற நயிப்பித்து விஶதீ₃கரிக்கக்கடவ ஸ்ம்ருத்யாத்₃யுபப்₃ரும்ஹணங்களை மந்வாதி₃களான முனிவரை உண்டாக்கி நின்று அருளிச்செய்தாய். அந்த வேதங்களுக்கும் உபப்₃ரும்ஹணங்களுக்கும் ப்ரத₄ாநப்ரதிபாத்₃யையாய், தாமரைப் பூவை இருப்பிடமாக உடையவளான பெரியபிராட்டியாருடைய திருத்தோளோடே, " श्रिया सार्धं आस्ते " (ஶ்ரியா ஸார்த்₄ம் ஆஸ்தே) என்னும்படி ஒரு தே₃ஶவிஶேஷத்தில் நித்ய ஸம்ஶ்லேஷம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தாய்; அவள் பக்கலிலே பெருப்பிச்சனானவனே! ஓலைப்புறத்திலே

---

களின் அமைப்பு) ஆகியவற்றில் சிறிதும் மாறுபாடு ஏற்படாதபடி உணர்ந்து அருளிச்செய்தாய். 'உரைத்தாய்' என்னாமல், 'உணர்ந்தாய்' என்கையாலே, வேதம் அபௌருஷேயமானது என்றும், ஸர்வேஶ்வரனும் அதைச் செய்யவில்லையென்றும் காட்டுகிறார். 'மறை உரைத்த' என்று கூறுமிடங்களிலும் இப்படியே கொள்ளவேணும். (ஓதினாய் நீதி) அந்த வேதத்தின் பொருள்களை ஐயம்திரிபறத் தெளிவுபடுத்தும் ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், ஸாத்விக புராணங்கள் ஆகிய உபப்₃ரும்ஹணங்களை, மநு, வால்மீகி, வியாஸர், பராஶரர் முதலான தத்வத₃ர்ஶிகளான முனிவரை உண்டாக்கி அவர்களுக்கு அந்தர்யாமியாய் நின்று அருளிச்செய்தாய். "நயதீதி நீதி:" என்கிறபடியே வேதார்த்தங்களை நியாயங்களாலே நயிப்பித்துத் தெளிவுபடுத்துகிறவைகளாகையாலே உபப்ரும்ஹணங்கள் 'நீதி' எனப்படுகின்றன. (மலர்மகள் தோள் மணந்தாய்) இவனுக்கு ஸ்வரூபநிரூபகபூ₄தையாயிருக்கையாலே, அந்த வேதங்களாலும், உபப்ரும்ஹணங்களாலும், அவனைப்போலே ப்ரத₄ானமாகச் சொல்லப்படுகிறவளாய், தாமரைப் பூவை இருப்பிடமாகக் கொண்டு, 'இம்மலரில் மணமே ஓர் வடிவு கொண்டதோ' என்னலாம்படியிருப்பவளான பெரிய பிராட்டியாருடைய திருத்தோள்களை ஸ்ரீவைகுண்டத்திலே என்றும் அணைத்துக்கொண்டு எழுந்தருளியிருந்தாய்.

பரமபதத்திலேயிறேயென்றுதபடி ஸம்ஸாரிகளுக்கு அநுபவிக்கலாம்படி திருமலையை விரும்பினாய். 48

---

கேட்டுப்போம்படி எட்டாத நிலத்திலே அவளோடே கலந்து வர்த்திக்கிற அளவன்றிக்கே ஸம்ஸாரிகளோடே கலந்து பரிமாறும்படி மூங்கில்கள் நிறைந்த பர்யந்தங்களையுடைத்தாய், விஸ்மயநீயமாய், பரப்புடைத்தான பூமியிலுள்ளவர்களாலே சூழ்ந்து ஆஶ்ரயிக்கப்படுமதாய், உயர்ந்து பரந்த சோலைகளையுடைத்தான திருமலையை உகப்புடனே போய்க் கலந்தாய். 48

---

''வைகுண்டே து பரே லோகே
ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: |
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா
பக்தைர் பாகவதை: ஸஹ ||''

[வைகுண்டம் என்னும் மேலான உலகில் பெரிய பிராட்டியாரோடு கூடிய ஜகத்ஸ்வாமியான நாராயணன் பக்த பாகவதர்களுடன் எழுந்தருளியிருக்கிறான்.] என்கிறபடியே. (மாலே) ''பித்தர் பனி மலர்மேல் பாவைக்கு'' [திரு நெடு 18] என்கிற படியே அவளிடம் மயங்கினவனே! ஓலைப்புறத்திலே கேட்கலாம்படி சாஸ்திரங்களை அருளியதாலும், எட்டாத பரமபதத்திலே ஸ்ரீமானும் எழுந்தருளியிருப்பதாலும் இங்குள்ளார்க்குப் பயனில்லையே எனில்: (மணந்தாய் போய்வேயிருஞ்சாரல் வியலிரு ஞாலஞ் சூழ் மாயிருஞ் சோலை மலை) ஸம்ஸாரிகளும் அனுபவிக்கலாம்படி அவர்களோடு கலந்து பரிமாறுவதற்காக, மூங்கில்கள் நிறைந்த தாழ்வரையை உடையதும், வியக்கத்தக்கதும், பரந்த பூமியிலுள்ளவர்களால் ''மாலிருஞ்சோலை வலஞ்செய்து நாளும் மருவுதல் வழக்கே'' [திருவாய் 2-10-8] என்கிறபடியே வலஞ்செய்யப்படுவதான உயர்ந்து பரந்த சோலைகளையுடையதுமான திருமாலிருஞ்சோலை மலையை உகப்புடன் போய்க்கலந்தாய். இவ்வண்ணமாக, உன் அடியார்கள் மறக்கவொண்ணுதபடி நீ செய்தசெயல்களுக்கு ஓர் எல்லையில்லை என்று கருத்து. 48.

49. மலையேழும் மாநிலங்க ளேழு மதிர,
குலைசூழ் குரைகடல்க ளேழும் – முலைசூழ்ந்த
நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவனென்று
அஞ்சாதென் னெஞ்சே யழை.

என் நெஞ்சே — எனது மனமே!, மலை ஏழும் — ஏழு குலபர்வதங்களும், மா நிலங்கள் ஏழும்—ஏழு த்₃வீபங்களும், குலை சூழ் குரை கடல்கள் ஏழும் — கரையாலே சூழப்பட்டு ஒலிசெய்கிற ஏழு ஸாகரங்களும், அதிர – எதிரொலிக்கும் படியாக, ''முலை சூழ்ந்த நஞ்சு உரத்து பெண்ணை-முலையில் வியாபித்த விஷத்தாலுண்டான கொடுமையையுடைய (பூதனையென்னும்) பேய்மகளை, நவின்று – (முலையுண்ணும் போது இடையிடையே மழலைச் சொற்கள்) சொல்லிக் கொண்டே, உண்ட—உண்டுமுடித்த, நாவன் என்று — திருநாவையுடையவனே!'' என்று சொல்லி, அஞ்சாது-(தடையைக்கண்டு) பயப்படாமல், அழை—வாய்விட்டுக் கூப்பிடு.

பெரி அவ:— திருமலையை விரும்பின பின்பு, லோக மெல்லாம் அதிரும்படி அவன் பேரைச்சொல்லி அழையென் கிறார்.

---

அவ:— ''நெஞ்சே! அவன் இப்படித் திருமலையிலே ஸந்நிஹிதனான பின்பு 'நமக்கு ஒரு ப்ரதிப₃ந்த₄கம் உண்டு' என்று அஞ்சாதே ஜக₃த்து அடங்கலும் அதிரும்படி அவனைச் சொல்லிக் கூப்பிடு'' என்கிறார்.

---

49. அவ:—''நெஞ்சே! அவன் நமக்காக இப்படித்திருமாலிருஞ் சோலைமலையை விரும்பி ஸுலப₄னாய் நிற்கும்போது, 'நான் அவனை அடைய அநாதிபாபங்கள் தடையாயிருக்கிறதே' என்று அஞ் சாமல், உலகமெல்லாம் எதிரொலிக்கும்படி அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிடு'' என்கிறார்.

வ்யா:—(மலையேழுமித்யாதி₂) முலையெங்கும் வ்யாபித்த நஞ்சாலே மிடுக்குடையவளான பூதனையை முக்₃த₄மான சொலவுகளை அவள் முகத்தே சொல்லிச் சுவையாநின்ற நாவை யுடையவனென்றழை. ப்ரதிப₃ந்த₄முண்டாகில் செய்வதென்! என்னில்: (அஞ்சாது) பூதனைபட்டது படுமித்தனை. 49

உரை:—பூ₄மிக்கு ஆத₄ாரங்களான ஸப்தகுலபர்வதங் களும், பரப்பையுடைத்தான ஸப்தத்₃வீபங்களும், கரையாலே சூழப்பட்டு, அத்தை அதிக்ரமியாதே அதுக்குள்ளே கிடந்து கோ₄ஷிக்கிற ஸப்தஸமுத்₃ரங்களும் அதிரும்படி, முலையிலே எங்கும் வ்யாபித்த விஷத்தாலுண்டான மிடுக்கையுடைய பேய்ப்பெண்ணை க்ருதஜ்ஞதை தோற்ற நடுநடுவே சில முக்₃த₄ஜல்பிதங்களைச் சொல்லிக்கொண்டு முலையுண்டு முடித்த நாவையுடையவனென்று, எனக்கு விதே₄யமான நெஞ்சே! ப்ரதிப₃ந்த₄கத்தை நினைத்து அஞ்சாதே வாய் விட்டுக்கூப்பிடு. 49

வ்யா:—(மலையேழும் மாநிலங்களேழும் குலைசூழ் குரைகடல்கள் ஏழும் அதிர)'பூ₄த₄ரா:' என்று பெயர் பெறும்படி பூமிக்கு ஆதாரமாயிருக்கும் ஏழுகுலபர்வதங்களும், பரப்பையுடையதான ஜம்பூத்வீபம் முதலான ஏழு த்₃வீபங்களும், கரையாலே சூழப் பட்டு, அதை மீறாமல் அதற்கு அடங்கிக் கிடந்து முழங்கும் லவணஸமுத்₃ரம் முதலான ஏழு கடல்களும் எதிரொலிக்கும்படி யாக. (அதிர அழை) இவையெல்லாம் ஒலிக்கும்படியாகக் கூக் குரலிடு 'நான் இப்படி அழைப்பதற்குத் தடையாக அநாதி பாபம் உள்ளதே' என்ன, அது பூதனைபட்டதுபடும் என் கிறார் மேலே; (முலை சூழ்ந்த நஞ்சுரத்துப்பெண்ணை) ஓரிடம் தப்பாமல் முலையிலே எங்கும் பரந்து நிற்கும் விஷத்தையும், அதனால் எவ்வுயிரையும் முடிக்கவல்ல பலத்தையும் உடைய பேய்ப்பெண்ணு கிற பூதனையை. (நவின்றுண்ட) "ஒக்கலை வைத்து முலைப்பால் உண்ணென்று தந்திட" [திருவாய் 1-9-5] என்கிறபடியே அவள் பேரன்போடு தருவதுபோலே நடித்துத் தன் அன்பு தோற்ற 'உன்' என்றாப்போலே சில வார்த்தைகளைச் சொல்லுகையாலே, இவனும் தன் நன்றிதோற்றச் சில பிள்ளைப்பேச்சைப் பேசிக் கொண்டே முலையுண்டபடியைச் சொல்லுகிறது. (பெண்ணை...

50. அழைப்பன் திருமாலை யாங்கவர்கள் சொன்ன
பிழைப்பில் பெருப்பெயரே பேசி—இழைப்பரிய
வாயவனே யாதவனே யென்றவனை யார்முகப்பும்
மாயவனே என்று மதித்து.

இழைப்பு அரிய — நினைப்பதற்கு அரிய, ஆயவனே — இடையனாய்ப் பிறந்தவனே, யாதவனே — யதுகுலத்தில் (வஸுதேவர் மகனாய்த்) தோன்றினவனே! என்று — எனக் கூறி, மாயவனே என்று — குணச்செயல்களால் ஆச்சர்ய பூதனே! என்று, மதித்து — அநுஸந்தித்துக் கொண்டு, ஆங்கு அவர்கள் சொன்ன — அத்திருவாய்ப்பாடியிலுள்ள வர்கள் சொல்லி அழைத்த, பிழைப்பு இல் பெரு பெயரே பேசி — அநுஸந்தித்தவர்களை ஈடுபடுத்தி அழிக்கின்ற சிறந்த திருநாமங்களையே பேசி, யார் முகப்பும் — எல்லாரெதிரிலும், திருமாலை அவனை — திருமாலாகிற அப்பெருமானை, அழைப்பன் — கூப்பிடாநின்றேன்.

---

அவ:— இப்படி நெஞ்சைக் கூப்பிடச்சொல்லி நியமித்தவர், அநந்தரம் திருவாய்ப்பாடியிற் பெண்கள் அவன் திருநாமங்களை ப்ரேமபாரவஶ்யத்தால் வந்த தளர்த்தி தோற்றச் சொல்லுமாபோலே நெஞ்சுக்கு முன்னே தாம் முற்படக் கூப்பிடுகிறார்.

---

உண்ட நாவன்) முலைப்பாலுண்பதாக நடித்து, அவள் உயிரையே உண்ட நாவையுடையவன். "பேய்ச்சி பெருமுலையூடுயிரை வற்ற வாங்கி உண்டவாயான்" [பெரிய திரு 1-8-1] என்றாரன்றோ மங்கை மன்னனும். (என்று அஞ்சாது) இப்பூதனை மடிந்த வரலாற்றை அநுஸந்தித்தால், நீ தடைகளைக் கண்டு அஞ்சவேண்டியதில்லை. (என் நெஞ்சே) எனக்கு வசப்பட்டிருக்கும் நெஞ்சே! "முந்துற்ற நெஞ்சே" [பெரியதிருவ-1] "என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந் தன்னை அகல்விக்கத் தானும் கில்லான்இனி" [திருவாய் 1-7-8] என்கிறபடியே பகவத்விஷயத்தில் என்னிலும் முற்பட்டு நிற்கும் நெஞ்சே! என்றுமாம். (அதிர அழை) உலகெல்லாம் எதிரொலிக்கும்படி அழைப்பாயாக என்று அந்வயம்.49.

பெரிய வ்யா:—(அழைப்பன் திருமாலை) ஶ்ரிய:பதியை யழைப்பன். (ஆங்கித்யாதி₃) திருவாய்ப்பாடியிலவர்கள் சொன்னவற்றை; அநுஸந்திக்கப் புக்கால் பிழைக்கவரிதாய், அத்தாலே அரைக்ஷணம் விடப்போகாத திருநாமங்களைச் சொல்லி. ''ஆங்கவர்கள்'' என்றது-திருவாய்ப்பாடியிலுள்ள

---

உரை:—ஆர்க்கும் ஸ்வயத்நத்தால் நினைக்க அரியனாய், பெண்பிறந்தாரைப் புண்படுத்தும் இடையனானவனே! என்றும், யது₃குலத்திலே ஶ்ரீவஸுதே₃வர் திருமகனாய்ப் பிறந்தவனே! என்றும், கு₃ணசேஷ்டிதங்களால் ஆஶ்சர்ய பூ₄தனானவனே! என்றும் பு₃த்₃தி₄ பண்ணிக்கொண்டு, ''நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவன்'' என்று ப்ரஸ்துதமான அந்தத் திருவாய்ப்பாடியிலுள்ள இடைப் பெண்

---

50. அவ:— இப்படி அவனைக் கூப்பிடச் சொல்லி நெஞ்சை நியமித்தவர், க்ருஷ்ணாவதாரப்ரஸ்தாவம் வருகையாலே அவ்வவதாரத்தில் திருவாய்ப்பாடியில் பெண்கள் அவன் திருநாமங்களைக் காதலின் மிகுதியாலே உண்டான ஆற்றாமை தோற்றச் சொன்னது போலே, தம் நெஞ்சுக்கு முன்னால் தாமே முற்பட்டுக் கூப்பிடுகிறார்.

வ்யா:—(அழைப்பன் திருமாலை) லக்ஷ்மீநாதனை அழைப்பேன். புருஷகாரபூ₄தையோடு எப்போதும் கூடியிருக்கும் ஸர்வேஶ்வரனை அழைப்பேன். என்ன பெயர்களைச் சொல்லி அழைப்பாய்? எனில், திருவாய்ப்பாடியில் பெண்கள் சொன்ன பெயர்களை என்கிறார் மேலே — (ஆங்கு) முற்பாசுரத்தில், 'நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவன்' என்று அநுஸந்திக்கப்பட்ட க்ருஷ்ணாவதாரகாலத்திலே. (அவர்கள்) அவனை முற்றூட்டாக அநுபவிக்கப் பெற்ற பாக்யவதிகளான திருவாய்ப்பாடிப் பெண்கள். (சொன்ன பிழைப்பில் பெரும்பெயரே பேசி அழைப்பன்) அவ்வாய்ப்பாடிப் பெண்கள் சொன்னவையாய், அவற்றால் சொல்லப்படும் குணசேஷ்டிதங்களின் இனிமையாலே அநுஸந்தித்தாரைக் * காலாழ்ந்து நெஞ்சழிந்து கண்சுழலும்படி பண்ணவல்லவையாய், அதனாலேயே அநுஸந்தித்தவர்களால் விடவொண்ணாமையாகிற பெருமையை உடைய திருநாமங்களைச் சொல்லி அழைப்பேன். (பிழைப்பில்) 'தோஷமற்ற பெயர்' என்றும் பொருள் கொள்ளலாமாயினும்,

வர்களைப் பார்த்து நம்முடைய பக்கலிலே இரங்குவரென்று. ( இழைப்பரியவாயவனே ) நினைக்கவரிதாம்படி பெண்களைப் படுத்தும் க்லேசத்தையுடைய க்ருஷ்ணனே! ( யாதவனே என்றவனை ) இடைத்தனத்தோபாதியும் ஸ்ரீவஸுதேவர்

---

களானவர்கள் சொன்னதாய், உள்ளீடான கு₃ணசேஷ்டித ஸாரஸ்யத்தாலே அநுஸந்தி₄த்தார்க்குப் பிழைக்க வொண்ணாதபடியிருப்பதாய், இரண்டு மூன்று அக்ஷரமாயிருக்கச் செய்தே தளர்த்தியின் க₄நத்தாலே சொல்லி முடிக்கவொண்ணாத பெருமையையுடைத்தான திருநாமங்

---

பிரகரணஸ்வாரஸ்யத்தாலே 'அநுஸந்தித்தார்க்குப் பிழைக்க வொண்ணாத' என்று பொருள்கொள்ளப்பட்டது. (பெரும் பெயரே பேசி) பரத்வத்தைக் காட்டும் நாராயணன் முதலான சிறு பேர்களைச் சொல்லாமல், ஸௌலப்₄யஸௌஶீல்யாதி₃களைக் காட்டும் பெரும்பெயர்களையே பேசி என்றுமாம். கோவிந்தபட்டாபிஷேகம் பண்ணினபின்பு நாராயண நாமத்தைச் சொல்லுவதும் குற்றமாயன்றோ இருப்பது.

> "நாஹம் தே₃வோ ந க₃ந்த₄ர்வோ ந யக்ஷோ ந ச தா₃நவ:।
> அஹம் வோ பா₃ந்த₄வோ ஜாதோ
> நைதச்சிந்த்யமிதோऽந்யதா₂ ॥" [வி-பு 5-13-12]

[ நான் தேவனும், கந்தர்வனும், யக்ஷனும், தானவனுமல்லன்; உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருப்பவன்; வேறுவிதமாக நீங்கள் நினைக்கக்கூடாது ] என்றவனன்றோ அவன். (பெரும் பெயரே பேசி) இரண்டு மூன்று அக்ஷரங்களாயிருந்தபோதிலும், ஆர்த்ரமையின் மிகுதியினாலே அதையும் சொல்லிமுடிக்கவொண்ணாமலிருக்கையால் 'பெரும் பெயர்' என்கிறாராகவுமாம். அப்பெயர்கள் தான் யாவை எனில்; (இழைப்பரிய ஆயவனே) "யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்" [திருவாய் 1-3-4] "இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈனச் சொல்லே" [திருவிருத்தம் 98] என்கிறபடியே தம் முயற்சியாலே எவர்க்கும் நெஞ்சிலே இழைக்க ( நினைக்க ) அரியவனாய், பெண்பிறந்தாரைத் தன் குணசேஷ்டிதங்களாலே படாதபாடுபடுத்தும் இடையனானவனே! (யாதவனே) யது₃குலத்

மகனுனதுவும் ஆகர்ஷகமானபடி. (யார்முகப்பும்) எல்லார் முகப்பும். (மாயவனே யென்று மதித்து) ஆச்சர்ய பூதனே யென்று மதித்து. திருமாலையழைப்பன். 50.

51. மதிக்கண்டாய் நெஞ்சே மணிவண்ணன் பாதம்
மதிக்கண்டாய் மற்றவன்பேர் தன்னை — மதிக்கண்டாய்
பேராழி நின்று பெயர்ந்து கடல்கடைந்த
நீராழி வண்ணன் நிறம்.

நெஞ்சே — மனமே!, மணி வண்ணன் பாதம் — நீலமணி வண்ணனுன எம்பெருமானது திருவடிகளை, மதி கண்டாய் — எண்ணக்கடவாய்; மற்று - இன்னமும், அவன் பேர் தன்னை - அப்பெருமானது திருநாமங்களை, மதி கண்டாய் — நினைக்கக் கடவாய்; பேர் ஆழி நின்று பெயர்ந்து — பெரிய திருப்பாற் கடலில் நின்றும் துயில் விட்டெழுந்து, கடல் கடைந்த—

களைச் சொல்லி, உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற எல்லார் முன்பும் ஸ்ரிய:பதியான அந்த ஸர்வேஶ்வரனை அவர்களுக்கு இரங்கினுப்போலே நம்பக்கலிலும் இரங்கக் கூடும் என்று கூப்பிடா நின்றேன். 50.

திலே ஸ்ரீவஸுதேவர் திருக்குமாரனுய்ப்பிறந்தவனே! இடைத்தனத் தைப்போலே ஸ்ரீவஸுதேவர் மகனுனதும் நெஞ்சையுருக்குகிறது என்று கருத்து. (என்று அவனை அழைப்பன்) இவ்வண்ணமாக ஸர்வேஶ்வரனுன அவனை ஸௌலப்யஸௌஶீல்யாதிகளைக் காட்டும் திருநாமங்களைச் சொல்லி அழைப்பேன். இப்படி அழைப்பது தான் ரஹஸ்யத்திலேயோ? எனில்; (யார் முகப்பும்) என் ஆற்றுமை யாலே உகந்தவர், உகவாதார் என்னும் வித்தியாசம் பாராமல் எல்லார் முன்பேயும் அழைப்பேன். கண்டவர் முன்பே அவனுடைய எளிமையைச் சொல்லுவது அவனைத் தூற்றுவதற்காகவோ? எனில்; (மாயவனே என்று மதித்து அழைப்பன்) ஆச்சர்யமான குணங் களையும், செயல்களையும் உடையவனே என்னும் கௌரவபுத்தி யுடன் அழைப்பேன். (அழைப்பன்) திருவாய்ப்பாடியிற் பெண் களுக்கு மனமிரங்கினுற்போலே நம்மிடமும் இரங்குவான் என்று எண்ணிக் கூப்பிடா நின்றேன். (அழைப்பன்) 'நெஞ்சே அழை' என்று நியமிக்கப்பட்ட நெஞ்சிலும் முற்பட்டு அழைப்பேன். 50.

(தேவர்களுக்கு அமுதங்கொடுக்க) அக்கடலைக் கடைந்த, நீராழி வண்ணன் நிறம்—கடல் வண்ணனான அப்பெருமானுடைய திருமேனி நிறத்தை, மதி கண்டாய்—தியானிக்கக்கடவாய்.

பெரி-வ்யா:— (மதியித்யாதி) ஶ்ரமஹரமான வடிவை யுடையவனுடைய திருவடிகளை நெஞ்சே மதிக்கண்டாய். அவனுக்கு வாசகமான திருநாமத்தை மதிக்கண்டாய். (மதிக்

அவ:-இப்படி அவன் திருநாமத்தைச்சொல்லுகைக்குத் தம் ஈடுபாட்டை அநுஸந்தித்தவர், நெஞ்சே! நீ முந்துற முன்னம் என்னைப்போலே கலங்கித் தளராதே, அவன் ஸௌந்தர்யாதிகளைத் தனித்தனியே தரித்துநின்று அநுபவிக்கப்பார் என்கிறார்.

உரை:— நெஞ்சே! நீலமணிபோலே இருண்டு குளிர்ந்த வடிவையுடையவன் திருவடிகளை புத்திபண்ணுகிடாய்! அதுக்குமேலே அந்த ஸர்வேஶ்வரனுடைய அவ்வடி வழகுக்கு வாசகமான திருநாமங்களை புத்திபண்ணுகிடாய்!

51. அவ:— முன் பாசுரத்தில் பிழைப்பில் பெரும்பெயரைப் பேசமுற்பட்டாராகையாலே கலங்கித்தளர்ந்தார். "நெஞ்சே! நீ என்னைப் போலே கலங்கித் தளராதே அவனுடைய அழகு முதலானவற்றைத் தனித்தனியே தரித்து நின்று அநுபவிக்கப் பார்ப்பாயாக" என்கிறார்.

வ்யா:— (நெஞ்சே) என்னைப்போலே ஆராவமுதைச் சடக்கெனப்பருகப் புக்குத் திகைக்காதே பொறுக்கப் பொறுக்க பகவத் விஷயத்தை அநுபவிக்கவிருக்கும் நெஞ்சே! (மணிவண்ணன் பாதம் மதிக்கண்டாய்) நீலமணிபோலே கண்ணுக்கினிய இருண்டு குளிர்ந்த நிறத்தையுடைய திருமேனியை உடையவன் திருவடிகளை முதலில் அநுபவிப்பாயாக. (பாதம்) அடியார் முதன் முதலில் இழியவேண்டிய துறை. (மற்று) அதற்குமேலே. (அவன் பேர் மதிக்கண்டாய்) அந்த ஸர்வேஶ்வரனுடைய அவ்வடிவழகு முதலானவற்றைச் சொல்லும் திருநாமங்களை அநுபவிப்பாயாக. (நிறம் மதிக்கண்டாய்) அதற்குமேலே அவனுடைய திருநிறத்தை

கண்டாயித்யாதி) கண்வளருகைக்குப் போரும்படி பெரிதான திருப்பாற்கடலில் நின்றும் பேர்ந்து பின்னை அத்தைக்கடை வதுஞ் செய்து நீரையுடைத்தான கடல்போலே யிருக்கிற வனுடைய திருநிறத்தை அநுஸந்தி. 51.

52. நிறங்கரியன் செய்ய நெடுமலராள் மார்வன்
அறம்பெரிய னார தறிவார்—மறம்புரிந்த
வாளரக்கன் போல்வானை வானவர்கோன் தானத்து
நீளிருக்கைக் குய்த்தான் நெறி.

---

தன் படுக்கையான பெரிய திருப்பாற்கடலீலேநின்றும் பெயர்ந்து எழுந்திருந்து நின்று, ப்ரயோஜநாந்தரபரர்க்கு அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணுகைக்காக அந்தக்கடலைக் கடைந்தவனாய். அப்போது ஒரு வெண்கடலைக் கருங்கடல் கடைந்தாற்போலே ஆகர்ஷகமாய்த்தோற்றுகிற நிறைந்த நீரையுடைய கடல்போன்ற வடிவையுடையன் திரு நிறத்தை தேவர்களைப்போலே உப்புச்சாற்றை நச்சாதே புத்திபண்ணி அநுபவிக்கப் பார்கிடாய். 51.

---

அநுபவிப்பாயாக. எப்படிப் பட்டவனுடைய திருநிறம் எனில்: (பேராழி நின்று பெயர்ந்து) "தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி" என்கிறபடியே விஸ்தாரமான திருமேனி யோடு கண்வளரலாம்படி பெரியதாயிருக்கும் திருப்பாற்கடலில் நின்றும் தேவர்களின் கூக்குரல் கேட்டு எழுந்து. (கடல் கடைந்த) ஆராவமுதான தன்னை விரும்பாதே உப்புச்சாறான அமுதத்தை விரும்பிய அவர்களுக்கு அதை அளிப்பதற்காக அந்தக் கடலை உடம்பு நோவக்கடைந்த. (கடல் கடைந்த நீராழிவண்ணன்) கடல் கடையும்போது ஒரு வெண்கடலை ஒரு கருங்கடல் கடைந் தாற்போலே ரமணீயமாயுள்ளது. (நீராழிவண்ணன் நிறம் மதிக் கண்டாய்) நிறைந்த நீரையுடைய கடல்போன்ற வடிவையுடைய வன் திருநிறத்தை தேவர்களைப்போலே பிரயோஜநாந்தரங்களில் கண்வைக்காமல் அநுபவிப்பாயாக. இப்படிப் பொறுக்கப் பொறுக்க அநுபவிக்காவிடில் பிழைக்கமுடியாது என்று கருத்து. 51.

நிறம் கரியன்—(நீருண்டமேகம் போல்) கருநிறமுள்ள வனும், செய்ய நெடு மலராள் மார்வன்—சிவந்த நிறத்தை யுடையளாய்ப் பெரிய தாமரைப்பூவை இருப்பிடமாக வுடையளான பெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடை யனுமான எம்பெருமான், அறம் பெரியன் — அருளில் பெருத்தவன்; மறம் புரிந்த—பகைபாராட்டின, வாள் அரக்கன் போல்வானை-வாட்கையனான இராவணன் போன்ற மஹாபலியை, (இராவணனைப் போலவே தலையறுக்க வேண்டியிருந்தும் அது செய்யாமல்) வானவர் கோன் தானத்து-தேவேந்திரனுடைய லோகமான ஸ்வர்க்கத்திலே, நீள் இருக்கைக்கு—நீண்டகாலம் வாழ்வதற்கு உறுப்பாக, நெறி—பாதாளலோகத்தில், உய்த்தான்-செலுத்தின அப் பெருமானுடைய, அது-அவ்வருள் வகையை, ஆர் அறிவார்-யார் அளவிட வல்லார்?

பெரி. வ்யா:— (நிறங்கரியனித்யாதி₃) ஶ்ரமஹரமான வடிவையுடையனாய், நீலமேக₄த்திலே மின்னினாற்போலே

---

அவ:— திருவுள்ளத்துக்கு உபதேசிக்கவல்லரான தம்மைக் கலங்கப்பண்ணின ஸ்ரீய:பதியுடைய வடிவழகை யும், பிராட்டி ஸம்பந்தத்தால் வந்த மிக்க க்ருபையையும் அநுஸந்தித்து, இது ஒருவருக்கும் நிலமல்ல கிடீர்! என்கிறார்.

உரை:—ஆஸ்ரிதருடைய ஸகலதாபங்களும் போம்படி ஶ்ரமஹரமான கறுத்த நிறத்தையுடையவனாய், அந்

---

52. அவ:— தம்மிலும் முற்பட்டு நிற்கும் தம் திருவுள்ளத் திற்கும் உபதேசிக்கவல்ல ஞானப்பெருமையை உடைய தம்மையும் காலாழ்ந்து நெஞ்சழிந்து கண்சுழலப்பண்ணின ஸ்ரீமந்நாராயண னுடைய வடிவழகையும், பெரியபிராட்டியாருடன் சேர்த்தியால் உண்டான பெருங்கருணையையும் அநுஸந்தித்து, 'இதை அள விட்டறிவது எவராலும் முடியாது கிடீர்!' என்கிறார்.

பிராட்டியைத் திருமார்விலேயுடையனுய், அவளோட்டைக் கலவியாலே ஆந்ருஶம்ஸ்ய ப்ரதா,நனுனபடியை யாரறிவார்?

---

நிறத்துக்குப்பரப,ாகஃமான சிவந்த நிறத்தை உடையளாய், பெரிய தாமரைப்பூவை இருப்பிடமாக உடையளான பெரிய பிராட்டியாரைத் திருமார்விலே உடையனுய், அவளோட்டைத் தோயல்வாசியாலே ஆந்ருஶம்ஸ்யம் மிக்கிருப்பானுய்,

---

வ்யா:—(நிறம் கரியன்) அடியார்களுடைய ஸகலதாபங்களும் நீங்கும்படி அவர்களுடைய களைப்பை ஆற்றும் கறுத்துக் குளிர்ந்த திருமேனியை உடையவன். (செய்ய) "நீலதோயத₃மத்₄யஸ்த₂ா வித்₃யுல்லேகே₂வ ப₄ாஸ்வரா" [நா-ஸ9] "நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமான்" [திருவிருத்தம் 29] என்கிறபடியே நீலமேகம் மின்னினுற்போலே அவ்வடிவழகுக்குப் பரப₄ாக₃ரஸத்தை (வர்ணச்சேர்த்தியழகை) அளிக்கும் சிவந்த நிறத்தை உடையவளாய், ஹிரண்யவர்ணையாகையாலே சுட்டுரைத்த செம்பொன்னைப்போலே சிவந்திருப்பள் என்று கருத்து. (கரியன் செய்ய) நீலமணியும் பொன்னும் இழைந்தாற்போலேயிருக்கை. (நெடுமலராள் மார்வன்) பெரிய தாமரைப் பூவை இருப்பிடமாக உடையவளான பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே உடையவன். இத்தால் அவனும் அவளுமாகச் சேர்ந்திருக்கையால் வந்த அழகு சொல்லிற்றுயிற்று.

"தயா ஸ ராஜர்ஷிஸுதோऽபி₄ராமயா
ஸமேயிவாந் உத்தமராஜகந்யயா ।
அதீவ ராம: ஶுஶுபே₄ऽதிகாமயா
விபு₄: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர:॥"
[ரா-பா 77-30]

[அழகியவளாய், உத்தமராஜபுத்ரியான அப்பிராட்டியோடு கூடியவனுய், ராஜரிஷிபுத்திரனுய், அழகனுன இராமன், தேவர் தலைவனுய், ஸர்வவ்யாபகனுன விஷ்ணு, மிகவழகியவளான ஸ்ரீதேவியால் விளங்கிநிற்பதுபோலே விளங்கி நின்றுன்.] என்கிறபடியே இச்சேர்த்தியழகுக்கு இதைத்தவிர வேறு உபமானமில்லையல்லவோ. (அறம் பெரியன்) அப்பெரியபிராட்டியாரோடு சேர்த்தியாலே அருள்மிகுந்தவனுயிருப்பவன். "ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்ம:" [ரா-ஸு 38-41] [இரக்கம் என்பது மேலான அறம்] என்று

(மறம் புரிந்த இத்யாதி₃) ராவணனோபாதியும் வத₄த்துக்கு யோக்₃யனாயிருக்கச்செய்தே இவன் பக்கலிலே ஔதா₃ர்ய

---

திருவினைப்பிரிக்கையாகிற க்ரூரமான செயலைச்செய்த ஸாயுத₄னான ராவணனோடு ஒத்திருந்துள்ள மஹாப₃லியை அழியச்செய்யாமல், ஔதா₃ர்யகு₃ணம் பற்றாசாக 'ராஜ்ய ஶ்ரத்₃தை₄ பண்ணினவன் இழக்கிறதென்?' என்று

---

பெருமாள் சொல்லத் தான் கேட்டதாகப் பிராட்டியே அருளிச் செய்கையாலே, இங்கு அறமெனப்படுகிறது அருளேயாகும். கோபம் என்பதை அறியாதவளாய், கருணையே வடிவெடுத்தவளான பெரியபிராட்டியாரோடு ஸம்ப₃ந்த₄த்தாலேயே எம்பெருமானும் அருளாளனாகிறான்; "த்வத்த ஏவ மயா ஶ்ருத:" [ரா-ஸு 38-41] [உன்னிடமிருந்தே என்னால் கேட்கப்பட்டது] என்கிறபடியே இதையே அவளுக்கும் உபதேசிக்கவல்லவனாகிறான். (ஆர் அது அறிவார்) அம்மிதுனத்தின் வடிவழகை ஆரறிவார்? என்றோ, அவன் அவளாலே அருளாளனானபடியை ஆரறிவார் என்றோ, அவனுடைய அருளின் பெருமையை ஆர் அறிவார் என்றோ கொள்ளலாம். இவனுடைய அருளின் பெருமையைக் காட்டும் இதிஹாஸம் ஒன்றை அருளிச்செய்கிறார் மேலே; (மறம் புரிந்த வாளரக்கன் போல்வானை) "சுரி குழல் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையில் கடுவிசை யரக்கன்" [பெரியதிரு 5-7-7] என்கிறபடியே பிராட்டியைப் பிரிக்கையாகிற கொடிய செயலைப் புரிகையாலே ராவணனைப்போலே கொல்லத்தக்கவனாக மாவலியை. (வாளரக்கன்) சங்கரன் கொடுத்த வாளாகிற ஆயுதத்தை உடைய ராவணன். மாவலி ராவணனைப்போலே கொல்லத்தக்கவன் என்று கூறுவதற்குக் காரணம் என்னவெனில்: அடியானான இந்திரனுடைய மூவுலக அரசை அவனிடமிருந்து பறித்துக்கொண்டமையே ஆகும். தன் திறத்தில் அபசாரம் நேர்ந்தால், "கோபமாஹாரயத் தீவ்ரம்" [ரா-ஆர 24-34] என்று கோபத்தை வரவழைத்துக்கொள்ள வேண்டும்படியிருக்கும் நீர்மையை உடையவன். அடியார் திறத்து அபசாரம் நேர்ந்தால் "கோபஸ்ய வஶமேயிவாந்" [ரா. யு59-136] [கோபத்திற்கு வசப்பட்டான்] என்கிறபடியே கோபவசப்படுவானன்றோ. அப்படியானால், ராவணனை அழித்தவன் மாவலியை அழியச் செய்யாமலிருக்கக் காரணமென்னவெனில்: "இன்று போய் நாளை வா" என்று கூறிக் கடைசிவரையிலும் பார்த்தபின்

கு3ணங் கிடந்ததென்று. ''मन्वन्तरं पूर्णमपेतशत्रुः'' (மந்வந்தரம் பூர்ணமபேதஶத்ரு:) என்னும்படியே மேல் இந்த்3ரபத3ம் செலுத்துவதாக வைத்தவனுடைய ஆந்ருஶம்ஸ்யத்தை அறிவாரார்? 52.

---

தன்னுடைய ஆந்ருஶம்ஸ்யத்தாலே தே3வர்களுக்கு நிர்வாஹகனான இந்த்3ரனுடைய ஸ்வர்க்க3ம்போலே விலக்ஷணமாயிருக்கிற பாதாளலோகத்திலே அவனைப்போலே பறிகொடுத்துக் கண்பிசைய வேண்டாதபடி, நெடுங்காலமிருக்கைக்குப் பண்ணிக்கொடுத்த ஸர்வேஶ்வரனுடைய அந்த க்ருபாப்ரகாரத்தை ஆர்தான் அறிவார்? ஒருவரும் அறியப்போகாது என்று கருத்து. 52.

---

பும் ராவணனிடம் கு3ணலேசமும் இல்லாமையாலே அழியச் செய்தான். தன்னுடையது எல்லாவற்றையும் கொடுக்க இசையும் வண்மைக்குணம் இவனிடம் இருக்கையாலே இவனை அழிக்காமல் அவ்வண்மைக்குணத்தையே பற்றுசாகக்கொண்டு தான் தாழ நின்று இந்திரன் காரியத்தைச் செய்தான் என்று அறியத்தக்கது. இப்படி அழியச் செய்யாமலிருந்தவளவேயோ? இவன் ஆசைப்பட்ட பதவியையும் பிறகு கொடுத்தானன்றோ என்கிறார் மேலே. (வானவர் கோன் தானத்து நீளிருக்கைக்கு) இவன் ஆசைப்பட்ட இந்திரபதவியையும் அடுத்த மந்வந்தரம் முழுவதும் இவனே அடையலாம்படியாக. வானவர் கோன் தானத்து—இந்திரபதவியில்; நீளிருக்கைக்கு– நெடுங்காலமிருப்பதற்கு. (நெறி உய்த்தான்) பாதாளத்திலே இவனுக்குப் பெரும்போகத்தைக் கொடுத்து வைத்தான்.

''யத்ராம்பு3 விந்யஸ்ய ப3லிர் மநோஜ்ஞாந்
அவாப போ4கா3ந் வஸுதா4தலஸ்த2: ।
ததா3மரத்வம் த்ரித4ஶாதி4பத்யம்
மந்வந்தரம் பூர்ணமபேதஶத்ரு:॥'' [வி-பு 5-17-30]

[எந்தத் திருக்கையிலே தானநீரை வார்த்ததினாலே மஹாபலியானவன் இவ்வுலகிலேயே போகங்களை அடைந்து மேலே ஒரு மந்வந்த்ர காலம் முழுவதும் எதிரிகளற்றவனாய், மூவுலகையும்

53. நெறியார் குழல்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியா திளங்கிரியென் றெண்ணி — பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனல் குன்றென்னும்
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு.

நெறியார் அறியாது — திருமலை வழியிலேயே ஊன்றி விருப்பவர்கள் என்று அறியாமல், குழல் கற்றை முன் நின்று பின் தாழ்ந்து-(அவர்களுடைய)மயிர் முடியில் முன்னே முளைத்துப் பின்னே தொங்கிக் கொண்டிருந்து, இள கிரி என்று எண்ணி — இது ஒரு சிறுமலை என்று எண்ணிக் கொண்டு, பூங்கொடிகள் — பூங்கொடிகளானவை, பிரியாது — அவ்விடம் விட்டு நீங்காமல், வைகும் — நித்யவாஸம் பண்ணப் பெற்றதாய், பொரு புனல் குன்று என்னும் — அலையெறிகின்ற அருவிகளையுடைத்தான திருமலையென்று பிரஸித்தமான, வேங்கடமே — திருவேங்கடமே, யாம் விரும்பும் — நாம் ஆசைப்படவுரிய, வெற்பு - திருமலையாகும்.

---

ஆளும் தேவேந்திர பதவியையும் அடைந்தானே.] என்று கூறினானன்றோ பராசரமஹர்ஷியும். (ஆரது அறிவார்) இத்தகைய வனுடைய அருளின் அளவை யாரால் அறியமுடியும்? இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். அப்பிள்ளை நிர்வாஹம் பின்வருமாறு:- (வானவர் கோன் தானத்து நீளிருக்கைக்கு உய்த்தான் நெறி அது ஆரறிவார்) தேவர்தலைவனான இந்திரனுடைய சுவர்க்கம் போலே மிகச்சிறந்து நிற்கும் பாதாளவுலகில், அவனைப்போலே அரசைப்பறிகொடுத்துக் கண்ணைக் கசக்க வேண்டாதபடி, நெடுங்காலம் இருக்கும்படி செய்து கொடுத்த ஸர்வேஶ்வரனுடைய அந்த அருளின் வழியை யார்தான் அறியமுடியும்? 'வானவர் கோன் தானத்து' என்று இந்திரனின் உலகத்தைக் குறிக்குமாயினும், இங்கு அதுபோலவே சிறந்துநிற்கும் பாதாளராஜ்யத்தைக் குறிக்கிறது. 'நெறி' என்று பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான ரீதியில் பாதாளவுலகையும், அப்பிள்ளையுரையில் அருள்வழியையும் குறிக்கிறது. ஆக, இரண்டு நிர்வாஹத்தின்படியும் ஶ்ரிய:பதியினுடைய அளவிடமுடியாத அருளைப் பேசினாராயிற்று. 52.

பெரி. வ்யா-(நெறியாரித்யாதி) ஆஶ்ரயித்தவர்களுடைய முன்னின்று பின்தாழ்ந்த குழற்கற்றையையறியாதே, ஒரு சிறுமலையென்றெண்ணி, மூச்சுவிடுதல் உடம்பாடுதல் செய்யாமையாலே, இன்னமலை என்றறியாமையாலே, பூக்களை

அவ:— "இப்படி ஆஸுரப்ரக்ருதிகளளவிலும் அநுக்ரஹஶீலனானவன் ஸர்வருக்கும் கண்ணாலே காணலாம்படி வந்து நித்யவாஸம் பண்ணுகிற திருமலை கிடீர் நாங்கள் ஆதரிப்பது" என்கிறார்.

உரை:— திருமலையாழ்வாரே உத்தேஶ்யமாக அநுஸந்தித்து மற்றொன்றறியாதே, வழிபட நெடுங்காலம் ஆஶ்ரயிக்கிறவர்களுடைய குழற்கற்றையிலே முன்னே முளைத்துப் பின்னளவும் வர வளர்ந்து, தாழவிழுந்து மூச்சுவிடுதல் உடம்பசைத்தல் செய்யாதேயிருக்கிற இருப்பைக் கொண்டு, சில சேதநரென்றும் அறியாதே சிறு மலைகளா

53. அவ:— இப்படி அஸுரர்களிடமும் இரக்கம் வைப்பவன், நாமனைவரும் கண்ணாலே காணலாம்படி வந்து நித்யவாஸம் செய்யும் திருமலையே நாங்கள் ஆதரிப்பது என்கிறார்.

வ்யா:—(நெறியார்) "வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலைமேல் நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனே" [பெருமாள் திரு 4-8] என்கிறபடியே, திருமலையையே மேலான உத்தேஶ்யமாக நினைத்து, கோயிலுக்குச் செல்லும் வழியையே நெடுங்காலமாகப் பற்றிக்கிடப்பவர்கள்; ஏறிச்செல்லும் பாதையோடு ஒன்றிக் கிடக்கையாலே 'நெறியார்' என்று நெறியைவிட்டே நிருபிக்க வேண்டும்படியிருப்பவர்கள். (குழற்கற்றை) அவர்களுடைய மயிர் முடியிலே. (முன்நின்று பின்தாழ்ந்து) உடம்பை அசைப்பதோ, மூச்சுவிடுவதோ செய்யாமல் திருமலையையே தியானித்து நிற்கையாலே, அவர்களுடைய மயிர்முடியிலே முன் பகுதியில் முளைத்து, பின் பகுதிவரையில் படர்ந்து. (அறியாது) அசையாமலிருக்கையாலே சேதனரென்று அறியாது. (முன் நின்று பின் தாழ்ந்து குழல் கற்றை அறியாது) நெறியார்களுடைய முன் நின்று பின் தாழ்ந்த மயிர் முடியை, இது மனிதருடைய மயிர்முடி என்று

யுடைத்தான கொடிகள் தங்குகிற பொராநின்ற புனலை யுடைத்தாயிருந்துள்ள மலை என்கிற திருவேங்கடமே நாமாசைப்படும் மலை. 53.

54. வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டு(ம்)
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல் – நிற்பென்
றுளங்கோயி லுள்ளம் வைத் துள்ளினேன் வெள்ளத்
திளங்கோயில் கைவிடே லென்று.

வெற்பு என்ற-திருமலையென்னப்படுகிற, இருஞ்சோலை- திருமாலிருஞ் சோலை யென்ன, வேங்கடம்—திருவேங்கட மென்ன, என்ற இவ் இரண்டும்—ஆகிய இத் திருமலைகளி ரண்டும், நிற்பு என்று – நாம் உகந்து வாழுமிடமென்று. நீ மதிக்கும் நீர்மை போல்— நீ திருவுள்ளம் பற்றியிருப்பது போலவே, உளம்கோயில்—(என்னுடைய) ஹ்ருத₃யமாகிற கோயிலையும், நிற்பு என்று-நாம் உகந்து வாழுமிடமென்று,

---

யிருக்கும் என்று பு₃த்₃தி₄பண்ணி. அவ்விடத்தைவிட்டு நீங்காதே கண்டவிடமெங்கும் பரந்து பூத்த கொடிக ளானவை நித்யவாஸம் பண்ணும் ஸ்த₂லமாய், தன்னில் தான் திரை பொராநின்றுள்ள ஜலஸம்ருத்₃தி₄யை உடைத்தாய், அதிப்ரஸித்₃த₄மான திருமலையே நாங்கள் ப்ராப்யமாகப் பற்றியிருக்கும் மலை. 53.

---

அறியாமல் என்றும் கொள்ளலாம். (இளங்கிரியென்றெண்ணி) மலைக்கு மேலே இருக்கும் சிறு பாறைகளே யிவை என்று நினைத்து (பிரியாது) அவர்களைப் பிரியாமல். அவர்கள் நெறியை விட்டுப் பிரியிலன்றோ இவை அவர்களைவிட்டுப் பிரிவது. (பூங்கொடிகள் வைகும்) அவர்கள் உடம்பெங்கும் பரந்து பூத்த கொடிகள் நித்ய வாஸம் செய்யும் ஸ்த₂லமாய். (பொருபுனல் குன்றென்னும் வேங்கடமே) அலையெறியாநிற்கும் அருவிகளையும், தடாகங்களையு முடைய மலை என்று அனைவராலும் புகழப்படும் திருவேங்கடமலையே. (யாம் விரும்பும் வெற்பு) பகவத்ப்ரவணரான தாங்கள் விரும்பி யிருக்கும் மலையாகும். 53.

உள்ளம் வைத்து—உன் திருவுள்ளத்தில் எண்ணியிருப்ப தறிந்து, வெள்ளத்து இள கோயில்—"திருப்பாற்கடலாகிற பர்யங்காலயத்தை, கைவிடேல் என்று—கைவிட வேண்டா" என்று, உள்ளினேன்—ப்ரார்த்திக்கின்றேன்.

பெரி. அவ:- இவர் திருமலையை விரும்பப் புக்கவாறே அவன் இவருடைய ஹ்ருதயத்தை விரும்ப, "பிரானே! அவற்றைக் கைவிடவொண்ணாது" என்கிறார்.

வ்யா:-(வெற்பித்யாதி) வெற்பென்று சொல்லப்படாநின்ற தெற்குத்திருமலை பெரியதிருமலை அவைபோலே என்னுடைய ஹ்ருதயத்தையும் உனக்குக்கோயிலாகநினைத்தாயென்றறிந்து.

---

அவ:—இப்படிதாம் அவனுகந்து வர்த்திக்கும் திருமலையளவும் விரும்புகையாலே, இவனும் தான் உகந்து வர்த்திக்கிற இரண்டு திருமலைகளிற்பண்ணும் விருப்பத்தைத் தன் திருவுள்ளம் ஒன்றிலும் பண்ணிக்கொண்டு மேலே விழுகிறபடியே அருளிச்செய்கிறார்.

உரை:—திருமாலிருஞ்சோலைமலை என்றும், வேங்கடமென்னும் திருநாமத்தையுடைத்தான பெரியதிருமலையென்றும் சொல்லப்படுகிற இவ்விரண்டு ஸ்தாநமும் நாம் உகந்து வர்த்திக்கிற வாஸஸ்தாநம்

---

54 அவ:- இவ்வண்ணமாக. இவர் அவனை விரும்பினவளவோடு நில்லாமல், அவன் விரும்பி வாழும் திருமலையையும் விரும்பத்தொடங்கியவுடன், இந்த ஸர்வேச்வரனும். திருப்பாற்கடலிலும், இரு திருமலைகளிலும் பண்ணும் விருப்பத்தை இவர் திருவுள்ளத்திலேயே செய்துகொண்டு மேல்விழுவதை. பார்த்துப் 'பிரானே! அவற்றைக் கைவிடலாகாது' என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(வெற்பென்ற) 'திருமலை' என்றே சொல்லப்படுகிற; எத்தனையோ மலைகள் இருந்தபோதிலும் அவற்றுக்கு பகவத்ஸம்பந்தம் இல்லாமையாலே, அவை 'திருமலை' என்று சொல்லப்படுவதில்லை; இவ்விரு மலைகளே திருமலை என்று சொல்லப்படுகின்றன. அவைதான் எவையென்னில்; (இருஞ்சோலை வேங்கடம் என்ற இவ்விரண்டும்) தெற்குத்திருமலையான திருமாலிருஞ்சோலைமலையும், வடக்குத்திருமலையான வேங்கடமலையுமே அவை என்கிறார்.

(வெள்ளத்திளங்கோயில்) கைவிடேலென்றுள்ளினேன். (நான் ஹ்ருதக்₄நனுகவொண்ணுதென்று ஹ்ருத₃யத்திலே புகுரு

என்று நீ புத்திபண்ணி ஆதரிக்கும் ஸ்வப₄ாவம்போலே என்னுடைய ஹ்ருத₃யம் என்கிற வாஸஸ்த₂ானமும் நீ உகந்து நித்யவாஸம் பண்ணும் ஸ்த₂ானம் என்று பு₃த்₃தி₄ பண்ணி என்னுடைய ஹ்ருத₃யத்தில் பண்ணுகிற அபி₄நிவேஶாதிஶயமிருந்தபடியால் அவ்வவ திருமலைகளிலே நிலை நிற்கும்படியும் என் ஹ்ருத₃யம் திருந்துமளவும்வாஸஸ்த₂ான

(நிற்பு என்று) சேதனரைப் பெறுவதற்கு ஸாதனங்களாகையாலே உகந்து வாழும் இடங்களென்று. (நீ மதிக்கும் நீர்மைபோல்) என்னைப் பெறுவதற்கு முன்பு நீ மதித்துவந்த தன்மைபோலே. இங்கு அர்ச்சாஸ்த₂லங்கள் இரண்டைச் சொன்னது, மற்ற அர்ச்சாஸ்த₂லங்களுக்கும், சேதனரைப்பெறுவதற்கு ஸாதனமான திருப்பாற் கடல் முதலான வ்யூஹஸ்தலங்களுக்கும், பரமபதம் முதலான வற்றுக்கும் உபலக்ஷணம். (உளம் கோயில் நிற்பு என்று உள்ளம் வைத்து) என் மனமாகிற கோயிலே என்னைப் பெற்ற பின்பு உகந்து வாழும் இடமாயுள்ளது என்று அறிந்து.

திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே யென்தலையே
திருமால் வைகுந்தமே தண்திருவேங்கடமே யெனதுடலே
அருமா மாயத் தெனதுயிரே மனமே வாக்கே கருமமே
ஒருமா நொடியும் பிரியா னென்னூழி முதல்வனொருவனே.
[திருவாய் 10-7-8]

கல்லும் கனைகடலும் வைகுந்த வானுடும்
புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம்—வெல்ல
நெடியான் நிறங்கரியா னுள்புகுந்து நீங்கான்
அடியேன துள்ளத் தகம். [பெரிய திருவந்தாதி 68]

நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத்தணை யரங்கம் பேரன்பில்—நாகத்
தணைப் பாற்கடல் கிடக்கு மாதிநெடுமால்
அணைப்பார் கருத்த னவான். [நான் திருவ-36]

கைக்கு பாலாலயமாகக்கொண்ட திருப்பாற்கடலைக் ... விடாதே கொள்ளென்று இரக்கிறேன். 54.

---

மாகக் கற்பித்ததான திருப்பாற்கடலாகிற பாலாலயத்தையும் விடத்தேடுகிருயோ என்று நினைத்து. 'என் பக்கல் வருகைக்கு க்ருஷிபண்ணிய அவ்விடத்தை க்ருதஜ்ஞதை தோற்றவும், என் உகப்பைப் பற்றவும் பிரானே! கைவிடாதொழியவேணும்' என்று ப்ரார்த்தித்தேன். 54.

---

தலைமேல் புனைந்தேன் சரணங்கள் ஆலின்
இலைமேல் துயின்ற இமையோர் வணங்க
மலைமேல் தான்நின் றென்மனத்து ளிருந்தானை
நிலைபேர்க்க லாகாமை நிச்சித்திருந்தேனே [திருவாய் 10-4-4]

பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ
தனிக்கடலே தனிச்சுடரே தனியுலகே யென்றென்று
உனக்கிடமாயிருக்க வென்னை யுனக்குரித் தாக்கினையே.
[பெரியாழ் திரு 5-4-9]

என்கிறபடியே பரமபதம், திருப்பாற்கடல் முதலான வ்யூஹ ஸ்தலங்கள், அர்ச்சாஸ்தலங்கள் முதலான எல்லாம் சேதனரைப் பெறுவதற்குப் பரமசேதனன் ஸாதநாநுஷ்டானம் செய்யும் இடங்களாகையாலே, இவனைப் பெற்றவுடன் அவை அனைத்திலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய மனத்திலும், அவயவங்களிலும் பண்ணிக்கொண்டு, அவற்றில் விருப்பம் மட்டமாகி, அவற்றை விடப்புகுகிருனன்ருே ஸர்வேஶ்வரன்; ஆகையாலே, (நீ மதிக்கும்) என்றதற்கு 'என்னைப் பெறுவதற்கு முன்பு நீ மதிக்கும்' என்றும், 'உளங்கோயில் நிற்பென்று' என்றதற்கு, 'என்னைப்பெற்றபின்பு என் மனமாகிற கோயிலே உகந்து வாழும் இடமாயுள்ளது என்று' என்றும் வருவித்துப் பொருள்கொள்வதே உசிதம். இப்பாசுரத்திலேயே மேலே 'இளங்கோயில் கைவிடேல்' என்று பிரார்த்திப்பதற்கும் இதுவே பொருந்தியிருக்கும். (உளங்கோயில்) 'ஹ்ருதயம் தத்விஜாநீயாத் விஶ்வஸ்யாயதநம்மஹத்' [நா-ஸ0] [ஸர்வேஶ்வரனுக்கு அடியானுடைய உள்ளத்தைப் பெருங்கோயிலாக அறியவேண்டும்.] என்று உபனிஷத்தும், ஸாதனஸ்தலங்களான

மற்றகோயில்களைக் காட்டிலும், ஸாத்₄யஸ்த₂லமான ஆஶ்ரித ஹ்ருத₃யத்தைப் பெருங்கோயிலாகப் பேசிற்றன்றே. (நிற்பென்று உள்ளம் வைத்து) நீ உகந்து வாழும் இடம் என்று என் நெஞ்சிலே எண்ணி. அன்றிக்கே 'உள்ளம் வைத்தது' என்பது 'உள்ளம் வைத்து' என்று கிடக்கிறதாய், (உள்ளம் வைத்தது உள்ளினேன்) நீ திருவுள்ளத்திலே எண்ணியிருப்பதை அறிந்தேன் என்று பதவுரையிற் போலே பொருள் கொள்ளலாம். அப்போது 'உள்ளினேன்' என்றதைக் கீழோடும், மேலோடும் கூட்டிக்கொள்ள வேணும். இப்படி எம்பெருமான் ஸாத₄னஸ்த₂லங்களைக் கைவிடத் தொடங்கியவுடன், ஆழ்வார் செய்தது என்னென்னில்; (உள்ளினேன்) 'ஸர்வேஶ்வரன் நம்மைப் பெறுவதற்கு உறுப்பாயிருந்த அவ்விடங்களை விடுவதற்கு நாம் காரணமாயிருந்தோமாகில், நாம் செய்ந்நன்றி மறந்தவராவோம்' என்னும் நினைவாலே, அப்படியாகாமைக்காக அவனைப் பிரார்த்தித்தேன். பிரார்த்தித்ததுதான் என்னவெனில்: (வெள்ளத்து இளங்கோயில் கைவிடேல் என்று) "பிரானே! திருப்பாற்கடலாகிற ஸ்தானம் என் நெஞ்சமாகிற பெருங்கோயிலைப்பெறுவதற்கு உனக்கு இளங்கோயிலாய் (பா₃லாலயமாய்) இருந்தது என்னும் க்ருதஜ்ஞதையாலும், நான் உகந்திருப்பதாகையாலும் நீ கைவிடாதொழிய வேணும்" என்று பிரார்த்தித்தேன். 'இந்த தேசவாஸத்தாலன்றோ நாம் இவனைப் பெற்றது' என்று அத்திருப்பாற்கடல் உனக்குப் பண்ணின உபகாரத்தை அநுஸந்தித்தாலும் நீ அதைக் கைவிடலாகாது; 'இதுவன்றோ நம்மை ஸர்வேஶ்வரன் அடைவதற்கு உறுப்பாயிருந்தது' என்னும் அநுஸந்தானத்தாலே நான் திருப்பாற்கடலை உகந்திருக்கையாலும் நீ அதைக் கைவிடக்கூடாது என்று கருத்து. இங்கு திருப்பாற்கடலைச் சொன்னது பரமபதம் முதலான மற்ற எல்லா இளங்கோயில்களுக்கும் உபலக்ஷணம். இவ்விடத்தில்,

"திருமாலிருஞ்சோலை மலையே என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய ஶரீரைகதே₃ஶத்திலே பண்ணும். 170.

அங்குத்தை வாஸம் ஸாத₄நம்: இங்குத்தை வாஸம் ஸாத்₄யம். 171.

"கல்லுங் கனைகடலும்" என்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றி லாதரம் மட்டமா யிருக்கும். 172.

55. என்று மறந்தறியே னேழ்பிறப்பு மெப்பொழுதும்
நின்று நினைப்பொழியா நீர்மையால்— வென்றி
அடலாழி கொண்ட வறிவனே இன்பக்
கடலாழி நீயருளிக் காண்.

வென்றி— வெற்றியே பெறுவதாய், அடல்—(எதிரிகளோடு) போர்புரியும் இயல்வுடைய, ஆழி—சக்கரத்தை, கொண்ட-கைக்கொண்டிருக்கிற, அறிவனே-ஸர்வஜ்ஞனான பெருமானே!, நீ-இப்படியிருக்கிற நீ, ஏழ் பிறப்பும்—எல்லா ஜன்மங்களிலும், எப்பொழுதும்-எல்லா நிலைகளிலும், நின்று நினைப்பு ஒழியா நீர்மையால்— நிலைநின்று என்னைப் பற்றின நினைவு தப்பாமலிருந்ததனால், என்றும் மறந்தறியேன்-உன்னை ஒருநாளும் மறவாதவனானேன்; இன்பம் கடல் ஆழி-ஆநந்தப் பெருங்கடலையும், அருளிக்காண்-எனக்கு அருளவேணும்.

பெரி அவ:—(என்றும்) உன்னை நினைக்கை அரிதான ஸம்ஸாரத்திலே உன்னை நினைக்கும்படி பண்ணினாய்; இனி ப்ராப்தியளவும் பண்ணாயோவென்கிறார்.

---

அவ:— இப்படி தேவர் என்பக்கல் விருப்பத்தைப் பண்ணுகையாலே ஜ்ஞாநலாபத்தாற் குறைவற்றேன்; தத்பலமான ப்ராப்தியால் வரும் அநுபவத்தையும் தேவர் தாமே பண்ணித்தந்தருளவேணும் என்கிறார்.

---

"இளங்கோயில் கைவிடேல்" என்று இவன் ப்ரார்த்திக்க வேண்டும்படியா யிருக்கும். 173

"ப்ராப்யப்ரீதி விஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பவை அபிமதங்களாயிருக்கும்." 174

என்னும் ஸ்ரீவசநபூஷண ஸூத்ரங்களும், அவற்றின் வியாக்யானமும் அநுஸந்திக்கவுரியவை. 54

56 அவ:— "இவ்வண்ணமாக தேவரீர் என்னிடம் விருப்பத்தைப் பண்ணி, அநாதிகாலமாக முயன்று, தேவரீரை நினைப்பதே அரிதாயிருக்கும் ஸம்ஸாரத்திலே, தேவரீரையே

வ்யா: —(என்று மறந்தறியேன்) ஒருநாளும் உன்னை மறந்தறியேன். ஶ்ரவண மநந நிதி₃த்₄யாஸநாநந்தரம் பிறக்கும் உபாஸநாத்₄ருவாநுஸ்ம்ருதிகளாலேயோ நீர்மறவாதொழிந்ததென்னில்; (ஏழ்பிறப்பித்யாதி "எதிர்சூழல் புக்கெனைத்தோர்

உரை: —ப்ரபலப்ரதிப₃ந்த₄ங்களை அநாயாஸேந போக்குகையால் வரும் வெற்றிபெற்றுடையனாய், யுத்₃தோ₄ந்முக₂னை திருவாழியை விரோதி₄நிரஸநத்வரையாலே எப்போதும் கையிலே கொண்டிருக்குமவனாய், 'அஜ்ஞாநாஶக்திகளுக்குக் கொள்கலமான என்னால் உன்னைப் பெற வெண்ணாது; ஜ்ஞாநஶக்திகளால் குறைவற்ற உன்னாலே உன்னைப் பெறவேணும்' என்னுமிடத்தைப் பத்தும் பத்தாக அறிந்திருக்கும் ஸர்வஜ்ஞனானவனே! இப்படி

நினைத்திருக்கும்படி செய்தீர்; இப்படி ஞானத்தைப் பெறுவித்த தேவரீரே அதன் ப₂லமான உம் அனுபவத்தையும் தந்தருளவேணும்" என்கிறார்.

வ்யா:— (என்றும் மறந்தறியேன்) ஒருநாளும் தேவரீரை மறந்தறியமாட்டேன். 'ஶ்ரவணம் (கேட்டல்), மநநம் (நினைத்தல்), நிதி₃த்₄யாஸநம் (தியானித்தல்) என்னும் கிரமத்திலே முதலில் பகவத் விஷயத்தைக் கேட்டு, பிறகு சிந்தித்துப் பிறகு தியானித்து அதற்குப்பின் உபாஸனம் என்றும், த்₄ருவாநுஸ்ம்ருதி (நிலையான நினைவு) என்றும் சொல்லப்படும் பக்தியோகம் கைவரப்பெற்றதாலேயோ நீர் என்றும் மறவாதிருப்பது?' எனில்: 'இது என்னால் வந்ததன்று; உன்னால் வந்தது' என்கிறார் — (ஏழ்பிறப்பும் எப்பொழுதும் நின்று நினைப்பொழியா நீர்மையால்) "எதிர்சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய" [திருவாய்2-7-6] என்கிறபடியே என்னுடைய எல்லாப் பிறப்புக்களிலும், எல்லாக் காலத்திலும் என்னைப்பற்றிய நிலையான நினைவு நீங்காத தன்மை உனக்கிருக்கையாலே, நான் இப் பிறப்பில் உன்னை என்றும் மறந்தறியாப் பெருமை பெற்றேன். (ஏழ் பிறப்பும்) ஒருபிறப்பிலும் தன்னைத்தான் நியமித்துக் கொள்ள முடியாத என்னாலன்று இப்பேறு; எல்லாப் பிறப்பிலும் என்னை நியமிக்க வல்ல உன்னால் வந்தது இது. 'ஏழு' என்று எல்லாப்பிறப்பையும்

பிறப்பும்'' என்னும்படியே எல்லா ஜந்மங்களிலும் எல்லாக் காலத்திலும் நீ நின்று உன்னுடைய நினைவுமாறாத ஸ்வபாவத்தாலே ஒருநாளும் மறந்தறியேன். (வென்றியித்யாதி) நாம் செய்த அம்சம் செய்தோமிறே. எல்லாம் செய்யவேணும்

---

யிருக்கிற நீ எல்லா ஜந்மங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும் எதிர்சூழல்புக்கு, 'இவன் நம்மை மறவாமல் பெற்றிடுவானுக்கு' என்று நினைக்கும் நினைவு ஒருநாளும் மாறாதேபோருகிற ஸ்வபாவத்தாலே ஸர்வகாலத்திலும் தேவரை மறநதறியேன்; இப்படி பேற்றுக்கு உறுப்பான ஜ்ஞாநந்திற்கண்ணழிவறுத்துத் தந்த நீ ஜ்ஞாநபலமாக ஒரு

---

காட்டுகிறது. (எப்பொழுதும்) ஒரு பிறப்பில் சிறிது காலமும் தன்னைத் தான் அடக்கியாளமுடியாத என்னாலன்று; ஒவ்வொரு பிறப்பிலும் எல்லாக்காலத்திலும் என்னை அடக்கியாளவல்ல உன்னால் வந்தது இது. (நின்று) நின்றவாநில்லா நெஞ்சினையுடையேனாய், ஒரு கணமேனும் நிலைநின்று நினைக்க முடியாத என்னால் வந்ததன்று இப்பேறு; இயற்கையிலேயே ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், பரமதயாளுவாகையாலே நிலையாக நினைப்பிட வல்ல உன்னால் வந்தது இது. ''ஏழ்பிறப்பும்'' என்று எல்லாக் காலத்தையும், ''எப்பொழுதும்'' என்று எல்லா அவஸ்தைகளையும் (நிலைகளையும்) கூறுகிறதாகவுமாம். (நினைப்பொழியா நீர்மையால்) 'இவன் நம்மை மறவாமலிருக்கும் பேறு பெற்றிடவேணும்' என்று நினைக்கும் நினைவு தேவரீருக்கு ஒருநாளும் நீங்காமலிருக்கையாலே; 'என்றும் மறந்தறியேன்' என்றுகீழோடு கூட்டிக்கொள்வது. 'ஏழ்பிறப்பும் எப்பொழுதும் நின்று நினைப்பொழியா நீர்மையை உடைய நாம் செய்யவேண்டியதைச் செய்து விட்டோம்; இனி இஷ்டப்ராப்தியையும், அநிஷ்டநிவ்ருத்தியையும் அடைய ஸாதநத்தை அனுஷ்டிக்கவேண்டியது உம்முடைய பொறுப்பன்றோ?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, 'இஷ்டப்ராப்தியையும் அநிஷ்டநிவ்ருத்தியையும் செய்விக்கவல்ல ஜ்ஞாநஶக்திகள் தேவரீரிடமே குறைவற்றிருக்கையாலே, தேவரீரே அவற்றைச்செய்தருளவேணும்' என்கிறார் மேலே: (வென்றி அடலாழி கொண்ட) மிகப்பெரிய தடைகளையும் விளையாட்டாகப் போக்குகையால் உண்டான வெற்றியை எப்போதும் பெற்றுள்ளவனும், அசுரரரக்கர்களோடு போர்புரிவதையே

என்று நிர்ப்பந்திக்கக் கடவதோவென்ன; உன்பக்கலொரு ஜ்ஞாந ஶக்திகளுக்கு வைகல்யம் காண்கிறிலேன்; ஆனபின்பு (இன்பக்கடலாழி நீ யருளிக்காண்) ''एष ह्येवानन्दयाति'' (ஏஷ ஹ்யேவாநந்த₃யாதி) என்னும்படியே உன்னுடைய ஆநந்த₃ ஸமுத்₃ரத்தையும் நீ எனக்கருளாய். 55.

---

தே₃ஶ விஶேஷத்திலே போந்து, பரிபூர்ணமாக உன்னை அநுப₄வித்து விளையக்கடவ அபரிச்சி₂ந்நமான ஆநந்த₃ ஸமுத்₃ரத்தைத் தந்தருள வேணுங்காண். 'கடல்' என்றும், 'ஆழி' என்றும் மீமிசைச்சொல்லாய், மிகவும் நிரதிஶயாநந்த₃த்தைச் சொன்னபடி. 55.

---

இயல்வாகக் கொண்டவனுன திருவாழியாழ்வானை, விரோதிகளை அழிப்பதில் உள்ள ஊற்றத்தாலும், வேகத்தாலும் கையிலேயே கொண்டிருப்பவனன்றோ நீ; ஆகையால் என்னுடைய அநிஷ்ட நிவ்ருத்தியைச் செய்வது உன்னாலேயே ஆகக்கூடியது என்று கருத்து. (அறிவனே நீ அருளிக்காண்) ஸர்வஜ்ஞனே! நீயே தரவேணும். அஞ்ஞானத்திற்கும், அஶக்திக்கும் ஒரே இருப்பிடமான என்னால் உன்னைப் பெறமுடியாது என்பதையும், ஜ்ஞாந ஶக்திகளால் குறைவில்லாத உன்னைக்கொண்டே உன்னைப்பெற முடியும் என்பதையும் பரிபூர்ணமாக அறிந்திருப்பவனன்றோ நீ; ஆகையாலே இஷ்டப்ராப்தியையும் நீயே செய்தருளவேணும்; 'என்றும் மறந்தறியேன்' என்னும்படியான ஞானத்தை விளைத்த நீயே அதன் ப₂லனான மோக்ஷத்தையும் தரவேணும் என்று கருத்து. அந்தப் பேறுதான் எத்தகையது எனில்: (இன்பக்கடலாழி) இன்பமொன்றே நிறைந்த மஹாஸமுத்₃ரமான உன் அனுபவமே அது என்கை. 'கடல்' என்றும், 'ஆழி' என்றும் ஸமுத்₃ரத்தைக் குறிக்கும் இரண்டு சொற்களைப் பிரயோகிக்கையாலே, 'இன்பக் கடலாழி' என்று மிகச்சிறந்த பேரின்பத்தைக்குறிக்கிறது. (இன்பக் கடலாழிநீயருளிக்காண்) ''ஏஷ ஹ்யேவாநந்த₃யாதி'' [தை-ஆந 7-1] [இப்பரமபுருஷனே ஜீவனை ஆநந்தமடைவிக்கிறான்.] என்று சாஸ்திரம் சொல்லுகையாலே, பரமபதத்தில் சென்று பரிபூர்ணமாக உன்னை அநுபவித்து அவ்வனுபவத்தால் உண்டாகக்கூடிய மிகச் சிறந்த பேரின்பத்தை நீயே எனக்கு அருளவேணும் என்கிறார். 55.

56. காணக் கழிகாதல் கைமிக்குக் காட்டினால்
நாணப் படுமென்றால் நாணுமே—பேணிக்
கருமாலைப் பொன்மேனி காட்டாமுன் காட்டும்
திருமாலை நங்கள் திரு.

திருமாலை காணக் கழிகாதல்—எம்பெருமானை ஸேவிக்க வேணுமென்று மிகுந்த விருப்பம், கைமிக்கு காட்டினால்—மேன் மேலும் அதிகரித்தால், நாணப்படும் என்றால் — ஆறியிருக்கவேணுமென்றால், நாணுமே-ஆறியிருக்கமுடியுமோ? கரு மாலை—கரிய திருமாலாகிய அப்பெருமானை, பொன் மேனி காட்டா முன் — அவனது அழகிய திருமேனிதானே காட்டிக்கொடுப்பதற்கு முன்னே, நங்கள் திரு — நமக்குப் புருஷகார பூதையான பிராட்டி, பேணி—விரும்பி, காட்டும்—காட்டிக்கொடுப்பள்.

பெரி அவ: (காண) நீர் சேஷபூதரானால் உம்முடைய ஸ்வரூபாநுரூபமாயிருக்கவேண்டாவோ? சேஷியை இப்படி நியமிக்கக்கடவதோ? என்னில்: அது விதேயமான போதிறே; ஆசைமிக்கால் செய்யலாவதுண்டோ? என்கிறார்.

---

அவ:— இப்படி பேறு அவனாலே என்று நிச்சயித்த பின்பு, 'அருள்' என்றுகொண்டு வடிம்பிட்டு நிர்ப்பந்திக்கக் கடவதோ? என்ன, "ப்ரேமமடியாக வந்த இருட்சி உடையாருக்குப் பற்றுசும் அங்கே உண்டாயிருக்க, ஆறியிருக்கப் போமோ?" என்கிறார்.

---

**56. அவ:—"முன் பாசுரத்தில் சொன்னபடி பேறு அவனாலே என்று நிச்சயித்திருக்கும் நீர், உம்முடைய சேஷத்வத்திற்குச் சேரப் பொறுத்திருக்கவேண்டியிருக்க, 'அருளிக்காண்' என்று மடிபிடித்து நிர்ப்பந்திக்கலாமோ?" என்னும் கேள்வியெழ, "ஆசையின் மிகுதியால் ஸ்வரூபத்தைக் காணமுடியாத எனக்குப் புருஷகாரபூதையும் அங்கேயிருக்கும்போது பொறுத்திருக்கமுடியுமோ?" என்கிறார் இப்பாசுரத்தில்.**

வ்யா:— (திருமாலைக் காணக் கழிகாதல் கைமிக்குக் காட்டினால் நாணப்படுமென்றால் நாணுமே) ஸர்வேശ்வரனைக் காண மிகாநின்ற காதல் விஞ்சிக்காட்டினால், 'நீ ஶேஷி நான் ஶேஷபூ₄தன்' என்னும் முறையிலே நிற்கப்போமோ? கண்டாலல்லது கழியாத காதலென்றுமாம். ஸாபராத₄

உரை:— காணக்காணப் பழையநிலை கழிந்து மேன்மேலென வளர்ந்து வருகிற ப்ரேமமானது என்னால் அமைக்க வொண்ணாதபடி கைகழிந்து விட்டால், ''அவனே வந்து மேல் விழுமளவும் நாம் பதறுகை ஸ்வரூபஹாநி'' என்று லஜ்ஜித்து ஓரிடத்திலே ஒதுங்கியிருக்கவேணும்'' என்று விசாரித்தால், அப்படி முறைபார்த்து, ''तत्तस्य सदृशं भवेत्'' (தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்) என்று ஆறியிருக்கப் போமோ? அதுக்குமேலே, ஶ்ரமஹரமான கறுத்த நிறத்தை

வ்யா:—(காணக் கழி காதல்) ஸர்வேശ்வரனைக் காண்பதற்கு மிகுந்துவரும் காதல்; கழி — மிகுதியைக்காட்டும் உரிச்சொல்; ''கழியமிக்கதோர் காதலள்'' [திருவாய் 5-5-10] என்றவிடத்திற் போலே. அல்லது, 'கழி காதல்' என்று வினைத்தொகையாகக் கொண்டால் ''கண்ணாரக்கண்டு கழிவதோர் காதல்'' (திருவிருத்தம் 97) என்றவிடத்திற்போலே கண்டபின்பே கழியும் (நீங்கும்) காதல் என்று பொருள் கொள்ளலாம். இங்கு 'காதல்' என்றது 'காணவேணும்' என்னும் அத்யுத்கடமான விருப்பம். இது கண்ட வுடன் நீங்கிவிடுமன்றோ. அல்லது 'காணக் கழி காதல்' என்று அந்வயத்தில் கூறியது, 'கண்டாலல்லது கழியாத காதல்' என்னும் வ்யதிரேகப்பொருளை உடையது என்றும் கொள்ளலாம். அல்லது, 'காண' என்றதைக் 'காணக் காண' என்று மீமிசை (வீப்ஸை) ஆக்கி, 'காணக்காணப் பழைய நிலை கழிந்து, மேன் மேலும் மிகுந்து வரும் அன்பு' என்றும் பொருள்கொள்ளலாம். (கைமிக்குக் காட்டினால்) என்னால் அடக்கமுடியாதபடி என்கையை மீறி வளர்ந்துவிட்டால். (நாணப்படும் என்றால் நாணுமே) ''உடையவனாய், நாயகனான அவன், உடைமையாய், நாயகியான நம்மைத் தானே வந்து ஏற்றுக்கொள்ளவேணுமேயொழிய, நாம் அவனையடையப் பதறுவது நம்முடைய பரதந்திரஸ்வரூபத்திற்குத்

னென்று மீளவும்போகாது; கருமாலைப் பொன்மேனியானது

யுடைய ஸர்வாதி₄கனுய் ஸ்ரீய:பதியானவனை, அத்யுஜ்ஜ்வல மாய், ஸ்ப்ருஹணீயமான வடிவு காட்டுவதுக்கு முன்னே

தகாது'' என்று நாணமடைந்து. ஒரு மூலையிலே அடங்கி ஒடுங்கியிருக்கவேண்டும் என்று நியமித்தால், அப்படி முறை பார்த்து, "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்''[ரா-ஸு 39-30] [என்னை ரக்ஷிப்பது அவர்க்கே தகுந்தது ] என்று ஆறியிருக்கமுடியுமோ? அதுக்கு மேலே தான் ஆறியிருக்கமுடியாமைக்கு மற்றொரு ஹேதுவும் உண்டு என்கிறுர் பின்னடிகளாலே; நம்முடைய அபராத₄த்தை நினைத்துப் பின்வாங்கவும் முடியாதபடி நம்முடைய தாயாய், புருஷகாரபூ₄தையான பெரியபிராட்டியாரும் அங்கேயிருக்கையாலே, ஆறியிருக்க இடமேயில்லை என்கிறுர்; (கருமாலைப் பொன்மேனி காட்டாமுன் ) கண்டார் களைப்பனைத்தையும் ஆற்றும் இருண்டு குளிர்ந்த வடிவையுடைய ஸர்வேஶ்வரனை, அவனுடைய பொன் போலே பிரகாசமுடையதாய், ஆசைப்படத்தக்கதான திருமேனி நமக்குக் காட்டுவதற்கு முன்னே; ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூப கு₃ணங்களைத் திருமேனி காட்டுமோ? எனில்; ஸ்வரூபமும், ஸ்வரூபத்திலிருக்கும் காருண்யவாத்ஸல்யாதி₃ கு₃ணங்களும், பொற்குப்பியிலே பதிக்கப்பெற்ற மாணிக்கம்போலே, அப்ராக்ருதமாய், சுத்தஸத்வமயமான திருமேனியிலே புறம்பொசிந்து காட்டுகின்றனவென்பது பிரஸித்தமன்றே அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பதை ப்ராக்ருததேஹத்திலேயே பார்க்கும்போது, அப்ராக்ருதத்திருமேனி ஸ்வரூபகுணங்களைக் காட்டக் குறையில்லையன்றே. அன்றிக்கே, 'திருமேனி காட்டாமுன்' என்று திருமேனிக்குள்ள உபாயத்வத்தைக் கூறுகிறுராகவுமாம்.

''சிந்தயந்தீ ஜக₃த்ஸூதிம் பரப்₃ரஹ்மஸ்வரூபிணம்|
நிருச்ச்₂வாஸதயா முக்திம் க₃தாந்யா கோ₃பகந்யகா||''
[வி-பு 5-13-22]

(ஜகத்காரணனுய், பரம்பொருளான கண்ணனை நினைத்துக் கொண்டே (புண்யபாபங்கள் கழியப்பெற்று) மூச்சடங்கி ஒரு கோபி மோக்ஷமடைந்தாள்.]

''ப்ரஸாத₃பரமௌ நாதௌ₂ மம கே₃ஹமுபாக₃தௌ|
த₄ந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:||''
[வி-பு 5-19-21]

காட்டுவதற்குமுன்னே எங்களுடைய புருஷகாரமான பிராட்டி முன்னே காட்டாநின்றாள்; ''ந கஶ்சிந்நாபராத்யதி'' (ந கஶ்சிந்நாப

---

நமக்கு ஸ்வாமிநியான பெரியபிராட்டியார், ஆதரித்துக் கொண்டு வந்து காட்டும்; ''ந கஶ்சிந்நாபராத்யதி'' (ந கஶ்சிந்நா பராத்₄யதி) என்று மேல்விழுந்து சேர்க்கும் ப்ரப₃லபுருஷ

---

['அன்பு விஞ்சியிருக்கப்பெற்றவர்களாய், ஸ்வாமிகளான க்ருஷ்ண பலராமர்கள் என் வீட்டிற்கு வந்தனர்; நான் தன்யனானேன்; அவர்களைப் பூஜிப்பேன்' என்று மாலைவிற்று வயிறுவளர்ப்பவர் சொன்னார்.] என்கிறபடியே, இடக்கையும் வலக்கையும் அறியாத இடைச்சி, போக்யமான பூவை விற்று வயிறுவளர்க்கும் மாலாகாரர் முதலானார்க்கு பகவத்விஷயத்திலே மேலான ஈடுபாட்டையும், இதரவிஷயங்களில் மிகவும் வைராக்யத்தையும் விளைத்துப் புண்யபாபங்களையும் அழித்து மோக்ஷத்தையும் விளைக்கவல்ல தாயன்றோ திருமேனியிருப்பது. 'பொன்மேனி' என்கையாலே பொன்போலே ஸாத₄னமாகவுமிருப்பது திருமேனி என்று இங்கும் உணர்த்தப்படுகிறதன்றோ. இப்படி விக்ரஹமே உபாயமானால் விபவரூபங்களையும், அர்ச்சாரூபங்களையும் கண்டவர்கள் அனைவரும் மோக்ஷமடையவேண்டிவருமே எனில்; எல்லாரும் கண்ட போதிலும், பரமபுருஷன் விக்ரஹத்தின் ஸௌந்தர்யாதிகளைச் சிலர்க்கே வெளிப்படுத்துகிறானாகையால் ஸர்வமுக்திப்ரஸங்கமுமில்லை; விக்ரஹத்தின் உபாயத்வத்துக்கும் குறையில்லை. ஆகையாலேயன்றோ ஸ்ரீபா₄ஷ்யகாரர் ''ஸௌந்தர்யஸௌஶீல்யாதி₃ கு₃ணாவிஷ்காரேண அக்ரூரமாலாகாராதீ₃ந் பரமபா₄க₃வதாந் க்ருத்வா'' [கீ₃தாபா₄ஷ்யப்ரவேஶம்] [ஸௌந்தர்யம், ஸௌஶீல்யம் முதலான குணங்களைக்காட்டி அக்ரூரர், மாலாகாரர் முதலானாரைப் பரமபாகவதர்களாக்கி] என்று அருளிச்செய்தார். 'காட்டாமுன்' என்று விக்₃ரஹத்தின் உபாயத்வம் கார்யகரமாவதற்கு முன் பெரியபிராட்டியாரின் புருஷகாரத்வமே கார்யகரமாகிறது என்று உணர்த்துகிறார். (காட்டும் திருமாலை நங்கள் திரு) விக்₃ரஹம் நமக்கு அவனைக் காட்டுவதற்கு முன் நமக்குப் புருஷகாரபூ₄தையாய், அவனுக்குப் பத்தினியான பெரியபிராட்டியார் அவனைக் காட்டிக்கொடுப்பர். (திருமாலை) அவளுக்கு அவன் ப்ரேமபரதந்த்ரனாகையாலே அவனை அழகாலே திருத்துவள். ''கிமேதத்

ராத்₄யதி) என்று எங்களுடைய குற்றம் அவள் பார்க்க வொட்டாமையாலும் முறையில் நிற்கவொண்ணாது. 56.

---

காரம் உண்டானபின்பு, ''முறைக்குச் சேராது பதறுகை'' என்று லஜ்ஜித்து ஆறியிருக்கப்போமோ? என்கிறபடி. கண்டல்லது கழியாத காதல் என்னவுமாம். 56.

---

நிர்த்தோ₃ஷ: க இஹ ஜக₃தி'' [ஸ்ரீகுண] [இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் யார்] இத்யாதிகளைச் சொல்லி உசிதமான உபாயங்களாலே அவனுடைய கோபத்தை ஆற்றுவள். (நங்கள் திரு) நமக்குத்தாயாகையாலே, ''தேந மைத்ரீ ப₄வது'' [ரா-ஸு 21-21] [அப்பெருமானோடு நட்பு உண்டாகட்டும்.] முதலான அருளுபதேசங்களாலும் அருள்நோக்காலும் நம்மைத் திருத்துவள். ஆக இப்படிப் பரமபுருஷனையும், ஸம்ஸாரிபுருஷனையும் திருத்துகிறவளாகையாலே புருஷகாரபூ₄தை என்று பாஞ்சராத்ரஶாஸ்த்ரங்களிலே புகழப்படுகின்றுளன்றோ இப்பிராட்டி. (காட்டும்) விக்ரஹத்திற்குப்போலே இவளுக்கும் உபாயத்வம் கொள்ளலாகாதோ? எனில்: அசேதனமாகையாலே தனியாகச் செயல் படத்தகுதியற்ற விக்ரஹத்தைப்போலல்லாமல், இவள் சேதனத்துவமாய், தனியாகச் செயல்படத்தகுதியுடையவளாயிருக்கையாலே இவளுக்கு உபாயத்வத்தை ஒப்புக்கொண்டால் பரமபுருஷன் ஒருவனே உபாயம் என்னும் உபாயநைரபேக்ஷ்யத்துக்குக் குறை வரும்.

''லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி₃ஷ்டா பரமர்ஷிபி₄: ।
மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா₂ லக்ஷணம் ப₄வேத்॥''

[பரமரிஷிகள் லக்ஷ்மிக்குப் புருஷகாரத்வமே உண்டென்று நிர்ணயித்திருக்கிறார்கள்; எனக்கும் இதுவே ஸம்மதம்; வேறான (உபாயத்வ) லக்ஷணம் இல்லை.] என்று பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்திலும் கூறப்பட்டது; ஆகையால் பிராட்டிக்கு உபாயத்வமில்லை; புருஷகாரத்வமேயுள்ளது (திருமாலைக் காட்டும்) தன் புருஷகாரச் செயலாலே எம்பெருமானைத் தன் பொன்மேனியின் குணங்களை ஆவிஷ்கரிக்கச்செய்து, தன் ஸ்வரூபகுணங்களையும் காட்டும்படி செய்வள். (பேணிக் காட்டும்) பிள்ளைகளான நம்மிடம் வாத்ஸல்யத்தாலே, ஆதரித்துக்கொண்டு வந்துநேரே காட்டுவள். ஆக, 'ந கஶ்சிந் நாபராத்₄யதி'' [ரா-யு 146-44] [குற்றம் செய்யாதவன்,

57. திருமங்கை நின்றருளுந் தெய்வம்நா வாழ்த்தும்
கருமங் கடைப்பிடிமின் கண்டீர்—உரிமையால்
ஏத்தினோம் பாத மிருந்தடக்கை யெந்தைபேர்
நாற்றிசையுங் கேட்டீரே நாம்.

திருமங்கை-பெரிய பிராட்டியார், நின்றருளும் தெய்வம்-நித்யவாஸஞ் செய்யப்பெற்ற எம்பெருமானை, நா வாழ்த்தும் கருமம் — நாவினாலே வாழ்த்துகையாகிற காரியத்தை, கடைப்பிடிமின் கண்டீர்—உறுதியாகப் பற்றுங்கள்; நாம்—நாமோவென்றால், இரு தட கை எந்தை—மிகநீண்ட திருக்கைகளையுடையனான எம்பெருமானுடைய, பாதம்—திருவடிகளை, பேர்-திருநாமங்களைக்கொண்டு, உரிமையால்-ஸ்வரூபப்ராப்தியாலே, ஏத்தினோம்— துதிப்பவர்களாயிராநின்றோம்; (இவ்விஷயத்தை) நால் திசையும்-நான்கு திசைகளிலுமுள்ளவர்களுமீ, கேட்டீரே—கேட்டீர்களோ?

வ்யா:—(திருமங்கையித்யாதி) பெரியபிராட்டியார் நித்ய கடாக்ஷம் பண்ணுநின்ற தெய்வத்தை நாவாழ்த்துகையாகிற

---

அவ— இப்படி பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவன் கிடிகோள் ஸர்வஸமாஶ்ரயணீயன் என்கிறார்.

உரை:—ஸ்வஸம்பந்தத்தாலே அவனுக்கு ஸர்வோத்கர்ஷத்தையும் உண்டாக்கவல்ல ஸ்வபாவத்தை உடையவளாய், போகபோக்யமான பருவத்தையும் உடையவளான

---

எவனுமில்லையே] என்று கூறிக்கொண்டு, தானே முன்வந்து அவனோடு நம்மைச்சேரவிடும் புருஷகாரபூதையும் அங்கிருக்கும் போது, 'அவனையடையப் பற்றுவது நம் ஸ்வரூபத்திற்குப் பொருந்தாது' என்று நாணி அடங்கியிருக்கமுடியாது என்றபடி. 56.

57. அவ—:இப்படிப் புருஷகாரமான பெரிய பிராட்டியோடு கூடியிருக்கும் பரமபுருஷனே அனைவராலும் ஆஶ்ரயிக்கத்தக்கவன் என்கிறார்.

கருமத்தைக் கைவிடாதே(தீர்?). (இருந்தடக்கையெந்தை பேர் நாற்றிசையுங்கேட்டீரே) பெரிய தோளையுடையனுன என் ஸ்வாமியுடைய பேரன்றே எல்லாத்திக்குகளிலுமுள்ளது;

---

பெரியபிராட்டியார், "இறையும் அகலகில்லேன்" என்று இடைவிடாமல் உறையும்படியிருக்கிற ஸர்வாதிகனுனவனை நா்வாலே ஸ்தோத்ரம் பண்ணுகையாகிற கார்யத்திலே ஒருப்படுங்கோள் கிடீகோள். முறையறிந்த மாத்ரமொழிய அவ் விஷயத்தைப் பற்றுகைக்கீடான நன்மைகள் ஒன்றுமற்ற அயோக்யரான நாம், பணைத்து வளர்ந்த திருத்தோள்களை

---

வ்யா:— (திரு) உலகினர்க்கு மாத்திரமல்லாமல், ஸர்வேஶ்வரனுக்கும் எல்லாப் பெருமைகளையும் தன் ஸம்பந்தத்தாலே விளைக்கவல்லவள் என்பதைக்காட்டும்"ஸ்ரீ:" என்னும் திருநாமத்தை உடையவள். "ஸ்ரீரித்யேவ ச நாம தே ப₄க₃வதி ப்₃ரூம: கத₂ம் த்வாம் வயம்" [சது:ஶ்லோகீ–1] ["ஸ்ரீ:" என்பது உன் திருநாமம்; அத்தகைய உன்னை நாம் எப்படிப் பேசுவோம்?] என்றுரன்றே ஆளவந்தார். இப்படி இவளாலே அவனுக்கு எல்லாப்பெருமையும் உண்டானாலும், "விஷ்ணோ:ஸ்ரீ:" [வி–பு] "உன்திரு" [திருவாய் 10-10-2] என்கிறபடியே இவள் இயற்கையிலேயே பரமபுருஷனுக்குச் செல்வமாயிருப்பதால், ரத்நப்ரப₄ா புஷ்பபரிமள ந்யாயத்தாலே அவனுடைய பரப்₃ரஹ்மத்வத்திற்குக் குறையில்லை என்பதை,

"ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி தத ஏவைஷ ப₄க₃வாந்
த்வத₃ாயத்தர்த்தி₄த்வேப்யப₄வத₃பராதீ₄நவிப₄வ: |
ஸ்வயா தீ₃ப்த்யா ரத்நம் ப₄வத₃பி மஹார்க்க₄ம் ந விகு₃ணம்
ந குண்ட₂ஸ்வாதந்த்ர்யம் ப₄வதி ச ந சாந்யாஹிதகு₃ணம் ||"

[ஸ்ரீதேவியே! இயற்கையிலேயே தேவரீர் விஷ்ணுவுக்கு உடைமைப் பொருளாயிருக்கிறீர். அதனுலேயே இப்பெருமான் உன்னுலே பெருமைபெற்றவனுயினும் இயற்கைப்பெருமையை உடையவனுகிறுன்; ரத்தினம் தன் ஒளியாலே பெருவிலையனுனபோதிலும் குணமற்றதென்றே இயற்கைப்பெருமையற்றதென்றே, வேறென்றுல் பெருமைபெறுவதென்றே கூறப்படாதன்றே.] என்று ஸ்ரீகுண

அது கேட்டிலிகோளோ? (நாமுரிமையாலேத்திஞேம் பாதம்) நாங்கள் அவனுடைய பேரையும் திருவடிகளேயும் ஶேஷபூ₄த ரென்னும் ப்ராப்தியாலே ஏத்திஞேம். 57.

---

யுடைய என் ஸ்வாமியானவனுடைய திருவடிகளே, 'நமக்கு வகுத்த ஶேஷியன்ரே' என்கிற ப்ராப்தியாலே, அவன் திரு நாமங்களேக்கொண்டு ஏத்திஞேம். இவ்வர்த்த₂த்தை நாலு வகைப்பட்ட தி₃க்கிலுள்ளார் எல்லாரும் கேட்டீர்களே! (கடைப்பிடிமின் கண்டீர்) இத்தை ஓலக்கவார்த்தையென்றிராதே பு₃த்₃தி₄பண்ணுங்கோள்கிடிகோள் என்னவுமாம். 57.

---

ரத்நகோஶத்திலே பட்டர் அருளிச்செய்தாரன்ரே, (மங்கை) "யுவதிஶ்ச குமாரிணீ" [கௌமாரப் பருவத்தின் முடிவையும், யௌவனப்பருவத்தின் தொடக்கத்தையும் உடையவள்] என்கிற படியே பே₄ாக₃யோக்₃யையான பதினாறுவயது மங்கையின் பருவத்தை எப்போதும் பெற்றிருப்பவள். ப்ராக்ருதமான பே₄ாக₃மும் உடம்புமாயிருந்தால் பருவம் மாறும்; தி₃வ்யத₃ம்பதிகளுடைய திரு மேனியும்பே₄ாக₃மும் அப்ராக்ருதமானதாகையாலே பருவம் மாருமல் எப்போதும் மங்கைப்பருவமாகவேயிருக்கும் என்று கருத்து. (நின்று அருளும் தெய்வம்) நிலேயாகக் கடாக்ஷிக்கும் பரம்பொருள். புருஷஸூக்தம் முதலான வேதபாகங்கள் இவளுடைய பதியாகவே பரம்பொருளேப் பேசுகையாலே, இவளுடைய கடாக்ஷம் எவ்விடத்தில் நிலேநிற்கிறது என்பதைப் பார்த்தன்ரே பரம்பொருள் எதுவென்று நிச்சயிக்கவேண்டியிருக்கிறது. "அபாங்கா₃ பூ₄யாம்ஸோ யது₃பரி பரம் ப்₃ரஹ்ம தத₃பூ₄த்" [பிராட்டியின் அதிகமான கடாக்ஷங்கள் எந்தத் தத்துவத்தின் மீது விழுந்தனவோ அது பரம்பொருளாயிற்று.] என்று ஆழ்வானும், "வேதா₃ந்தாஸ் தத்வ சிந்தாம் முரபி₄து₃ரஸி யத்பாத₃சிஹ்நைஸ் தரந்தி" [எவருடைய திருவடியடையாளத்தை முராரியின் திருமார்பிலே கண்டு வேதாந்தங்கள் பரதத்வவிசாரத்தை முடிக்கின்றனவோ.] என்று பட்டரும் அருளிச்செய்தனரன்ரே. (நின்றருளும்) "அகலகில்லேன் இறையும்" [திருவாய் 6-10-10] என்று ஒரு கணம் பிரியகில்லாமல் வாஸம் செய்யும் என்றும் பொருள் கொள்ளலாம், (திருமங்கை நின்றருளும் தெய்வம்) திருவுடைய தேவனை இவனே தெய்வ

58. நாம்பெற்ற நன்மையும் நாமங்கை நன்னெஞ்சத்
ஓம்பி யிருந்தெம்மை யோதுவித்து — வேம்பின்
பொருள்நீர்மை யாயினும் பொன்னாழி பாடென்று
அருள்நீர்மை தந்த வருள்.

---

மௌனத்தகவன் என்றும், மற்ற திருவில்லாத் தேவர்கள் தேவ ராகார்கள் என்றும் உணர்த்துகிருர். (தெய்வம் நாவாழ்த்தும் கருமம் கடைப்பிடிமின் கண்டீர்) அப்பரம்பொருளை நாவாலே துதிக்கும் காரியத்தைக் கைவிடாமல் பற்றி நில்லுங்கள். வாழ்த்து கைக்குத் திருநாமங்கள் உண்டோ? எனில்; (இருந்தடக்கை எந்தை பேர் நாற்றிசையும்) பெருத்து நீண்ட திருக்கைகளை உடைய என் ஸ்வாமியின் திருநாமங்களன்ரே நாலு திசைகளிலும் பரவியுள்ளன. (கேட்டீரே) இத்திருநாமங்களைக் கேட்டீர்களோ? நீர் செய்வது என்? என்னில், (நாம் உரிமையால் பாதம் பேர் ஏத்திஞேம்) 'நாம் அவனுக்கு அடிமைப்பட்டவர்களன்ரே' என்னும் உறவால் உண்டான உரிமையாலே அவனுடைய திருவடிகளையும் திருநாமங்களையும் துதித்தோம். இது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான முறை. அப்பிள்ளையுரை பின்னடிகளுக்கு வேறுபடுகிறது. அதாவது:- 'நாவாழ்த்தும் கருமம் கடைப்பிடிமின் கண்டீர்' என்று இவர் பிறர்க்கு உபதேசித்தவுடன், 'எங்களிடம் அப்படிப்பட்ட ஸர்வேஸ்வரனைத் துதிக்கத் தகுதியில்லையே' என்று அவர்கள் கூற, அதற்குப்பின்னடிகளாலே பதிலுரைக்கிருர்; (நாம்) 'அவன் உடையவன் நாம் உடைமை' என்னும் முறையை அறிந்த மாத்திரமொழிய, அப்பெரியவனைப் பற்றத்தகுந்த நன்மைகள் ஒன்றுமற்ற தகுதியற்ற நாம், (இருந்தடக்கை எந்தை பாதம் உரிமையால் பேர் ஏத்திஞேம்) பணைத்து வளர்ந்த திருக்கைகளையுடைய ஸ்வாமியின் திருவடிகளை 'நமக்கு உரிய ஸ்வாமியன்ரே' என்கிற உரிமையாலே அவனுடைய திருநாமங்களைக் கொண்டு துதித்தோம். (நாற்றிசையும் கேட்டீரே) இவ்வர்த்தத்தை நாலுதிக்கில் உள்ளவர்கள் அனைவரும் கேட்டீர்களோ? (கடைப்பிடிமின் கண்டீர்) ஸபையிலே பொதுவாகச் சொன்ன வார்த்தை என்று நினைக்காமல் உங்கள் ஒவ்வொருவருக்காகவும் சொன்ன வார்த்தை என்று அறிந்து அனுஷ்டியுங்கள் என்று கீழோடு கூட்டியும் பொருள் கொள்ளலாம். 57.

வேய்பு பொருளின் நீர்மை ஆயினும்—(எம்பெருமானைப் பாடுவதானது) வேம்பு என்னும் வஸ்துவின் ஸ்வபாவம் போலே கைப்பதாகத் தோன்றினாலும், பொன் ஆழி—அழகிய திருவாழியை உடையவனை. பாடு என்று—பாடக் கடவாய் என்று, நா மங்கை—ஸரஸ்வதியானவள், நல் நெஞ்சத்து—(நமது) நல்ல நெஞ்சிலே, ஓம்பி இருந்து—ஆதரித்து இருந்து, எம்மை—நமக்கு ஓதுவித்து—பகவத் விஷயத்தைச் சொல்லிக்கொடுத்து, நாம் பெற்ற நன்மையும்-நாம் அடைந்த கவிபாடுகையாகிற நன்மையும், அருள் நீர்மை தந்த அருள்—அருளையே இயல்வாகவுடைய ஸர் வேஶ்வரன் அருளிய க்ருபையினாலே வந்தது.

பெரி அவ:—(நாம்பெற்ற) நீரிப்படி ஏத்துகைக்கடியென் னென்னில்; ஸரஸ்வதி என் ஹ்ருதயத்திலே இருந்து என்னை ஓதிவைத்ததென்கிறது.

வ்யா:—(நாம்பெற்ற இத்யாதி) எங்களுக்கிந்த நன்மை யுண்டாயிற்று நாமங்கையானவள் ஹ்ருதயத்திலேயிருந்து நம்மை ஓம்பியோதுவித்தத்தாலே. ராஜபுத்ராதிகள் ராஜ

---

அவ:— நமக்கு இந்த நன்மையெல்லாம் உண்டாய்த்து ஸர்வேஶ்வரனுடைய கடாக்ஷத்தாலே என்கிறார்.

உரை:— 'வேம்பாகிற பதார்த்தத்தினுடைய ஸ்வ பாவம்போலே, இவ்விஷயத்தை ஏத்துகையாகிற இது அத் யந்த விரஸமாயிருந்ததேயாகிலும், ஸ்ப்ருஹணீயமான திரு

---

58. அவ:—நமக்கு இந்த நன்மையெல்லாம் உண்டானது ஸர்வேஶ்வரனுடைய கடாக்ஷத்தாலே என்கிறார்.

வ்யா:— (நாம் பெற்ற நன்மையும்) நாம் அடைந்திருக்கும் கவிபாடுகையாகிற இந்த நன்மையும். (நாம்) பகவத்விஷயமல்லது வேறு பேச்யமறியாத நாம். (பெற்ற)பெருநிதி காலிலே தட்டினாற் போலே பெறுப்பேறுகப்பெற்ற. (நன்மையும்) நம்முடைய பகவத்

வைபுல்யமறியாதிருக்கச்செய்தே அத்தைச் சொல்லவறி யாமையாலே விரஸமானாலும் ஸரஸமாகத் தங்கள் ஸ்வ ரூபத்துக்குக் கற்பிக்கும் தா3ஸவ்ருத்3தைகளைப்போலே.

---

வாழியும் கையுமான சேர்த்தியழகை ப்ரீதிக்குப் போக்கு விட்டுப்பாடு' என்று ஸரஸ்வதியானவள், 'நமக்கு இருந்து திருத்துகைக்கு நல்ல ஸ்த2லமாயிருந்தது' என்று ஆதரிக் கும்படி விலக்ஷணமான நெஞ்சிலே முகங்கருக நியமியாபல், நம் நினைவிலே தன்னை அமைத்து, ராஜபுத்ரர்களைப் பள்ளி

---

விஷயானுபவத்துக்குப் போக்குவீடாகக் கவிபாடுகையாகிற இந்தப் பெரும் பயனும் ஸரஸ்வதி ஓதுவித்து உண்டானதாகக் கூறுகை யாலே இங்கு, கவிபாடுகையையே நன்மையென்பதாகக் கொள்ள வேணும். அந்த நன்மைதான் எவ்வழியாலே எப்படி உண்டா யிற்று எனில்: (நாமங்கை) நாவினுள் நின்று மலரும் கலைகளுக்கு அதி4தே3வதையாக எம்பெருமானால் நியமிக்கப்பெற்ற ப்3ரஹ்ம பத்னியான ஸரஸ்வதி, ஹயக்3ரீவ பத்னியாய், 'வாக்3தே3வீ' என்று வேதங்களிலே புகழப்படும் பெரியபிராட்டியாரின் அவதார மூர்த்தியென்றும் கொள்ளலாம். "லோகே வநஸ்பதி ப்3ருஹஸ்பதி தாரதம்யம் யஸ்யா: கடாக்ஷப்ரஸரமுதா3ஹரந்தி ஸா பா4ரதீ ப4க3வதீ" [ஸ்ரீஸ்தவம்][உலகில் ஒரு ஜீவன் மரமாகவும், மற்றொரு வன் தேவகுருவான பிருஹஸ்பதியாகவும் இருப்பது எவளுடைய கடாக்ஷத்தின் தாரதம்யத்தாலேயே என்று கூறுகின்றனரோ, ஞானாதிகுணங்களால் பூர்த்தி பெற்றிருக்கும் அந்த ஸரஸ்வதி] என்று ஞானிகளும் கொண்டாடும் பெருமையை உடையவள். (நல் நெஞ்சத்து) "கருக்கோட்டியுட்கிடந்து கைதொழுதேன் கண்டேன் திருக்கோட்டியெந்தை திறம்" [87] என்று கர்ப்பத்தி லிருக்கும்போதே பகவத்கடாக்ஷத்தைப் பெற்றவருடைய நெஞ்சா கையாலே 'நாம் இருந்து திருத்துவதற்கு நல்ல இடமாகும்' என்று நினைந்து இதில் நித்யவாஸம் செய்ய முற்பட்டாள் நாமங்கை. திருத்தும்போது அசட்டி உருட்டி முகம் கருகும்படி நியமித்துத் திருத்தினளோ? எனில்: (ஒப்பியிருந்து) இவ்வாழ்வார் பகவத் ஸம்பந்தமாகிற ராஜகுலப்பெருமையைக் கருவிலேயே பெற்றவ ராகையாலே, ப4க3வத்3ப4க்தையான இந்த ஸரஸ்வதி, இவ்வாழ்வார் நினைவைத் தான் பின்சென்று ராஜபுத்திரர்களுக்குக் கல்வி கற் பிக்கும் உபாத்தியாயர்கள் அவர்களை அநுவர்த்தித்துக் கல்வி

அவள் ஸ்ருத்ருயத்திலேயிருந்து ஓதுவிக்கைக்கடி சொல்லுகிறது. (வேம்பின் பொருள் நீர்மையாயினும்) இனிய இது வேம்புபோலே கையா நின்றதேயாகிலும் பாடு என்றருளியல்லது நிற்கப்போகாத

ருசியாளரைப்போலே அநுவர்த்தித்துக் கொண்டிருந்து, நம்மைச் சந்தையிட்டு ஓதுவித்து நாம் அலப்₄யலாப₄மாகப் பெற்ற அநுப₄வத்துக்குப் போக்குவீடாகக் கவிபாடுகை யான இந்தப் பரமபுருஷார்த்த₂மும், அருளுகையே ஸ்வ

பாவமாபோலே இவருக்குக் கவிபாடுகையைக் கற்பித்தாள் என்று கருத்து. (எம்மை ஓதுவித்து) நமக்குச் சந்தை சொல்லி ஓதுவித்து. ஓதுவித்த விஷயந்தான் என்னவெனில்: (வேம்பின் பொருள் நீர்மையாயினும் பொன்னுழி பாடென்று ஓதுவித்து) 'வேப்பங்காயாகிற பொருளின் தன்மையைப் போலே ப₄க₃வத் விஷயத்தைத் துதிப்பது மிகவும் கசப்பதாயிருந்தபோதிலும், அழகிய திருவாழியும் கையுமான சேர்த்தியழகைப்பாடு' என்று சொல்லி ஓதுவித்தாள் என்கை. (வேம்பின் பொருள் நீர்மையா யினும்) "ஸர்வரஸ:" "தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்தே" [திருவாய் 2-3-1] என்கிறபடியே இயற்கையிலேயே இனி யவனான இப்பொருளைப்பாடுவது அநாதிபாபவாஸனையாலே உனக்கு வேப்பங்காய்போல் கசந்ததாகிலும். (பொன்னுழிபாடு) கையும் திருவாழியுமான சேர்த்தியிலுள்ள அழகைக்கண்டு உகந்து அவ் வழகுக்குப் போக்குவிட்டுப் பாடுவாயாக. பொன்னுழி என்று சக்கரத்₃தாரியையே சொல்லுகிறதாகவுமாம். (என்று ஓம்பியிருந்து எம்மை ஓதுவித்து) ராஜபுத்ரர்கள் ராஜாவின் பெருமையை அறிந்திருந்தபோதிலும், அதை வார்த்தையால் சொல்ல அறியாத போது, சுவையற்றதாக இருப்பவற்றையும், தங்களுடைய சொல் வன்மையாலே சுவையுடையதாகக் காட்டித் தங்கள் ஸ்வரூபத்துக்குச் சேரக் கூடநின்று கற்பிக்கும் வயது முதிர்ந்த தா₃ஸிகளைப்போலே ஸரஸ்வதியும் இவருக்கு ப₄க₃வத் விஷயத்தைப்பாடுவது கசப்பா யிருந்த நிலையைப்போக்கி, அவ்விஷயத்தைப் பாடுவதே தொழி லாம்படி செய்தாள் என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்வர். (ஓதுவித்து நாம் பெற்ற நன்மை அருள் நீர்மை தந்த அருள்) இப்படி ஸரஸ்வதியானவள் ஓதுவித்து நாம் பெறும் பேறாகப் பெற்ற பகவத்விஷய ஸ்துதிகரணமாகிற இந்த நன்மையும் அருளுடைமையையே இயல்வாகக்கொண்ட ஸர்வேச்வரன் ஒரு ஹேது

அவனுடைய நீர்மையாலே தந்தவருள்-தந்த ப்ரஸாத₃ம் ஸரஸ்வதி ஓதுவிக்கைக்கடி. 58.

59. அருள்புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்துப்
பொருள்தெரிந்து காண்குற்ற வப்போது - இருள்திரிந்து
நோக்கினேன் நோக்கி நினைந்தேன தொண்கமலம்
ஒக்கினே னென்னையுமங் கோர்ந்து.

அருள் புரிந்த சிந்தை — அருளில் நிலைநிற்கும் திருவுள்ளத்தை, அடியார் மேல் வைத்து— அடியவராகிய எங்கள் மேலே வைத்து, பொருள் தெரிந்து— பொருளல்லாத எங்களை ஒரு பொருளாகத் திருவுள்ளம்பற்றி, காண்குற்ற அப்போது— கடாக்ஷித்தருளுகிற காலத்திலே, இருள் திரிந்து-அஜ்ஞான விருள் நீங்கப்பெற்று, நோக்கினேன்— ஜீவபர ஸ்வரூபங்களை ஆராய்ந்தேன்; நோக்கி— அப்படி ஆராய்ந்து, ஒண் கமலம் அது—அழகிய தாமரை மலர்கள் என்னலாம் படியுள்ள அத்திருவடிகளை, நினைந்தேன் — (ப்ராப்யமாக)

---

ப₄ாவமாக உடையனை ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாக ஸர்வஸ்வத₃ானம் பண்ணின ப்ரஸாத₃மடியாக வந்ததாயிருக்கும். 58.

---

வில்லாமல் என்பக்கல்வெள்ளமிடவிட்ட அருட்பிரவாஹத்தினாலே ஏற்பட்டதாயிருக்கும். "வேம்பின்...பாடு என்று ஓதுவித்து" என்று அந்வயித்துப் பொருள்கொண்ட அப்பிள்ளையுரையை ஒட்டி இது வரையில் பொருளுரைக்கப்பட்டது. "வேம்பின்...பாடென்று அருள் நீர்மைதந்த அருள்" என்று உள்ளபடியே கொண்டு பொருளுரைப்பர் பெரியவாச்சான்பிள்ளை. "என்விஷயமான இவ்வினிய துதி வேம்புபோலே உனக்குக் கைத்தாலும், 'இதையே பாடு' என்று அருளியல்லது நிற்க முடியாத அந்த ஸர்வேஶ்வரனுடைய அருளாலேயே ஸரஸ்வதியானவள் என்னெஞ்சிலே ஓம்பியிருந்து என்னை ஓதுவித்தாள்; அதனாலேயே நான் இந்த நன்மையைப் பெற்றேன்" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானக் கருத்து. 58

அநுஸந்தித்தேன்; ஓர்ந்து—(இத்திருவடிகள் தவிர நமக்கு வேறுபுகலில்லையென்று) ஆராய்ந்து, என்னையும்-ஆத்மாவையும், அங்கு-அத்திருவடிகளிலே, ஒக்கினேன்-ஸமர்ப்பித்தேன்.

பெரி-வ்யா:— (அருள்புரிந்தவித்யாதி:) அடியோமான எங்கள்மேலே அருள்புரிந்த சிந்தையைவைத்து அத்தாலே நாங்கள் பதா₂ர்த்த₂ங்களையறிந்து காணவுற்றபோது, நீ ஶேஷி-நான் ஶேஷபூ₄தனென்கிற ஜ்ஞாநத்துக்கு விரோதி₄யான

---

அவ:— இந்த லாப₄த்துக்கு அடியாக அடியிலே அவன் நிர்ஹேதுகமாகத் தம்மைக் கடாக்ஷித்தபடி சொல்லுகிறார்.

உரை:- அருளியல்லது நிற்கவொண்ணாதபடி அருளிலே நோக்கான தே₃வருடைய திருவுள்ளத்தை அருளுகைக்கு அடியான ஶேஷத்வ ப்ராப்தியை உடையரான எங்கள் மேலே பரிபூர்ணமாக வைத்து, எங்களை ஒரு வஸ்து பூ₄தராக நிரூபித்துக் கடாக்ஷித்தருளுகிற அக்ஷணத்திலே அஜ்ஞானமாகிற இருளடங்கலும், போனவழி தெரியாதபடி சிதறிப்போய், 'தே₃வர் ஶேஷி, நாம் ஶேஷம்' என்று

---

அவ:— ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தபடியாலேயே, நான் அவனுடைய திருவடிகளையே ப்ராப்யப்ராபகங்களாகப்பற்றினேன் என்கிறார்.

வ்யா:—(அருள் புரிந்த சிந்தை அடியார் மேல் வைத்து) அருளியல்லது நிற்க முடியாதபடி அருளிலே நோக்குடைய தேவரீருடைய திருவுள்ளத்தை, உன் அருளுக்கு விஷயமாவதற்குத் தகுதியாகிறஶேஷத்வஜ்ஞானத்தையுடைய அடியார்களாகிற எங்கள் மேலே பரிபூர்ணமாக வைத்து. (அடியார்) உலகிலுள்ள எல்லாச் சேதனரும் ஶேஷத்வத்தை உடையராயிருந்தபோதிலும், அந்த ஜ்ஞானத்தை உடையவர்களிடமே அதற்குரிய ஒழுக்கமிருக்குமாகையால், அவர்களே அடியார்கள் எனப்படுகிறார்கள். மேலே 'நோக்கினேன்' என்று தொடங்கித் தம்மைப்பற்றியே பேசுகிறாராகையாலே இங்கு 'அடியார்' என்று தம்மையும் தம்மைச் சேர்ந்தவர்களையும் சொல்லுகிறார் என்று கொள்ளத்தக்கது. (பொருள்

அஜ்ஞாநத்தைப்போக்கி யுணர்ந்து உன்னுடைய கமலம்போன்ற திருவடிகளை நினைத்தேன்; ஆராய்ந்துபார்த்து, பரதந்த்ரமா யிருக்கையாலே, என்னை உன் திருவடிகளிலே ஸமர்ப்பித்

---

இருவருடைய ஸ்வரூபத்தையும் தெளியக்கண்டேன்; இப் படி இரண்டு தலையையும் யதாவாக தர்ஶித்து, தேவ ருடைய அழகிய தாமரைபோலே நிரதிஶய போக்யமான அந்தத்திருவடிகளைப் பரமப்ராப்யமென்று அநுஸந்தித் தேன். என்னோடு எனக்கு உரிமையில்லாதபடி தேவர்க்கே அத்யந்த பரதந்த்ரமாயிருக்கிறபடியை உள்ளுற நிரூபித்து, ஸ்வரக்ஷணத்தில் இறங்குகைக்கு அநர்ஹனன என்னையும் தன்னைப் பெறுகைக்குத்தானே உபாயமான அந்தத் திருவடி களிலே நிக்ஷேபித்தேன்; உபாயமும் தேவர் திருவடிகளே

---

தெரிந்து) "பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய்" [திருவாய் 5-7-3] என்கிறபடியே ப்ரஹ்மஜ்ஞான மில்லாமையாலே 'அஸந்நேவ' என்னும்படி பொருளல்லாதவனு யிருந்த என்னை ஒரு பொருளாக உன் திருவுள்ளத்திலே வைத்து. (காண்குற்ற அப்போது) "யம் பஶ்யேந் மதுஸூதந:" என்கிறபடியே உன்னை நான் காணத் தடையாயிருந்த பாபங்க ளெல்லாம் மதுபட்டதுபடும்படி மதுஸூதனனை நீ கடாக்ஷித்த அந்த ஸமயத்தில். (பொருள் தெரிந்து காண்குற்ற அப்போது) உன் அருளிலே நோக்கான திருவுள்ளத்தை எங்கள் மேலே வைத்த தாலே, "மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர்நிலையும் தக்க நெறியும், தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையும்" எனப்படும் அர்த்த பஞ்சகங்களைப்பற்றியும் நன்ருக அறிவுபெற்று நாங்கள் காணும்போது என்றும் பொருள் கொள்ளலாம். (இருள் திரிந்து நோக்கினேன்) இதுவரையில் ஸாம்ராஜ்யம் செலுத்திவந்த அஜ்ஞானமாகிற இருள் முழுவதும் போனவழி தெரியாதபடி சிதறிப் போகையாலே, 'தேவரீர் உடையவன்; நான் உடைமைப்பொருள்' என்று நம்மிருவருடைய ஸ்வரூபத்தையும் தெளிவாகக் கண்டேன். (நோக்கி ஒண் கமலம் அது நினைந்தேன்) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்" [உடைமையாயி ருக்கும் தன்மை ஆத்மாவிடமுள்ளது; உடையவனுயிருக்கும் தன்மை ப்ரஹ்மத்திடமுள்ளது] "ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம்" [ஆத்மாவின் தாஸத்தன்மையையும், ஹரியின் ஸ்வாமித்தன்மை

தேன்; அருள்புரிந்துள்ள உன் திருவுள்ளத்தை எங்கள் மேலே வைத்து எங்களை ஒரு பதா₃ர்த்த₂மாக புத்திபண்ணின போது என்றுமாம். 59.

---

யென்று அத்₄யவஸித்தேன் என்றபடி. இத்தால், க்ருபா ப்ரேரிதஹ்ருத₃யனாய்க்கொண்டு தம்மை அவன் நிர்ஹேதுக மாகக் கடாக்ஷித்தபடியும், கடாக்ஷப₂லமாக ஸ்வரூபப்ராப்ய ப்ராபகங்களை உணர்த்தி, பதற்றம் துணிவுகள் தமக்கு உண்டா(க்கி?)னபடியும் சொல்லிற்றாய்த்து. அருளிலே நோக்கான திருவுள்ளத்தை எங்கள்மேலே வைத்து, அத்தாலே நாங்கள் பதா₃ர்த்த₂விவேகம்பண்ணி த₃ர்ஶிக்கிற போது என்னவுமாம். 59.

---

யையும்] எனப்படும் இருவர் ஸ்வரூபத்தையும் உள்ளபடி கண்ட பின்பு, அக்காரணத்தாலேயே, ஒளிபொருந்திய தாமரைபோலே மிகவினியதாயிருக்கும் உன் திருவடிகளையே பரமப்ராப்யமென்று அநுஸந்தி₄த்தேன். அதையடையப் பதறினேன் என்று கருத்து. பரம ப்ராப்யமான அதையடையப் பதறினீராகில் உபாயாந்தரங்களில் கை வைத்தீரோ? எனில்: (ஓர்ந்து)எனக்கு என்னிடம் உரிமையில்லாத படி நான் தேவரீர்க்கே மிகவும் பரதந்திரனாயிருப்பதை நன்கு ஆராய்ந்து (என்னையும்) தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ளவும் தகுதியற்ற என் ஆத்ம ஸ்வரூபத்தையும். (அங்கு ஒக்கினேன்) தன்னைப் பெறுகைக்குத்தானே ஸாத₄னமான அந்தத்திருவடிகளிலே ஸமர்ப்பித்தேன். உபேயமான தேவர் திருவடிகளே உபாயம் என்று உறுதிபூண்டேன் என்றபடி. ''நிக்ஷேபாபரபர்யாய: ந்யாஸ:'' ['நிக்ஷேபம்' என்னும் மற்றொரு பெயரையுடையது ந்யாஸம் என்னும் ஶரணாகதி.] ''த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நா மதி: ஶரணாக₃தி:'' [நீயே எனக்கு உபாயமாவாயாக என்று பிரார்த்திக்கும் அறிவே சரணாகதி] என்று பாஞ்சராத்ரஶாஸ்த்ரங்களில் கூறியபடியே இதுவேயன்றோ சரணாகதி. இத்தால் கருணையால் தூண்டப்பட்ட திருவுள்ளத்தையுடைய அவன் ஒரு கைம்முதலை எதிர்பாராமல் இவரைக் கடாக்ஷித்தபடியையும், அக்கடாக்ஷத்தாலே ஸ்வரூபம், ப்ராப்யம், ப்ராபகம் ஆகியவற்றை இவர் உணர்ந்தபடியையும், அவனையடையப் பதற்றமும், 'அவனே உபாயம்' என்னும் துணிவும் உண்டானபடியையும் அருளிச் செய்தாராயிற்று. 59.

60. ஒருருவ னல்லை யொளியுருவம் நின்னுருவம்
ஈருருவ னென்ப ரிருநிலத்தோர்—ஒருருவம்
ஆதியாம் வண்ண மறிந்தா ரவர்கண்டீர்
நீதியால் மண்காப்பார் நின்று.

ஓர் உருவன் அல்லை—(எம்பெருமானே!) ஒப்பற்றிருக்கையே வடிவாக இருப்பவனன்று நீ; ஒளி உருவம்- (அடியார்க்குப் பரதந்த்ரமாய்க் கொண்டு) ஒளி பெற்றிருக்கிற ஸ்வரூபம், நின் உருவம்-உனது வடிவாம்; (இப்படி ஆஶ்ரித பாரதந்திரியமே வடிவாயிருக்கிற உன்னை) இருநிலத்தோர்- இப்பெரிய பூமண்டலத்திலுள்ளவர்கள், ஈர் உருவன் என்பர்- (பரத்வமாகிற) பெரியவடிவை உடையவனாகச் சொல்லுகின்றனர்; ஓர் உருவம்-(ஆச்ரிதபாரதந்திரியமாகிற) ஒப்பற்ற வடிவே, ஆதி ஆம் வண்ணம் —எல்லார்க்கும் உஜ்ஜீவந ஹேதுவாயிருக்குமென்பதை, அறிந்தாரவர்கண்டீர்-தெரிந்து கொள்ளுமவர்களே, நீதியால்-நியாயப்படி, நின்று-நிலைத்து நின்று, மண் காப்பார்- உலகத்தை ரக்ஷிக்க வல்லவராவர்.

---

அவ:—இப்படி ஸர்வேஶ்வரன் தன் பெருமை பாராதே எளியனாய், தம்மை விஷயீகரித்த நீர்மையை அநுஸந்திக்கையாலே, "நிரங்குஶஸ்வதந்த்ரனானமேன்மையன்று அவனுக்கு நிலைநின்ற வேஷம்; ஆஶ்ரிதபாரதந்த்ரியமே நிலை நின்ற வேஷம்" என்று அறிந்திருக்குமவர்கள் ஜகத்தை ஸர்வகாலமும் ரக்ஷிக்குமவர்கள் என்கிறார்.

---

60. அவ:—அதிநிஹீனனான என் சிறுமையையும், மிகச்சிறந்தவனான தன் பெருமையையும் பாராது, ஸர்வேஶ்வரன் தம்மை ஆட்கொண்ட நீர்மையை அனுஸந்தித்தார் சென்ற பாசுரத்தில். அதனாலேயே, "'தடையற்ற ஸ்வாதந்திரியத்தை உடையவனாயிருக்கையாகிற மேன்மை அவனுக்கு நிலைநின்ற வடிவன்று; அடியார்க்குப் பரதந்திரனாயிருக்கையே நிலைநின்ற வடிவாகும்' என்று அறிந்திருப்பவர்களே இவ்வுலகை எல்லாக்காலத்திலும் ரக்ஷிக்கக்கூடியவர்கள்" என்கிறார் இப்பாசுரத்தில்.

பெரிய வ்யா:-(ஓருருவனல்லை)''नित्यो नित्यानां'' (நித்யோ நித்யாநாம்) என்கிறபடியே ஸர்வவிஸஜாதீயம் என்கிறதன்று உனக்கு வடிவு.(ஒளிஉருவம்நின்னுருவம்)''भक्तानां त्वं प्रकाशसे''

உரை: – உன் படி பார்த்தால், என்றும் ஒருபடிப்பட ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு ஸ்வரூபத்தை உடையையல்லை. ''भक्तानां त्वं प्रकाशसे'' (பக்தாநாம் த்வம் ப்ரகாஸஸே) என்கிற படியே உன்னை ஆஶ்ரிதரிட்ட வழக்காக்கி, அத்தாலே புகர்

வ்யா:— (ஓர் உருவனல்லை) உன் தன்மையைப் பார்த்தால், என்றும் ஒன்றுபோலேயிருக்கும் ஸ்வாதந்த்ரியமாகிற ஸ்வரூப நிரூபகதர்மத்தை உடையவனல்லை. (ஓர் உருவன் அல்லை) ஒருபடிப்பட்டிருக்கும் ஸ்வரூபத்தை—ஸ்வரூபநிரூபகதர்மத்தை-உடையவன் அல்லை. இங்கு ப்ரகரணானுகுணமாக ஸ்வாதந்த்ரியமே அந்த ஸ்வரூபமாகிறது. அன்றிக்கே, (ஓர் உருவன்) ''நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந்'' [கட 2-5-13] [நித்யரான பல சேதநர்களுக்கிடையே நித்யனான எந்த ஒரு சேதனன் இஷ்டங்களை அளித்துக் கொண்டிருக்கிறானோ] என்கிறபடியே, மற்ற எல்லாச் சேதனர்களைக் காட்டிலும் மேற்பட்டிருக்கும் ஒப்பற்ற ஒரே சேதனன் என்னும் பெருமை உன்னுடைய ஸ்வரூபநிரூபகதர்மமன்று என்கிறதாகவுமாம். 'அப்படியாகில் என்னுடைய ஸ்வரூப நிரூபகதர்மம் எது?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, ஆஶ்ரிதபாரதந்த்ரியமே அது என்கிறார்.—(ஒளியுருவம் நின்னுருவம்) ''ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம்| ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஸஸே||'' [ஜிதந்தே] [உன்னுடைய ஸ்வரூபம், திருமேனி, ஆயுதங்கள், இருப்பிடம் ஆகியவை உனக்காக ஏற்பட்டவையல்ல. அப்படியிருந்தபோதிலும் பெருமையுடையவனாகவும் இருக்கிறாய்; பக்தர்களுக்குப் பரதந்த்ரனாயிருந்துகொண்டே நீ பிரகாஸிக்கிறாய்] என்கிறபடியே உன்னை நீயே உன் ஸங்கல்பத்தாலே அடியாரிட்ட வழக்காக்கி, அதனாலே புகர்பெற்றுப் பிரகாஸிப்பவனாயிருக்கையே உனக்கு நிலையாயிருக்கும் ஸ்வரூபநிரூபகதர்மம். ஸ்வாதந்த்ரியம், ஆஶ்ரிதபாரதந்த்ரியம் என்னும் இரண்டுமே அவனுக்கு ஸ்வரூப நிரூபகதர்மமாயிருந்தபோதிலும், கிருபை தலையெடுக்கும்போது ஸ்வாதந்த்ரியம் தலைசாயுமாகையாலும், ஆஶ்ரிதபாரதந்த்ரியம்

(ப₄க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே) என்கிறது உனக்கு ஸ்வரூபம், (இருநிலத்தோர் ஈருருவனென்பர்) அறியாதார் பெரிய ஈஶ்வர னென்பர்கள். (ஓருருவமித்யாதி₃) எல்லார்க்கும் ஸத்தை

---

பெற்று உஜ்ஜ்வலமாயிருக்கிற ஸ்வரூபம்உனக்கு நிலைநின்ற ஸ்வரூபம்; இப்படியிருக்கிற உன்னை இந்த ஆஶ்ரிதபாரதந் த்ரியத்தின் ஏற்றமறியாத மஹாப்ருதிவியிலுள்ள வாய் கரையரானவர்கள், நிரங்குஶஸ்வாதந்த்ரியமாகிற பெரிய ஸ்வரூபத்தை உடையவன் என்று இத்தைப் பெரிய ஏற்ற மாகச் சொல்லாநின்றார்கள். ''प्रणतपरतन्त्रं मनुमहे'' (ப்ரணதபர தந்த்ரம் மநுமஹே) என்னும்படி ஆஶ்ரிதபாரதந்த்ரியமாகிற

---

எப்போதும் உள்ளதொன்றாகையாலும், முந்தியது ஸ்வரூபமன் றென்றும், பிந்தியதே நிலைநின்ற ஸ்வரூபமென்றும் பேசுகிறார். இதை அனைவரும் அறிவரோ? என்னில்:— (ஈருருவனென்பர் இருநிலத்தோர்) இப்படி அடியார்க்கு அடியவனாயிருப்பதையே ஸ்வரூபமாகக் கொண்ட உன்னை, இவ்வாஶ்ரிதபாரதந்த்ரியத்தின் பெருமையை அறியாதவர்களாய், இப்பெரிய பூமியிலுள்ள வாய்ப் பேச்சாளர்கள், 'பெருமையையே வடிவாகக் கொண்டவன்' என்பர்கள். (இருநிலத்தோர்) பெரிய பூமியில் இருப்பவர்கள் அனைவரும் அறிவாளியாக இருக்க முடியாது என்று கருத்து. (ஈருருவன்) எவரும் கேள்விகேட்க முடியாதபடி தடையற்ற ஸ்வா தந்த்ரியமாகிற பெருமையையே வடிவாகஉடையவன். ஈர்-பெரிய. (என்பர்) நிலைநில்லாத இதை ஒரு பெருமையாகச் சொல்லுவதே! என்கை. (ஓர் உருவம் ஆதியாம் வண்ணம் அறிந்தார்)

''அநந்யாதீ₄நத்வம் தவ கில ஜகு₃ர் வைதி₃ககி₃ர:
பராதீ,நம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே''
[வரத-ஸ்த 20]

[(வரதனே!) வேதவாக்குக்களானவை, பிறர்க்கு வசப்பட்டிராமை யாகிற ஸ்வாதந்த்ரியத்தை உனக்கு ஸ்வரூபமாக கே₄ாஷித்தன நாமோவெனில்: அடியவர்களுக்கு வசப்பட்டவனை உனக்கு ஆஶ்ரிதபாரதந்த்ரியமே ஸ்வரூபமென எண்ணுகிறோம்] என்கிற படியே என்றும் ஒருபடிப்பட்டிருப்பதான ஆஶ்ரிதபாரதந்த்ரியமான நிலைநின்ற ஸ்வரூபமே அனைவரையும் த₄ரிக்கச்செய்வதாய், அடி யார்க்கு ஆதியாய்—உய்வுபாயமாகிறது என்னும் அர்த்த₂த்தை

அவனே யென்றறிந்த வைஷ்ணவர்கள் பூமியை முறை குலே யாமல் காப்பார். ''தீர்த்தகரராமின் திரிந்து'' என் னும்படியே. 60

---

ஒருபடிப்பட்ட ஸ்வரூபமே ஸர்வஸத்தாஹேதுவாய்க் கொண்டு ஆஶ்ரிதர்க்கு உஜ்ஜீவநஹேதுவாயிருக்கும் ப்ர காரத்தை உள்ளபடி அறிந்திருக்கும் மஹாத்மாக்களான அவர்கள் கிடீர்-'ஈஶ்வரன் அரியன்' என்று ஜகத்தை வழி யடித்து உண்கிற வாய்கரையரைப் போலன்றிக்கே அவன் நீர்மையின் ஏற்றத்தைச் சொல்லி, எல்லாரையும் பகவத்ப்ரவணராம்படி திருத்துகிற ந்யாயத்தாலே உருவ நின்று ஜகத்தைத் தளிரும் முறியுமாம்படி ரக்ஷிக்கிறவர்கள்.

---

உள்ளபடி அறிந்த மஹாத்மாக்கள். 'ஓர் உருவம்' ஆஶ்ரிதபார தந்த்ரியமே நிலைநின்றதாகையாலே 'ஓர் உருவம்' என்கிறார். ''உன்னது என்னதாவியும், என்னது உன்னதாவியும்'' [திருவாய் 4-3-8]என்றவிடத்தை ஆளவந்தார் வியாக்யானம் செய்யும்போது முதலிகளில் சிலர் 'இவ்வாத்மாவின் ஸ்வரூபம் அவனிட்ட வழக்கு என்றால் கூடும்; அவன் ஸ்வரூபம் இவனிட்ட வழக்காகையாவது என்?' என்று கேட்க, ''சேதனன் தன்னை ஸர்வேஶ்வரனுக்கு ஆக்க நினைத்தபோது கர்மம் தடுக்கக்கூடும்; ஸர்வேஶ்வரன் தன்னை இவனிட்ட வழக்காக்கும்போது. தடுப்பது எதுவுமில்லை; ஆகை யால் ஈஶ்வரனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ரியமே நிலைநிற்பது; உண்மையில் ஜீவனுடைய ஸ்வரூபம் ஈஶ்வரனிட்ட வழக்காகக் கூடுமோ? என்று இதிலேயே ஸந்தேஹிக்கக்கூடும்'' என்று அருளிச்செய்தார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. (ஓர் உருவம்) ஒப்பற்ற ஆஶ்ரிதபாரதந்த்ரியமாகிற ஸ்வ ரூபம் என்றும் பொருள் கொள்ளலாம். (அவர்கண்டீர்) வழி பறிக்கும் தேசத்திலே ஸர்வஸ்வதானம் செய்வாரைப்போலே இப்படியும் சிலர் இருப்பது இவ்வுலகம் செய்த பாக்கியமன்றோ என்று கருத்து. (நீதியால் மண் காப்பார்) பெரிய தர்மத்தைச் செய்து உலகை ரக்ஷிப்பர்கள். 'ஈஶ்வரன் பெரியவன்; அடை தற்கு அரியவன்' என்று வாய்ப்பேச்சுப்பேசி உலகினர் அவனை அடையவிடாதபடி செய்து அவர்களுடைய பகவதனுபவத்தை வழிப்பறி செய்து திருப்தியடைந்து அநீதியைச் செய்யும் அவர்

அன்றிக்கே, ''बहुधा विजायते'' (ப₃ஹுதா₄ விஜாயதே) என்கிறபடியே ஆஶ்ரிதார்த்த₂மாக அவதரித்த த₃ஶையிலே அநேகம் திருமேனியை உடையையாகையாலே. ஒரு படிப் பட்டதொரு விக்₃ரஹத்தை உடையையல்லை; ''स उ श्रेयान्

---

களைப் போலல்லாமல், அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ரியத்தின் பெருமையைச் சொல்லி உலகினர் அனைவரையும் அவனிடம் ஈடு படும்படி திருத்திப் பெரிய நீதியை—த₄ர்மத்தைச் செய்யும் இவர்களே உலகை ரக்ஷிப்பார்கள். (நின்று மண் காப்பார்) ''வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே'' [திருவாய் 4-3-11] என்கிறபடியே நெடுங்காலம் வாழ்ந்து உலகை ரக்ஷிப்பவர்கள் இவர்களே. (காப்பார்) உலகமாகிற மரத்தின் வேரில் விஷத்தை வைத்துப் பட்டுப்போம்படி செய்யும் அவர்களைப்போலன்றிக்கே, இவர்கள் அதற்கு நீரிட்டு எருவிட்டுத் தளிரும் முறியுமாம்படி ரக்ஷிப்பார்கள். (நீதியால் மண் காப்பார்) ''தீர்த்தகரராமின் திரிந்து'' [இர-திரு 14] என்கிறபடியே உலகெங்கும் திரிந்து தங்கள் ஸம்பந்தத்தாலே உலகனைத்தையும் பரிசுத்தப்படுத்தி, ஶேஷஶேஷி பா₄வமாகிற முறை (நீதி) கெடாதபடி ரக்ஷிப்பார்கள் என்றும் கொள்ளலாம். இனி, அப்பிள்ளையுரையின்படி இப்பாசுரம் வேறொரு வழியில் விவரிக்கப்படுகிறது.

அவ:— முன் பாசுரத்தில் சொன்னபடி தாம் பகவத்ப்ரவணரானது அர்ச்சாவதாரபர்யந்தமான அவதாரங்களின் க்ருஷிப₂லமேயாகையால், அவ்வவதாரங்களின் பெருமையைப் பேசுகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (ஒருருவனல்லை) ''அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே'' [பிறப்பற்றவனாயிருந்தும் பலபடியாகப் பிறக்கிறான் பரமபுருஷன்] ''பிதா புத்ரேண பித்ருமாந்யோநியோநௌ'' [யஜுர்வேதம்] [ஸர்வலோகபிதாவானவன் தன் பிள்ளையொருவனைப் பிதாவாகக் கொண்டுயோனிகள்தோறும் பிறக்கிறான்] என்கிறபடியே அடியார்க்காக அவதரிக்கும் நிலையிலே எணக்கற்ற திருமேனிகளை உடையவனாகையாலே. ''ஸதை₃கரூபரூபாய'' [வி-பு1-2-1] [எப்போதும் ஒரு படிப்பட்டிருக்கும் பரரூபத்தையுடையவனுக்கு] என்கிறபடியே ஒரு படிப்பட்டிருப்பதான பரவாஸுதேவவிக்₃ரஹத்தை மாத்திரம் உடையவனாயிருக்கவில்லை நீ, (ஒளியுருவம் நின் உருவம்) ''ஸ உ ஶ்ரேயாந்

भवति जायमानः''(ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாநः)-இப்படி பல வடிவெடுத்துக்கொண்டு பிறந்தவிடத்திலும், ஶுத்₃த₄ ஸத்வமயமாய்க்கொண்டு நிரவதி₄கதேஜோரூபமாயிருக்கும் உன் திருமேனி. இப்படி அஸாத₄ாரணவிக்₃ரஹமும், அவதாரவிக்₃ரஹமுமாகிற இரண்டு விக்₃ரஹத்தையும் உடையையாயிருப்புதி' என்று உன்னை நாட்டில் அறிவுடையார் சொல்லாநின்றார்கள். இதரஸஜாதீயமாய் அவதரித்த அந்த

ப₄வதி ஜாயமாநः'' [யஜுர்வேதம்] [அவன் பிறந்தபின்பு பெருமை பெறுகிறான்] என்கிறபடியே, பிறக்கப்பிறக்க ஒளி மழுங்கும் ஜீவர்களைப் போலல்லாமல், பிறக்கப்பிறக்க இருட்டறையில் விளக்குப்போலே ஸௌலப்₄யாதி₃குணங்கள் ஒளி வீசப்பெறும் அவதாரவிக்₃ரஹங்களும் உன் திருமேனிகளாயிருக்கின்றன. (ஒளியுருவம்) மனிதனாகவும், மீனாகவும், ஆமையாகவும், பன்றியாகவும் பிறந்தபோதிலும், ஶுத்₃த₄ஸத்வமாய், ஒப்பற்ற ஒளியையுடையதாயிருப்பது உன் அவதாரத்திருமேனி என்கிறதாகவுமாம். இது நீர் சொல்லுமளவேயோ? என்ன,—(இருநிலத்தோர் ஈருருவனென்பர்) நான் சொல்லுவது மாத்திரமன்று; பூமியிலுள்ள அறிவிற் பெரியவர்கள் அனைவரும் இப்படிப் பரவாஸுதேவ விக்ரஹமும், அவதாரவிக்ரஹமுமாகிற இரண்டு திருமேனியையும் உடையவனென்று உன்னைக் கூறுகிறார்கள். எப்படியிருந்தபோதிலும், ஜகத்காரணமான பரவாஸுதேவ விக்ரஹமன்றோ ஆதியாயிருப்பது என்னில்: (ஓர் உருவம் ஆதியாம் வண்ணம் அறிந்தார் அவர் கண்டீர் நீதியால் மண் காப்பார் நின்று) பரவாஸுதேவ விக்ரஹமும் தனக்கு ஒப்பாக மாட்டாதபடி ஒளிவிஞ்சிநிற்கும் அவ்வவதாரவிக்ரஹமே எல்லா ஜனங்களுக்கும் உஜ்ஜீவனஹேதுவாயிருந்துகொண்டு ஆதியாகிறது என்று அறியும் அறிவாளிகளே நீதியால் நிலைநின்று உலகை ரக்ஷிப்பார்கள். பரவாஸுதேவ விக்ரஹம் ''ததை₃க்ஷத ப₃ஹு ஸ்யாம்'' [அந்த ப்ரஹ்மம் ''நானே பலவாகக்கடவேன்'' என்று ஸங்கல்பித்தது.] என்கிறபடியே ஸ்ருஷ்டி ப்ரளய முக₂த்தாலே ஆதியான போதிலும், அவதார விக்ரஹமே ரக்ஷணமுகத்தாலே சேதனர்களை உய்விப்பதன்மூலம் அந்த ஸ்ருஷ்டி ப்ரளயங்களைப் பயனுடையதாக்கி ஆதியாயிருக்கிறதாகையாலே ரக்ஷணத்தை அபேக்ஷிக்கும் நமக்கும் மிகவும் உத்தேஶ்யமாகிறது என்று அறியுமவர்களே உலகை நிலைநின்று நீதியால் ரக்ஷிப்பார்கள் என்று கருத்து. இக்கருத்தாலேயன்றோ—

61. நின்றதோர் பாதம் நிலப் புதைப்ப நீண்டதோள்
சென்றளந்த தென்பர் திசையெல்லாம் — அன்று
கருமாணியா யிரந்த கள்வனே உன்னைப்
பிரமாணித்தார் பெற்ற பேறு.

அன்று — முன்பொரு காலத்திலே, கருமாணி ஆய் — கரிய நிறமுடைய பிரமசாரியாய்ச்சென்று, இரந்த — (மாவலி பக்கல் மூவடிமண்) யாசித்த, கள்வனே — வஞ்சகனான பெருமானே! நின்றது ஓர் பாதம் — (பூமியை அளப்பதாக) நின்ற ஒரு திருவடியானது, நிலம் — பூமண்டலத்தை, புதைப்ப — மறைத்துக்கொள்ள, (அதன் பிறகு) நீண்ட தோள் — விம்மி வளர்ந்த திருத்தோளானது, திசை எல்லாம் சென்று — திக்குக்களெல்லாவற்றிலும் வியாபித்து, அளந்தது என்பர் — (மேலுலகத்தை) அளந்துகொண்டதென்று (அறிவாளிகள்) சொல்லுகின்றனர்; (இப்படி நீ காரியஞ்செய்த இது) உன்னை பிரமாணித்தார் பெற்ற பேறு-உன்னை நம்பினவர்கள் எல்லாரும் பெற்ற பெரும்பயனாகும்.

பெரி அவ: — (நின்றதோர்பாதம்) வடிவேயோ? அவனுடைய சேஷ்டிதமும் ஆஶ்ரிதபரதந்த்ரமென்கிறது.

---

அவதாரவிக்₃ரஹம் ஒன்றுமே, ''कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाप्ययः'' (க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய:) என்கிறபடியே ஜக₃த்காரணமாயிருக்கிற ப்ரகாரத்தை அறிந்தவர்கள் ஜக₃த்தை எப்போதும் ரக்ஷிக்குமவர்கள் என்றுமாம். 60.

---

''க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:।
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விஶ்வம் சராசரம்॥
[பா₄ரதம்]

[கண்ணனேயன்றோ இவ்வுலகின் ஸ்ருஷ்டிப்ரளயங்களைச் செய்பவன்; (எப்படியென்னில்:) அசைவனவும், அசையாதனவுமான இவ்வுலகனைத்தும் கண்ணனால் ரக்ஷிக்கப்படவிருக்கிறதன்றோ] என்று ரிஷியும் கோஷித்தார். (நீதியால் மண் காப்பார் நின்று) இதற்குப் பொருள் முன்போலவே கண்டு கொள்வது. 60.

வ்யா:- (நின்றதித்யாதி₃) இரந்து நின்ற நிலையிலே பூமி யெல்லாம் ஓரடியாலே மறையும்படிக்கீடாக. (நீண்டவித்யாதி₃) கையிலே நீர் விழுந்தவாறே அலப்₄யலாப₄ம்போலே வளர்ந்த தோளானது திக்குக்களெல்லாம் சென்றளந்ததென்பர். (அன்றித்யாதி₃) உன்னைப்பேணுதே உன்னுடைய விபூ₄தியை அவன்

---

அவ:— கீழே சொன்ன ஆஸ்ரிதபாரதந்த்ரியந்தன்னை அனுஷ்டி₂த்துக் காட்டினபடியைச் சொல்லுகிறார்.

உரை:—ஒரு நினைவற்றிருக்கச் செய்தே நின்றதொரு திருவடிகள் பூ₄மிப்பரப்பையடங்கலும் புறந்தோற்றுதே தன் கீழே அடங்கும்படி அளந்துகொள்ள, அபி₄மதம்பெற்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முசிவற வளர்ந்த திருத்தோளானது திக்குக்கள் எல்லாவற்றையும் சென்று அளந்து கொண்டது என்று விவக்ஷிதர் சொல்லாநின்றார்கள். இந்த்₃ரன் கண்ணும்

---

61. அவ:—'முன் பாசுரத்தில் புகழப்பட்ட அவதாரவிக்₃ரஹங்களில் ஒன்றின் பெருமையைப் பேசுகையில், அவனுடைய ஸ்வரூபரூபங்கள் மாத்திரமன்று; செயலும் அடியார்க்கு வசப்பட்டதென்கிறார்' என்றோ, 'முன் பாசுரத்தில் பேசப்பட்ட ஆஸ்ரிதபாரதந்த்ரியத்தை அவன் அனுஷ்டித்துக் காட்டியபடியைப் பேசுகிறார்' என்றோ, முன் பாசுரத்தின் இரண்டு பொருள்களுக்கும் சேர இரண்டு விதமாக அவதாரிகை.

வ்யா:— (நின்றதோர் பாதம் நிலம் புதைப்ப) மாவலியிடம் மூவடி மண் யாசித்து நின்ற நிலையிலே, பூமியிலுள்ளார் 'அமரர் சென்னிப் பூவான திருவடி தம் தலையை அலங்கரிக்கப்போகிறது' என்னும் நினைவேயில்லாமலிருந்தபோதிலும், அபேக்ஷாநிரபேக்ஷமாக பூமி முழுவதும் ஒரு திருவடியின் கீழே அடங்கும்படி அளந்து கொள்ள. (நீண்ட தோள் திசையெல்லாம் சென்று அள்ந்த தென்பர்) "கரே நிபதிதே தோயேவாமநோபூ₄த்₃வாமந:" [கையில் மாவலியின் தானநீர் விழுந்தவுடன் வாமநன் (குறளன்) நெடியோனானான்.] என்கிறபடியே விரும்பியது பெற்றவுடன் பெரும்பேறு பெற்றாப்போலே பேரானந்தமடைந்ததாலே விம்மிவளர்ந்த திருத்தோள்கள் எல்லாத்திக்குகளையும் தானே சென்று வியாபித்து அளந்து கொண்டது என்று அறிவாளிகள் கூறுகின்றனர். இச்செயல் உன்னை நம்பினார் அனைவர்க்கும் பெரும் பயனாகும் என்கிறார் பின்னடிகளாலே; (அன்று) இந்திரன் 'அரசிழந்தேன்' என்று கதறிக் கொண்டு கண்ணும் கண்ணீருமாய்த் திருவடிகளிலே வந்துவிழுந்த அன்று. (கருமாணியாய்) கண்டார் களைப்பை ஆற்றும் கறுத்தநிறத்

தன்னதென்ன, அவன் பக்கலிலே இரந்தாயாய் வஞ்சித்தாயாய்ச் செய்தது இந்த்₃ரன் ஒருத்தனுக்குச் செய்ததேயோ? ஆஶ்ரிதவிஷயத்தில் தன்னை அழியமாறி வஞ்சிக்கும் - தூது போம் - ஸாரத்₂யம் பண்ணும் - எல்லாம் செய்து ரக்ஷிக்குமென்று உன்னை ப்ரமாணித்தவர்கள் மார்விலே கைவைத்துறங்கும்படி பண்ணினையத்தனையன்றோ. 61.

---

கண்ணீருமாய்க்கொண்டு திருவடிகளிலே வந்து விழுந்த அன்று, ஶ்ரமஹரமான கறுத்த நிறத்தையும், இரப்பிலே தகணேறின ப்₃ரஹ்மசாரி வேஷத்தையும் உடையனாய்க் கொண்டு, மஹாப₃லியை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணின க்ருத்ரிமனே! உன்னை அழியமாறி மஹாப₃லி பக்கல் கிடந்த பூ₄மியை மீட்டுக்கொடுத்த இது, உன் பக்கலிலே தங்கள் ப₄ரத்தைப் பொகட்டு உன்னை விஶ்வஸித்திருந்த ஆஶ்ரிதரானவர்கள் நிர்ப்ப₄ரராய் மார்விலே கைவைத்து உறங்கும்படி பெற்றதொரு பேறன்றோ. அவர்களுக்கு வைத்த தண்ணீர்ப் பந்தலன்றோ என்றபடி. 61.

---

தையும் யாசகத்திலேதழும்பேறின ப்ரஹ்மசாரிவேஷத்தையும்உடையவனாய். (இரந்த கள்வனே!) யாசித்த வஞ்சகனே! ஸ்வாமியாக நீயிருப்பதைக் கருதாமல், உன்னுடையதான பூமியை மாவலியானவன் தன்னுடையதாக அபிமானிக்க, அவனிடமுள்ள வண்மைக்குணம் ஒன்றையே பற்றுசாகக்கொண்டு, அவனை அழித்துவிடாமல், உன் ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு 'யாசகன்' என்றும், 'வஞ்சகன்' என்றும் அறிவிலிகள் ஏசநின்றாயன்றோ! இது ஒருசெயல் இருந்தபடியென்! 'இச்செயல்தான் இந்திரன் ஒருவனுக்காகச் செய்ததோ? உன்னை நம்பியிருக்கும் எங்கள் அனைவர்க்காகவும் செய்ததன்றோ' என்கிறார் மேலே; (உன்னைப் பிரமாணித்தார் பெற்ற பேறு) உன் ஸ்வரூபத்தைத் தாழ்த்திக்கொண்டு மாவலியிடம் இருந்த பூமியை இந்திரனுக்கு மீட்டுக்கொடுத்த இச்செயல் இந்திரன் ஒருவன் பெற்ற பேறு அன்று; 'அடியார்காகத் தன் ஸ்வரூபத்தையும் தாழ்த்திக்கொண்டு யாசிப்பதையும் வஞ்சிப்பதையும், தூதுபோவதையும், தேரோட்டுவதையும், மற்றும் பல இழிதொழில்களையும் செய்து அவர்களை ரக்ஷிப்பவன்' என்று உன்னை நம்பினவர்கள் அனைவரும் மார்விலே கைவைத்து உறங்கலாம்படி பெற்ற பெரும் பயனன்றோ இது; அவர்கள் அனைவர்க்கும் வைத்த தண்ணீர்ப்பந்தலன்றோ இச்செயல் என்கிறார். 61.

62. பேறொன்று முன்னறியேன் பெற்றறியேன் பேதைமை
மாறென்று சொல்லி வணங்கினேன்-ஏறின் [யால்
பெருத்தெருத்தங் கோடொசியப் பெண்ணசையின்
எருத்திறுத்த நல்லாய ரேறு. [பின்போய்

பெண் நசையின் பின் போய்—நப்பின்னைப் பிராட்டி விஷயத்திலுண்டான ஆசைக்கு வசப்பட்டு, ஏறின்—(ஏழு) எருதுகளுடைய, பெருத்த எருத்தம்—பெருத்த திமில்களும், கோடு—கொம்புகளும், ஒசிய — ஒடியும்படியாக, எருத்து —(அந்த எருதுகளின்) கழுத்தை, இறுத்த-முறித்த, நல் ஆயர் ஏறு—சிறந்த இடையர் தலைவனான கிருஷ்ணன், மாறு—(நமது பாபங்களுக்கெல்லாம்) எதிரியாயிருப்பவன், என்று சொல்லி—என்று நினைத்து, வணங்கினேன்-அவனை ஆஶ்ரயித்தேன்; முன்—இதற்கு முன்பு, பேறு ஒன்று அறியேன்-இப்படிப்பட்ட ஒப்பற்ற புருஷார்த்தமும் உள்ளதையே அறியாதவனாயிருந்தேன்; பேதைமையால்-என் அறியாமையால், பெற்று அறியேன் —( இதுவரையில் ) அதனைப் பெறுதும் இழந்தொழிந்தேன்.

பெரி அவ:—(பேறொன்று) நப்பின்னைப்பிராட்டிக்கு ப்ரதிப₃ந்த₄கமான எருதுகளைப்போக்கி அவளைத் தனக்காக்கிக் கொள்ளுகையாலே நம்முடைய ப்ரதிப₃ந்த₄ங்களையும் போக்குமென்கிறது.

வ்யா:-(பேறித்யாதி₃) பேறொன்றுண்டாக முன்பறியேன்; அறியாமையேயன்று, பெற்றுமறியேன். ( பேதைமையால் )

---

அவ:—இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரனானவனே என் ப்ரதிப₃ந்த₄ங்களைப்போக்கி அபேக்ஷிதத்தையும் தருவான் என்று அவனைப் பற்றினேன் என்கிறார்.

---

62. அவ:— சென்ற இரண்டு பாசுரங்களில் ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரிதபாரதந்திரியத்தை த்₃ருஷ்டாந்தங்காட்டி விளக்கினார். இப்படி அடியார்க்கு வசப்பட்டிருப்பவன், நப்பின்னைப் பிராட்டிக்குத் தடையைப்போக்கி அவளைத் தனக்காக்கிக்கொண்டாற் போலே, நம்முடைய தடையைப்போக்கி அருளுவான் என்கிறார் இப்பாசுரத்தில்.

பெருமைக்கு அடி அறிவுகேடு; (ஏறின பெருத்தெருத்தங் கோடொசியப் பெண்ணசையின் பின்போய் எருத்திறுத்த நல் லாயரேறு, மாறென்று சொல்லி வணங்கினேன் ) எருத்தி

உரை:—ருஷபங்களுடைய வளர்ந்த கழுத்துக்களும், கொம்புகளும் முறியும்படிக்கீடாக நப்பின்னைப் பிராட்டி பக்கல் உண்டான ஆசையைப் பின்சென்று அந்த ருஷபங் களுடைய கழுத்தைத் திருகிப் பொகட்டவனாய், தன்னோடு ஒத்த நல்ல பருவத்தையுடைய இடைப்பிள்ளைகளுக்கெல் லாம் தலைவனாகையால் வந்த செருக்கையுடையனான க்ருஷ்

வ்யா:— (பேறு ஒன்று முன் அறியேன) இப்போது நான் பெற்றிருக்கும் ஒப்பற்ற பயனை அநாதிகாலமாக அறியாமலே இருந்துவிட்டேன்; பயனல்லாதவையான ஸாம்ஸாரிக புருஷார்த் தங்களையே பயனாக மயங்கியிருந்தமையாலே. ஒப்பற்ற புருஷார்த்த மான பகவத்விஷயத்தை ஒரு புருஷார்த்தமென்றே அறியாம லிருந்தேன் அநாதிகாலமாக. (பெற்றறியேன்) இவ்வறியாமை யாலே இப்பெரும்பயனைப்பெற்று அநுபவிக்காமல் இழந்தே போனேன். (முன் பெற்றறியேன்) இப்போது பெற்றிருப்பதிருக் கட்டும்; அநாதிகாலமாக இழந்தேனே பாவியேன்! அணையைத் தாண்டிச்சென்ற ஜலத்தை மீட்கவொண்ணாதாப்போலே, அநாதி காலமாக இழந்த அனுபவத்தைத் திரும்பப்பெறமுடியுமோ? இப்படி இழந்ததற்குக்காரணமென்ன? எனில்:(பேதைமையால்) என் அறிவு கேட்டாலே இழந்துபோனேன். அறிவுகேடு அநாதிகாலமாக என்னை அஸத்ஸமமாகவன்றோ ஆக்கிவைத்திருந்தது. "ஜ்ஞாநாந் மோக்ஷ: அஜ்ஞாநாத் ஸம்ஸார:" [மோக்ஷம் ஞானத்தால் ஏற்படு வது; ஸம்ஸாரம் அறிவுகேட்டால் ஏற்படுவது] என்பதன்றோ சாஸ் திரங்களின் ஸாரம். அப்படிப்பட்ட பேறுதான் ஏதென்னில்: (மாறு என்று சொல்லி வணங்கினேன்) நம்முடைய அறிவுகேட்டுக்குக் காரணமான புண்யபாபங்கள், அவற்றுக்குக் காரணமான அநாதி யான பிரகிருதிஸம்பந்தம் முதலான விரோதிகளுக்கெல்லாம் நிவர்த்தகன் பரமபுருஷனே என்று எண்ணி அவனை வணங்கினேன். (மாறு என்று சொல்லி வணங்கினேன்) "குணமயீ மம மாயா துரத்யயா | மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே||" [கீதை 7-14][முக்குணமயமான என்னுடைய மாயை எனப் படும் பிரகிருதி எவராலும் கடக்க அரியது; என்னையே எவர்கள் சரணமடைகிறார்களோ அவர்களே இம்மாயையைத் தாண்டு கிறார்கள்.] என்று அவனே அருளிச்செய்தபடியே அவனே நம்

னுடைய பெருத்த கழுத்தும் கொம்புகளும் ஒசியும்படிக்கு ஈடாக நப்பின்னைப் பிராட்டியைப் பெறலாமென்கிற நசை யாலே எருத்திறுத்த நல்லாயரேறு நம் ப்ரதிபக்ஷத்துக்கும் மாறென்று சொல்லி வணங்கினேன். 62.

---

ணன், நம்முடைய ப்ராப்திப்ரதிப₃ந்த₄கமான கர்மங் களுக்கு ஶத்ருவாயிருக்குமவன் என்று ஆஶ்ரயித்தேன். இதுக்கு முன்பு இப்படியிருப்பது ஒரு புருஷார்த்த₂மென்று அறியவும் பெற்றிலேன்; அத்தாலே, இப்புருஷார்த்த₂த்தைப் பெற்று அநுப₄விக்கப்பெருமல் இழந்து போனேன்; இதுக்கு அடி என் அறிவுகேடு; ஐயோ! அறிவுகேடு என்படுத்தாது தான்! 62.

---

முடைய விரோதி₄நிவர்த்தகன் என்று எண்ணிச்சொல்லி அவனைச் சரணடைந்தேன். ஒரு குருவி கட்டிய கூட்டை ஒருவரால் அவிழ்க்க முடிவதில்லை; ஸர்வேஶ்வரன் கட்டிய கட்டை நம்மால் அவிழ்க்க முடியாது என்று அவனையே ஸம்ஸாரக்கட்டவிழ்க்கும் உபாயமாகப் பற்றினேன். (வணங்கினேன்) "க₃ச்ச₂த்₄வமேநம்ஶரணம்" [பார-ஆர 192-56] [இவனைச் சரணடையுங்கள்] என்று உபதேசிக்க, "நமஶ்சக்ருர்ஜநார்த்த₃நம்" [பார-ஆர 192-57] [ஜநார்த்தனனை வணங்கினர்] என்று வணங்கியதாகக்கூறுகையாலே வணக்கமே சரணுகதியாகும். உம்மால் சரணடையப்பெற்றவன் உம்முடைய விரோதிகளைப்போக்க சக்தியுடையவனே? சக்தியுடையவனுகிலும், உம்முடைய பாபங்களைக்கண்டு சீறி உமமை உதறமாட்டானே? என்னும் ஐயங்களுக்கு ஸமாதானமருளுகிறார் பிற்பகுதியாலே: (ஏறின் பெருத்தெருத்தம் கோடு ஒசிய எருதது இறுத்த) நப்பின்னைப் பிராட்டி தன்னையடையத் தடையாயிருந்த ஏழு எருதுகளின் பெரிய திமில்களும், கொம்புகளும் ஒடியும்படியாக, அவ்வெருதுகளின் கழுத்தைத் திருகினவனன்றே இவன்; நம்முடைய தடைகளை நீக்க வல்லவன் இவனே என்று கருத்து. இவ்வருஞ்செயலை இவன் செய்தது எத்தாலே? என்னில்: (பெண் நசையின் பின்போய்) நிறைந்த பெண்மையையுடைய நப்பின்னைப் பிராட்டியிடம் உள்ள பெருங்காதலுக்கு வசப்பட்டு இவ்வருஞ்செயலைச் செய்தான் என் கிறார். குற்றத்தையே நற்றமாகக்காணும் ஆயர் குலக்கொடியான அவளிடம் இப்படிப் பித்தேறியிருப்பவனுகையாலே நம்முடைய பாபங்களைக் கண்டு சீறி நம்மை இவன் உதறமுடியாது; நமக்கு ப்ரப₃லமான புருஷகாரப₃லம் உண்டு என்று கருத்து. (பெண்)

63. ஏறேழும் வென்றடர்த்த வெந்தை எரியுருவத்
தேறேறி பட்ட விடுசாபம்—பாறேறி
யுண்டதலை வாய்நிறையக் கோட்டங்கை யொண்குருதி
கண்டபொருள் சொல்லில் கதை.

ஏறு ஏழும்—எருதுகளேழையும், வென்று — ஜயித்து. அடர்த்த—அழித்த. எந்தை—ஸ்வாமியான கண்ணபிரான், எரி உருவத்து ஏறு ஏறி பட்ட — நெருப்புபோன்ற உரு வத்யையுடையவனும் காளைவாஹநமுடையவனுமான உருத் திரன் அடைந்ததாய், விடுசாபம்— பிரமனால் கொடுக்கப்பட்ட தான சாபத்தைப்(போக்குவதற்காக),பாறு ஏறி உண்ட தலை வாய் நிறைய—பருந்துகள் ஏறியிருந்துஉண்ட மண்டை ஓட் டின் வாய் நிரம்பும்படியாக, கோடு—குவிந்த, அம் கை — அழகிய திருக்கையாலே (கீறி யெடுத்து அளித்த), ஒண் குருதி—அழகிய ரத்தத்தாலே, கண்ட பொருள் — (அந்த மண்டையோடு கையினின்று கழன்றுவிழக்) கண்ட விருத் தாந்தத்தை, சொல்லில்—சொல்லத் தொடங்கினால், கதை— பெரியதொரு பாரதக் கதையாக முடியும்.

---

''ஸ்த்ரீப்ராயமிதரத் ஸர்வம்'' ''ஸ ஏக: புருஷ: ஸ்ம்ருத:'' என்கிற ப்ரமாணங்களின்படியே அவன் ஒருவனே புருஷனாகவும், மற்றுள்ளார் அனைவரும் பெண்களாகவுமேயிருந்தாலும், ஸம்ஸாரி களிடமுள்ள ஸ்வாதந்த்ரியாபிமானம் இவளிடம் சிறிதும் இல்லாமை யாலே, இவளே பெண்மையின் நிறைவையுடையவள் என்கை. (பெண் நசை) பிராகிருதமான காமமன்று கிடீர் இது; பரமாத்மா வுக்கு ஜீவாத்மாவிடமுள்ள அப்ராக்ருதமான காதல் கிடீர்! (நசை யின் பின்போய்) ''நின் அன்பின் வழிநின்று'' [பெரியாழ் திரு 3-10-7] என்று பிராட்டிமாரிடம் பிரேமபரதந்திரனாயிருப்பவனன்றோ இவன். (நல் ஆயரேறு)''தன்நேர் ஆயிரம் பிள்ளைகள்'' [பெரியாழ் திரு 3-1-1] என்கிறபடியே தன்னோடு ஒத்த பருவம் முதலான நன்மைகளையுடைய இடைப்பிள்ளைகளுக்கெல்லாம் தலைவனானதையால் வந்த மதிப்பையுடைய கண்ணன் கிடீர் இவ்வருஞ்செயலை நப் பின்னைக்காகச் செய்தான்; அவனையன்றோ நான் அவனையடையத் தடைகளெல்லாம் நீங்க உபாயமாகப்பற்றினேன்; இத்தகைய பேற்றை அநாதிகாலமாக அறியாமலேயிருந்து இழந்துவிட்டேனே! என்கிறார். 62.

பெரி அவ: —(ஏறேழும்) அபி,மாநியான ருத்₃ரனுடைய சாபத்தைப் போக்குகையாலும் அவனே ஆஶ்ரயணீய னென்கிறது.

வ்யா: –(ஏறேழுமித்யாதி₃)ஏறேழையும் வென்றஸ்வாமி. (எரியித்யாதி₃) எரியினுடையஉருவையுடையனாய். ருஷப₄த்தை ஏறின ருத்ரனை ப்₃ரஹ்மா "कपाली त्वं भविष्यसि" (கபாலீ த்வம்

---

அவ: — அபி₄மாநியான ருத்₃ரனுடைய ஶாபத்தைப் போக்குகையாலும் அவனே ஆஶ்ரயணீயன் என்கிறார்.

உரை: — ருஷப₄ங்கள் ஏழையும் ஜயித்துத் திருகிப் பொகட்ட என் ஸ்வாமியான க்ருஷ்ணன், நெருப்புப் போலே ஏறிட்டுப்பார்க்கவொண்ணாத வடிவையுடையனாய், செருக்குக்குப் போக்குவீடாக ருஷப₄த்தை மேற்கொண்டு நடத்தக்கடவனுமான ருத்₃ரன் முன்பு தலை யறுக்கிற விடத்தில் அநுமதிபண்ணியிருந்து, பின்பு குபிதனாய்க்

---

63. அவ: — 'தானே ஈஶ்வரன்' எனனும் அபி₄மான நலத் யுடைய உருத்திரனின் துன்பத்தைத் துடைத்தமையாலும் அவனே ஆஶ்ரயிக்கத்தக்கவன் என்கிறார்.

வ்யா: — (ஏறேழும் வென்று அடர்த்த எந்தை) ஏழு எருதுகளையும் ஜயித்து அழித்த என் ஸ்வாமியான கிருஷ்ணன். இவன் மற்றோரவதாரத்தில் சிவனுக்குப் பிரமனின் சாபத்தால் ஏற்பட்ட கபாலித்வத்தைப் போக்கியபடியைக் கூறுகிறார் மேலே. (எரி யுருவத்து) "ஒன்று செந்தீ" [திருநெடு-2] "தழல் நிறவண்ணன்" [பெரியதிரு 6-1-2]"உருவம் எரி" [முதல் திருவ 5] என்கிறபடியே காணக் கண் கூசும்படியான நெருப்புப்போன்ற உருவத்தை யுடையவன். "ஒன்று மாகடலுருவம்" [திருநெடு-2] "குழல் நிற வண்ண"[பெரிய திரு 6-1-2] "உருவம் கார்"[முதல்திருவ 5]என் கிறபடியே காண்பார் கண்களைக் களிப்பாற்றிக் களிக்கவைக்கும் உருவமன்றே. (ஏறேறி) ரிஷபவாஹனன். ஸர்வேஶ்வரன் வேத ஸ்வரூபனை கருடனை வாஹனமாகக் கொண்டிருப்பதைப் பார்த் துத் தானும் அறிவுகேட்டுக்கு உதாஹரணமாக எடுக்கப்படும் மாட்டை வாஹனமாகக் கொண்டு, தன் செருக்குத்தோன்ற ஸஞ் சரித்துத் திரிபவன். இத்தகைய செருக்கே தந்தையின் தலையை அறுக்கும்படி செய்தது என்று கருத்து. (பட்ட இடு சாபம்) அந்த ருத்ரன் பெற்றதாய், பிரமனால் இடப்பெற்றதான சாபம்.

ப₄விஷ்யஸி) என்றிட்ட சாபத்தை ஓட்டின அழகிய கை. (பாறேறியித்யாதி₃) கழுகும் பருந்துமேறி உண்ணுநின்ற தலை யுடைய வாய் நிறையும்படிக்கீடாக அழகிய குருதியைக்கண்ட

---

கொண்டு ப்₃ரஹ்மா "கபாலீ த்வம் ப₄விஷ்யஸி" (கபாலீ த்வம் ப₄விஷ்யஸி) என்று ஶபிக்க, ஶாபோபஹததனைக் கையும் தலையோடுமாய்க்கொண்டு இரந்து திரியும்படி மறுபாடு ருவப்பட்ட வந்தேறியான சாபத்தை, "கழுகும் பருந்தும் பாறு" என்கிற பக்ஷிவிஶேஷமான அவை மேல்விழுந்து ஜீவித்த தலையோடு வாயளவும் நிறைந்து, "ஸ்ஃபுடிதம் ப₃ஹுதா

---

(ஏறேழும் வென்று அடர்த்த எந்தை—ஏறேறி பட்ட சாபம்) ஒருவன் மனிதனாய் அவதரித்திருந்தபோது ஏழு கோ₃க்களைக் கொன்றும் ஒரு தோ₃ஷமும் அடையாமலிருந்தான்; ஒருவன் தானான நிலையிலே ஒரு தலையை அறுத்ததினால் சாபத்தையடைந் தான். ஒருவன் தலையறுப்புண்டு வருந்தத்தக்கவனாயிருந்தான். இம்மூவரிலே எவர் ஆஶ்ரயிக்கத்தக்கவர் என்பது தன்னடையே விளங்கும் என்று கருத்து. இக்கருத்தாலேயன்றோ "வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த புன்சடைக்கிறுதிங்கள் வைத்தவன் கை வைத்து அவன் கபால்மிசை ஊறு செங்குருதியால் நிறைத்த கார ணந்தனை ஏறுசென்றடர்த்த ஈச பேசு கூசமின்றியே" [திருச்சந்த 42] என்று இவ்விரு விருத்தாந்தங்களையும் சேர்த்துப் பாடினார் திரு மழிசைப் பிரானும் (விடு சாபம்)விடப்பட்ட சாபம் என்றுமாம். பிர மனும் பிள்ளை தன் தலையை அறுப்பதற்கு முன்பே தடுத்திருக்கலாம்; அது செய்யாமல் அறுக்கும்போது பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, பிறகு கோபங்கொண்டு "கபாலீ த்வம் ப₄விஷ்யஸி" [மாத்ஸ்ய புராணம்] [நீ கபாலம் கையில் ஒட்டிக்கொண்டிருப்பவனாவாய்] என்று சபித்தான். இதனால் இருவரும் கர்மவசப்பட்டவர்களே என்றும், பரம்பொருள் அல்லர் என்றும் தெளிவாகிறது. (இடு சாபம்) இந்த சாபத்தால் பீடிக்கப்பட்டு, கையும் மண்டையோடு மாய்க்கொண்டு யாசித்து, "வெண்தலைப் புலன் கலங்க உண்ட பாதகத்தன் வன்துயர்" [திருச்சந்த 113] என்கிறபடியே, எல்லா இந்திரியங்களும் கலங்கும்படி மண்டையோட்டிலே உண்டு ஜீவித்த பெருந்துன்பமளவும் சொல்லுகிறது. (பாறு ஏறி உண்ட தலை வாய் நிறைய) "கழுகும் பருந்தும் பாறு" என்கிறபடியே பாறு எனப்படும் கழுகும் பருந்தும் மேல் விழுந்து இவனோடு ஒக்க உண்ட அந்த ப்₃ரஹ்மகபாலத்தின் வாய் நிறைந்து, "ஸ்ஃபுடிதம் ப₃ஹுதா₄ யாதம்" [மாத்ஸ்யபுராணம்] [வெடித்துப்

அர்த்தத்தைச்சொல்லில் அதொருமஹாபாரதம். ஏழெருத்தை யடர்த்தவிடத்தில் அத்தாலொரு தோஷமின்றிக்கேயிருக்க ஒருதலையையறுத்ததுக்காகப்பாதகியானவனுடைய சாபத்தைப்

---

யாத்'' (ஸ்பு₂டிதய பூ₃ஹு₃த்₃ா யாதய) என்னும்படி சில்லுச் சில்லாக வெடித்துப்போம்படி குவிந்த அழகிய திருக்கை யாலே திருமேனியில் ஒரு ப்ரதே₃ஶத்தைக் கீறி வாங்கித் தெறித்த அழகிய ரத்தத்தாலே கையில் நின்றும் தவிழ்ந்து போம்படி கண்ட இவ்வர்த்தத்தைச் சொல்லவிழியில் ஒரு மஹாபா₄ரதத்தோடு ஒக்கும், ஈஶவரனாகவும் வேண்டா;

---

பல தூள்களாகச் சிதறிற்று] என்னும்படி துண்டுதுண்டாகச் சிதறும்படி. (கோட்டங்கை ஒண் குருதி கண்ட கதை) குவிந்த அழகிய திருக்கையாலே திருமேனியில் ஒரு பகுதியைக் கீறி அதில் தெறித்த அழகிய ரத்தத்தாலே, அந்த சாபம் விடக்கண்ட விருத் தாந்தம்.(கோட்டு அம்கை)பிச்சையிடும்போது குவிந்த அழகிய கை. ப்ரஹ்மஹத்தி பாபத்தைப் போக்கவல்ல அழகிய கை என்றுமாம். (ஒண்குருதி) அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே ரத்தம் போன்ற தொரு திரவத்தை வெளிவரச்செய்தான் எம்பெருமான். ஆயினும் அத்திருமேனி அப்ராக்ருதமாகையாலே அது 'ஒண் குருதி' (ஒளி பொருந்திய ரத்தம்) எனத்தக்கதாயிருந்தது. இவ்விரு கருத்துக் களையும் தெரிவிக்கவன்றே திருமழிசைப்பிரானும், ''ஊறு செங் குருதி'' [திருச்சந்த 42] என்றும், ''அலங்கல் மார்பில் வாசநீர்'' [ஷெ 113] என்றும் அருளினர். (சாபம் அம்கை ஒண்குருதி கண்ட பொருள்) உருத்திரன் அடைந்த சாபம்விடும்படி அழகிய கையாலே கீறி ஒளிபொருந்திய ரத்தத்தைப் பிச்சையிட்டுக்கபாலம் விடக்கண்ட விருத்தாந்தம். (சொல்லில் கதை) இதை விவரிக்கப்புகுந்தால், ஒரு மஹாபாரதக்கதைபோல் விரியும். தலையறுப்புண்டவனும், தலை யறுத்து சாபம் பெற்றவனும் பரம்பொருளல்லர், அந்த சாபத்தைப் போக்கியவனே பரம்பொருள் என்னும் கதூஸாரம் அணைவராலும் குறிக்கொள்ளத்தக்கது என்று கருத்து. இக்கதை மாத்ஸ்யபுராணத் தில் 182-ம் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டது.

தே₃வீம் ப்ரதி ருத்₃ர:

தத: க்ரோத₄பரீதேந ஸம்ரக்தநயநேந ச ।
வாமாங்கு₃ஷ்ட₂நக₂ாக்₃ரேண சி₂ந்நம் தஸ்ய ஶிரோ மயா ॥

ப்₃ரஹ்மா:

யஸ்மாத₃நபராத₄ஸ்ய ஶிரஶ்சி₂ந்நம் த்வயா மம ।
தஸ்மாச்சா₂பஸமாவிஷ்ட; கபாலீ த்வம் ப₄விஷ்யஸி ॥

போக்கினவனோ ஈசுவரன்? பாதகியானவனோ? தலையறுப் புண்டு சோச்யனானவனோ? பார்த்துக்கொள்ளுமத்தனை. 63.

---

பாதகியாகவும் வேண்டா, 'அங்கை' என்றது பாதகத்தைப் போக்கவல்ல அழகிய கை என்றபடி. (ஒண்குருதி) என்றது அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே அப்ராக்ருதமான திரு மேனியில்நின்றும் உண்டானதாகையாலே அடிக்கழஞ்சு பெற்ற குருதி என்றபடி. 63.

---

ருத்₃ர:

ப்₃ரஹ்மஹா ऽऽகுலிதோ பூ₄த்வா சரந் தீர்த்தா₂நி பூ₄தலே |
ததோ ऽஹம் க₃தவாந் தே₃வி! ஹிமவந்தம் ஶிலோச்சயம் ||
தத்ர நாராயணஶ் ஶ்ரீமாந் மயா பி₄க்ஷாம் ப்ரயாசித: |
ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நக₂ாக்₃ரேண விதா₃ரிதம் ||
மஹதீ ஸ்ரவதீ தா₄ரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா ||
விஷ்ணுப்ரஸாதா₃த் ஸுஶ்ரோணி! கபாலம் தத்ஸஹஸ்ரதா₄ |
ஸ்பு₂டிதம் ப₃ஹுதா₄யாதம் ஸ்வப்நலப்₃த₄ம் த₄நம் யதா₂ ||
[மாத்ஸ்யபுராணம்–182]

[தேவியைக் குறித்து ருத்ரன்:— "பிறகு கோபத்தையுடையவனும், சிவந்த கண்களை உடையவனுமான என்னால், அப்பிரமனுடைய தலை இடதுகைக் கட்டைவிரல் நகத்தின் நுனியால் வெட்டப்பட்டது. பிரமன்:—'அபராதமற்ற என்னுடைய தலை உன்னால் அறுக்கப் பட்டபடியால் நீ சாபத்தை அடைந்து கபாலியாக (கபாலத்துடன் கூடியவனாக) ஆவாய்.' ருத்ரன்:—'தேவி! ப்ரஹ்மஹத்தி செய்த வனாகவும் கலங்கினவனாகவும் பூமியில் தீர்த்தங்களைச் சுற்றிக் கொண்டிருந்த நான் அதற்குப்பின் ஹிமாசலமலைக்குச் சென்றேன். அங்கு ஸ்ரீமந்நாராயணன் என்னால் பிச்சைக்காக யாசிக்கப்பட்டான். அதன்பின் அவனால் தன் (தேஹத்தில்) ஒரு பாகம் நகத்தின் நுனியால் கீறப்பட்டது; அதிலிருந்து பெரிதாக வெள்ளமிடும் ரத்ததாரைபெருகிற்று. ...அழகிற் சிறந்தவளே! விஷ்ணுவினுடைய அருளினால் அக்கபாலம் ஆயிரக்கணக்கான பல துண்டுகளாக வெடித்து, கனவில் கிடைத்த பணம்போல் சென்றது.] என்பவை அங்குள்ள ஸாரமான ஶ்லோகங்கள். முதலாழ்வார்கள் சிவவிஷ்ணு ஸாம்யவாதிகள் என்று எழுதும் மேதாவிகள் இதுபோன்ற பல பாசுரங்களை முதலாழ்வார்கள் அருளியிருப்பதைப் பார்க்கவேண்டும். 63.

64. கதையின் பெருப் பொருளும் கண்ணாநின் பேரே
இதய மிருந்தவையே யேத்தில்—கதையும்
திருமொழியாய் நின்ற திருமாலே உன்னைப்
பருமொழியால் காணப் பணி.

கண்ணா — கண்ணபிரானே! கதையின்—இதிஹாஸ புராணங்களின், பெரு பொருளும்—சிறந்த அர்த்தங்களும், இதயம்—அவற்றின் தாத்பரியமும், இருந்தவையே-உள்ளது உள்ளபடியே, ஏத்தில்—அறிந்து துதித்தால், நின் பேரே—(அவையெல்லாம்) உன்னுடைய திருநாமங்களேயாம்; கதையும் திருமொழி ஆய் நின்ற திருமாலே—(சிறந்ததாகச்) சொல்லப்படுகிற அழகிய வேதங்களின் வடிவமாக நிற்கிற திருமாலே! உன்னை—உன்னை, பருமொழியால் காண-பெரிய வேதசப்தங்களாலே கண்டு அநுபவிக்கும்படி, பணி—திருவுள்ளம் பற்றவேணும்.

பெரி அவ:— (கதையித்யாதி₃) இதிஹாஸ புராணங்களுடைய ஹ்ருத₃யமிருந்தபடி அறிந்துசொன்னவற்றில்நிர்ணீதமான அர்த்த₂ம் ஆஶ்ரிதபு₄வ்யனானவனுடைய திருநாமத்தைச் சொல்லுகையென்கிறது.

---

அவ:— இப்படி ஈஶ்வராபி₄மானிகளுக்கும் கார்யஞ் செய்யக்கடவ நீ, உன்னாலல்லது செல்லாத நான் உன் திருநாமங்களைச் சொல்லி முழுமிடறு செய்து அநுப₄விக்கும்படி பண்ணியருளவேணும் என்கிறார்.

---

64. அவ:—தன்னை ஈஶ்வரனாக அபி₄மானித்திருக்கும் உருத்திரனுக்கும் உதவிபுரியக்கூடிய நீ, உன்னைக் கண்டாலல்லது தரிக்க மாட்டாத நான் உன் திருநாமங்களைச் சொல்லிப் பரிபூர்ணமாக அனுபவிக்கும்படி பண்ணு என்கிறார். முன் பாசுரத்தில் 'கதை' என்று இதிஹாஸ புராணங்கள் ப்ரஸ்துதமாகையாலே, அவ்விதிஹாஸ புராணங்களின் தாத்பர்யம் ஆஶ்ரிதபரதந்திரனான பரமபுருஷனின் திருநாமத்தைச் சொல்லுகையே என்கிறார் என்றுமாம்.

வ்யா:—(கதையினித்யாதி₃) இதிஹாஸ புராணங்களிலே ப்ரதிபாதி₃க்கப்பட்ட ஶ்ரிய:பதியாயிருந்துள்ள உன்னைக் குறை

---

உரை:— ஸர்வஸுலபனான க்ருஷ்ணனே! த்வத்₃வைப₄வத்தைக் கதைபோலே வகையிட்டுப் பரக்கச் சொல்லுகிற அர்த்த₂ங்களும், அந்த இதிஹாஸங்களின் தாத்பர்யாம்ஶமும் இருந்தபடியே அறிந்துகொண்டுஸ்துதிக்கில், உன்னுடைய கு₃ணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களேயாயிருக்கும்; உபநிஷத்ஸித்₃த₄மான வித்₃யா

---

வ்யா;—(கதையின பெரும் பொருளும் நின்பேரே) இதிஹாஸ புராணங்களின் சிறந்த அர்த்தம் உன் திருநாமஸங்கீர்த்தனமேயாகும். (கதை) பகவத்வைபவத்தைக் கதை கதையாகப் பிரித்துச் சொல்லுகையாலே இதிஹாஸபுராணங்கள் கதை எனப்படுகின்றன. (பெரும்பொருளும்) அவற்றிலும் தாமஸபுராணங்கள் அஸாரமான பொருளைச் சொல்லுகின்றவையாகையாலே கழிக்கத்தக்கவை. மற்றவைகளிலும் க₃ங்கா₃க₃ாங்கே₃யாதி₃வ்ருத்தாந்தங்களைச் சொல்லும பகுதிகள் அல்பஸாரமான பொருளைச்சொல்லுகையாலே உபேக்ஷிக்கத்தக்கவை. பகவத் விஷயத்திலும் ஸாரமான கர்மஜ்ஞான பக்திகளை உபதேசிக்கும பகுதிகள் எளியெலும்பர்கள் அநுஷ்டிக்க அரியவை. ஸாரதரமான ப்ரபத்தியை உபதேசிக்கும் பகுதிகளும் மஹாவிஶ்வாஸமில்லாதார்க்குக் கைக்கொள்ளமுடியாதவை. அனைவரும் அநுஷ்டிக்க எளிதாகையாலே ஸாரதமமான யாத்₃ருச்சி₂கப₄க₃வந்நாமஸங்கீர்த்தனமாகிற பெரும் பொருளை உபதேசிக்கும் பகுதிகளே அனைவராலும் ஏற்கத்தக்கவை என்று கருத்து. (நின்பேரே) உன்னுடைய குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களே இப்படிக் கதையின் பெரும்பொருளாயிருப்பவை. இவ்விஷயத்தை அனைவரும் அறிவதில்லையே எனில்: (இதயம் இருந்தவையே ஏத்தில்) இவ்விதிஹாஸபுராணங்களின் கருத்தை உள்ளபடி அறிந்து துதித்தால் அவற்றில் பெரும்பொருளாயிருப்பது பகவந்நாமமே என்பது விளங்கும். (கண்ணா நின்பேரே) அதிலும் பரத்வத்தையோ, வ்யூஹத்தையோ, அந்தர்யாமிநிலையையோ, மற்ற அவதாரங்களையோ சொல்லும் பகுதிகள் பெரும்பொருளல்ல; ஆயர்க்கும், ஆயர் சிறுமிகளுக்கும், பசுக்களுக்கும், கன்றுகளுக்கும், திருவாய்ப்பாடியிலுள்ள ஜங்கமஸ்தாவரங்கள் அனைத்துக்குமே ஸுலப₄னான கண்ணனின் திருநாமத்தைச் சொல்லுகின்ற பகுதிகளே பெரும்

யற்ற சொல்லாலே ஏத்தி அநுபவிக்கும்படி அருளிச்செய்; அநவாப்தியான சொல்லன்றிக்கே உன்னைக்கண்டு ஹ்ருஷ்டனாய் ஏத்தப்பணி. 64·

---

விசேஷங்களில் கதைபோலே அவன் குணசேஷ்டிதங்களை விஸ்தரித்துச் சொல்லுகிற அழகிய ஶப்தங்களுக்கு உள்ளீடான பொருளாய்கொண்டுநின்ற ஸ்ரீய:பதியான

---

பொருள். அன்றிக்கே, (கதையும்) இதிஹாஸ புராணங்களும், (பெரும் பொருளும்) அவற்றில் விஶதமாகச் சொல்லுகிற அர்த்தங்களும, (இதயம்) அவற்றின் தாத்பர்யமும், (நின் பேரே) உன் திருநாமங்களைப் பற்றியவையாகவேயிருக்கும் எனறுமாம், இப்படி இதிஹாஸ புராணங்களெல்லாம் பகவந் நாமமாயிருப்பதற்குக் காரணம், இவ்விதிஹாஸ புராணங்களுக்கு மூலமான வேதமும் உன்னைப்பற்றியதாயிருக்கையே என்கிருர் மேலே: (கதையும் திருமொழியாய் நின்ற திருமாலே) உபநிஷத்துக்களிலுள்ள பற்பல வித்யைகளிலே கதைபோலே அவனுடைய குணசேஷ்டிதங்களை விரிததுச்சொல்லுகிற அழகியவேத சப்தங்களாயிருக்கும் ஸ்ரீமந்நாராயணனே! அவ்வேதஶப்தங்களுக்கு உட்பொருளாயிருக்கும் ஸ்ரீமானே! என்று கருத்து. "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" [கீதை-15-15] [எல்லா வேதங்களிலும் அறியப்படுகின்றவன் நானே.] "ஸர்வே வேதா: க்ருஷ்ண:" [எல்லா வேதங்களும் கண்ணனே (கண்ணனைச் சொல்லுமவையே என்றபடி)]. என்று கோஷிக்கப்படுகிறதன்றே. (கதையும்)"ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்த்ருத்ய புஜமுச்யதே| வேதாச்சாஸ்த்ரம் பரம் நாஸ்தி"[முக்கால் சத்தியம்செய்து கைதூக்கி நின்று கூறுகிறேன். வேதத்தைக்காட்டிலும் மேலான சாஸ்திரமில்லை.] என்று மிகச்சிறந்த சாஸ்திரமாகச் சொல்லப்படும் என்றும் பொருள்கொள்ளலாம். (திருமொழி) அபௌருஷேயத்வம், நித்யத்வம் முதலான பெருமைகளையுடைய வேதம். (கதையும் திருமொழியுமாய் நின்ற) என்று ஓர் உம்மையைக் கூட்டி, "இதிஹாஸபுராணங்களும், வேதமுமாயிருக்கின்ற" என்றும் பொருள் கொள்ளலாம். (திருமாலே) "த்வமாஸீர் மாத: ஸ்ரீ: கமிதுரிதமித்தந்த்வ விபவ: ததந்தர் பாவாத்த்வாம் ந ப்ருதகபித்தே ஶ்ருதிரபி" [ஸ்ரீகுண 28][தாயே ஸ்ரீதேவி! பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை நிருபித்துத்தரும் பெருமையை நீ உடையவளாயிருந்து

65. பணிந்தேன் திருமேனி பைங்கமலம் கையால்
அணிந்தேனுன் சேவடிமே லன்பாய்—துணிந்தேண்
புரிந்தேத்தி யுன்னைப் புகலிடம்பார்த்து ஆங்கே
இருந்தேத்தி வாழு மிது.

---

வனே! இப்படி ஶ்ருதிஸ்ம்ருத்யுபப்3ரும்ஹணங்களாலே ப்ரதிபாதி3க்கப்பட்ட ஶ்ரிய:பதியான உன்னை இப்படி ஶப்3த3 த்3வாரா காண்கையன்றிக்கே, ஒரு தே3ஶவிஶேஷத்திலே வந்து பரிபூர்ணமாக "सदा पश्यन्ति" (ஸதா3 பஶ்யந்தி) என்று அநுப4வித்து, அநுப4வஜநிதப்ரீதிக்குப் போக்கு விட்டு "अहमन्नमहमन्नं" (அஹமந்நமஹமந்நம்) என்று முழு மிடறு செய்து பேசுகிற பரிபூர்ணஶப்3த3ங்களாலே கண்டு அநுப4விக்கும்படி திருவுள்ளமாயருளவேணும். "கதையும் திருமொழியாய்நின்ற" என்கிறவிடத்திலே கதையென்று இதிஹாஸாதி3களையே சொல்லிற்றாகவுமாம். 64.

---

கொண்டு அவனோடு சேர்ந்திருக்கையாலே, எல்லா வேதவாக்யங்களும் உன்னை அவனைவிட்டுப் பிரித்துப் படிப்பதில்லை.]என்கிற ரீதியிலே ஶ்ரீவிஶிஷ்டனன்றோ ஸர்வவேத3ப்ரதிபாத்3யன்.(உன்னை) இப்படி வேதத்தாலும், அதை விவரிக்கும் இதிஹாஸ புராணங்களாகிற ஸ்மிருதிகளாலும் உத்கோஷிக்கப்பட்ட உன்னை. (காணப் பணி) இது வரையில் போலே இந்த ஶ்ருதிஸ்மிருதிகளின் மூலம் கேட்டால் போதாது; நேரே காணும்படி அருள்செய்யவேணும். (பருமொழியால்காண)"தத்3விஷ்ணோ:பரமம்பத3ம் ஸதா3பஶ்யந்தி ஸூரய:" [விஷ்ணுவினுடைய அந்த மேலான பதத்தை நித்ய ஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்.] என்கிற பரமபதத்திலே, கண்டு அனுபவித்து, அவ்வனுபவத்துக்குப் போக்குவீடாக "ஹாவுஹாவுஹாவு। அஹமந்நமஹமந்நமஹமந்நம்" என்று உச்சஸ்வரத்திலே பரிபூர்ணஶப்3த3ங்களை உச்சரித்துக்கொண்டு போது போக்கும்படி செய்தருளவேணும். (பணி) இப்பேற்றை நிர்ஹேதுகக்ருபையாலே நீயே என்னைப் பெறுவிக்கவேண்டுமே யொழிய, என் முயற்சியாலே நான் இதைப் பெறமுடியாது என்று கருத்து. 64.

திருமேனி— (திருமாலே!,) உனது திருமேனியை, பணிந்தேன்—ஸேவித்தேன்; உன் சே அடிமேல்—உனது சிவந்த திருவடிகளின் மேல், பை கமலம்—அழகிய தாமரை மலர்களை, அன்பு ஆய்—அன்புகொண்டு, கையால் அணிந்தேன்—கையால் ஸமர்ப்பித்தேன்; உன்னை—உன்னை, புரிந்து ஏத்தி — விரும்பித் துதித்து, புகல் இடம் பார்த்து—பரம பதத்திலிருக்குமிருப்பை நோக்கி, ஆங்கே இருந்து ஏத்தி வாழும் இது துணிந்தேன்—அவ்விடத்திலேயே இருந்து கொண்டு மங்களாசாஸநம் பண்ணி வாழும் வாழ்ச்சியே வாழ்வு என உறுதி பூண்டேன்.

பெரி வ்யா:— (பணிந்தேன் திருமேனி) கண்டேனென்னும் சொல்லை ஶேஷபூ₄தராகையாலே பணிந்தேனென்று

---

அவ:—'இப்போது உமக்குச் செய்யவேண்டுவது ஒன்று உண்டோ? நீர் எல்லாம் பெற்றீரே காணும்' என்ன, அந்த லாப₄த்தை அநுஸந்தித்துத் தத₃நுரூபமாகப் பரிமாறுகிருர்.

உரை:— "न नमेयं" (ந நமேயம்) என்னும்படி ஸ்வாதந்த்ர்யத்தாலே தலைவணக்கமற்ற நான் உன்னுடைய

---

65. அவ:—'பருமொழியால் காணப்பணி' என்று பரம பதத்தில் பெறவிருக்கும் பேறெழிய இப்போது நீர் பெற்றிருக்கும் பேறு ஒன்றுமில்லையோ?' என்று எம்பெருமானுக்குத் திருவுள்ளமாக, இப்போது பெற்றிருக்கும் பேற்றைப்பேசி இன்புறுகிருர். 'இப்போது பெற்றிருக்கும் பேற்றைப்பேசி இப்பேற்றைப் பரம பதத்திலும் தொடர்ந்து அனுபவிக்கவேணும் என்னும் பாரிப்பைத் தெரிவிக்கிருர்' என்று திருமலைநம்பியின் நிர்வாஹம்.

வ்யா:— (பணிந்தேன் திருமேனி) உன் திருமேனியை ஸேவித்தேன். பெற்றிருக்கும் பேற்றைப்பேசும் பாசுரமாகையாலே பணிந்தேன் என்றது ஸேவித்தேன் என்று பொருள்படுகிறது. ஶேஷத்வத்திலே ஊன்றினவராகையாலே, கண்டேன் என்னுமல், 'பணிந்தேன்' என்கிருர். அன்றிக்கே, அவன் திருவடிகளில் வணங்குகையே பெரும்பேருகையாலே. 'வணங்கினேன்' என்றும் பொருள் கொள்ளலாம். (பணிந்தேன் திருமேனி)

சொல்லுகிறார். (பைங்கமலமித்யாதி) உன் திருவடிகளிலே ஸ்நேஹத்தையுடையேனாய் அழகிய தாமரைப்பூவை அணிந்தேன். (புரிந்தேத்தி உன்னைப் புகலிடம் பார்த்தாங்கே யிருந்தேத்தி வாழுமிது துணிந்தேன்) உன்னை ஸேவித்திருந்து

அழகிய திருமேனியைக் கண்டு ஆழங்காற்பட்டு வேரற்ற மரம்போலே ஸ்வரூபாநுரூபமாக விழுந்தேன். அடிமை செய்யாவிடில் தரிக்கவொண்ணாத ப்ரேமத்தை உடையனாய்க் கொண்டு வகுத்த ஶேஷியான உன்னுடைய சிவந்த திருவடிகளின்மேலே எடுத்துக்கைநீட்டக் கண்ட கையாலே அழகிய தாமரைப்பூக்களை அழகுபெறச்சாத்தினேன். எழுந்தருளா

---

"த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்|
ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம:||"
[ரா-யு 36-11]

[இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனேயொழிய ஒருவனுக்கும் வணங்கமாட்டேன்; இது இயற்கையில் எனக்கமைந்த தோஷம்; இயற்கை எவராலும் மீறமுடியாதன்றோ ]என்கிற ராவண ஸ்வபாவமான ஸ்வாதந்திரியத்தாலே அநாதிகாலமாகத் தலை வணக்கமற்றிருந்த நான், உன்னுடைய அழகிய திருமேனியைக் கண்டவுடன் அந்நிலை தவிர்ந்து, அத்திருமேனியிலே ஈடுபட்டு வேரற்ற மரம்போலே விழுந்து ஶேஷத்வஸ்வரூபத்தைப் பெற்றேன். (பைங்கமலம் அன்பால் அணிந்தேன்) "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" [கைங்கரியம் செய்யாவிடில் ஶேஷத்வம் பொருந்தாது] என்னும் நியாயத்தையொட்டி, அடிமை செய்யாவிடில் தரிக்க முடியாத அன்பை உடையவனாய்க்கொண்டு அழகிய தாமரைப்பூக்களை அழகாகச் சாத்தினேன். சாத்தியது எங்கு எனில் (சேவடிமேல்) ஶேஷத்வத்தை நிறம்பெறச்செய்யும் செவ்வையையுடைய திருவடிமேல் சாத்தினேன். (பைங்கமலம் சேவடிமேல் அணிந்தேன் ) தாமரை பட்டாலும் சிவந்துகாட்டும் மென்மையையுடைய திருவடிகளின்மேலே சாத்தினேன். எத்தாலே சாத்தியது எனில்: (கையால் அணிந்தேன்) உன் திருவடிகளிலே மலரிடுவதற்குப் பாங்காகப் படைக்கப்பட்ட என் கையால் சாத்தினேன்.

யார்த்து ஏத்திப் பரமபதத்திலிருக்கும்படியைப்பார்த்து ஆங்கே யிருந்தேத்துகைதானே வாழ்வாக இருக்கிற இத்தை அத்4ய வஸித்தேன். பெருமாள் புக்கருளினால் பின்னும் முன்னும்

நின்றால், முன்னே ஸேவித்து முன்புள்ள அழகைக்கண்டு களித்து உன்னை ஸ்தோத்ரம் பண்ணிப் புக்கருளுகிற விடத்திலே பின்புள்ள அழகைக்கண்டு கால்வாங்கமாட்டாதே அவ்விடந்தன்னிலே இருந்து தேவருடைய ஸம்ருத்3தி4 இப்படி மாறாதே செல்லவேணும் என்று புகழ்ந்து மங்க3ளா ஶாஸனம் பண்ணி இப்படி அநுப4வித்துவாழுகையாகிற இப் புருஷார்த்த2த்திலே வ்யவஸிதனானேன். அங்ஙனன்றிக்கே,

---

சாத்தினது ஒரு பயனைப் பெறவோ? எனில்: (அன்பாய் அணிந் தேன்) அன்பினாலே ஸ்வயம் ப்ரயோஜனமாகச் சாத்தினேன். இனி எப்படிப் போதுபோக்குவதாக உத்தேசித்திருக்கிறீர்? எனில்; கோயில் முதலான திவ்யதேசங்களிலே நீ எழுந்தருளும்போது உன் முன்னழகையும், பின் அழகையும் ஸேவித்துத் துதிக்கையே காலக்ஷேபப்ரகாரம் என்று உறுதிபூண்டேன் என்கிறார் மேலே; (புரிந்து ஏத்தி) "க3ஜஸிம்ஹக3தீ வீரௌ ஶார்த்தூ3லவ்ருஷபோ4 பமௌ" [ராமலக்ஷ்மணர்கள் க3ஜக3தி, ஸிம்ஹக3தி, வ்யாக்4ரக3தி, ரிஷப4க3தி என்னும் நாலுவிதமான நடையை உடையவர்கள்,] என்கிறபடியே மத்தக3ஜத்தின் மதிப்பும், புலியினுடைய ச்சிவிட்கும், சிங்கத்தின் பிறரையடக்கும் திறனும், ரிஷபத்தினுடைய செருக்கும் தோற்ற நீ அபி4முக2மாக எழுந்தருளும்போது உன் முன்னழகை யெல்லாம் கண்டு களித்து உன்னைத் துதித்து. 'புகலிடம் பார்த்து' 'வருமிடம் பார்த்து, என்று மேலே இருப்பதற்கு ப்ரதிகோடியாக, பொருள் உரைக்கப் என்பதை அத்4யாஹாரம் செய்துகொண்டு பட்டது (புகல் இடம் பார்த்து) ஸர்ப்பக3தியோடு கோயிலுக்குள் புகுந்தருளும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்து. (ஆங்கே இருந்து) "பூர்வாங்க3ாத்3தி4காபராங்க3நலஹம்"? என்கிற படியே முன்னிலும் பின்பழகிய பெருமாளாகையாலே, அவ்விடத் தினின்றும் அசையமுடியாமல் ஸ்த2ாவர ப்ரதிஷ்டையாயிருந்து ன்பும் பிறகு வாளியுமாய்ப் புகுந்தருளும் போதுள்ள பின்னழகை யெல்லாம் ஸேவித்து. (ஏத்தி) அவ்வனுபவம் உள்ளடங்காமல்

நின்றுவைத்த அனைத்தையும் பின்பும் பிறகுவாளியையும் கண்டேத்துகையிலே துணிந்தேன். 65.

---

'புகலிடம்' என்கிறது அவதாரஸமாப்தியில் போய்ப் புக்கருளும் ஸ்ரீவைகுண்டத்தையாய், ஆங்கே 'சூழ்ந்திருந் தேத்துவர்' என்கிறபடியே அவர்கள் நடுவே புக்கிருந்து ஏத்திவாழவேணும் என்னுமதிலே அத்₄யவஸித்தேன் என்னவுமாம். இது திருமலைநம்பி நிர்வாஹம். 65.

---

வாய்விட்டுத் துதித்து. 'தேவருடைய இப்பெருமை இப்படியே மாருமல் செல்லவேணும்' என்று மங்களாசாஸனம் செய்து என்றுமாம். (ஏத்தி வாழுமிது துணிந்தேன்) இப்படிக் கோயில் முதலான அர்ச்சாவதாரஸ்தலங்களிலே மங்களாஸாஸனம்பண்ணித் துதித்து வாழ்வதையே போது போக்காகக் கொள்வதென்று உறுதி பூண்டேன். நம்பெருமாளுடைய முன்பின் அழகுகளை அனுபவிப் பதையே தேஹயாத்ரையாகக் கொண்ட பட்டருடைய நிர்வாஹமா யிருக்கத்தகும் இது. இனி, பின்னடிகளுக்குத் திருமலைநம்பி தொடக் கமான பூர்வாசார்யர்களுடைய நிர்வாஹம் விவரிக்கப்படுகிறது. (உன்னை புரிந்து ஏத்தி) உன்னை இங்கே கண்டு துதித்து; புரிகை— பார்க்கை. (புகலிடம் பார்த்து) அதன் ப₂லமாகப் பரமபதத்தைக் கண்டு. (புகலிடம்) அவதாரம் முடிந்தவுடன் பரமபுருஷன் புகுமிட மான பரமபதம். ''வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே'' திருவாய் 10-9-9] என்கிறபடியே சேதனர் சென்று புகவேண்டிய இடமான பரமபதம் என்றும் பொருள் கொள்ளலாம். (ஆங்கே இருந்து) ''ந ச புநராவர்த்ததே'' ''புணைக் கொடுக்கிலும் போக வொட்டார்'' [பெரியாழ்திரு 4-5-2] என்கிறபடியே திரும்பிவருத லில்லாமல் அங்கேயே நிலையாயிருந்து. (ஏத்தி வாழும் இது) ''தத்₃ விப்ராஸோ விபந்யவோ ஜாக்₃ருவாம்ஸ: ஸமிந்த₄தே'' [அப் பரமபதத்தில் ஞானிகளாய், துதிப்பவர்களாய், விழிப்புடையவர் களான நித்யமுக்தர்கள் விளங்குகிறுர்கள்.] ''சூழ்ந்திருந்தேத்து வர்'' [திருப்பல் 12] என்கிறபடியே நித்யமுக்தர் நடுவே புகுந்தி ருந்து பல்லாண்டுபாடி வாழும் வாழ்வை. (துணிந்தேன்) பெறவேணு மென்று உறுதிபூண்டேன். 65.

66. இதுகண்டாய் நன்னெஞ்சே யிப்பிறவி யாவது
இதுகண்டா யெல்லாம்நா முற்றது—இதுகண்டாய்
நாரணன்பே ரோதி நரகத் தருகணையா
காரணமும் வல்லையேல் காண்.

நல் நெஞ்சே—நல்ல மனமே! இப் பிறவி ஆவது இது கண்டாய்-இந்த ஸம்ஸாரத்தின் கொடுமை இப்படிப்பட்டது காண்; நாம் உற்றது எல்லாம் இது கண்டாய்—(இந்த ஸம்ஸாரத்தில்) நாம் அநுப₄வித்த துன்பங்களெல்லாம் இப்படிப்பட்டவை காண்; நாரணன்—ஸ்ரீமந் நாராயண னுடைய, பேர்—திருநாமங்களை, ஓதி—வாயாரச்சொல்லி, நரகத்து – ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய, அருகு—ஸமீபத்திலும், அணையா காரணமும்—நாம் நிற்கலாகாது என்று வெறுப்பதற்குக் காரணமும், இது கண்டாய்—இந்த ஸம்ஸாரத்தின் தோஷமேகாண்; (இப்படி ஒவ்வொன்றையும் நான் சொல்லவேண்டாதபடி) வல்லை ஏல்—நீயே தெரிந்து கொள்ளமுடியுமாகில், காண் – (ஸம்ஸாரத்தின் தாழ்வை நீயே) தெரிந்துகொள்.

பெரி அவ:—ப்ராப்திக்கும் ப்ரதிப₃ந்த₄க நிவ்ருத்திக்குமடி ஸம்ஸாரதோ₃ஷ த₃ர்ஶநம் பண்ணுகை; ஏத்துகையில் துணிகையன்று.

---

அவ:— ப₄க₃வத்ப்ராவண்யம் பெற்றவளவு அமையும்; அநர்த்த₂ாவஹமான விஷயங்களின் தோ₃ஷத்தை அநுஸந்தி₄த்து அருசி பிறக்கையே வேண்டுவது என்கிறார்.

---

66. அவ:—"ஏத்தி வாழுமிது துணிந்தேன்" என்று சென்ற பாசுரத்தில் தமக்குப் பரமபுருஷனிடம் உள்ள ஈடுபாட்டைப் பேசினார். இது மாத்திரம் போதாது; தீமையே விளைக்கும் ஸாம்ஸாரிக விஷயங்களின் தோஷத்தை நன்கறிந்து அவற்றில் ருசியற்றிருந்தால் தான் நமக்குத் தடைகள் நீங்கி பகவத்ப்ராப்தி ஏற்படும் என்கிறார். பரமபுருஷனிடம் ஈடுபாடு கனத்திருந்தாலும், மற்ற விஷயங்களிலும் ருசியிருந்ததாகில், அது அவ்வீடுபாட்டையும் குலைத்துவிடுமன்றோ.

வ்யா:—(நன்னெஞ்சே இப்பிறவியாவது இதுகண்டாய்) பாபத்தாலேநன்றென்றிருந்ததன்று,ப₄க₃வத்ப்ரஸாத₃த்தாலே பொல்லாததென்று தோற்றினவிதுகண்டாய் ஸம்ஸாரமாவது. (இது கண்டாயெல்லாம் நாமுற்றது) அங்குத்தைக்கு அஸா

---

உரை:—ஸம்ஸாரம் பொல்லாது என்றால், அதுக்கு இசைந்து என்னோடு ஒருமிட்டான நல்ல நெஞ்சே! 'இது நிலைநிற்கும்; போ₄க்₃யமாயிருக்கும்' என்று நாட்டார் ப்₄ரமிக்கிற ஆகாரமன்றிக்கே, ப₄க₃வத்ப்ரஸாத₃த்தாலே த₃ர்ஶிக்குமளவில் அத்₃ருஷ்ட தோ₃ஷது₃ஷ்டமான இந்த ஸம்ஸாரமாகிறது – அல்பாஸ்தி₂ரத்வாதி₃தோ₃ஷதூ₃ஷிதமான இவ்வாகாரததோடே கூடின இதுவே கிடாய்! முன்பு அநாதி₃யான காலமெல்லாம் நன்றாய்த் தோற்றுகிற ஆகா

---

வ்யா:— (நல்நெஞ்சே!) ஸாம்ஸாரிக விஷயங்கள் தீமை பயப்பவை என்று கூறினால், 'இல்லையில்லை, அவையே எனக்கு இனிக்கின்றன—நான் அவற்றிலேயே ஈடுபடுவேன்' என்று கூறும் உலகத்தார் நெஞ்சைப்போலல்லாமல், என் உபதேசத்திற்கு இசைந்து விஷயங்களைக் கைவிடுவதிலும், பகவத்விஷயத்தில் ஈடுபடுவதிலும் என்னோடு ஒத்துவரும் நன்மையையுடைய நெஞ்சே! "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப₃ந்த₄ மோக்ஷயோ: । ப₃ந்தா₄ய விஷயாஸங்கி₃ முக்த்யை நிர்விஷயம் மந:॥" [வி-பு 6-7-28] [மனமே மனிதர்களின் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் காரணமானது; விஷயங்களில் பற்றுள்ளமனம் ஸம்ஸாரப₃ந்த₄த்திற்கும், அப்பற்றில்லாத மனம் மோக்ஷத்திற்கும் காரணமாகிறது] என்று கூறப்பட்டதன்றே. இப்படி நன்னெஞ்சாயிருந்தபோதிலும், ஸம்ஸாரஸம்ஸர்க்க₃த்தாலே மறுபடியும் தீய நெஞ்சாகிவிடாமலிருப்பதற்காக ஸாம்ஸாரிக விஷயங்களின் தோஷத்தைப் பலபடியாக விளக்குகிறார் மேலே; (இப்பிறவியாவது) 'இது நிலைநிற்கக்கூடியது; இனிதாயிருப்பது' என்று தம் பாவத்தாலே உலகினர் மயங்குகிற இந்த ஸம்ஸாரமானது; ஸம்ஸாரிகளால் காணப்படாத பல தோஷங்களையுடைய இந்த ஸம்ஸாரமானது; பிறவி என்று ஸம்ஸாரத்தை உபலக்ஷிக்கிறது.(இது கண்டாய்) பரமபுருஷனால் மயர்வறமதிநலம் அருளப்பெற்ற நமக்கு நிலைநில்லாததாகவும், அற்பமாகவும், மற்றும்பல

த₄ாரணராயிருக்கச் செய்தே நாமநுபவித்ததெல்லாம் கண்டா யிறே; இதுக்கொரு ப்ரமாணம்வேண்டாவிறே. (இதுகண்டயித் யாதி₃) வகுத்தவனுடைய திருநாமத்தைச்சொல்லி நரகஸமீ பத்தில் செல்லாமைக்குக் காரணம் இதினுடைய தோ₃ஷ த₃ர்ஶநமே. வல்லேயேல்கா(ண்) அநுப₄வித்திருக்கச்செய்தே

ரத்தாலே, நாம் மறுபாடுருவ து₃:க்கா₂நுப₄வம் பண்ணிப் போந்தது இது கிடாய்; வகுத்த ஶேஷியான நாராயண னுடைய கு₃ணாதி₃களுக்கு வாசகமான திருநாமங்களை. நிரந்தரமாகச் சொல்லி ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய பர்யந்தத்திலும் ப்ரவேஶியாமைக்குக் காரணமும் அஸ்தி₂ ரத்வாதி₃தோ₃ஷங்களாலே த்யாஜ்யமென்னுமாகாரம் ப்ரத்

தோஷங்களை உடையதாகவும் தோற்றுகிறதுகிடாய். (நாம்) பரம புருஷனுக்கு ஸ்ரீகௌஸ்துப₄ம்போலே இனியவரான நாம். (உற்ற தெல்லாம் இது கண்டாய்) இந்த ஸம்ஸாரத்தை நல்லதாக நினைத்த அநாதிகாலமும் பரிபூர்ணமாகப்பட்ட துன்பங்களெல்லாம் இவைகிடாய். (கண்டாய்) நேரே நீயும் நானும் அனுபவித்த இத்துன்பங்களைப்பற்றி நமக்கு அறிவிக்க ஒருப்ரமாணம் வேண்டிய தில்லையே. (நாரணன் பேர் ஓதி நரகத்து அருகு அணையாக் காரணமும் இதுகண்டாய்) நரஸமூஹங்களுக்கெல்லாம் இயற்கை யிலேயே ஆத₄ாரமாய், வ்யாபகனாய், ப்ராபகமாய், ப்ராப்யமா யிருக்கும் நாராயணனுடையஸ்வரூபரூபகுணவிபூதிசேஷ்டிதங்களைச் சொல்லும் திருநாமங்களை இடைவிடாமல் சொல்லி, இந்த ஸம் ஸாரமாகிற நரகத்தின் பக்கத்திலும் நாம் அணுகாமலிருப்பதற்குக் காரணமும் இந்த ஸம்ஸாரத்தின் தோ₃ஷத₃ர்ஶனமேகிடாய், துன்பத்தையே விளைக்கும் இயற்கையை உடையதாயிருக்கையாலே இந்த ஸம்ஸாரத்தை நரகம் என்றே பேசுகிறார். (இது கண்டாய்) என்கையாலே, இந்த ஸம்ஸாரத்தினுடைய அல்பாஸ்தி₂ரத்வாதி₃ தோ₃ஷங்கள் அறிவாளிகளுக்கு ப்ரத்யக்ஷமாயிருக்கிறது என்று காட்டுகிறார். (வல்லேயேல் காண்) 'விஷயங்களை மேலெழப்பார்க்கும் போது தோற்றுகிற நன்மையில் பசையில்லை. தோஷமே அவற்றின் இயற்கை' என்பதை உறுதியாகக் காணவல்லாயாகில், நான் சொன்னது பொருந்தியதே என்று கண்டுகொள். 'நன்னெஞ்சே!' என்று நெஞ்சின் விஷயவைராக்₃ய்த்தைக் கொண்டாடிய அதே

விடப்போகாதொழிகிறது பாபம். இல்லையாகில் இதினுடைய தோ₃ஷ த₃ர்ஶநத்தைப்பண்ணு. 66.

67. கண்டேன் திருமேனி யான்கனவில் ஆங்கவன்கைக்
கண்டேன் கனலுஞ் சுடராழி—கண்டேன்
உறுநோய் வினையிரண்டு மோட்டுவித்துப் பின்னும்
மறுநோய் செறுவான் வலி.

**யான்**—(அடியேன்) **கனவில்** — கனவுபோன்ற மாநஸாநுபவத்திலே, **திருமேனி** — அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தை, **கண்டேன்**—ஸேவிக்கப்பெற்றேன்; **ஆங்கு** — அப்போது, **அவன் கை** — அவனது திருக்கையிலே, **கனலும் சுடர் ஆழி கண்டேன்** — தீயுமிழும் சோதிமயமான திருவாழியைக் கண்டேன்; **உறுநோய் வினை இரண்டும்** — (ஆத்மாவோடு) ஒன்றியிருக்கும் வியாதிபோன்ற புண்ய பாபங்களென்கிறஇரண்டுகர்மங்களையும், **ஓட்டுவித்து**-தொலைத்திட்டு, **பின்னும்**— பின்னையும், **மறுநோய் செறுவான்**—மறு கிளை கிளர்ந்து வரக்கூடிய வாஸநா ருசிகளையும் தொலைத்தருளுமவனான எம்பெருமானுடைய,**வலி**-மிடுக்கையும், **கண்டேன்**-காணப்பெற்றேன்.

---

யக்ஷிக்கலாம்படியிருக்கிற இஜ்ஜந்மஸம்ப₃ந்த₄ம் கிடாய்! மேலெழுத்தோற்றுகின்ற நன்மையிற்பசையில்லை,தோ₃ஷமே வேஷமென்று இத்தைத் தப்பாதபடி காணவல்லையாகில் நாம்சொன்னது ஒக்கும் என்னுமிடத்தைக் கண்டு கொள்ளு. 66.

---

மூச்சிலே 'வல்லையேல்' என்று சங்கித்துச் சொல்லும்படியன்றோ விஷயங்களின் ஆகர்ஷணசக்தியிருக்கிறபடி. அன்றிக்கே, வைராக்யமுண்டானபோதிலும், வாஸநாருசிகள் விடாமையாலே, 'விஷயங்களின் தாழ்வை அநுபவித்திருக்கச்செய்தே அவற்றில் வாஸநாருசிகளை விடமுடியாமலிருப்பது பாபத்தாலே; அப்பாபமும் அவ்வாஸநாருசிகளும் கழியும்படி இந்த ஸம்ஸாரத்தின் தோஷத்தை இடைவிடாமல் அநுஸந்திப்பாயாக' என்கிறாராகவுமாம். 66.

பெரி வ்யா:— (கண்டேனித்யாதி₃) ஆத்மாவுக்கு நித்ய த₄ர்மமான ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷிக்கைக்கு ஆனைத்தாளான மநஸ் ஸாலே புறப்பட்டு பா₃ஹ்யேந்த்₃ரியங்களாலே காண்கையன்றிக்கே "ஸ்வப்நதீ₄க₃ம்யம்" (ஸ்வப்நதி₄க₃ம்யம்) என்கிறபடியே மநஸ்

---

அவ:— இவர் திருவுள்ளத்தைக் குறித்து 'ஸம்ஸார தோ₃ஷத்தைக் காண்' என்ற அநந்தரம் அவன் நிர்ஹேதுக மாகத் தன்னைக் கொண்டுவந்து காட்ட, அதில் தாம் கண்ட அம்ஶத்தை அருளிச்செய்கிறார்.

உரை:— நிர்ஹேதுகமாக அவனாலே அங்கீ₃க்ருதனான நான், இந்த்₃ரியத்₃வாரா விட்டு நீட்டிக் காண்கையன்றிக்கே, ஸ்வப்நகல்பமாய், அதிலும் விஶத₃தமமான ஸ்வாநுப₄வ த₃ஶையிலே, அழகிய திருமேனியைக்கண்டு அநுப₄ விக்கப்பெற்றேன். அப்படிப்பட்ட அழகையுடையவன்

---

67. அவ:— இவர் திருவுள்ளத்தைக்குறித்து 'ஸம்ஸார தோ₃ஷத்தை வல்லையாகில் காண்' என்றவுடன் அவன் அவ் வார்த்தைபொறுக்கமாட்டாமல், நிர்ஹேதுகமாகத் தன்னைக்கொண்டு வந்து காட்ட, தான் கண்ட மானஸஸாக்ஷாத்காரத்தை விவரிக் கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(யான் கண்டேன்) நிர்ஹேதுகமாக அவனாலே தன் னுடையவனாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நான் கண்டேன். கண்ணால் கண்டீரோ? என்னில், (கனவில் கண்டேன்) "ஸ்வப்நதீ₄க₃ம்யம்" [ மநுஸ்ம்ருதி 12-122 ] [ ஸ்வப்நம் போன்ற மானஸாநுப₄வத் தாலே அறியத்தக்கவன்] என்கிறபடியே மானஸாநுபவத்தாலே கண்டேன். ஜ்ஞாநஸ்வரூபமான ஆத்மாவுக்கு எப்போதும் த₄ர்மமாயிருப்பதொரு ஞானம், தனக்கு ஆனைத்தாள் (க₃வாக்ஷம்) போலே ப்ரஸரத்₃வாரமாயிருக்கும் மனத்திலிருந்து புறப்பட்டுக் கண் முதலான வெளியிந்திரியங்கள் வழியாக விஷயங்களிற் பாய்ந்து அவற்றை அறிவது இந்த்₃ரியஜந்யஜ்ஞானம் எனப்படும். அப்படி இந்திரியங்கள் வழியாக அறியாமல் கனவிற்போல் மனத்தால் காண்பதாய், கனவைக்காட்டிலும் தெளிவாயிருப்பதான

ஸாலே காண்கை கனவிலே காண்கையாவது. (ஆங்கித்யாதி₃) அபூ₃ர்தி₄தமாகக்கண்டேன் (கண்டே னித்யாதி₃ அநுபவிக்கக் கடவதான புண்யபாபங்களைப் போக்கிப் பின்பு வாஸ நையும் போக்குமவனுடைய மிடுக்கைக் கண்டேன். வாஸ நையைப் போக்குகைக்கு வலிகண்டேனென்றுமாம். 67.

---

திருக்கையிலே ப்ரதிபக்ஷத்தின்மேலே சீறுபாறு என்று நின்றுள்ள தேஜோரூபமான திருவாழியைக் கண்டேன்; துறக்கவொண்ணாதபடி ஆத்மாவோடே கூடி து₃:க்க₂ாவஹ மான புண்யபாபரூப கர்மங்கள் இரண்டையும் துரத்தி விட்டுப் பின்னையும் மறுகிளைகிளர்ந்துவரக்கடவதாய், து₃:க் க₂ஹேதுவான வாஸநாருசிகளையும் செறுத்து முடிக்கு மவன் மிடுக்கையும் காணப்பெற்றேன். 67.

---

மாநஸாநுப₄வம் யோகிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் உண்டு. அதுவே இங்கு 'கனவில் கண்டேன்' என்று சொல்லப்படுகிறது. எதைக் கண்டீர்? எனில்: (திருமேனி கண்டேன்.) "ருக்மாப₄ம்" [மநு 12-122] [பொன்போல் ஒளியுள்ளவனை] என்கிறபடியே அழகிய திருமேனியைக் கண்டு அனுபவித்தேன். ப்ராஹ்மருத்ராதி₃ களின் விக்₃ரஹமாயிருக்குமோ? எனில்: (ஆங்கு அவன் கைக் கண்டேன் கனலும் சுடராழி) அப்படிப்பட்ட அழகு, காணிலும் உருப்பொலாரான அவர்களுக்கிருக்க இடமில்லை; அதுக்குமேலே அவன் திருக்கையிலேயே, எதிரிகளின் மேலே அனலை உமிழும் தேஜோமயமான ஸுதர்சனாழ்வானைக்கண்டேன். சூலகமண்டலாதி களைக் காணவில்லை. இப்படி ஶுப₄ாஶ்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தைக் கண்டதால் விஷயவாஸநாருசிகளும் கழிந்தன என்கிறார் மேலே: (உறுநோய் வினை இரண்டும் ஓட்டுவித்து) 'இது வந்தேறியோ, ஸ்வரூபத்திலேயே சேர்ந்திருப்பதோ' என்று ஐயத்தை விளக்கும்படியாக அநாதிகாலமாகத் துறக்கவொண்ணாத படி ஆத்மாவோடே கூடி நின்று, நோய்போலே துன்பத்தை விளைத்து வந்த புண்யபாபங்கள் இரண்டையும் ஓடச்செய்து. (உறுநோய்) என்று ஆத்மாவோடு அநாதிகாலமாக ஒன்றிக்கிடந்ததைக் காட்டுகிறது. அன்றிக்கே, அநுபவித்தே தீரவேண்டிய நோயான புண்யபாபங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். (பின்னும் மறு




68. வலிமிக்க வாளெயிற்று வாளவுணர் மாள
வலிமிக்க வாள்வரைமத் தாக—வலிமிக்க
வாணுகஞ் சுற்றி மறுகக் கடல்கடைந்தான்
கோணுகங் கொம்பொசித்த கோ.

வலிமிக்க—மஹாபலசாலிகளாய், வாள் எயிறு—வாள் போன்ற கோரப்பற்களையுடையராய், வாள்-வாள் படையை யுடையரான, அவுணர்—அஸுரர்கள், மாள-அழிந்துபோவதற்காக, வலி மிக்க வாள் வரை மத்து ஆக—மிக்க வலியுள்ளதாய்.ஒளியை உடைத்தான மந்தரமலையை மத்தாகக் கொண்டு, வலி மிக்க வாள் நாகம் – அதிகமான சக்தியையும் ஒளியையுமுடைய வாஸுகி நாகத்தை, சுற்றி—கடைகயிருகச் சுற்றி, கடல் மறுக கடைந்தான்—கடல் குழம்பும்படி கடைந்தருளினவன் (எவனென்ருல்), கோள் நாகம்—மிடுக்கையுடைய குவலயாபீடமென்னும் மதயானையினது, கொம்பு—கொம்புகளை, ஒசித்த—(விளையாட்டாக) ஒடித்த, கோ – ஸ்வாமியேயாவான்.

---

நோய் செறுவான் வலிகண்டேன்) அடியோடு வெட்டினாலும் மறுகிளை கிளர்ந்துவரும் மரத்தைப்போலே, வினையிரண்டும் ஓட்டினாலும் மறுபடியும் கிளைக்கச்செய்து துன்பத்தை விளைக்கும் நோய் போன்ற வாஸநாருசிகளையும் அழித்து ஒழிக்கக்கூடியவனுடைய பலத்தையும் கண்டேன். 'செறுவான் வலி' என்று வாஸநையை அழிப்பதற்கு நாம் பற்றும் மூலமான திருமேனியைக் கண்டேன் என்கிருராகவுமாம். இத்தால், சென்ற பாசுரத்தில் 'வல்லையேல் காண்' என்று சொல்லுவதற்கு அடியாயிருந்த வாஸநாருசிகளும், சுபாச்ரயமான விக்ரஹத்தைக் கண்டவுடன் கழிந்தன என்றுராயிற்று. இவ்வர்த்தம், "தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:"[ (விஷயருசியுள்ளதாயிருக்கையாலேவெல்லவரிய அந்த எல்லா இந்த்ரியங்களையும் விஷயங்களினின்று இழுத்து (சுபாச்ரயத்திருமேனியோடு கூடிய) என்னிடமே ஈடுபட்டுச் சித்த ஸமாதானத்தையுடையவனாய் வாழக்கடவன்] என்று கீதையில் கண்ணனாலேயே காட்டப்பட்டதன்றோ. 67.

பெரி அவ:- (வலி மிக்க) இவனைக்கொண்டு வாஸநை யைப் போக்குவிக்கையன்றிக்கே உப்புச்சாறு கொள்ளுமவர் களைச் சொல்லுகிறது.

வ்யா: — (வலியித்யாதி) மிடுக்கையுடையராய், ஸாயுதரான அஸுரர் முடிய. (வலிமிக்க வாள்வரை மத்தாக) கடையப்புக்கால் பிதிர்ந்து போகாதபடி மிடுக்கையுண்டாக்கி மந்தரத்தை மத்தாகக்கொண்டு.

---

அவ: — ப்ரயோஜநாந்தரபரரேயாகிலும், தன்னை வந்து அர்த்தித்தால் வருந்தியும் அவர்கள் அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணும் என்கிறார்.

உரை: — பெருமிடுக்கராய், ஒளிவிடுகிற எயிற்றை உடையருமாய், ஸாயுதருமான ஆஸுரப்ரக்ருதிகள் நசிக்கும்படியாகவும், தான்நெருக்கினவிடத்திலும்பிரி(திர்?)ந்துபோகாதபடி கடிநோத்தரயாய், ஒளிவிடுகிற மந்தரபர்வதம் மத்தாகவும்

---

68. அவ:—இவனைக் கொண்டு விஷயவாஸநாருசிகளைப் போக்கிக்கொள்ளாமல், உப்புச்சாறான அமுதத்தை விரும்பிய தேவர்களுக்காகவும் தன் உடம்பு நோவக் கடல்கடைந்து காரியம் செய்பவன் இவன் என்கிறார்.

வ்யா: — (வலிமிக்க வாள் எயிற்று வாள் அவுணர் மாள) இயற்கையிலேயே பலம்மிக்கவர்களாய் ஒளிவிடுகிற பற்களாகிற ஆயுதங்களை உடம்பிலேயே பெற்றிருப்பவர்களாய், போதாக்குறைக்கு வாள் முதலான ஆயுதங்களையும் உடையராய், இவையித்தனையுங் கொண்டு ஸாத்விகரான தேவர்களை நலிகின்ற அசுரர்கள் அழியும்படியாக, விஷங்கக்கும் வாஸுகியின் தலைப்பக்கம் நின்று கடையும்படி செய்தும், அமுதங்கொடாமல் வஞ்சித்தும் அஸுரரை அழியச்செய்ததை நினைக்கிறார். முதல் 'வாள்' ஒளியையும், இரண்டாவது 'வாள்' ஆயுதத்தையும் குறிக்கும். (வலி மிக்க வாள் வரை மத்தாக) பெரும்பலத்தையுடைய தான் அழுத்திக் கடைந்தபோதிலும் உடைந்துபோகாதபடிமத்தான மந்தரமலைக்குத் தன் பலத்தைக் கொடுத்தமையாலே, பலம் மிக்கதாய் ஒளிவிஞ்சி நின்ற மந்தரமலையை மத்தாகக்கொண்டு; 'கடல் கடைந்தான்' என்று மேலோடே கூட்டிப் பொருள் கொள்ளவேணும்.

(வலிமிக்க இத்யாதி₃) நாற்காற்கடைந்தவாறே அற்றுப் போகாதபடி வாஸுகிக்கு மிடுக்கைக்கொடுத்து. (மறுகக் கடல் கடைந்தான்) கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறியும்படி கடலைக்கடைந்தான். (கோணாகம் கொம்பொசித்த கோ) நம்மை முடிக்க வந்த குவலயாபீட₃த்தைக் கொன்று நாட்டுக்கொரு சேஷியைத் தந்தான். 68.

---

நெடும்போது இடவாய், வலவாய்ச் சுற்றிக் கடைகிற வளவிலும், அற்றுப்போகாதபடியான மிடுக்கையும், மலையோடே தேய்ப்புண்கையாலே வந்த ஒளியையும் உடைய வாஸுகியாகிற பாம்பைக் கடைகயிறுகச் சுற்றிக் கீழ்மண் கொண்டு மேல்மண் எறியும்படி கடலைக் கடைந்தருளினவன் ஸர்வருக்கும் வேர்ப்பற்றான தன் திறத்திலே நலியவந்த மிடுக்கையுடைய குவலயாபீட₃த்தின் கொம்பை அநாயாஸேந முறித்துப் பொகட்ட ஸர்வஶேஷிகிடீர்! இத்தால், தம் விரோதி₄யைப் போக்கித் தம்மை எழுதிக்கொண்டபடி சொல்லுகிறது. 68.

---

(வலி மிக்க வாள் நாகம் சுற்றி) இடப்புறமும், வலப்புறமுமாக நீண்டகாலம் சுற்றிக்கடைந்த போதிலும் அறுந்துபோகாதபடியான ப₃லத்தை வாஸுகிக்கு அளித்து, தேய்ப்புண்கையாலே வந்த ஒளியையுடைய வாஸுகியாகிற பாம்பைக் கடைகயிறுகச் சுற்றி. (மறுகக் கடல்கடைந்தான்) கடலின் அடியிலிருக்கும் மண்ணைக் கடலின் மேலே எறியும்படியாக "ஆயிரம் தோளால் அலைகடல் கடைந்தான்" [பெரியதிரு 5-7-4] என்கிறபடியே இருபுறமும் இரண்டு பெரிய வடிவுகளை எடுத்துக்கொண்டு கடலைக்கடைந்தான். கடைகின்ற மத்துக்கும் கடைகயிற்றுக்கும் தன் ப₃லத்தைக் கொடுத்து, தேவாஸுரர்களால் தரித்துநின்று கடைய முடியாமையாலே, தானே இருபுறமும் இரண்டு வடிவெடுத்து நின்று கடல் கடையும் செயலையும் செய்தான் என்று கருத்து. இப்படிச் செய்தவன் யாரென்னில்: (கோள் நாகம் கொம்பு ஒசித்த கோ) அனைவர்க்கும் மூலாதாரமான ஸர்வேஶ்வரனையே அழிப்பகன் மூலம் நம்மனைவரையும் அழிக்கவந்த ப₃லத்தையுடைய குவலயாபீடத்தின் தந்தத்தை விளையாட்டாக ஒடித்து அதை அழித்துத் தன்னைத்

69. கோவாகி மாநிலங் காத்துநங் கண்முகப்பே
மாவேகிச் செல்கின்ற மன்னவரும்—பூமேவும்
செங்கமல நாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும்
தண்கமல மேய்ந்தார் தமர்.

**கோ ஆகி**—அரசர்க்கரசர்களாய், **மா நிலம் காத்து**—பரந்த பூமண்டலத்தை அரசாட்சிபுரிந்து, **நம் கண் முகப்பே**—நம் கண்ணெதிரே, **மா ஏகி செல்கின்ற**—குதிரையேறித்திரிகின்ற, **மன்னவரும்**—அரசர்களும், **செம் கமலப் பூமேவும்**—செந்தாமரை மலர் பொருந்தியிருக்கப்பெற்ற, **நாபியான்**—திருவுந்தியையுடைய பெருமானுடைய, **சே அடிக்கே**—திருவடிகளுக்கு, **ஏழ் பிறப்பும்**-பலபல ஜன்மங்களிலே, **தண் கமலம்**—குளிர்ந்த தாமரைப் பூக்களை, **ஏய்ந்தார்**—ஸமர்ப்பித்தவர்களான, **தமர்**—பக்தர்களாவர்.

**பெரி வ்யா:**— (கோவாகி) தே₃வர்களையொழிய, சிலர் வாழாதேயிருக்கச்செய்தே சிலர் வாழ்ந்தாராயிருக்கிற ராஜாக்

---

**அவ:** ஸ்வர்க்க₃த்தில் தே₃வர்கள் இவனைப்பற்றித் தங்கள் ப்ரயோஜநம் பெற்ற அளவன்றிக்கே. பூ₄லோகத்தில் ராஜாக்களும் இவனைப்பற்றித் தந்தாம் பத₃ம்பெற்றுப் போகாநின்றார்கள்கிடீர்! என்கிறார்.

---

தமக்குத் தந்த ஸர்வஸ்வாமிகிடீர்! கோள்—ப₃லம்; நாகம் என்னும் பதம், 'வாள் நாகம்' என்னுமிடத்தில் பாம்பையும், 'கோள் நாகம்' என்னுமிடத்தில் யானையையும் குறிக்கிறது. ஆக, இப் பாசுரத்தால் தம் விரோதிகளைப் போக்கித் தம்மைத் தோற்பித்துக் கொண்டான் ஸர்வேஶ்வரன் என்று கூறினாராயிற்று. 68.

69. அவ:—முன் பாசுரத்தில் சொன்னபடி ஸ்வர்க்கத்தில் வாழும் தேவர்கள் இவனை ஆஶ்ரயித்து, அம்ருதமத₂னம் முதலான காரியங்களாலே தங்கள் பயன் பெறுவது மாத்திரமல்ல; இந்நில வுலகில் அரசர்களும் இவனை ஆஶ்ரயித்தே தங்கள் பதவிகளைப் பெற்றுச் சிறப்புடன் விளங்குகிறார்கள் என்கிறார்.

களும். (பூமேவுமித்யாதி₃) அழகிய தாமரைப்பூவைத் திரு நாபியிலேயுடையனானவனுடைய திருவடிகளிலே குளிர்ந்த

---

வ்யா:— ஸர்வத்துக்கும் ஸ்வாமிகளாக முடிசூடி, பரப்பையுடைத்தான பூ₄மியை, சிறியதைப் பெரியது நலியாதபடி ரக்ஷித்து, நங்கண்வட்டத்திலே குதிரைமுதுகே படைவீடாக நடத்திச் செல்கின்ற ராஜாக்களும், போ₄க்₃யதை பொருந்தியிருந்துள்ள சிவந்த தாமரைப்பூவைத் திரு நாபி₄யிலேயுடையனாய், அத்தாலே ஸர்வகாரணபூ₄தனான ஸர்வேஶ்வரனுடைய சிவந்த திருவடிகளிலே ஜந்மங்கள்

---

வ்யா:—(கோவாகி)தங்கள் ஆளுகைக்குட்பட்ட அனைத்துக்கும் ஸ்வாமிகளாக முடிசூடி. (மாநிலம் காத்து)தாங்கள் ஆளும் பூமி ப்ரதேசம் முழுவதையும், பலங்குறைந்த பிரஜைகளை பலம் மிக்க பிரஜைகள் துன்புறுத்தாதபடி ரக்ஷித்து. (நம் கண் முகப்பே) சென்றபாசுரத்தில் சொன்ன தேவர்களைப்போலே, நாம் காணாத விடத்திலும் காலத்திலும் இவர்கள் பெருமைபெறவில்லை; நம் கண்காணப் பெருமை பெற்றிருக்கிறார்கள் என்கிறார். (மாவேறிச் செல்கின்ற மன்னவரும்) எப்போதும் குதிரையேறிப் போர்புரிந்து பல தேசங்களை ஜயித்துக் கொண்டேயிருக்கையாலே, 'குதிரை முதுகே இவனுக்கு இருப்பிடமோ' என்னும்படியாகக் குதிரை யேறி வெற்றிவீரராய்த் திரிகின்ற சக்கரவர்த்திகளும். இப்படிப் பெருமைபெற்றிருக்கும் அரசர்களும் ஸர்வேஶ்வரனுடைய திருவடி களில் எத்தனையோ ஜன்மங்கள் ஆஶ்ரயித்துத் தவம்புரிந்தவர்களே என்கிறார் இனி: (பூமேவும் செங்கமல நாபியான்) செங்கமலப் பூ மேவும் நாபியான் என்னுதல்; அன்றிக்கே, 'பூ' என்று இனிமை யாய், இனிமை பொருந்திய செங்கமலத்தைத் திருவுந்தியிலே உடையவன் என்னுதல்; அன்றிக்கே, 'கோவாகி' 'மாவேகி' என்ற அடிகளின் எதுகைக்குச்சேர 'பூவேகும்' என்று பாடங் கொண்டால், 'பூ ஏகும்' என்று பதம் பிரித்து, இத்தாமரைப் பூவின் அழகைக்கண்டு வெள்கி, மற்ற பூக்களெல்லாம் தள்ளி- விலகி—செல்கின்றன என்று கருத்தாதல். (செங்கமல நாபியான் சேவடிக்கே)

"முதலாம் திருவுருவம் மூன்றென்பர் ஒன்றே
முதலாகும் மூன்றுக்கும் என்பர்—முதல்வா
நிகரிலகு காருருவா நின்னகத்த தன்றே
புகரிலகு தாமரையின் பூ" [பெரியதிருவ-72]

தாமரைப்பூவை அணிந்த தமர்களிறே ராஜாக்களாய்த் திரிகிறவர்கள். 69.

---

தோறும், குளிர்ந்த தாமரைப்பூ முதலான புஷ்பங்களைச் சாத்தி ஆராதித்த ஆஶ்ரிதர்கிடீர்! ஏய்ந்தாருடைய தமர் கிடீர்! என்னுதல். செங்கமலப்பூமேவும் நாபியான் என்னவுமாம். ''பூவேகும் செங்கமலநாபியான்'' என்று பாடமானபோது, பூக்கள் தள்ளும்படியான செவ்வியை யுடைய கமலத்தை நாபியிலே உடையவன் என்று பொருளாகக் கடவது. 69.

---

என்று நம்மாழ்வார் அருளியபடியே மும்மூர்த்திகளுக்குள்ளும் இவனே பரம்பொருள் என்பதை உருத்திரனைப் படைத்த பிரமனைத் தோற்றுவித்த உந்தித் தாமரையே காட்டித்தருகிறதாகையாலே, அறிவாளிகளான இவர்கள் இவனுடைய திருவடிகளையே ஆஶ்ர யிக்கிருர்கள் என்று காட்டுகிறது. இதனுலேயே, மற்ற அரசர்கள் எப்போதும் வாழ்ந்தேயிராமல், தாழ்வையும் அடைகின்றபோது, இவர்கள் எப்போதும் வாழ்ச்சியையே பெற்றிருக்கிருர்கள் என்று கருத்து. (ஏழ்பிறப்பும்) இவர்கள் பெற்றிருக்கும் பலனின் பெருமையைப் பார்த்தால், இதற்காக இவர்கள் பல பிறவிகளிலும் நோற்றிருக்கவேண்டுமென விளங்குகிறது என்று கருத்து. அன்றிக்கே, மோக்ஷமளிப்பதிலேயே இப்பரம புருஷனுக்கு நோக்காகையாலே, அதற்குறுப்பாக இச்சேதனன் செல்வம் முதலானவற்றைப் பயன்படுத்துவானு என்பதைப் பல பிறவிகளிலும் ஆராய்ந்து, இவனை ஸாதநாநுஷ்டானம் செய்வித்துத் திருத்தியபின்பே செல்வம முதலான சிறப்புக்களைத் தருவான் ஜநார்த்தனன் என்னும் சாஸ்திரார்த்தத்தைச் சொல்லுகிருராகவுமாம். ஆஶுதோஷன் (விரைவிலேயே உகப்பையடைபவன்) என்று பெயர்பெற்ற சிவன் முதலானுர், பஸ்மாஸுரன் முதலான ஆஸுர ப்ரக்ருதிகள் வரங்கேட்டவுடன் உச்சிகுளிர்ந்துபோய், 'இவன் இவ் வரங்கொண்டு நல்லது செய்வானு, தீமை புரிவானு' என்பதை ஆராயாமல் கேட்டவரங்களைக் கொடுத்துவிட்டுமறுகணமே திண்டாடியது போலே, திண்டாடுகிறவனல்லனே இவன். இப்படிக் கஷ்டப் படுவது பிரமனுக்கும் சிவனுக்குமுள்ள தனியுரிமை என்பதையும், இவர்கள் இப்படிக் கஷ்டப்படும்போது அக்கஷ்டங்களினின்றும்

70. தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளுந் தண்பொருப்பு வேலை—தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிள்குடந்தை யென்பரே
ஏவல்ல வெந்தைக் கிடம்.

தமர் உள்ளம்—பக்தர்களுடைய நெஞ்சம், தஞ்சை — தஞ்சை மாமணிக்கோயில், தலை அரங்கம் —(திவ்யதேசங்களுள்) சிறந்ததான திருவரங்கம், தண் கால் — திருத்தண்கால், தமர் உள்ளும் — அடியார்கள் (தமக்கு எல்லாமாக,) நினைத்திருக்கும், தண் பொருப்பு — குளிர்ந்த திருமலை, வேலை—திருப்பாற் கடல், தமர் உள்ளும்—பக்தர்கள் சிந்திக்கிற, மா மல்லை — திருக்கடன்மல்லை, கோவல் — திருக்கோவலூர், மதிள் குடந்தை — திருமதில்களோடு கூடின திருக்குடந்தை (ஆகிய இத்தலங்களெல்லாம்), ஏ வல்ல எந்தைக்கு இடம் என்பர்—அம்பெய்வதில் வல்லவனை சக்ரவர்த்தித்திருமகனுக்கு இருப்பிடமென்பர்.

பெரி அவ:— தனக்கு நல்லவர்களுக்கு அவன் ஸந்நிதி பண்ணுமிடங்கள் சொல்லுகிறது.

---

அவ:—இப்படி ப்ரயோஜநாந்தரபரராய் ஆஶ்ரயிக்கையன்றிக்கே, அநந்யப்ரயோஜநராய்த் தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய திருவுள்ளத்தை உகந்தருளின திருப்பதிகளெல்லாம் ஒருதட்டும் இதொருதட்டும் என்னும்படி ஒக்க விரும்பி, அவன் பரிமாறும்படியை அருளிச்செய்கிறார்.

---

இவர்களைக் காப்பாற்றுவது இவனே என்பதையும் இதிஹாஸ புராணங்கள் பல விருத்தாந்தங்களின் மூலம் விளக்குகின்றனவன்றோ. (தண்கமலம் ஏய்ந்தார் தமர்) இந்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே, அத்திருவடிகளின் மென்மைக்குப்பொருந்திய குளிர்ந்த தாமரைப் பூக்களைச் சாத்திப் பலபிறப்புகளிலும் தொழுத அடியார்களே இப்போது நம் கண்காணச் சக்ரவர்த்திகளாய்ச் சிறப்படைந்து விளங்குகின்றனர் என்கிறார். 'ஏய்ந்தாருடைய தமர்' என்று கொண்டு இப்படிப் பலபிறப்புகளிலும் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் நோன்புநோற்ற பிரமன், உருத்திரன் முதலான தேவர்களுடைய அடியார்களே இன்று சக்கரவர்த்திகளாய்த் திரிகிறார்கள் என்றும் பொருள் கொள்ளலாம். 69.

வ்யா:— (நமருள்ளம்) அவற்றில் முற்பட்டது ஆர்ரிதருடைய ஹ்ருத₃யம். (தஞ்சை) தஞ்சைமாமணிக்கோயில். (தலையரங்கம்) திருப்பதிகளில் ப்ரத₄நமான கோயில். (தண்

---

உரை:— மேற்சொல்லுகிற திருப்பதிகள் எல்லாவற்றிலும் ப்ரத₂மோத்₃தே₃ஶ்யமான ஆஶ்ரிதருடைய ஹ்ருத₃யங்கள். தஞ்சை மாமணிக்கோயில், திருப்பதிகள் எல்லாவற்றிலும் ப்ரத₄நமான பரமபத₃த்தோடேகூட எண்ணலாம்படியான கோயில். திருத்தண்கால், ஸ்ரீவைஷ்ணவர்கள்

---

70. அவ:— இவ்வண்ணமாக தேவர்களைப் போலவும், அரசர்களைப் போலவும் க்ஷுத்₃ரபுருஷார்த்த₂ங்களைப் பெறுவதற்காக இவனை ஆஶ்ரயிக்காமல், இவனையே பயனாகக்கொண்டு இவனை ஆஶ்ரயித்தவர்களுடைய திருவுள்ளத்தை உகந்தருளின திருப்பதிகளெல்லாம் ஒருதட்டென்றால் இது ஒரு தட்டாக அவற்றிலும் மிகவிரும்பிப்பரிமாறுகிறான் ஸர்வேஶ்வரன் என்கிறார்.

வ்யா:—(தமருள்ளம்) அடியாருடைய நெஞ்சு. மேலே சொல்லப்போகிற திருப்பதிகள் அனைத்தும் இப்பெருங்கோயிலைப் பெறுகைக்கு இளங்கோயில்கள் (பா₃லாலயங்கள்) ஆகையால், இதை முதலிற்சொல்லுகிறார். "அப்₄யர்ஹிதம் பூர்வம்" [எது மிகச் சிறந்ததோ அதை முதலிற்சொல்லுவது நியாயம்] எனப்படுகிறதன்றோ. "ஹ்ருத₃யம் தத்₃ விஜாநீயாத்₃ விஶ்வஸ்யாயதநம் மஹத்" [தை-நா] [அடியார்களுடைய நெஞ்சைஸர்வேஶ்வரனுடையபெருங்கோயிலாக அறியக்கடவன்] என்று வடமொழிவேதத்தாலும், "நெஞ்சமே நீள் நகர்" [திருவாய் 3-8-2] என்று தமிழ்வேதத்தாலும் அடியாரின் உள்ளம் பெருங்கோயிலென்றும், "வெள்ளத்திளங்கோயில்" [இர திருவ 54] என்று இவ்வாழ்வாராலேயே மற்ற ஸ்தலங்கள் இளங்கோயில்களென்றும் உத்கோஷிக்கப்பட்டனவன்றோ. இனி இளங்கோயில்கள் சிலவற்றைக் காட்டுகிறார்:— (தஞ்சை) தஞ்சைமாமணிக்கோயில்; நெஞ்சத்திற்கடுத்தது தஞ்சை போலும்! (தலையரங்கம்) திருப்பதிகள் அனைத்திலும் தலைமை பெற்றதாய், பூலோகவைகுண்டம் என்று கீர்த்திபெற்றதாய், 'பெரியகோயில்' என்று புகழ்பெற்றதான அரங்கம்; "ஆராமம் சூழ்ந்த அரங்கம்" [சிறியதிருமடல்] என்கிறபடியே மற்ற திவ்ய

கால்) (தமருள்ளுந்தண் பொருப்பு) வைஷ்ணவர்களுக்கு ஸர்வஸ்வமான திருமலை. (வேலை)திருப்பாற்கடல். (தமருள்ளும் மாமல்லை)(கோவல்)மூன்றுழ்வார்களையும் நெருக்கின விடம். (மதிள்குடந்தை) திருமழிசைப்பிரானுகந்தவிடம்.

---

தங்களுக்கு ஸர்வஸ்வமாக அனுஸந்தித்திருக்கும் ஶ்ரமஹரமான திருமலை, எல்லாவற்றுக்கும் அடியான திருப்பாற்கடல், ஆஶ்ரிதரான புண்டரீகாதிகள் தங்களுக்கு உத்தேஶ்யமாக அனுஸந்தித்திருக்கும் தறைக்கிடைகிடக்கும் திருக்கடல்மல்லை, எங்கள் மூவரோடும் ஒக்க நெருக்கின திருக்கோவலூர், அரணான மதில்களையுடைத்தாய், திருமழி

---

தேசங்களனைத்தும் இதைச் சூழ்ந்திருக்கும் நந்தவனங்கள் என்று சொல்லும்படியன்றே இது அவற்றில் தலைமை பெற்றிருப்பது. (தண்கால்) திருத்தண்கால் என்னும் திவ்யதேசம். திவ்யதேசங்களிடையே தாரதம்யம் பாராட்டக்கூடாது என்பதைக் காட்டுவதற்காக ஸுப்ரஸித்த திவ்யதேசங்களான கோயில் திருமலைகளோடு ஒரு கோவையாகத் தஞ்சையையும் தண்காலையும் எடுக்கிருர். (தமர் உள்ளும் தண் பொருப்பு) ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் தங்களுக்கு ஸர்வஸ்வமாக(எல்லாச் செல்வமுமாக)நினைத்திருக்கக் கூடியதாய், அவர்களுக்கும் அவனுக்கும் களைப்பாறலாம்படியான குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருமலை. ஸர்வஸ்வத்தைக் கொள்ளைகொள்ளப் பஶ்யதோஹரர்கள் (பகற்கொள்ளைக்காரர்கள்) காத்திருப்பது போலே, இந்த திவ்யதேசத்தைத் தங்களுடையதென்றுகூறி ஆக்ரமிக்கப் பலர்காத்திருக்கிருர்களன்றே. (வேலை) எல்லா அவதாரங்களுக்கும் மூலமான திருப்பாற்கடல்.(தமர்உள்ளும் மாமல்லை) அடியானான புண்டரீகனுக்கு உதவிய இடமாகையாலே, அடியார்கள் அனைவரும் தங்களுக்கு உத்தேஶ்யமாக நினைத்திருக்குமிடமாய், ஸ்தலசயனப் பெருமான் தறைக்கிடைகிடக்குமிடமான கடல்மல்லைத் தலசயனம், (கோவல்) பொய்கை பூதம் பேயாழ்வார்களாகிய எங்கள் மூவரையும் ஒன்று சேர்த்துத் திருமகள் நாதனை அவன் நெருக்கிய இடமான திருக்கோவலூர். (மதிள் குடந்தை) அடியார்கள் பயங்கெட்டிருக்கலாம்படி மதிள்களையுடையதாய், எங்களோடு தோள் தீண்டியான திருமழிசைப்பிரான் உகந்திருக்குமிடமான திருக்

(என்பரே ஏவல்ல வெந்தைக்கிடம்) சக்ரவர்த்தித்திருமகனுக் கிடமென்று சொல்லுவர்கள். 70.

71. இடங்கை வலம்புரி நின்றார்ப்ப எரிகான்
றடங்கா ரொடுங்குவித்த தாழி—விடங்காலும்
தீவா யரவணைமேல் தோன்றல் திசையளப்பான்
பூவா ரடிநிமிர்த்த போது.

விடம் காலும்—விஷத்தை உமிழ்கின்ற, தீ வாய்—பயங்கரமான வாயையுடைய, அரவு—திருவனந்தாழ்வானாகிற, அணை மேல்—சயனத்தின் மீது (பள்ளிகொண்டிருக்கின்ற) தோன்றல்—ஸர்வேச்வரன், திசை—எல்லா உலகங்களையும், அளப்பான்—அளந்துகொள்வதற்காக, பூ ஆர் அடி—பூப்போல் மென்மையுள்ள திருவடியை, நிமிர்த்தபோது—உயரத்தூக்கி வளர்த்தருளின காலத்தில், வலம்புரி — சங்கானது, இடங்கை — இடத்திருக்கையில், நின்று—ஸ்திரமாக இருந்துகொண்டு, ஆர்ப்ப—முழங்க, ஆழி—திருவாழியானது, எரி கான்று—நெருப்பை உமிழா நின்று கொண்டு, அடங்கார்— எதிரிகளாய் நின்ற நமுசி முதலானவர்களை, ஒடுங்குவித்தது — செயலற்றவர்களாகப் பண்ணிற்று.

---

சைப்பிரான் உகந்த திருக்குடந்தை ஆகிற இவ்வோ திவ்ய தேசங்களெல்லாம், ப்ரதிபக்ஷத்தை எய்து விழவிடவல்ல என் ஸ்வாமியான தசரதாத்மஜனுக்கு வாஸஸ்தானமாக அறிவுடையார் சொல்லாநின்றார்கள். ஏவல்லவெந்தை—எய்கைக்கு வல்லனான என் ஸ்வாமி என்றபடி. 70.

---

குடந்தை. (ஏவல்ல எந்தைக்கு இடம் என்பரே) ஆகிய இந்த திவ்யதேசங்கள் அனைத்தும் அம்பெய்து எதிரிகளை அழிப்பதில் வல்லவனான சக்கரவர்த்தித்திருமகன் உகந்து வாழுமிடங்கள் என்று அறிவாளிகள் கூறுவார்கள். 70

பெரி அவ:— கீழ் இவனுகந்தபடி சொல்லிற்று; இவனை உகக்கும் நித்யஸூரிகள் படி சொல்லுகிறது.

வ்யா:— (இடங்கையித்யாதி₁) திருவுலகளந்த விஜயத்தை அநுஸந்தி₄த்து ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸ்ரீபாஞ்சஜந்யம் ஆர்க்க. (எரியித்யாதி₃) ஆர்க்கைக்கு அவஸரமின்றிக்கே

---

அவ:-ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதார்த்த₂மாகத் திருவுலகளந்தருளின த₃ஶையிலே அநுஸந்தி₄த்து நித்யஸூரிகள் அஸ்தா₂நே ப₄யஶங்கை பண்ணிப் படும்பாடு சொல்லுகிறார்.

உரை:— பரிவின் க₄னத்தாலே ப்ரதிகூலர் மேலே விஷத்தை உமிழாநின்றுள்ள ப₄யங்கரமான வாயையுடைய திருவனந்தாழ்வான்மேலே சாய்ந்தருளக்கடவ ஸௌகுமார்யத்தில் ப்ரத₄ாநனானவன், காடுமோடையுமான தி₃க்குக்க

---

71. அவ:— கீழ்ப்பாசுரத்தில் அடியார்க்காக இவன் உகந்தருளின நிலங்களைச் சொல்லிற்று; இப்பாசுரத்தில், இவனை உகக்கும் அடியார்களில் தலைவர்களான நித்யஸூரிகள், இவ்வுலகிலுள்ள அடியார்க்காக இவன் திரிவிக்கிரமனாகித் திருவுலகளந்தருளினபோது இவனுடைய ஸௌகுமார்யாதி₃களை அநுஸந்தித்து அன்பாலே 'என் வருகிறதோ' என்று அஸ்தா₂நே ப₄யஶங்கைபண்ணிப் படும் பாட்டைச் சொல்லுகிறார்.

வ்யா:— (இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப) திருவுலகளந்தருளினபோது, மாவலியையுள்ளிட்ட அனைவரையும் அடிப்படுத்திக் கொண்ட வெற்றியை அநுஸந்தித்து, இடது திருக்கையிலே நிலையாய் இருந்த வலம்புரிச்சங்காகிய ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வான், அவ்வானந்தத்துக்குப் போக்குவீடாக முழங்க; (நின்று ஆர்ப்ப) இடைவிடாமல் முழங்க என்றுமாம். "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்...தலைப்பெய்வது எஞ்ஞான்றுகொலோ" [நாச்-திரு 9-9] என்றாப்போலே இவ்வொலியைக்கேட்டு அன்புடையாரான ஜாம்பவான் முதலானோர் 'ஜிதம் ப₄க₃வதா ஜக₃த்' [பரமபுருஷனாலே உலகனைத்தும் வெல்லப்பட்டது] என்று மகிழ்ந்து

அக்நியை உமிழாநின்றுகொண்டு நமுசிப்ரப்$_4$ருதிகளை வாய்வா யென்று ஒடுங்குவித்தது திருவாழி. (விடமித்யாதி$_3$) கிடந்த விடத்தேகிடந்து விஷத்தையுமிழாநின்ற திருவநந்தாழ்வான்

ளோடே கூடின பூ$_4$மியை அளக்கைக்காகப் புஷ்பஹாஸ ஸௌகுமாரமான திருவடிகளை வளர்த்தருளின காலத்தில் இடத்திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யமானது அப்போதப் போது பிறந்த விஜயத்தை அநுஸந்தி$_4$த்த ஹர்ஷத்தாலே ப்ரதிகூலர் மண்ணுண்ணவும், அநுகூலர் கொந்தளிக்கவும்

பறைசாற்றிக் கொண்டாடும்படியாகவும், 'ஸ கோ$_4$ஷோ தா$_4$ர்த்த ராஷ்ட்ராணாம் ஹ்ருத$_3$யாநி வ்யதா$_3$ரயத்' [கீதை 1-19] [அச்சங் கொலியானது திருதராஷ்ட்ரபுத்திரர்களுடைய நெஞ்சங்களைப் பிளந்தது] என்றுப்போலே, 'என்னிது மாயம்? என் அப்பன் அறிந்திலன் முன்னையவண்ணமே கொண்டு அளவாய்' [பெரியாழ் திரு 1-8-8] என்ற நமுசி முதலான எதிரிகள் இவ்வொலியாலேயே நெஞ்சு பிளந்து அழியும்படியாகவும் நிலைநின்று முழங்கிற்று சங்கம் என்று கருத்து. (எரிகான்று அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப்போலே ஆநந்தத்தாலே வாய்விட்டு முழங்கவும் இது ஸமயமில்லை என்று கருதி, நமுசி முதலான எதிரிகள் விஷயத்தில் அஸ்த$_2$ாநே ப$_4$யஶங்கை பண்ணி, அவர்கள் ஓடும்படியாகத் தீயைக் கக்கி அவர்களை அஞ்சி ஒடுங்கப் பண்ணினான் ப்ரதிபக்ஷநிரஸனத்திற்கென்றே இட்டுப்பிறந்த ஸுதர்ஶநாழ்வான். அவதார த$_3$ஶையிலே அருகிலிருந்து இவர்கள் பட்டபாடு ஒருபுறமிருக்கட்டும்; மூல மூர்த்திக்குப் படுக்கையாய் அதிதூரத்திலிருந்த திருவனந்தாழ்வான் பட்ட பாட்டை என் சொல்லிப் பேசுவது என்கிறார் மேலே; (விடம் காலும் தீவாய் அரவணை) "ஆங்கு ஆரவாரம் அதுகேட்டு அழல் உமிழும் பூங்கா ரரவணை" [நான் திருவ 10] என்கிறபடியே அநுகூலருடைய ஆனந்த$_3$த்$_4$வனியைக் கேட்டு 'அசுரராக்கராலே என்வருகிறதோ' என்று அஸ்த$_2$ாநே ப$_4$யஶங்கைபண்ணி விஷத்தையும் நெருப்பை யும் கக்கினானன்றோ திருவனந்தாழ்வான். 'தீவாய்' என்று 'அழல் உமிழும்' என்னும் அர்த்த$_2$த்தையே சொல்லுவதாகக் கொள்ளலாம்; அல்லது, 'பயங்கரமான வாய்' என்கிறதாகவும் கொள்ளலாம்; இவர்களெல்லாம் இப்பாடு படுவதற்குக் காரணமென்ன? எனில்,

மேலே கண்வளர்ந்தருளும் ஸௌகுமார்யத்தையுடையனான ஈஶ்வரன் பூமியை அளக்கைக்குப் புஷ்பஹாஸஸுகுமாரமான திருவடிகளை நிமிர்த்தபோது இப்படியானதென்கிறது. 71.

---

ஒருபடிப்பட்டுநின்று முழங்க, திருவாழியானது அங்ஙன் ஆர்த்துக்கொள்ள அவஸரமற்று நெருப்பை உமிழாநின்று கொண்டு ஶத்ருக்களான நமுசிப்ரப்ருதிகளை 'வாய்வாய்' என்று முடங்கப்பண்ணிற்று. 71.

---

(அரவணைமேல் தோன்றல்) "வெள்ளை வெள்ளத்தின்மேல் ஒரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே கள்ள நித்திரை கொள்கின்ற" [பெரியாழ் திரு 5-1-7] என்கிறபடியே திருப்பாற் கடல் உறுத்தாமைக்காக மென்மை, குளிர்த்தி முதலான படுக்கைக் குரிய குணங்கள் அனைத்தையும் பரிபூர்ணமாகக் கொண்ட திருவனந்தாழ்வானை அப்பாற்கடலின் மேலே மெத்தையாக விரித்து அதன்மேலே கண்வளரும் மென்மையை உடையவனன்றோ இவன். அந்த ஸௌகுமார்ய ஸௌந்தர்யாதிகளே நெஞ்சிற் பட்டு, 'இத்திருமேனிக்கு என் வருகிறதோ' என்று வயிறுபிடித்து இவனுடைய ஜ்ஞாநபல ஐஶ்வர்யவீர்யாதிகளை மறந்து ஸர்வ ஜ்ஞர்களான நித்யஸூரிகளும் இப்பாடு படுகிறார்கள் என்கிறார். 'தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸ: ஸமிந்ததே" [ருக் அஷ்ட 1-2-7] [விஷ்ணுவின் மேலான பரமபதத்தில், அவனை எப்போதும் கண்டு அனுபவித்துத் துதிபாடும் ஸர்வஜ்ஞர்களான நித்யஸூரி களும் எப்போதும் விழிப்புடன் விளங்குகிறார்கள்] என்று பரமபதத்தி லும் இவர்கள் அஸ்தாநே பயஶங்கைபண்ணி விழிப்புடன் விளங்கு வதாக வேதமே உத்கோஷித்ததன்றோ இவர்களெல்லாம் இப்பாடு பட்டது எப்போது என்பதை விவரிக்கிறார். — (திசையளப் பான்) வடிவிணையில்லா மலர்மகளும், நிலமகளும் தொட்டாலும் சிவந்து காட்டும் திருவடியைக்கொண்டு காடும் மேடுமான உலகை அளப்பதே! என்கிறார். (திசை) எல்லா திக்குகளிலுமுள்ள கரடு முரடான எல்லாப் பொருள்களையும் காட்டுகிறது. (பூவார் அடி) "புஷ்பஹாஸ:" [ஸஹஸ்ரநாமம் 952] என்கிறபடியே பூவலர்ந்தாப் போலே மேன்மைமிக்குநிற்கும் திருவடிகள், "அடி நிமிர்த்தபோது இடங்கை வலம்புரி நின்றார்ப்ப, ஆழி எரிகான்று அடங்கார் ஒடுங்கு வித்தது" என்று அந்வயம். 71.

72. போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போதுஉள்ளம்— போது
மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணிவேங் கடவன்பே ராய்ந்து.

வானரங்கள்—குரங்குகளானவை, போது அறிந்து—விடியற்காலம் விழித்து (எழுந்துபோய்), பூ சுனை புக்கு-பூத்த நீர் நிலைகளிலே புகுந்து (நீராடி), ஆங்கு அலர்ந்த-அப்போதே மலர்ந்த, போது – பூக்களை, அரிந்து கொண்டு – பறித்துக் கொண்டுவந்து ஸமர்ப்பித்து, ஏத்தும்-துதி செய்யா நின்றன; உள்ளம் -மனமே!, போது-(நீயும் அப்படிச்செய்யப்) புறப்படு; அணி வேங்கடவன் – ( உலகிற்கு ) ஆப₄ரணம் போலுள்ள திருமலையிலுள்ள பெருமானுடைய, பேர்—திருநாமங்களை, ஆய்ந்து — அநுஸந்தி₄த்துக்கொண்டு, வேங்கடவன் மலர் அடிக்கே செல்ல—அத்திருவேங்கட முடையானுடைய திருவடித்தாமரைகட்கே சென்று சேரும்படியாக, போதும்—பூக்களையும், அணி—ஸமர்ப்பிக்கக்கடவாய்.

பெரி அவ:—(போதறிந்து) திருமலையில் திர்யக்குக்கள் ஆஶ்ரயிக்கும்படி சொல்லுகிறது.

---

அவ:— 'அளவுடையரான நித்யஸூரிகளும் இப்படி படுகிற விஷயத்தை, நமக்குச்சென்று ஆஶ்ரயிக்கப்போமோ?' என்று பிற்காலிக்கிற திருவுள்ளத்தைக்குறித்து, 'திர்யக்குகளுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படி ஸௌலப₄்யனபின்பு நீயும் அதிலே ஒருப்படு' என்கிருர்.

---

72. அவ:—"ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளும் இப்படி ஆழங்காற்படும் இவ்விஷயத்தை அல்பஜ்ஞரான நாம் அணுகமுடியுமோ?" என்று தயங்கிய திருவுள்ளத்தைக்குறித்து 'திருமலையிலே குரங்குகளும் ஆஶ்ரயிக்கலாம்படி ஸௌலப₄்யமிருக்கும்போது நீ தயங்கவேண்டாம்; அவனையே ஆஶ்ரயிப்பாயாக' என்று கூறுகிருர்.

வ்யா: —(போதறிந்து) "ब्राह्मे मुहूर्ते चोत्थाय" (ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்தா₂ய) என்று ஸத்வோத்தரகாலமறிந்து. (வானரங்களித்யாதி₃) குரங்குகள் பூஞ்சுனையிலே புக்கு அதில்

---

உரை: குரங்குகளானவை, ருஷிகள் ப்₃ராஹ்ம முஹூர்த்தத்திலே உணருமாபோலே காலமறிந்து உணர்ந்துபோய்ப் பரப்புமாறப் பூத்த சுனைகளிலே, ருஷிகள் அக₄மர்ஷணம் பண்ணுமாபோலே சென்று புக்கு, அவ்

---

வ்யா:— (போது அறிந்து வானரங்கள்) "ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்தா₂ய சிந்தயேதா₃த்மநோ ஹிதம் | ஹரிர் ஹரிர் ஹரிரிதி வ்யாஹரேத்₃ வைஷ்ணவ: புமாந்||" [விடியற்காலை வேளையாகிற (ப்₃ரஹ்மஸம்பந்தமுள்ள) ப்₃ராஹ்ம முஹூர்த்தத்திலே எழுந்திருந்து, வைஷ்ணவனானவன் ஹரிநாமத்தைப் பலகால் சொல்லவேண்டும்.] "வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும் மெள்ளஎழுந்து அரியென்ற பேரரவம் உள்ளம் புகுந்து குளிர்ந்து" [திருப்பாவை 6] என்கிறபடியே அறிவிற்சிறந்த ருஷிகளும், ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸத்வகுணம் தலையெடுக்கும் ப்₃ராஹ்மமுஹூர்த்தத்திலே உணர்வது போலே, இக்குரங்குகளும் எம்பெருமானை ஆஶ்ரயிக்கத்தக்க காலத்தை அறிந்து அக்காலத்திலேயே கண்விழித்து பகவத் கைங்கர்யத்தைச்செய்கின்றன; அறிவற்ற மிருகங்களுக்கு இவ்வறிவு கூடுமோ? எனில்: தி₃வ்யதே₃ஶவாஸப்ரபா₄வத்தாலே கூடும்.

"வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்(கு)என்று
எப்பொழுதும் கைநீட்டும் யானையை— எப்பாடும்
வேடுவளைக் கக்குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே
நாடு'வளைத்(து) ஆடுதுமேல் நன்று" [நான்-திருவ 46]

என்கிறபடியே மிருகமான யானையோடு, க்ரூரஜாதியான குறவர்களோடு வாசியற இந்த தேசவைபவத்தாலே பகவத்பாகவதபக்தி பூண்டிருப்பரென்றும் இத்தேசத்துக்குப் புறம்புள்ள வேடரிடமே ஜாதிக்குரிய கொடுமை காணப்படும் என்றும் திருமழிசைப்பிரான் அருளினரன்றே. 'அறிந்து' என்று இவற்றின் மநோவ்ருத்தியைச் சொல்லி, மேலே காயிக வாசிக கைங்கர்யங்களைச் சொல்லுகிறார்,— (பூஞ்சுனை புக்கு) பரப்பெங்கும் பூத்துக்கிடக்கும் மலைச்சுனை

செவ்விப்பூவை அரிந்துகொண்டேத்தாநின்றது. (போதுள்ளம்) ஹ்ருதயமே! போரு. (அணிவேங்கடவன் பேராய்ந்து வேங்கடவன் மலரடிக்கே செல்லப்போதும் அணி) ஸம்ஸாரத்துக்கு

---

விடத்தில் கழிய அலருதல் கடுமொட்டாதலன்றிக்கே அப்போதலர்ந்த செவ்விப்பூக்களைப் பறித்துக்கொண்டு ஜாத்யுசிதமான ஏதேனுமொன்றைச் சொல்லி ஸ்துதித்துக் கொண்டு ஆஶ்ரயியாநிற்கும். மனஸ்ஸே! நீயும் பிற்காலியாதே போது; போந்த அனந்தரம் திருவேங்கடமுடையானுடைய ஶீலாதி குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை

---

யொன்றிலே ரிஷிகள் அகமர்ஷணஸ்நானம் செய்ய முழுகுமாப் போலே உட்புகுந்து. (ஆங்கு அலர்ந்த போது அரிந்துகொண்டு) அந்தச்சுனையிலே மலர்ந்த பூவை எம்பெருமான் திருவடிகளிலே இடுவதற்காகப் பறித்துக்கொண்டு. (ஆங்கு அலர்ந்த...) இத்தேச வைபவம் இல்லாமையாலே கஜேந்த்ராழ்வான் பரமபுருஷனுக்காகப் பூவைப்பறிக்கும்போது முதலை கவ்விற்று; இச்சுனையிலுள்ள முதலை முதலானவையும் பகவத்பக்தர்களுக்கு இடையூறு இழைக்கா வாகையாலே, வானரங்கள் பூப்பறிக்கும் காரியத்திற்குத் தடை யேதுமில்லையென்று கருத்து. 'ஆங்கு' என்று திருமலையிலுள்ள சுனையைக் குறிக்கிறது. அன்றிக்கே (ஆங்கு அலர்ந்தபோது)என்று அப்போது அலர்ந்த புஷ்பத்தைக் குறிக்கிறதாகவுமாம். மலர்ந்து சிறிது நேரம் சென்று அதனாலேயே வாடிய பூவானாலும், மலராதகடுமொட்டாயிருக்கும் பூவானாலும் திருமேனியின் அழகுக்கும் மென்மைக்கும் பொருந்தாது என்று பார்த்து, அப்போதே மலர்ந்த பூக்களைப் பறிக்கிறது. ஆக, இவ்வளவால் மாநஸ காயிக வ்ருத்திகளைச் சொல்லிற்று. இனி, வாசிககைங்கர்யத்தைக் கூறுகிறது,-(ஏத்தும்) பக்திக்குப்போக்குவீடாக, தன் ஜாதிக்குரிய ஏதேனும் ஒருசப்தத்தை எழுப்பித் துதிக்கும்; "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான்" [அமலனாதி 3] என்கிறபடியே நித்யஸூரிகளின் ஸாமகானத்தையும், குரங்குகளின் கூச்சலையும் அவற்றிலுள்ள அன்பொன்றையே பார்த்து வாசியற ஏற்றுக்கொள்பவனன்றோ இவன். ஆக, இப்படித் திர்யக்குகளான குரங்குகளும் கூச்சமற்று இவனை முக்கரணங்களாலும் ஆஶ்ரயிக்கும்போது நாமும் அப்படிச்செய்யத் தடையில்லையன்றோ என்கிறார் மேலே -(உள்ளம்) மனமே! என்னிலும் முந்துற்ற நெஞ்சே! (போது) நீயும் தயங்காமல்

ஆப₄ரணமான திருவேங்கடமுடையானுடைய திருநாமத்தைச் சொல்லி அவன் திருவடிகளிலே புஷ்பத்தையுமணி. மணிவேங் கடவனென்று சொல்லி அணியென்று க்ரியையாகவுமாம். 72.

---

அனுஸந்தித்துக்கொண்டு நீலரத்நம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனை திருவேங்கடமுடையானுடைய பூப் போலே அதிஸுகுமாரமான திருவடிகளுக்கே சென்று கிட்டும்படி செவ்விப்பூக்களை அழகுபெறச்சாத்தி ஆஶ்ர யிக்கப்பார். அன்றிக்கே, ஸம்ஸாரத்துக்கு ஆப₄ரணமான திருவேங்கடமுடையான் என்றாய், வேங்கடவன் மலரடிக்கே செல்லப் போதும் அணி என்றுமாம். 72.

---

இவனை ஆஶ்ரயிக்கப்புறப்படு. (உள்ளம் போது) அதிசஞ்சலமான குரங்குகளும் இவன் விஷயத்தில் சஞ்சலமற்று அடிமை செய்வது போலே, "சஞ்சலம் ஹி மந:" [கீதை 6-34] என்கிறபடியே அதி சஞ்சலமாய் மனக்குரங்கு எனப்படும் நீயும் இவ்விஷயத்தில் சஞ்சல மற்று அடிமை செய் என்கிறாராகவுமாம். இத்தால், மாநஸகைங் கர்யத்தைச் செய்யப் பாரித்தாராயிற்று; இனி, காயிகவாசிக கைங் கர்யங்களையும் செய்ய வேணும் என்று பாரிக்கிறார்,—(அணி வேங் கடவன் பேர் ஆய்ந்து) இந்த ஸம்ஸாரமண்டலத்திற்கு ஓராபரணம் போலேயிருக்கும் திருவேங்கடமுடையானுடைய ஸௌலப்₄யஸௌ ஶீல்யாதி₃கு₃ணங்களைச் சொல்லும் திருநாமங்களை அனுஸந்தித்துக் கொண்டு. இது வாசிககைங்கர்யம். (வேங்கடவன் மலரடிக்கே செல்லப் போதும் அணி) அத்திருவேங்கடமுடையானுடைய பூப் போலே மென்மைமிக்க திருவடிகளைச் சென்றடையும்படி அப் போதலர்ந்த புஷ்பங்களையும் அழகாகச் சாத்துவாயாக. இது காயிக கைங்கர்யம். மோனைக்குச் சேர 'மணி வேங்கடவன் மலரடிக்கே' என்று கொண்டால், கடைசி அடியிலுள்ள 'அணி' என்பதை தனிச்சீரிலுள்ள 'போது' என்பதோடு சேர்த்து, 'போது அணி' என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். (மணி வேங்கடவன்) நீலமணி போலே கண்டார்களைப்பையாற்றும் திருமேனியையுடைய திருவேங்கடமுடையான் என்று பொருள். ஆக, முக்கரணங் களாலும் திருவேங்கடமுடையானை ஆஶ்ரயிக்கவேணுமென்று பாரித் தாராயிற்று. 72.

73. ஆய்ந்துரைப்ப னாயிரம்பே ராதிநடு வந்திவாய்
வாய்ந்த மலர்தூவி வைகலும் — ஏய்ந்த
பிறைக்கோட்டுச் செங்கண் கரிவிடுத்த பெம்மான்
இறைக்காட் படத்துணிந்த யான்.

பிறை ஏய்ந்த கோடு—சந்திரகலைபோன்ற தந்தத்தையும், செம் கண் — சிவந்த கண்களையுமுடைய, கரி — கஜேந்திராழ்வானை, விடுத்த - முதலைவாயிலிருந்து விடுவித்தருளின, பெம்மான் — ஸர்வேஶ்வரனை, இறைக்கு - ஸ்ரீமந் நாராயணனுக்கு, ஆள்பட — அடிமைசெய்ய, துணிந்த யான்- உறுதிபூண்ட அடியேன். ஆதி நடு அந்திவாய் வைகலும் — காலை பகல் மாலை முதலிய எல்லாக்காலங்களிலும், வாய்ந்த மலர் - கையிற்கிடைத்த பூக்களை, தூவி - முறைகெட இட்டு, ஆயிரம் பேர் ஆயிரம் திருநாமங்களையும், ஆய்ந்து உரைப்பன் — நெஞ்சிற்கொண்டு அநுஸந்திப்பேன்.

பெரி - வ்யா: — (ஆய்ந்தித்யாதி) எல்லாத் திருநாமங்களையும் ஆராய்ந்துரைப்பன் எல்லா அவஸ்தைகளிலும்.

---

அவ:-ஸர்வஸமாஶ்ரயணீயனை அவன் நிலையை அநுஸந்தித்து, அவன் திருவடிகளிலே தாம் நித்யகைங்கர்யம் பண்ணுவதாக அத்யவஸித்தபடியை அருளிச்செய்கிறார்.

---

73 அவ:—ஜாதியாலும், ஒழுக்கத்தாலும், அறிவாலும் எத்தனையேனும் தாழ்ந்தவர்களாலும் ஆஶ்ரயிக்கத்தக்க அவனுடைய திருவடிகளிலே தாம் முக்கரணங்களாலும் நித்யகைங்கர்யம் பண்ணுவதாக உறுதி பூண்டபடியை அருளிச்செய்கிறார். சென்ற பாசுரத்தில் பாரித்த கைங்கர்யம் நித்யமாய்ச் செல்லவேண்டும் என்று உறுதிகொள்கின்றார் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம் தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே" [திருவாய் 3-3-1] என்ற நம்மாழ்வாரைப்போலே.

(வாய்ந்தமலர் தூவி) கைக்கெட்டின புஷ்பத்தைக்கொண்டு வேண்டினபடியே பொகட்டு. (வைகலும்) காலமெல்லாம்.

---

உரை:— பிறையோடு ஒத்திருந்துள்ள கொம்புகளையும், அழகிய கண்களையுமுடைத்தான ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, தரையில் ஒரு பூ விழாதபடி முதலைவாயில்நின்றும் மெள்ள விடுவித்தருளின ஸர்வேச்வரனை என் நாயகனுக்கு அடிமை செய்கையிலே அத்யவஸித்த நான், முதலும்,

---

வ்யா:—(ஆய்ந்து உரைப்பன்) திருநாமங்களின் அர்த்தங்களை ஆராய்ந்து அனுஸந்தித்துக்கொண்டு சொல்லுவேன். ஒரு பயனுக்காகத் திருநாமங்களைச் சொல்லுகிறவர்கள் அர்த்தாநுஸந்தாநமில்லாமல் திருநாமத்தை ஜபிப்பார்கள். இவர் அப்படியல்லாமல் ஸ்வயம்ப்ரயோஜன கைங்கர்யமாகத் திருநாமத்தைச் சொல்லுகையாலே, அர்த்தானுஸந்தானத்துடனே திருநாமஞ் சொல்லுவேன் என்கிறார். எந்தத் திருநாமத்தைச் சொல்லுவீர்? எனில்: (ஆயிரம் பேர்) ஸஹஸ்ர நாமத்தையும் சொல்லுவேன். இங்கு ஸஹஸ்ர நாமத்தைச்சொன்னது "பேருமோராயிரம் பிற பல உடைய எம் பெருமான்" [திருவாய் 1-3-4] ஆன அவனுடைய மற்றுள்ள திருநாமங்களுக்கும் உபலக்ஷணம். பிரயோஜநாந்தரங்களுக்காகத் திருநாமம் சொல்லுகிறவர்கள் இன்ன திருநாமத்தைச் சொன்னால் இன்ன பலன் கிடைக்கும் என்று ஆராய்ந்து அத்திருநாமத்தை ஸங்கீர்த்தனம் செய்வர். இவர் அப்படியல்லாமல் ஸ்வயம்ப்ரயோஜன கைங்கர்யமாகத் திருநாமத்தைச் சொல்லுகையாலே, அவனுடைய திருநாமங்களையெல்லாம் சொல்லுவேன் என்கிறார். சொல்லும் காலம் எது? என்னில்: (ஆதி நடு அந்திவாய் வைகலும்) இரவிலும் பகலிலும் முதல்நடு முடிவு என்னும் வாசியில்லாமல் எல்லாக்காலங்களிலும் திருநாமஞ்சொல்லுவேன். இரவில் தூக்கமில்லையோ? எனில், "கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" [திருவிருத்தம்97] என்கிறபடியே எல்லிபகல் என்னாது எப்போதும் பகவதநுபவ கைங்கர்யங்களிலேயே போதுபோக்கும் கழியமிக்கதோர் காதலை உடையவரன்றோ இவர். 'வைகலும்' என்று இரவும் பகலுமான இரு பிரிவையும் 'ஆதி நடு வந்தி' என்று அவ்விருபிரிவிலும் எல்லாக்காலத்தையும் குறிக்கின்றன. அன்றிக்கே,

(ஏய்ந்த பிறையித்யாதி) பிறைபோலே ஏந்தின கொம்பை யுடைத்தாய், தர்ஶநீயமான கண்ணையுடைத்தான குவலயா

நடுவும், அந்தியுமான ஸர்வகாலங்களிலும், ஏதேனுமாகக் கிட்டின பூக்களை அடைவுகெடப் பணிமாறி, இன்ன திரு நாமம் என்று ஒரு நியதியற. குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான ஆயிரம் திருநாமத்தையும் அநுஸந்தித்துக் கொண்டு சொல்லிநிற்பன்.

'வைகலும்' என்பதாலேயே எல்லாக்காலத்தையும் குறித்துவிடலா மாகையாலே. "ஆதி நடுவந்திவாய்" என்று முதல், நடுவு, முடிவு என்னும் எல்லா நிலைகளையும் குறிக்கிறதாகவுமாம். இவ்விரு நியமமின்மையும் தேசநியம ப்ரகாரநியமங்களின்மைக்கும் உபலக்ஷணம்.

"ஆஸீநா வா ஶயாநா வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா |
நமோ நாராயணாயேதி மந்த்ரைகஶரணா வயம் ||"

[எங்காவது இருக்கும்போதும், படுக்கும்போதும், நிற்கும்போதும் அஷ்டாக்ஷர மந்திரத்தையே பற்றிநிற்போம் நாம்.]

"ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேளநமேவ வா |
வைகுண்டநாமக்ரஹணமஶேஷாகஹரம் விதுः ||"

[ஸங்கேதச்சொல்லாகவோ, பரிஹாஸவார்த்தையாகவோ, பொரு ளற்ற பதமாகவோ, அவமதிப்புப்பேச்சாகவோ வைகுந்தனின் திரு நாமத்தைச்சொல்வது எல்லாப்பாபத்தையும் அழிக்குமென்றறிகிறார் கள்.]என்று எந்ததேசகாலத்திலும் எந்நிலைகளிலும் எவ்விதத்திலும் சொல்லக்கூடியதன்றோ திருநாமம். ஒரு பிரயோஜனத்திற்காகத் திருநாமஞ் சொல்லுகிறவர்களாயிருந்தால் இன்னகாலத்தில் இன்ன தேசத்தில் இன்ன நிலையில் இன்ன விதத்தில் திருநாமஸங்கீர்த்தனம் செய்தால்தான் பூர்ண பலன் கிடைக்கும் என்று ஆராய்ந்து அறிந்து அப்படித் திருநாமஸங்கீர்த்தனம் செய்வர். இவர் அப்படியல்லாமல் ஸ்வயம்ப்ரயோஜன கைங்கர்யமாகத் திருநாமத்தைச் சொல்லுகை யாலே தேசகாலாவஸ்தாப்ரகார நியமங்களறத் திருநாமத்தைச் சொல்லுவேன் என்கிறார். நஞ்சீயர் பட்டரை "அபரிசுத்தனாயிருந்து கொண்டு திருநாமம் சொல்லலாமோ?" என்று கேட்க, "கடலிலே நீராடப்போகிறவன், பரிசுத்திக்காக முதலில் ஒரு உப்புக் குட்டையிலே நீராட வேண்டுமா? பல நன்மைகளையும் தரக்கூடிய இது முதலில் பரிசுத்தியைத் தாராதோ? ஆகையால் ஒரு நியதியும் தேவையில்லை"என்று அருளிச்செய்தார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

பீடித்தை முடித்த என்னுடைய ஸ்வாமிக்கு. (ஆட்படத் துணிந்த யான் ஆய்ந்துரைப்பன்) அவன் ப்ரதிபந்தகம் போக்க, நானடிமைசெய்தேனென்கிறார். 73.

---

ஆக, இதுவரையில் வாசிககைங்கர்யம் கூறப்பட்டது; இனி, காயிககைங்கர்யத்தைக் கூறுகிறார்,—(வாய்ந்த மலர் தூவி)கைக்குக் கிடைத்த பூவையெடுத்து, இன்ன முறையிலே புஷ்பங்களை ஸமர்ப்பிக்கவேணும் என்று விதிக்கும் சாஸ்திரங்களிற்கூறியபடியல்லாமல்,தனக்குத்தோன்றியபடி முறைகெடப் புஷ்பங்களைத்தூவி. ஒரு பிரயோஜனத்திற்காகப் புஷ்பங்களையிடுகின்றவரானால் சிறந்த புஷ்பங்களையெடுத்து சாஸ்திரஞ்சொன்ன முறையிலே ஸமர்ப்பிக்க வேண்டும். இவர் அப்படியல்லாமல் ஸ்வயம் ப்ரயோஜனகைங்கர்யமாகப் புஷ்பங்களை இடுகிறாராகையாலே, கைக்குக்கிடைத்த பூக்களையெடுத்து,"அத்யந்த பக்தியுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ சக்ரம:" [பக்திமிகுந்தவனுக்கு சாஸ்திரவரம்புகளும்,முறைகளும் கிடையாது.] என்கிறபடியே முறைகெடத்தூவினேன் என்கிறார்.

இனி, இப்படி முறைகெடச்செய்யும் கைங்கர்யங்களையும் ஏற்றுக்கொள்ளும் ஆஶ்ரிதவாத்ஸல்யமுடையவன் என்பதையும், அவர்களுடைய கைங்கர்யத்துக்கு ஏற்படும் இடையூறுகளைப் போக்குகிறவன் என்பதையும் காட்டிக்கொண்டு தன் அத்யவஸாயமாகிற மானஸகைங்கர்யத்தையும் வெளிப்படுத்துகிறார்,— (ஏய்ந்த பிறைக் கோட்டுச் செங்கண் கரி) வெண்மை, பிரகாசம், வளைவு முதலான குணங்களாலே பிறைச்சந்திரனை ஒத்திருக்கும் தந்தங்களையும், சிவந்த கண்களையுமுடைய கஜேந்திராழ்வான். ஆழ்வானிடமுள்ள அன்பாலே, அழகிய தந்தங்களிலும், கண்களிலும் ஈடுபடுகிறார். அன்றிக்கே, தந்தங்களைச் சொன்னதால், கோபத்தாலே ஹிம்ஸிக்க வல்ல ஆயுதத்தை உடம்பிலேயே பெற்றிருப்பவனென்றும், 'செங்கண்' என்றதால், கோபத்தாலும், "பிடிசேர்களிறு" [முதல் திருவ 97] என்கிறபடியே பெண்யானையிடம் காமத்தாலும் சிவந்திருக்கும் கண்ணையுடையவன் என்றும் கூறுகிறாராகவுமாம். 'கரி' என்று இவனுடைய பிறப்பில் தாழ்மையும் அறிவற்ற மிருகம் என்பதையும் காட்டுகிறார். இப்படி ஜாதியாலும், ஒழுக்கத்தாலும், அறிவாலும் எத்தனையேனும் தாழ்ந்தவர்களாலும் ஆஶ்ரயிக்கத் தக்கவன் ஸர்வேஶ்வரன் என்று கருத்து. (கரி விடுத்த பெம்மான்) அந்த கஜேந்திராழ்வானை, அவன் ஸர்வேஶ்வரனுக்குக் கைங்கர்யம்

அன்றிக்கே, சேர்ந்த பிறைபோலேயிருந்துள்ள கொம்புகளையும்,சிவந்த கண்களையும் உடைத்தான குவலயாபீட₃த்தை நிரஸித்தபடியாகவுமாம். அப்போது தம் விரோதி₄யை நிரஸித்தபடிக்கு த்₃ருஷ்டாந்தம்; மற்றப்போது மற்றுள்ள ஆஶ்ரித விஷயத்தில் வத்ஸலனாய், அவர்கள் ஆபத்தை நீக்கும்படிக்கு த்₃ருஷ்டாந்தம். 73.

---

செய்வதற்காகக் கையில் எடுத்த பூக்களில் ஒன்றும் கீழே விழாதபடி, முதலையின் வாயிலிருந்து மெள்ள விடுவித்தருளின ஸர்வேஶ்வரன். (பெம்மான்) வெங்கண் வேழமாகிற கஜேந்திரன் 'மூலமே' என்று கூவியழைத்தபோது, மற்றுள்ள தேவதைகளெல்லாம் "நாஹம் நாஹம் ந சாஹம்" என்று 'நானில்லை நானில்லை' என்று கையொழிந்தபோது,தானே ஆதிமூலப்பொருள் என்பதைக்காட்டிக் கொண்டு தோன்றிய ஸர்வேஶ்வரனன்றோ இவன் என்று கருத்து. (இறை) என் ஸ்வாமி. தடைநீக்கி அடியானைக்காத்த இச்செயலாலே என்னை எழுதிக்கொண்டவன். (இறைக்கு ஆட்படத்துணிந்தயான்) அந்த ஸர்வேஶ்வரனுக்குக் கைங்கர்யம் செய்ய மனவுறுதி பூண்ட நான், 'ஆதிநடுவந்திவாய் வைகலும் வாய்ந்த மலர்தூவி ஆயிரம் பேர் ஆய்ந்துரைப்பன்' என்று கீழோடேகூட்டிப் பொருள் கொள்வது. (துணிந்த) இது மாநஸகைங்கர்யத்தைக் காட்டுகிறது. துணிவு கைங்கர்யமாகுமோ? எனில்:' 'மதுவார் தண்ணந்துழாயான் முதுவேத முதல்வனுக்கு எதுவேது என் பணி? என்னாததுவே ஆட்செய்யுமீடே" [திருவாய்1-6-2] என்கிற ரீதியிலே துணிவும் கைங்கர்யமாகும்.

"ஏய்ந்த பிறைக்கோட்டு" என்று தொடங்கிக் குவலயாபீடத்தை நிரஸித்த விருத்தாந்தத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (ஏய்ந்தபிறைக்கோட்டுச் செங்கண் கரிவிடுத்தபெம்மான்)ஒன்றுக்கு இரண்டாகச் சேர்ந்திருந்துள்ள பிறைச்சந்திரனைப்போல் கூர்மையுடைய தந்தங்களாகிற ஆயுதங்களை உடம்பிலேயே பெற்றிருப்பதாய், மதமூட்டப்பெற்றிருக்கையாலும், ஜாதிக்குரிய செருக்கினாலும் சிவந்திருக்கும் கண்களையுடையதான குவலயாபீடமான யானையை உயிர் விடுவித்த ஸ்வாமி. (இறை) இப்படியே என்னுடைய கைங்கர்ய விரோதிகளையும் அழித்தருளி, என்னை எழுதிக்கொண்டான் என்று கருத்து. 73.

74. யானே தவஞ்செய்தே னேழ்பிறப்பு மெப்பொழுதும்
யானே தவமுடையே னெம்பெருமான்— யானே
இருந்தமிழ்நன் மாலை யிணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழ னல்லேன் பெரிது.

எம்பெருமான்-என் ஸ்வாமியே! ஏழ் பிறப்பும்-எல்லாப் பிறப்புகளிலும், எப்பொழுதும் - எல்லா நிலைகளிலும், தவம் செய்தேன்—தவம் புரிந்தவன், யானே—நானே; தவம் உடையேன் யானே—அந்தத் தவத்தின் பலனைப்பெற்ற வனும் யானே; இரு தமிழ் நல் மாலை-சிறந்த தமிழ்மொழி யிலாகிற நல்ல சொல்மாலைகளை, இணை அடிக்கே-(உனது) இருதிருவடிகளுக்கே, சொன்னேன்—சூட்டினேன்; பெரு தமிழன்—பெரிய தமிழ்க்கலைகளில் வல்லவனாய், பெரிது— மிகவும், நல்லேன்—சிறப்புடையவனாயிருப்பவன், யானே— அடியேனே.

பெரி வ்யா:—(யானே தவஞ்செய்தேன்) நானே தபஸ்ஸு பண்ணினவனாகிறேன். (யானே தவமுடையேனெம்பெருமான்)

---

அவ:— இப்படி கைங்கர்யம் பண்ணுகையால் வந்த ஹர்ஷத்தாலே, 'அவனுக்கு ஸத்ருஶமாகக் கவிபாடும்படி யான ஸுக்ருதம் பண்ணினேன் நானே' என்கிறார்.

உரை:—இவ்வாத்மாவை ஸ்வரூபாநுரூபமாகத் திருவடி களிலே அடிமைகொள்ளுகைக்குரிய என்னுடைய நிரு

---

74. அவ:— இப்படி முக்கரணங்களாலும் ஸர்வதேச ஸர்வ கால ஸர்வாவஸ்தோசிதஸகலவித கைங்கர்யங்களையும் பண்ணு கையாலே வந்த ஆனந்தத்தாலே, 'அவன் பெருமைக்குத் தக்க கவிபாடும்படியான புண்ணியமுடையவன் யானே' என்கிறார். "வீற்றிருந்தேழுலகும்" [ திருவாய் 4-5] என்னும் திருவாய்மொழி இப்பாசுரத்துக்கு விவரணமாயிருக்கும்.

வ்யா:— (யானே தவஞ்செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்) உன்னுடைய திருவடிகளிலே ஸர்வதேசஸர்வகால

தபஸ்ஸினுடைய ப₄லமுடையேனும் நானே. தபஸ்ஸும் தபஸ்ஸினுடைய ப₄லமும் உடையவன் நானே என்கிறது; எத்தாலே? என்னில்; (யானேயித்யாதி₃) விலக்ஷணமான

---

பாதி₄கஶேஷியானவனே! ஸகலஜன்மங்களிலும், அதுதன்னில் எல்லா அவஸ்தை₂களிலும் உன் திருவடிகளிலே வாசிக கைங்கர்யம் பண்ணுகையாகிற இப்பேற்றுக்கு அடியான தபஸ்ஸைப் பண்ணினேன் நானே; பண்ணின அந்தத் தபஸ்ஸால் ப₂லிக்கும் ப₂லத்தைப் பெற்றுடையேனும் நானே; அந்தத் தப:ப₂லமாக வந்த லக்ஷணலக்ஷ்யங்களிற் குறைவற்றிருக்கும் பெருமையையுடையதாய், ஸர்வாதி₄காரமாய், அத்யந்தவிலக்ஷணமானத்₃ராவிட₃ஸந்த₃ர்ப்ப₄ங்களை, சேர்த்தி

---

ஸர்வாவஸ்தை₂களிலும், உசிதமான ஸகலவித₄ கைங்கர்யங்களையும் செய்கைக்குக் காரணமாகப் பல ஜன்மங்களில் எல்லா நிலைகளிலும் பெரும் தவத்தைப் பண்ணினவன் யானே. "தவம் செய்தேன்" என்றிருக்கையாலே, இங்கு தவமாவது—"ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதி₄பி₄:। நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப₄க்தி: ப்ரஜாயதே ||" என்கிறபடியே கணக்கற்ற ஜன்மங்களில் செய்த நற்செயல்களாகவுமாம். அன்றிக்கே, 'பாக்யம் பெற்றேன்' என்று பொருளாய், "விதிசூழ்ந்ததால்" [திருவாய் 2-7-6] "சொல்மாலைகள் நன்று சூட்டும் விதி எய்தினம்" [திருவாய் 4-5-7] என்கிறபடியே பகவத் க்ருபையைப் பெற்றதையே கூறுகிறாராகவுமாம். (யானே தவமுடையேன்) அந்தத் தவத்திற்குப் பலனான கைங்கர்யத்தை இன்று பெற்றிருப்பவனும் யானே. (எம்பெருமான்) ஸ்வரூபாநுரூபமாகத் திருவடிகளிலே யான் கைங்கர்யம் செய்யலாம்படி எனக்கு இயற்கையில் ஶேஷியாய் (ஸ்வாமியாய்) இருப்பவனன்றோ நீ. "இப்படிப் பெருந்தவப்பயனாய் நீர் செய்யும் கைங்கர்யங்களில் ஒன்றைச் சொல்லிக்காட்டீர்" என்ன,— (இருந்தமிழ் நன்மாலை சொன்னேன் யானே) இலக்கண இலக்கியங்களில் குறைவற்றிருக்கையாகிற பெருமையை உடையதாய், சிலரே அத்₄யயனம் செய்யலாம்படி வடமொழியில் இல்லாமல் அனைவரும் கற்கலாம்படி தமிழிலிருப்பதாய், 'கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே' [திருவாய் 10-6-11] என்று நித்யஸூரிகளாலும், "விதி₄ப்ரயுக்தாம் பூஜாம் ச க்₃ருஹ்ணாதி

தமிழாகிற மாலையைச் சேர்ந்த திருவடிகளிலே சொன்னேன்; ஆகையால் (பெருந்தமிழன்) பெரிய தமிழன். (பெரிது நல்லேன்) மிகவும் நல்லேன். 74.

---

யழகையுடைத்தான தேவர் திருவடிகளுக்கே சொல்லப் பெற்றேன் நானே. த்₃ராவிட₃ ஶாஸ்த்ரத்தில் என்றனை அவகா₃ஹித்தார் இல்லையென்னும்படி அதில் தே₃ஶிகனு யிருப்பான் ஒருத்தன்; அவ்வளவன்றிக்கே, "एतत्साम गायन्नास्ते" (ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே) என்று பாங் கான நிலத்திலேயிருந்து பாடியாடி அடிமை செய்யக்கடவ நித்யமுக்தரைப்போலன்றிக்கே, இங்கேயிருந்து கவிபாடப் பெறுகையாலே, அவர்களிலும் மிகவும் நல்லனுயிருப்பா னொருத்தன். 74,

---

ஶிரஸாஸ்வபாய்"[ஸாத்வதம்][முறைப்படி செய்யும் கைங்கர்யத்தை எம்பெருமான் தலையாலே ஏற்கிருன்.] "சொல்மாலைகள் ஏற்ற நோற்றேற்கு" [திருவாய் 4-5-1] என்று எம்பெருமானும் தலையாலே ஏற்றுக் கொண்டாடும்படியான நன்மையையுடைய சொல்மாலைகளைச் சொன்னவன் யானே. (மாலை) இவருடைய பாசுரங்கள் திருவடிகளுக்கு அலங்காரமாயிருக்கையாலே 'மாலை' என்கிருர். மாலை சாத்தினது எதற்கு? எனில், (இணையடிக்கே சொன்னேன்) கைக்குழந்தைக்குத் தாய்முலைபோலே மோக்ஷ ப்₄தனுக்கு ப்ராப்யப்ராபகமாய் ஒன்ருேடொன்று சேர்ந்திருக்கும் திருவடியிணைக்கே சொன்னேன். (யானே) ஸம்ஸாரத்திலுள்ளவர் கள் பெரும்பாலும் உண்டியே உடையே உகந்திருப்பவராயிருக்கை யால், 'யானே இப்பேறுகள் பெற்றேன்' என்று ஏகாரமிட்டுச் சொல்லுகிருர். (பெருந்தமிழன்) தமிழிலக்கண இலக்கிய நூல்களில் என்னைப்போல் உட்புகுந்தார் இல்லையென்னும்படி பெரும் தமிழனு யிருப்பேன் யானே. (பெரிது நல்லேன்) பெருந்தமிழனுயிருந்தபோ திலும், பகவத் விஷயத்தில் ஈடுபாடில்லாத வெறுந்தமிழனுயிராமல், அதில் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் நல்லேனுயிருப் பேன். அவனைத் துதிப்பதற்குப் பாங்கான பரமபதத் திலிருந்து, "ஏதத் ஸாம கா₃யந் ஆஸ்தே" என்று பாடியாடி அடிமை செய்யும் நித்ய முக்தரைப்போலல்லாமல், அவனைத் துதிக்கப் பொருந்த இந்நிலத்திலேயிருந்து அவனைப்

75. பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருகண் ணிளமூங்கில் வாங்கி — அருகிருந்த
தேன்கலந்து நீட்டுந் திருவேங் கடங்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை.

பெருகும்— பெருகுகின்ற, மதம்— மதநீரையுடைத்தான, வேழம்— யானையானது, மா பிடிக்கு முன் நின்று — (தனது) சிறந்த பெண் யானையின் முன்னே நின்று, இரு கண் இள மூங்கில் வாங்கி — இரண்டு கணுக்களையுடைத்தான மூங்கில் குருத்தைப்பறித்து, அருகு இருந்த தேன் கலந்து— ( அந்த மூங்கிற் குருத்தை) ஸமீபத்திலுள்ள தேனிலே தோய்த்து, நீட்டும்— (பெண்யானைக்குக் கொடுப்பதாகக்)கையை நீட்டப் பெற்ற, திருவேங்கடம் கண்டீர்— திருமலையன்றோ, வான் கலந்த வண்ணன் வரை— மேகத்தோடொத்த நிறத்தை யுடைய பெருமானுடைய (இருப்பிடமான) மலை.

---

அவ:— "'பெருகு நல்லன்' என்று கொண்டாடிச் சொன்னீர்; இப்படிப் பெருமதிப்பராயிருக்கிற நீர்தாம் ஒரு கவிசொல்லிக்காணீர்" என்ன, அப்போது விண்ணப்பம் செய்த கவிதன்னைச் சொல்லுகிறார்.

---

பாடுகையாலே அந்த நித்யமுக்தர்களிலும் மிகவும் நல்லேனு யிருப்பேன் நான். ஆழ்வார் இப்படித் தற்பெருமை பேசிக்கொள் வது தாழ்வல்லவோ? எனில்; அப்ராப்தமான இதரவிஷயங்களில் தனக்குண்டான தொடர்பைப்பற்றிப் பெருமை பேசிக்கொள்வதே தாழ்ந்ததாகையால் விலக்கத்தக்கது; ப்ராப்தவிஷயமான பகவத் விஷயத்தில் தனக்குண்டான தொடர்பின் பெருமையைப் பேசிக் கொள்வது ஸ்வரூபத்திற்குத்தக்கதேயாகையாலே தோஷமில்லை "யாவர் நிகர் அகல்வானத்தே" [திருவாய் 4-5-8] என்றும் "இல்லையெனக்கெதிர் இல்லையெனக்கெதிர் இல்லையெனக்கெதிரே" என்றும் தமக்குள்ள பகவத்பாகவதஸம்பந்தத்தைப் பார்த்துப் பெரு மையடைவதையே இயல்வாகக் கொண்டிருக்கிறார்களன்றே பெரி யோர்கள். 'நல்லேன் பெருகு' என்றும் பாடமுண்டு. 74

பெரி-அவ:-(பெருகு) '''பெரியதமிழன், மிகவும் நல்லேன்' என்று சொன்னீர்; ஒரு கவி சொல்லிக் காணும்'' என்ன: சொல்லுகிறார்.

வ்யா: - (பெருகு மதவேழம்) மதித்துச் சமைந்ததாகில் சிறிது அறிவுண்டாம்; மதம்பெருகாநின்று அறிவுகெட்ட ஸமயத்

---

உரை: — திருமலையில் திருவருவிகள் பெருக்கெடுக்குமா போலே மேன்மேலெனப் பெருகாநின்றுள்ள மதத்தை யுடைத்தான ஆனையானது எல்லா அளவிலும் தன்னை ஏவிக் கார்யங்கொள்ள வல்ல ஶ்லாக்₄யமான பிடிக்கு, 'நான் இங்

---

75. அவ:— '' 'பெருந்தமிழன் பெரிது நல்லேன்' என்று உம்மை நீரே புகழ்ந்து பேசினீர்; இப்பெருமைக்குத் தக்கபடி ஒரு கவி சொல்லும் பார்க்கலாம்'' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, உலகிற் கவிகளனைத்தையும் வெற்றிகொள்ளும் பாசுரமொன்றைப் பாடுகிறார். இப்பாசுரத்தின் சிறப்பை நோக்கி, நாலுகவிப் பெருமாளான மங்கைமன்னனும், ''வரைசெய் மாக்களிறு இளவெதிர் வளர்முளை அளைமிகுதேன் தோய்த்துப் பிரசவாரி தன் இளம்பிடிக்கு அருள் செய்யும்'' [பெரிய திருமொழி 1-2-5] என்னும் திருப்பிரிதிப் பாசுரப் பகுதியிலே இப்பாசுரத்தை விவரித்தருளினார்.

வ்யா:—(பெருகு மத வேழம்) திருமலை மேலே ஒரு திருமலை போலேயிராநின்றது; ''வரைசெய் மாக்களிறு'' [பெரியதிரு1-2-5] என்று பரகாலனருளியபடியே இந்த யானையேதிருமலைத்தொடரிலே ஒரு கருமலைபோலேயுள்ளது. இதின் மத்தகத்தினின்றும் மேன் மேலே பெருகும் மதஜலமானது, திருமலையில் சிகரங்களினின்றும் பெருகும் அருவிகளை ஒத்திருக்கின்றது. (பெருகும் மதவேழம்) மதம் தீங்கிய பிறகாவது சிறிது அறிவுண்டாகும்; மதம் பிடித்து அறிவு கெட்டிருந்த ஸமயத்திலேகிடீர் இப்படிக் காரியம் செய்தது. (மாப்பிடி) இப்படி அறிவு கெட்டிருந்த ஆண் யானையையும், அந் நிலையிலே தன் புருவநெறிப்புக்கு வசப்படுத்தும் பெருமையை உடையதாயிருந்தது பெண் யானை. ஒருவனை ஆட்டிவைக்க நினைப் பவர் அவனை ஒரு விஷயத்தைப் பற்றி இடைவிடாத தியானத்தை உடையராம்படி (ஆங்கிலத்தில் Mesmerism என்றும், தமிழில் மநோவசியம் என்றும் சொல்லப்படும் நிலையை அடைந்தவராம்படி)

திலே. (மாப்பிடிக்கு) இப்படி அறிவுகெட்டத்தை, த்₄யாநயுக்த ரைப்போலே தன்புருவம் நெறித்தவிடத்திலே கார்யங்கொள்ள வற்றுகை. (முன்னின்று) அந்தேவாஸிகளைப்போலே பிடியி னுடைய ஸ்வபா₄வத்தையறிந்து கண்வட்டத்திலே நின்று. (இருகணிள மூங்கில் வாங்கி) இரண்டு கணு வளையச்செய்தே

---

குத்தைக்குச் செய்யக்கடவ பணிவிடைகளைக் கற்பிக்க லாகாதோ? என்று வினயம் தோற்ற முன்னே வந்து நின்று இரண்டு கண்ணேறி அதுக்குத்தக்க முற்றனவுமின்றிக்கே இளையதாயிருக்கிற மூங்கில் குருத்தைச் செவ்வி குன்றுதபடி.

---

செய்து, பிறகு தம் இஷ்டப்படி அவனை ஆட்டிவைப்பதுபோலே இப் பெண் யானையும இந்த ஆண் யானையைத் தன்னையே தியானிக் கும்படி பிச்சேற்றி அறிவுகெட்ட நிலையிலும் தன் விருப்பப்படி ஆட்டிவைக்கும் வல்லமையுடையதாயிருக்கிறது என்று கருத்து. (முன் நின்று) சிஷ்யர்கள் ஆசார்யர்களின் ஸ்வபா₄வத்தையறிந்து அவர்களுடைய கண் வட்டத்தில் (பார்வைக்கு இலக்காகுமிடத் திலே) நின்று அவர்கள் உகந்தஸமயம் பார்த்து அணுகுவதுபோலே இந்த ஆண் யானையும், பெண் யானையின் முன்னே நின்று 'நான் உனக்குச் செய்யவேண்டிய கைங்கர்யங்களை நியமிக்கலாமே' என்று அடங்கியொடுங்கியிருக்கிறபடியைச் சொல்லுகிறது. "ஸர்க்கே₃ா பஸர்க்க₃ஸ்தி₂தீ: ஸ்வர்க்க₃ம் து₃ர்க்க₃திமாபவர்க்கி₃கபத₃ம் ஸர்வம் ச குர்வந் ஹரி: | யஸ்யாவீக்ஷ்ய முக₂ம் தத்₃இங்கி₃த பராதீ₄நோ விதத்₄தே₂கி₂லம்" [ஸ்ரீஸ்தவம்] [அனைத்துலகையும் படைத்து அளித்து அழிக்கும்போதும், உலகினர்க்கு ஸ்வர்க்க நரக மோக்ஷங் களைக் கொடுக்கும்போதும் பகவான் பெரியபிராட்டியாரின் திரு முகத்தை நோக்கி நின்று, அவருடைய முகக் குறிப்புக்கு வசப்பட்ட வனாகவே எல்லாக் காரியத்தையும் செய்கிறான்.] என்கிறபடியே ஸர்வேஶ்வரன் பிராட்டியிடம் நடந்துகொள்வதை நினைவுபடுத்து கிறது. (இரு கண் மூங்கில்) அதிகமான கணுக்கள் வளர்ந்து விட்டால் முற்றிப்போய், மென்மைமிக்க தன் இளம் பிடியின் தொண்டையில் இறங்காதென்று கருதி இரண்டே கண் வளர்ந்த மூங்கிலை எடுக்கிறது. (இளமூங்கில்) இரண்டு கண் வளர்ந்ததற்குரிய முற்றலும் இல்லாத மூங்கில். 'இளவெதிர்' என்றார் பரகாலனும். (இருகண் இளமூங்கில்) இப்படி இருகண் இளமூங்கிலாகில் தன்

பருவத்துக்குள்ள முற்றனவற்றிருக்கை (வாங்கி) மூங்கிலினுடைய மென்மையும் களிற்றினுடைய ஸாவதா₄நதையுஞ் சொல்லுகிறது. (அருகிருந்த தேன்) திருமஞ்சனத்துக்கு ஸம்ப₄ாரித்திருக்குமாபோலே குறைவற்றிருக்கிறபடி.(தேன்கலந்து) த்₃ரவத்₃ரவ்யங்களிரண்டும் கலந்தாற்போலேயிருக்கை. (நீட்

---

ஸாவதா₄நமாக வாங்கி அருகில் மலை முழைஞ்சுகளில் கூட்டிலே நிறைந்திருக்கிற தேனிலே மூங்கில் குறுத்தும் தேனும் தன்னிலே ஒன்றி ஒரு நீராம்படி தோய்த்து; 'உனக்கு வேண்டுவார்க்குக் கொடாய்' என்று அது அநாதரித்து

---

பருவத்துக்குச் சேரச் சிறுத்திருக்குமோ? என்னும் ஐயம் ஏற்படக் கூடும்;'இளவெதிர் வளர்முளை' என்னும் பகுதியாலே, இரு கணுக்களையேயுடைய இளமூங்கிலானாலும் திருமலையின் செழிப்பாலே மிக வளர்ந்திருக்கும் இது என்று காட்டினார் கலிகன்றி, "இளவெதிருண்டு- இளையதான மூங்கில்; அது, தன்னுடையபருவத்தின் அளவன்றிக்கே,முளைத்தபோதே அண்டப₄ித்தியிலேசென்று தட்டும்படி வளர்ந்திருக்குமாயிற்று" என்று அப்பாசுரத்தின் வியாக்கியானத்திலே, வ்யாக்₂யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்வர். (மூங்கில் வாங்கி)இப்படி இளசாயிருக்கிற மூங்கில் குருத்தை முரட்டுத்தனமாகப் பறித்தால் அது உருக்குலைந்துவிடும்; அதற்காக அதன் செவ்வி குன்றாதபடி மிக்க கவனத்துடன் அநாயாஸமாக எடுக்கிறது. மதத்தாலே அறிவுகெட்டிருக்கும் நிலையிலும் தன் பேடைக்கென்றால் மிக்க கவனத்துடன் காரியம் செய்கிறபடி. சேதனன் செய்யும் பாபத்தாலே கலங்கியிருக்கும் நிலையிலும் புருஷகாரமான பெரியபிராட்டியார் முகக்குறிப்புக்கு வசப்பட்டிருக்கும் எம்பெருமானின் நிலையை நினைவூட்டுகிறது. (அருகிருந்த தேன் "அணிமிகுதேன்" என்கிறபடியே எங்கு பார்த்தாலும் தேன்கூடு மிக்கிருக்குமன்றோ; அருகிலுள்ள அத்தகைய தேன்கூடு ஒன்றில் நிறைந்திருக்கும் தேனிலே; பெருமாள் திருமஞ்சனத்திற்கு, எல்லா திரவியங்களும் குறைவற்றிருப்பது போலே, இத்திருமலையிலும் இப்பிடிக்கு வேண்டிய போ₄க்₃ய திரவியங்கள் அருகிலேயே இருக்கின்றன. (கலந்து)மூங்கில் குருத்தும் தேனும்வெவ்வேறாகத் தோற்றாமல் திரவமான தேனும், பாலும், கலந்ததுபோலே ஒன்றாகக்கலக்கும்படி தோய்த்து (நீட்டும்) "அழகியார் இவ்வுலகம் மூன்றுக்கும் தேவி

டும்) இதுக்குக் கொடுக்கையே புருஷார்த்தமாயிருக்கிறபடி யும், அது அநாதரிக்கிறபடியும். (திருவேங்கடமித்யாதி) ''வான்

---

நிற்க. 'இத்தனையும் அங்கீகரிக்க வேணும்' என்று ஸாதரமாகக் கொடுக்கும் சிறப்பையுடைத்தான திருவேங்கடம்

---

மைதருவார் பலர் உளர் கழகம் ஏறேல் நம்பீ'' [திருவாய் 6-2-6] என்று பிரணயகலஹத்திலே பராங்குசநாயகியானவள் பெருமாளைத் தவிர்த்துபோலே, ''இத்தேன் கலந்த இளமூங்கிலை உனக்கு வேண்டிய மற்ற பிடிகளுக்குக் கொடு! இத்தனை நாளாக உனக்கு வேறாகிவிட்ட எனக்குத் தேவையில்லை'' என்று பிடியானது அத் தேன் கலந்த மூங்கிலை அநாதரித்து நிற்க. நேற்றுப் பங்குனி யுத்தரத் திருநாளிலே நம்பெருமாள் நாச்சியார் ஸந்நிதி வாசலிலே, 'நாம் கொண்டுவந்த மாலையையும் வாங்கிக்கொண்டு நம்மையும் உள்ளே விடவேணும்'' என்று தன்னாடித் தளும்பி நின்றதுபோலே, இந்த யானையும் தன் துதிக்கையிலே தேன் கலந்த மூங்கிலைத் தாங்கி 'அங்கீகரிக்கவேணும்' என்று அன்புடன் நீட்டிக்கொண்டே யிருக்கிறது; இப்படிக் கைகடுக்க நீட்டிக்கொண்டிருப்பதையே பெரும் பேறாகக் கருதுகிறது இது. ''புரிந்து மதவேழம் மாப்பிடியோடு ஊடித்திரிந்து சினத்தால் பொருது-விரிந்த சீர் வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே'' [மூன் - திருவ 45] என்னும் பாசுரத்தில் பேயாழ்வார் ஆண் யானையும் பெண்யானையும் ஊடல் முற்றிநிற்கும் நிலையை வர்ணித்தார். இவ்வாழ்வார் அது நீங்கும் நிலையை உணர்த்தி நின்றார். ''தன் இளம் பிடிக்கு அருள் செயும்'' என்று திரு மங்கையாழ்வார், நாச்சியார் ஊடல் நீங்கி, மாலையையும் பெருமானை யும் உள்ளே அழைத்துக்கொண்டதுபோலே, இப்பிடியும் ஊடல் நீங்கி, ஆண் யானையையும் அது நீட்டிய அத் தேன் கலந்த மூங் கிலையும் ஏற்றுக்கொண்டபடியைத் தெளிவாக விளக்கியருளினார். அதிலே 'தேன் தோய்த்துப் பிரசவாரி தன் இளம்பிடிக்கு அருள் செயும்' என்று அருளியதின் நயம் சுவைக்கத்தக்கது. தேனையும் மூங்கிலையும் கலந்து அப்படியே பெண் யானையின் வாயில் இட்டால் அது இளம்பிடியின் தொண்டையில் இறங்காதாகையாலே, ஆண் யானையானது அத் தேன் கலந்த மூங்கிலைப் பிடியின் வாயில் பிழியுமாம். ''அதின் வாயிலே பிழியுமாயிற்று. பருக்கை (சக்கை) தட்டுமாகில் மிடற்றுக்குக் கீழ் (தொண்டைக்குக் கீழே) இழிச்ச (இறங்க) மாட்டாதாயிற்று; அதுக்கு அடி

76. வரைச்சந் தனக்குழம்பும் வான்கலனும் பட்டும்
விரைப்பொலிந்த வெண்மல் லிகையும்—நிரைத்துக்
ஆதிக்கண் நின்ற வறிவ னடியிணையே [கொண்டு
ஓதிப் பணிவ துறும்.

கலந்த'' என்கிறது உபமாநோபமேயங்கள் ஸுஸத்₃ருʃமா
யிருக்கிறபடி. 75.

கிடீர், மேக₄த்தோடு ஸத்₃ருʃமாய்ச் சேர்ந்த வடிவை
யுடையவன் வர்த்திக்கிற மலே. 75.

இளம்பிடியாகை. தேனில் ரஸம் பெறுகைக்காக அதிலே தோய்த்
துப் பின்னை அதில் கந்தலுண்டு—கோது. அது தட்டாதபடி பிழியும்;
அதில் உண்டான பருக்கையுங்கூடப் பொருதபடியாயிற்று இதினு
டைய ப்ரக்ருதிமார்த்த₃வமிருக்கும்படி. திர்யக்குக்களுக்கும் தம்மு
டைய ரக்ஷ்யத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாயிருக்குமாயிற்று''
என்று அவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை அருளினர். (திரு
வேங்கடம் கண்டீர் வான் கலந்த வண்ணன் வரை) இச்சிறப்பை
யுடைய திருவேங்கடமல்லவோ நிறம், வண்மை முதலானவற்றில்
மேகத்தோடு ஒப்பாகிச் சேர்ந்த வடிவையுடையவன் வாழும் மலே;
''வான் கலந்த'' என்கையாலே மேகமாகிற உபமானமும், மேக
வண்ணனை உபமேயமும் மிகவும் ஒத்திருக்கின்றன என்று
உணர்த்துகிருர்.

ஆண் யானை பெண்யானைக்கு விரும்பியது கொடுத்து ரக்ஷிக்
கும் இடமான திருவேங்கட மலேயிலே வாழ்பவன்-என்று சொன்ன
துக்குக் கருத்து என்ன எனில்: '''கண்ணாவான் என்றும் மண்ணோர்
விண்ணோர்க்கு' [திருவாய் 1-8-3] என்கிறபடியே உப₄யவிபூ₄தியி
லுள்ளாரையும் இவன் திருமலேயிலே நின்று ரக்ஷிக்குமாபோலே
இத்திருமலேயிலுள்ள யானை முதலிய திர்யக்குகளுக்கும் தம்ரக்ஷ்ய
வர்க்கத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாயிருக்கும்படி; பெரிய
பிராட்டியாரும் தானுமாய் ஸம்ʃலேஷித்து இன்புற்றிருப்பவன்
அந்த ஸம்ʃலேஷத்திற்குப் பிறகு மது₄பாநகோஷ்டியாய்ச் செல்லா
நிற்குமிறே; அதுக்கு உபலக்ஷணம்'' என்ற பெரிய திருமொழி
(1-2-5) வியாக்கியானத்தை யொட்டி இரு கருத்துக்கள் உரைக்க
லாம். 75.

வரை சந்தனம் குழம்பும்-(மலய) மலையினின்றும் உண்டான சந்தனத்தின் குழம்பையும், வான் கலனும்—சிறந்த அணிகலன்களையும், பட்டும் — பட்டுப் பீதாம்பரங்களையும், விரை பொலிந்த—பரிமளம் மிகுந்த, வெண் மல்லிகையும்—வெளுத்த மல்லிகை மாலைகளையும், நிரைத்துக்கொண்டு—சேகரித்துக்கொண்டு, ஆதிக்கண் நின்ற அறிவன்-ஆதிகாலத்தில் ஸகல ஜகத்காரண பூ₄தனாய் நின்ற ஸர்வஜ்ஞனை பெருமானுடைய, அடி இணையே-இரு திருவடிகளையே. ஓதி-வாயாரத் துதித்து, பணிவது-தலையார வணங்குவது, உறும்-(சேதனருடைய ஸ்வரூபத்துக்குச்) சேரும்.

பெரி-அவ:—இப்படி ஸந்நிஹிதனானவனை ஆஶ்ரயிக்கை உறுமென்கிறது.

வ்யா:—(வரைச்சந்தனக்குழம்பும்) சந்த₃நகி₃ரியிலேயுண்டான சந்தனக்குழம்பும். (வான்கலனும்) *தேசமானவணி

---

அவ:— இப்படி வாசிகமாகக் கவிபாடி உகப்பித்த அளவன்றிக்கே, அடிமைக்கீடான உபகரணங்களைத் தேடிக் கொண்டு, வகுத்த ஶேஷியான அவன் திருவடிகளிலே அடிமை செய்யுமதுவே இவ்வாத்மாவுக்கு ஹிதமென்கிறார்.

உரை:—நல்ல ஆகரத்திலுண்டான சந்த₃னக் குழம்பும், அங்குத்தைக்கு ஸத்₃ருஶமாம்படி அடைவே எடுத்து, பெரு

---

76. அவ:—இப்படிக்கவிபாடி வாசிககைங்கர்யம் செய்வதோடு நில்லாமல், காயிககைங்கர்யமும் செய்வதற்குறுப்பாகச் சிறந்த திரவியங்களைத் தேடி வைத்துக்கொண்டு, நமக்குக் காரணனாய் ப்ராப்தஶேஷியாய், ஸௌலப்₄யஸௌஶீல்யங்களை உடையவனை அவன் திருவடிகளிலே காயிக கைங்கர்யமும் செய்வதே இவ்வாத்மாவுக்கு நிலைநிற்கும் நன்மையாகும் என்கிறார்.

வ்யா:—(வரைச் சந்தனக்குழம்பும்)அவனுடைய திருமேனியின் ஸௌகுமார்யத்தை (மென்மையை)ப் பார்த்தால் சாதாரணமான சந்தனக்குழம்பை அவனுக்கு இடலாகாது; மிகவுயர்ந்த சந்தன மரங்கள் வளரும் சந்த₃நகி₃ரியிலே உண்டான சந்தனத்தின் குழம்பையே இடவேணும். "ஸுக₃ந்த₄மேதத்₃ ராஜார்ஹம் ருசிரம் ருசிரா

கலனும். (பட்டும் விரைப்பொலிந்த வெண் மல்லிகையும்) பரி மளம்மிக்கு த₃ர்ஶநீயமான மல்லிகையும். (நிரையித்யாதி₃)

---

விலையனான ஆப₄ரணங்களும் திருவரைக்குத் தகுதியான நல்ல பரிவட்டங்களும், பரிமளம் மிக்கிருப்பதாய், கண்ணுக்கு ஆகர்ஷகமான வெளுத்த நிறத்தை உடைத்தான மல்லிகையு மாகிற இவற்றை த₃ர்ஶநீயமாய்படி நிரைய அடைவே

---

நநே| ஆவயோர் கா₃த்ரஸத்₃ருஶம் தீ₃யதாமநுலேபநம்||" [இச்சந்த னம் மேலெழுந்த மணத்தை மாத்திரம் கொண்டது; இது அரசர்க் கேயுரியது; இது நிறத்தையே உடையது. அழகியமுகமுடையவளே! எங்கள் உடம்புக்குத் தக்க சந்தனத்தைத் தருவாயாக.] என்று கண்ணன் கம்ஸனுக்குச் சாந்தளிக்கும் கூனியிடம் பிரார்த்தித்துப் பெற்ற சந்தனமேயாகவேணும். அப்படியானால் அவன் து₃ராரா த₄னோ! எனில்: அன்புடன் எதையிட்டாலும், நற்சாந்தாகக் கொள்ள வல்லவனேயவன். இருந்தபோதிலும், அவனுடைய ஸௌந்த₃ர்யஸௌகுமார்ய லாவண்யாதி₃ கு₃ணங்களைப் பார்த்தால் இவன் மிகச் சிறந்த பொருளாகத் தேடி அவனுக்கு இடுகையே இவன் ஸ்வரூபத்துக்குத் தக்கது என்று கருத்து, "பூவை வீயா நீர் தூவிப் போதால் வணங்கேனேலும் நின் பூவை வீயாம் மேனிக்குப் பூசும் சாந்து—என்நெஞ்சமே" [திருவாய் 4-3-1] என்கிறபடியே அவனையே உபாயோபேயங்களாகக் கொண்ட நெஞ்சத்தையே அவன் நற்சந்தனமாகக் கொள்வானுகையாலே, இங்கு 'வனரச் சந்தனக்குழம்பு' என்று ஸ்வாபதேசத்தில் அத்தகைய நெஞ்சைக் குறிக்கிறது. (வான்கலனும்) ஸர்வலோகேஶ்வரனான அவனுடைய பெருமைக்குத் தக்கபடி பொறுக்கியெடுக்கப்பட்டவையாய், விலை மதிப்பற்றவையான ஆபரணங்களும்; "தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே" [திருவாய் 4-8-2] என்று ஸ்வாப தேசத்தில் இது மடியேற்காதவர்களின் கைகூப்புச் செய்கையைக் குறிக்கும் என்று நம்மாழ்வார் காட்டினார். (பட்டும்) "படிச்சோதி யாடையொடும் பல்கலனாய் நின்பைம்பொன் கடிச்சோதி கலந்த துவோ" [திருவாய் 8—1—1] என்கிறபடியே திருவரை பூத்தாப் போலேயிருக்கிற நல்ல பீதாம்பரமும்; (விரைப்பொலிந்த வெண் மல்லிகையும்) பரிமளம் மிக்கிருப்பதாய், கண்ணையும், நெஞ்சையும் ஈர்க்கும் ஶுத்₃த₄மான வெண்மை நிறத்தையுடைய மல்லிகை மாலை

இதெல்லாத்துக்குங் காரணமாய் நின்று இத்தனையுஞ் செய்தானுகில் இதற்குமேல் செய்வதென்னென்னும் ஜ்ஞாநத்தையுடைய ஸர்வேச்வரனுடைய திருவடிகளையே ஏத்திப் பணிவதுறும். 76.

---

எடுத்துக்கொண்டு. இவையழிந்துகிடக்கிற ஆதிகாலத்திலே காரணமாய்க்கொண்டு நின்றவனாய், தன் பக்கல் இவன் பண்ணின அல்பானுகூல்யத்தை ஸர்வ காலமும் நினைத்திருக்கும் ஸர்வஜ்ஞனவனுடைய ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடிகளையே வாயார ஸ்தோத்ரம் பண்ணித் தலையார வணங்குவது இவ்வாத்மாவுக்கு மிகவும் சீரியது. 76.

---

களும்; "புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய் மாலையே வான் பட்டாடையும் அஃதே" [திருவாய்4-3-2] "கண்ணி எனதுயிர் காதல் கனகச்சோதி முடி முதலா எண்ணில் பல்கலன்களும் ஏலுமாடையுமஃதே" என்று பூமாலையும், வான்கலனும், பட்டும் ஸ்வாபதேசத்தில் உயிரையும், காதலையும், நற்பாமாலைகளையும் உணர்த்துகின்றன என்று நம்மாழ்வார் காட்டினார். (நிரைத்துக்கொண்டு)இவற்றைக் குறைவற எடுத்துக்கொண்டு. அவன் நம் நெஞ்சையே பூசும் சாந்தாகவும், நம் கைகூப்புச் செய்கையையும், உயிரையும், பாமாலைகளையும் வான்கலனும் பட்டும் விரைப் பொலிந்த வெண் மல்லிகையுமாகக் கொள்ளலாம்படி அவற்றை ஆக்கிக்கொண்டு என்று ஸ்வாபதேசத்தில் பொருள். இப்படிச் சிறந்த உபகரணங்களாலே ஆராதிக்கத் தகுதியை உடையவனோ இவன்? எனில், ஜக₃த்காரண பூ₄தனாய், ஸகல கல்யாணகுணங்களையும் உடையவனாகையாலே இவனே இதற்குத் தகுதியுடையவன் என்று காட்டுகிறார்.(ஆதிக்கண் நின்ற)"ந ப்₃ரஹ்மா நேஶாந:நேமே த்₃யாவாப்ருதி₂வீ ந நக்ஷத்ராணி..." (மஹோபநிஷத்) என்கிற படியே பிரமன் உருத்திரன் முதலான எச்சேதனரும் எவ்வுலகங்களும் இல்லையென்று சொல்லலாம்படி கிடந்த அன்று, "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" (மஹோபநிஷத்)என்கிறபடி தானொருவனாய் நின்றவனன்றோ இவன். 'காரணம் து த்₄யேய:'(அதர்வசிகை உபநிஷத்)'யோப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்...முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே'[ஶ்வேதாஶ்வதர உபநிஷத்]என்கிறபடியே பிரமன் முதலானவரையும் படைத்தளித்தழிக்கும் ஜக₃த்காரணப் பொருளன்றோ உபாஸிக்கவும், சரணமடையவும் தக்கது.

77. உறுங்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமன் நற்பாதம்
உறுங்கண்டா யொண்கமலந் தன்னால்-உறுங்கண்டாய்
ஏத்திப் பணிந்தவன் பேரீரைஞ் ஞூறெப்பொழுதும்
சாத்தி யுரைத்தல் தவம்.

நல் நெஞ்சே நல்ல மனமே!, உத்தமன்-புருஷோத்தம னுடைய, நல் பாதம் சிறந்த திருவடிகளை, (பணிவது) — ஆஶ்ரயிப்பது, உறும் கண்டாய்-தக்கது காண்; (அத்திருவடிகளை) ஒண் கமலம் தன்னால்-அழகிய தாமரை மலர்களினால், (சாத்திப் பணிவது)-அலங்கரித்து அர்ச்சிப்பது, உறும் கண்டாய்-நமக்கு உரியது காண்; சாத்தி-(அத்தாமரை மலர்களை கைகளாலே) ஸமர்ப்பித்து, பணிந்து-(தலையாலே) வணங்கி, ஏத்தி-வாயாரத்துதித்து, அவன் பேர் ஈர் ஐஞ்ஞூறு-அவனது ஸஹஸ்ர நாமங்களையும், எப்பொழுதும் — எல்லாக்காலமும், உரைத்தல் — ஸங்கீர்த்தனம் பண்ணுகையாகிற, தவம்-தபஸ் ஸானது, உறும் கண்டாய் — உரியது காண்.

---

இப்படி ஜகத்காரணபூ₄தனாயிருந்தால், பரத்வங்கொண்டாடி இவனிடம் அன்பற்றிருப்பனோ? எனில்; (அறிவன்) "ஸஹஸ்ராம்ஶு:" [வி-ஸ] என்று இவனிடம் உள்ள சிறு நன்மைகளையும் ஒன்றுபத்து நூறாயிரமாகக் கணக்கிட்டு எப்போதும் நினைத்திருக்கும் பேரறிவையும், அதற்குத்தக்க பேரன்பையுமுடையவன். இங்கு அறிவைச் சொன்னது அன்பு முதலான ஸகலகல்யாண குணங்களுக்கும் உபலக்ஷணம். இப்படிப்பட்டவனாயினும் கண்ணால் காணத்தகாதவனாயிருப்பனோ? எனில்: (அடியிணையே) ஒன்றுக்கொன்று ஒப்பாய், வேறோர் உபமானமில்லாத திருவடிகளையே. நம் கண்ணால் காணலாம்படி அர்ச்சாவதார பர்யந்தமான திருமேனிகளை உடையவனாயிருப்பவன் என்கிறார். கைக்குழந்தைக்குத் தாய் முலைபோலே ஶேஷபூ₄தனுக்கு த₄ாரகமாயிருப்பது திருவடிகளேயாகையால், அவற்றையிட்டுத் திருமேனியை உபலக்ஷிக்கிறார். (ஓதி) அத்திருவடிகளையே வாய்படைத்த பயன் பெறும்படி துதித்து. (பணிவது) தலைபடைத்த பயன்பெறும்படி வணங்குவதே. (உறும்) இவ்வாத்மாவுக்கு மிகவும் சிறந்தது. 76.

பெரி-வ்யா:— (உறுமித்யாதி) க்ஷுத்₃ரபதா₃ர்த்த₂ங்களினுடைய காலைப்பற்றிக்கொண்டு திரிந்த உனக்கு ஸுஹ்ருத்தானவனுடையதிருவடிகளைப்பற்றுகை உறும். (உறுமித்யாதி) அப்ரா

---

அவ:— இப்படி ஆஶ்ரயணத்திலே ஒருப்பட்டவர் அது தமக்கு இனிதாயிருக்கையாலே, 'அநுப₄வத₃ஶையிற் காட்டிலும் ஸாத₄நத₃ஶையிற் பிறக்கும் ரஸமே அமையுங்கிடாய் நெஞ்சே!' என்கிருர்.

உரை:-எனக்கு முன்னே பதறிவிழுகிற நல்ல நெஞ்சே! நாம் விமுக₂ரான த₃ஶையிலும் நம்மை நோக்கி இப்போது தன்னது பேருக அடிமைகொள்ளக்கடவ புருஷோத்தமனுடைய, யோக்₃யர் அயோக்₃யர் என்று தரம் வையாதே

---

77. அவ:— இப்படிச் சிறந்த பொருள்களைக்கொண்டு எம்பெருமானை ஆஶ்ரயிக்கத் தொடங்கியவர், அது தமக்கு மிக இனிதாயிருக்கையாலே, 'அநுப₄வ வேளையிற்காட்டிலும், ஆஶ்ரயண வேளையிற் பிறக்கும் ரஸமே போதுமானது' என்று நெஞ்சைக் குறித்து அருளிச்செய்கிருர்.

வ்யா:—(உறுங்கண்டாய் நன்னெஞ்சே) "முந்துற்ற நெஞ்சே" [பெரியதிருவ-1] "என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சம் தன்னை அகல்விக்கத் தானும் கில்லான் இனி" [திருவாய் 1—7—8] என்கிறபடியே பகவத்விஷயத்தை ஆஶ்ரயிப்பதில் என்னிலும் முன் நிற்கும் நெஞ்சே! அத்தகைய உனக்கு எம்பெருமானின் திருவடிகளைப் பற்றுவதே தக்கது என்பதை உபதேசிக்க வேண்டுமோ? இது அப்பிள்ளை நிர்வாஹம். 'நன்னெஞ்சே' என்றதை விபரீதலக்ஷணையாகக் கொண்டு, 'அநாதிகாலமாகத் தீமையே செய்யும் மிகத்தாழ்ந்த காமினிகளின் காலைப் பற்றிக்கொண்டு திரிந்த உனக்கு, இயற்கையிலேயே எல்லாவுறவுமாயிருந்துகொண்டு எல்லா நன்மையையும் செய்யும் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைப் பற்றுவதே தக்கது என அறிவாய்' என்பதாகவும் கொள்ளலாம். இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். (உத்தமன் நற்பாதம்) நாம் அவனை அறியாமலும் துவேஷங்கொண்டுமிருந்த நிலைகளிலும் நம்மை ரக்ஷித்துவந்து, இப்போது நம்மை அடிமைகொண்டு, இவ்வளவு செய்ததையும் தம்பேருக நினையாமல் தன் பேருக நினைக்கும் மிக மிகச் சிறந்தவனுடைய மிகச் சிறந்த திருவடிகளன்றே

க்ருத புஷ்பம் தேடிப்போகவேண்டா. (உறுமித்யாதி) ஆஶ்ரய ணீய வஸ்துதன்னிலும் ஆஶ்ரயணந்தானே உறும். 77.

---

எல்லாருக்கும் பற்றலாம்படியான நன்மையையுடைய திரு வடிகள் சாலச்சீரியதொன்று கிடாய்! இப்படியிருக்கிற அவனு டைய திருவடிகளை அழகிய தாமரைப்பூவாலே வருத்தமறக் கிட்டி ஆஶ்ரயிக்கலாம் கிடாய்! வாயாலே ஸ்துதித்துத் தலை யாலே வணங்கி அவனுடைய குணசேஷ்டிதாதிகளுக்கு

---

இவை. இவற்றைப் பணிவது மிகவும் தகும் என்று கூட்டிக்கொண்டு பொருள்கொள்வது. (உத்தமன் நற்பாதம்) உலகிலுள்ளார் அனைவரி லும் மிகமிகச் சிறந்தவன் அவன். அவனிலும் சிறந்தவை அவனு டைய திருவடிகள். பாபிகளை விலக்கி, நல்லோர்களையே ஏற்கும் தன்மை அவனுக்குண்டு. அப்படியில்லாமல் தகுதியுடையவர், தகுதியற்றவர் என்னும் பாகுபாடில்லாமல் அனைவரையும் திருத்தி உய்விக்கவல்லவையன்றோ இத்திருவடிகள். பல பல நாழஞ்சொல் லிக் கேட்பார் செவி சுடும் கீழ்மை வசவுகளே வைத சிசுபாலனுக்கும் அந்திமஸமயத்தில் 'அலவலமை தவிர்த்த அழகன்' [பெரியாழ்திரு 4-3-5] என்கிறபடியே தன் அழகாலே த்வேஷம் நீங்கும்படி திருத்தி 'திருவடி தாட்பால் அடைந்த' [திருவாய் 7-5-3] என்கிறபடியே சேர்த்துக்கொண்டது திருவடிகளன்றோ. இதனாலன்றோ "வண்புகழ் நாரணன் திண்கழல்" [திருவாய் 1-2-10] என்று ஆழ்வாரும், "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயி ருக்கும்" [முமுக்ஷுப்படி 146] என்று பிள்ளையுலகாசிரியரும், "நின் னிற் சிறந்த நின் தாளிணையவை" [பரிபாடல் 3] என்று சங்கத்தமிழ ரும் உத்கோஷித்தனர். அவனுடைய திருவடிகளை ஆஶ்ரயிப்பது மிகவும் அருமையாயிருக்குமோ? எனில், மிக எளிது என்கிறார்— (உறும் கண்டாய் ஒண்கமலம் தன்னால்) 'சாத்திப் பணிவது' என்று கூட்டிக்கொண்டு, ஒளிபொருந்திய தாமரைமலராலே அவன் திரு வடிகளை அலங்கரித்து எளிதில் கிட்டி வணங்குவது தக்கதுகாண் என்று பொருள்கொள்ளவேண்டும். அப்ராக்ருதனை இவனுக்கு அப்ராக்ருத புஷ்பத்தைத் தேடிப்போகவேண்டியதில்லை, எளிதில் கிடைக்கக்கூடிய அழகிய தாமரைப்பூவே இவனை ஆஶ்ரயிக்கப் போதுமானது என்று கருத்து. ஆக, இதுவரையில் காயிகமான செயல் கூறப்பட்டது. இனி, வாசிகமான செயல் கூறப்படுகிறது: (சாத்திப் பணிந்து) முற்கூறியபடி ஒளிபொருந்திய கமலமலராலே

78. தவஞ்செய்து நான்முகனே பெற்றான் தரணி
நிவந்தளப்ப நீட்டிய பொற்பாதம்—சிவந்ததன்
கையனைத்து மாரக் கழுவினான் கங்கைநீர்
பெய்தனைத்துப் பேர்மொழிந்து பின்.

---

வாசகமான ஆயிரம் திருநாமங்களையும் ஸர்வகாலத்திலும் எங்கும் ப்ரஸித்₃த₄மாம்படி சொல்லுகையாகிற தபஸ்ஸு, ''ஸுஸுகம் கர்த்தும்'' (ஸுஸுக₂ம் கர்த்தும்) என்னும்படி அத்யந்தஸரஸமாயிருப்பதொன்றாகையாலே மிகவும் சீரியது கிடாய்! திருநாமஞ் சொல்லுகையைத் தவம் என்கிறது ஈஶ்வரன் கருத்தாலே. 77.

---

அவன் திருவடிகளைக் கைகளாலே அலங்கரித்துத் தலையாலே வணங்கி, மிகவினிதாயிருக்கையாலே மறுபடியும் அநுவதிக்கிறார். (ஏத்தி) உடம்புபடைத்த பயன்பெறும்படி சாத்திப்பணிந்ததோடல்லாமல், வாய்படைத்த பயன் பெறும்படி வாயாரத்துதித்து. துதிப்பதற்கு விஷயமுண்டோ? என்ன, (அவன் பேர் ஈரைஞ்ஞூறு) அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிசேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்கள் உண்டு என்கிறார். (அவன் பேர் ஈரைஞ்ஞூறெப்பொழுதும் உரைத்தல் தவம் உறும் கண்டாய்) அவனுடைய ஸஹஸ்ரநாமங்களையும் எல்லாக்காலத்திலும் அனைவருமறிய உரைப்பதாகிற தவத்தைச் செய்வது தக்கதுகாண்! தவமாவது ஸாதனம். (தவம் உறும்) ஸாத₄னமாயிருந்தபோதிலும் 'ஸுஸுக₂ம் கர்த்தும்' [கீதை] [அனுஷ்டிக்கும்போதே மிகவினிதாயிருப்பது] என்றாப்போலே மிகச் சுவையுடையதாயிருக்கும் திருநாம ஸங்கீர்த்தனத்தைச் செய்வது தக்கதுகிடாய். உபாயபுத்தியுடன் திருநாமத்தைச் சொல்லுமிடத்தில் சேதனன் ஈஶ்வரன் இருவர் கருத்தாலும் திருநாம ஸங்கீர்த்தனத்தில் உபாயத்வம் உண்டு. ஸ்வயம்பிரயோஜனமாகவோ, யாத்₃ருச்சி₂கமாகவோ, ஸங்கேதமாகவோ, பரிஹாஸமாகவோ, பொருளற்ற சொல்லாகவோ, ஹேளனமாகவோ இவன் திருநாமத்தைச்சொன்னாலும் 'நம்பேரைச் சொன்னான்' என்று அவன் கணக்கிட்டுவைப்பன்; ஆகையால் அப்போதும் இச்சேதனன் நினைவாலே அதற்கு உபாயத்வமில்லாவிடிலும், ஈஶ்வரன் நினைவால் ப₂லகரணோபாயத்வமுண்டு. அத்தையிட்டுத்திருநாம ஸங்கீர்த்தனத்தைத் தவம் என்கிறார். 77.

தரணி— பூமியை, அளப்ப நிவந்து— தாவியளப்பதாகத் தொடங்கி த்ரிவிக்ரமனாக வளர்ந்து, நீட்டிய-உயரத் தூக்கிய, பொன் பாதம்— சிறந்த திருவடியை, கங்கை நீர் பெய்து— கங்காதீர்த்தமாகப் பெருகின தர்மமாகிற தீர்த்தத்தைப் பணிமாறி, அனைத்து பேர் மொழிந்து—(பரமனுடைய) எல்லாத் திருநாமங்களையும் வாயாரச்சொல்லி, பின்-பிறகு, தன்சிவந்த கை அனைத்தும ஆர — தனது அழகிய கைகளெல்லாம் பயன் பெற்றதாகும்படி, கழுவினான்-திருவடி விளக்கியவனான, நான்முகனே-பிரமனொருவனே, தவம் செய்து பெற்றான்-(திருநாம ஸங்கீர்த்தனமாகிற) தவத்தின் பயன் பெற்றவனாயினன்.

பெரி-அவ:—(தவஞ்செய்து) ஆஶ்ரயணீய வஸ்து கை புகுந்தபின்பு, ஆஶ்ரயித்த ப்₃ரஹ்மாவை ஒப்பாருண்டோவென்கிறது.

வ்யா:-(தவமித்யாதி) தபஸ்ஸு பண்ணினானும் பலம்பெற்றானும் ப்₃ரஹ்மாவே. (தரணீயித்யாதி) அந்யார்த்த₂மாக ப்ரவர்த்திக்கச்

---

78. அவ:- இப்படியிருக்கிற தபஸ்ஸை அநுஷ்டித்து ஸர்வேஶ்வரன் திருவடிகளை வருத்தமற லபி₄க்கப் பெற்றான் சதுர்முக₂ன் ஒருவனுமேகிடீர் என்கிறார்.

உரை:—பூமியை வளர்ந்து அளக்கைக்காக நீட்டின ஶ்லாக்₄யமான திருவடிகளை,''गृहीत्वा धर्मपानीयं'' (க்₃ருஹீத்வா த₄ர்மபாநீயம்) என்கிறபடியே ப₄க₃வத்ப₄க்தியாலே உருகி

---

78. அவ:- இப்படியிருக்கும் தவத்தை அனுஷ்டித்து ஸர்வேஶ்வரன் திருவடிகளை எளிதில் பெற்றவன் நான்முகனேயன்றோ என்கிறார்.

வ்யா:- (தவஞ்செய்து நான்முகனே பெற்றான்) திருநாம ஸங்கீர்த்தனமாகிற இத்தவத்தைச் செய்து நான்முகன் ஒருவனே பெற்றான். பெற்றது எதையெனில்: (பொற்பாதம்) பொன்போலே ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாத₄னமாகவும், ஸ்வயம்போ₄க்₃யமாகவுமிருக்கும் திருவடியைப் பெற்றான். பெற்றதுதான் எப்போது

செய்தே பலம் பெற்றானென்கிறது. (சிவந்தவித்யாதி) அநேகம் கை படைத்தத்தாலுள்ள லாபம பெற்றான். (கங்கை நீர் பெய்தித்யாதி)' गृहीत्वा धर्मपानीयं'' (க்₃ருஹீத்வா த₄ர்மபாநீயம்)

விழுந்த த₄ர்மமயமான கங்காஜலத்தைப் பணிமாறி, அவனுடைய எல்லாத் திருநாமங்களையும் வாய்படைத்த ப்ரயோஜநம் பெறச் சொல்லித் தன்னுடைய சிவந்தழகிய கைகள் அடங்கலும் உத்பத்தி ப்ரயோஜநம் பெற்றுப் பூர்ணமாயபடியாக விளக்கினன். திருவடிகளை விளக்கப் பெற்ற பின்பு

எனில்; (தரணி நிவந்தளப்ப நீட்டிய பொற்பாதம்) திரிவிக்கிரமனுனபோது, பூமியைத் தாவியளப்பதற்காக நீட்டின அழகிய திருவடியை. இந்திரன் காரியம் செய்வதற்காகத் திருவுலகளந்தருளிய போது, பிரமன் பயன்பெற்றுப்போனுன். இந்திரன் பெற்றது கோதான த்ரைலோக்யராஜ்யம்; பிரமன் பெற்றது ஸாரமான பொற்பாதம். "நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக்கமலந்தன்னை அயன்" [முதல் திருவ 56] என்கிறபடியே திருநாபிக்கமலத்திலே பரமபுருஷனிடமிருந்து நேரே பிறந்தவனுயிருந்தும், நெடுங்காலமாகக் காணுதிருந்த திருவடியை இன்று காணப்பெற்றான். (நான்முகனே தவம் செய்து பொற்பாதம் பெற்றான்) இவனைப்போல் இப்படித் தவம் செய்தாருமில்லை; இப்படிப் பயன்பெற்றாருமில்லை. பொற்பாதத்தைப் பெற்றபின் இவன் செய்தது என்னென்னில், காயிகவாசிக கைங்கர்யங்களைச் செய்தான் என்கிறார் — (கங்கை நீர் பெய்து)

"த்₃ரவீபூ₄தஸ் தத₃ா த₄ர்மோ ஹரிப₄க்த்யா மஹாமுநே |
க்₃ருஹீத்வா த₄ர்மபாநீயம் பத₃ம் நாத₂ஸ்ய துஷ்டயே ||
க்ஷாளிதம் பரயா ப₄க்த்யா பாத்₃யார்க்₄யாதி₃பி₄ரர்ச்சிதம் |
தத₃ப பு₃ பதிதம் த்₃ருஷ்ட்வா த₃த₄ார ஶிரஸா ஹர: ||
பாவநார்த்த₂ம் ஜடாமத்₄யே யோக்₃யோஸ்மீத்யவத₄ாரணாத் |
வர்ஷாயுதாந்யத₂ ப₃ஹூந் ந முமோச தத₃ா ஹர: ||"

[ஈஶ்வரஸம்ஹிதை]

[ரிஷிஶ்ரேஷ்டரே! (பகவான் திருவுலகளந்தருளிய) அச்சமயம், ஹரியினிடம பக்தியினுல் த₄ர்மம் ஜலமாயிற்று; தர்மமாகிற அந்த ஜலத்தை எடுத்து ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக (அவனு

என்று திருவடி விளக்க அபேக்ஷிதமானவாறே தர்மஜலமானத்தைக் கையிலே கொண்டு அனைத்துத் திருநாமங்களைச்சொல்லிப் பின்னைத் திருவடி விளக்கினான். 78.

---

பகவந்நாம ஸங்கீர்த்தநமாகிற இனிய தபஸ்ஸைக் குறைவற அநுஷ்டித்துச் சதுர்முகன் ஒருவனுமே அது பலத்தோடே வ்யாப்தமாகப் பெற்றான். இவன் இனியது செய்ய, அவன் தவம் என்றிருக்கும். 'வணக்குடைத் தவநெறி' என்னக்கடவதிறே. 78.

---

டைய) திருவடியானது (பிரமனாகிற என்னால்) மேலான பக்தியுடன் விளக்கப்பட்டது. பாத்யம், அர்க்யம் முதலியவைகளையளித்துப் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப் பார்த்து 'நான் (இதனால் பரிசுத்தப்படுத்தத்) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிஶ்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காகச் சடையின் நடுவில் தலையில் தாங்கினான். பிறகு பல பதினாயிரக்கணக்கான வருடங்கள், உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை.] என்கிற ப்ரமாணத்தின்படியே பகவத்பக்தியாலே நீர்ப்பண்டமாய் உருகிவிழுந்து பிரமனின கமண்டலத்தை நிறைத்து, அவன் திரிவிக்கிரமனின் திருவடியை விளக்குவதற்கு உதவி, பின் சிவனால் தரிக்கப்பெற்று பகீரதனால் பூமிக்குக் கொண்டுவரப் பெற்ற நீரே கங்கையென்று பெயர் பெறுகையாலே, 'கங்கை நீர் பெய்து' என்கிறார். (அனைத்துப் பேர் மொழிந்து) தனக்கு இப்பெரும்பேறு கிடைத்தது திருநாமத்தாலேயேயாகையாலே, ஸர்வேஶ்வரனுடைய அப்பெயர்களனைத்தையும் வாய்படைத்த பயன்பெறச் சொல்லி. இத்தால் வாசிக கைங்கர்யம் சொல்லப்பெற்றதாயிற்று. (பின்) இப்படி வாசிக கைங்கர்யம் செய்தபின், காயிக கைங்கர்யத்தையும் செய்தான் என்கிறது. (தன் சிவந்த கை அனைத்தும் ஆரக்கழுவினான்) சிவந்து, அழகிய தன் எட்டுக்கைகளும் தாம் உண்டான பயன் பெறும்படியாகத் திருவடியை விளக்கினான். ஸுகுமாரமான திருவடிக்கு, உலகனைத்தையும் அளந்ததாலுண்டான சிரமம் தீர சிசிரோபசாரம் செய்தான். (நான்முகனே அனைத்துப் பேர் மொழிந்து) நாலு முகம் படைத்த பயனை இன்றே பெற்றான். (கை அனைத்தும் ஆரக்கழுவினான்) எட்டுக் கைகள் படைத்த பயனையும் இன்றே பெற்றான். ஆக, இதுவரையில் 'தவஞ்செய்து நான்முகனே பெற்றான்' என்னும் முதலடிக்

79. பின்னின்று தாயிரப்பக் கேளான் பெரும்பணைத்தோள்
முன்னின்று தானிரப்பாள் மொய்ம்மலராள்-சொல்நின்ற
தோள்நலந்தான் நேரில்லாத் தோன்றல் அவனளந்த
நீணிலந்தா னத்தனைக்கும் நேர்.

தாய்—தாயான கௌஸல்யை, பின் நின்று-பின் தொடர்ந்து, இரப்ப—(என்னை விட்டு நீ காட்டுக்குப் போக லாகாது என்று) பிரார்த்திக்கவும், கேளான்-அதனை ஏற்றுக் கொள்ளாதவனும், பெரு பணை தோள்—சிறந்த மூங்கில் போன்ற திருத்தோள்களை உடையளாய், மொய்மலராள் தான்- அழகிய தாமரைப்பூவில் பிறந்தவளான பிராட்டியின் அம்சமான ஸீதையானவள், முன் நின்று-(காடு செல்ல) முற் பட்டு, இரப்பாள் (என்னையும் அழைத்துச் செல்லவேணும் என்று) பிரார்த்தித்தவளவிலும் (அதையும் ஆதரியாதவனு யும்), சொல் நின்ற —(ஸ்ரீராமாயணமாகிற) சொல்லுக்குப் பொருளாய் நின்றவனும், தோள் நலம் தான்-புஜபலவிஷ யத்தில், நேர் இல்லா தோன்றல்-ஒப்பற்ற ஸ்வாமியுமான இராமபிரானுடைய, அத்தனைக்கும்-(காட்டின் கொடுமை யைப் பாராமல் தைரியமாகக் காட்டுக்கு எழுந்தருளின) அப்படிப்பட்ட செயலுக்கு, அவன் அளந்த நீள் நிலம் தான் நேர்-அப்பெருமான் மிகப்பெரிய இவ்வுலகத்தை அளந்த செயல் ஒன்றே ஒத்தது.

---

குப் பின்வரும் அடிகள் விவரணமாகக் கொள்ளப்பட்டன அப்படி யல்லாமல், "தரணி நிவந்தளப்ப நீட்டிய பொற்பாதம் கங்கை நீர்பெய்து தன் சிவந்த கையனைத்தும் ஆரக்கழுவினான்; பின்-இப் படித் திருவடிகளை விளக்கப்பெற்ற பின்பு, அனைத்துப்பேர் மொழிந்து தவம் செய்து-பகவந்நாமஸங்கீர்த்தனமாகிற இனிய தவத்தைக் குறைவில்லாமல் அனுஷ்டித்து, நான்முகனே பெற்றான்-நான்முகன் ஒருவனே இத்திருநாமஸங்கீர்த்தனத்தின் மூலமாகத் தன் ஆயுளின் முடிவில் மோக்ஷமடைந்து அத்திருவடிகளையே பயனாகப் பெற்றான்" எனறும் கொள்ளலாம். இவன் ஸ்வயம் பிரயோஜனமாகத் திருநாமஞ் சொல்ல, அவன் தன்பேரைச் சொன்னதாகக் கணக்கிட்டுப் பெரும் பயனைக் கொடுத்தான் என்று கருத்து. 'வணக்குடைத் தவநெறி' [திருவாய் 1-3] என்று வணக்கம் முதலானவற்றைச் சேதனன் ஸ்வயம் பிரயோஜனமாகச் செய்தாலும் ஸர்வேஶ்வரன் அவற்றைத் தவமாகக் கொண்டு பயனளிக்கிறான் என்றாரன்றே ஆழ்வார். 78

பெரி-அவ:- (பின்னின்று) திருவுலகளந்தருளின நீர்மை ராமாவதாரத்தில் கு₃ணங்களுக்கு நேரென்கிறது.

வ்யா:-(பின்னித்யாதி₃) கௌஸல்யை, ''நான் ஏகபுத்ரை, உம்மைப் பிரிந்து நான் ஜீவியேன்; நீர் காட்டுக்குப்போக

---

அவ:-ஜக₃த்தை அளந்துகொண்ட செயலை உடையனான ஸ்ரீ வாமனனுடைய வ்ருத்தாந்தமானது தாயார் அபேக்ஷிக்க, மறுத்துக்காடேறப்போன சக்ரவர்த்தித் திருமகனுடைய இத்தன்மைக்கு ஒக்கும் என்கிறார்.

உரை:-தாயாரான ஸ்ரீ கௌஸலையார் பின்தொடர்ந்து நின்று, 'ஏகபுத்ரையான நான் உன்னைப்பிரிந்தால் தரித்திருக்கவல்லேனோ? நீ காட்டுக்குப் போகவேண்டா' என்று அர்த்தி₂க்க, அத்தைக் கேளானுமாய், அதுக்குமேலே நீண்டு சுற்றுடைத்தான தோளையுடையளாய், அழகிய பூவை

---

79. அவ:— தன் மென்மையைப் பாராமல் உலகை அளந்து கொண்ட செயலை உடையவனான ஸ்ரீ வாமனனுடைய இச்செயல், தாயான கௌஸல்யை வேண்டியும் மறுத்துக் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுக்குச் சென்ற ஸ்ரீ ராமபிரானுடைய செயலை ஒத்திருந்தது என்கிறார்.

வ்யா:— (பின்னின்று தாயிரப்ப) தாயான ஸ்ரீ கௌஸல்யை, பின் தொடர்ந்து நின்று,

''த்வயி ஸந்நிஹிதேऽப்யேவம் அஹமாஸம் நிராக்ருதா |
கிம் புந: ப்ரோஷிதே தாத த்₄ருவம் மரணமேவ மே ||''

[ரா-அ 20-41]

[நீ அருகிலிருக்கும்போதே நான் இப்படி அவமதிக்கப்பட்டு வாழ்ந்தேன். நீ காடு சென்றால் எனக்கு மரணமே நிச்சயமாக நேரும்.]

''யதை₂வ தே புத்ர பிதா தத₂ாऽஹம்
கு₃ரு: ஸ்வத₄ர்மேண ஸுஹ்ருத்தயா ச |
ந த்வாநுஜாநாமி ந மாம் விஹாய
ஸுது₃:க்கி₂தாமர்ஹஸி க₃ந்துமேவம் || ''



[ரா-அ 21-52]

வேண்டா'' என்று சொன்னால் கேளான். (பெருப்பணைத் தோளித்யாதி₃) ''अग्रतस्ते गमिष्यामि'' (அக்₃ரதஸ்தே க₃மிஷ்

இருப்பிடமாக உடையளாகையாலே நிரதிஶயஸுகுமாரையான பிராட்டியானவள் தான் ''अग्रतस्ते गमिष्यामि'' (அக்₃ரதஸ் தே க₃மிஷ்யாமி) என்கிறபடியே முற்பட்டு நின்று 'கருமுகைமாலையைச் செவ்வி பெறுத்தவென்று நெருப்பிலே இடுமாபோலே, இந்த அதிஸுகுமாரமான திருமேனிகொண்டு காடேறப்போகிற இன்று, உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன். உமக்கு முன்னே போகக்கடவேன்'

[பிள்ளாய்! உன் தந்தை எப்படி உன்னால் கௌரவிக்கத்தக்கவரோ, அப்படியே நானும் கௌரவிக்கத்தக்கவள்; என் தர்மத்தை நோக்கியும், உன்னிடம் அன்பினாலும் நான் உன்னைக் காடுபோக அனுமதிக்கமாட்டேன்; மிகவும் துன்பமடையும் என்னை விட்டு நீ இப்படிக் காடு செல்லுவது தகாது.] என்று வேண்டியும். (கேளான்) அவளுடைய வேண்டுகோள் த₄ர்மத்துக்குப் புறம்பாயிருந்தபடியாலே அதை மறுத்தான்.

''கு₃ருஶ்ச ராஜா ச பிதா ச வ்ருத்₃த₄:
க்ரோதா₄த் ப்ரஹர்ஷாத்₃ யதி₃ வாऽபி காமாத் ।
யத்₃வ்யாதி₃ஶேத் கார்யமவேக்ஷ்ய த₄ர்மம்
கஸ்தம் ந குர்யாத₃ந்ருஶம்ஸ வ்ருத்தி: ॥
ஸ வை ந ஶக்நோமி பிது: ப்ரதிஜ்ஞாம்
இமாமகர்த்தும் ஸகலாம் யதா₂வத் ।
ஸ ஹ்யாவயோஸ் தாத கு₃ருர் நியோகே₃
தே₃வ்யாஶ்ச ப₄ர்த்தா ஸ க₃தி: ஸ த₄ர்ம: ॥''
[ரா-அ 21-59, 60]

[பெரியவராய், அரசராய், தந்தையாய், முதியவரான ஒருவர் கோபத்தாலோ, ஸந்தோஷத்தாலோ, காமத்தாலோ எதைச் செய்யச் சொன்னாலும், அதுவே தர்மம் என்றும், செய்யத்தக்கது என்றும் அறிந்து நல்லொழுக்கமுடைய பிள்ளையாயிருப்பவன் அதைச் செய்யாமலிருக்கலாமோ? அத்தகைய பிள்ளையான நான் தந்தையின் இந்தப் பிரதிஜ்ஞை முழுவதையும் உள்ளபடி செய்யாமலிருக்க வல்லேனல்லேன்; லக்ஷ்மணா! அவரன்றோ நம்மிருவரையும் நிய

யாமி) என்று ப்ரார்த்திப்பாள் பெரியபிராட்டியார். (சொல் நின்ற) ஸ்ரீராமாயணத்திலே சொல்லப்படாநின்ற தோள்

---

என்று ப்ரார்த்தியாநிற்க, அத்தையும் கேளாதவனாய், தானேயென்றால் 'ஸ்ரீராமாயணம்' என்கிற ப்ரபந்தத்துக்கு நேரே ப்ரதிபாத்யனாய்க்கொண்டு நின்று, தோளையுடையனாய். ஸௌகுமார்யத்தில் வந்தால் தன்னையெண்ணினால், பின்னை இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி ப்ரதாநனுமாயிருக்க, இவையித்தனையும் பாராமல், காட்டில் மிறுக்கையும் கடைக்கணியாமல், காடேறப்போன சக்ரவர்த்தித் திருமகனுடைய அந்த ஸ்வபாவமெல்லாவற்றுக்கும்,

---

மிக்கவல்ல தந்தை. ஸ்ரீகௌஸல்யாதேவிக்கும் அவரன்றோ பர்த்தாவாகவும், கதியாகவும், தர்மமாகவுமிருப்பவர்] என்றாற்போல் "தந்தையின் நியமனத்தை மீறுவது எனக்கு அழகல்லாமலிருப்பது போல், கணவனின் நியமனத்தை மீறுவது உமக்கும் அழகல்ல; கணவரைப் பிரிந்து நீர் வருவதும் தகாது. நீர் இங்கேயே இரும்; நான் காடு சென்றே தீருவேன்" என்று பலபடியாக தர்ம ஸூக்ஷ்மத்தைத் தாய்க்கு அறிவித்து அவள் வார்த்தையை மறுத்து அவளையும் சம்மதிக்கச் செய்து தர்மத்தை நிலைநிறுத்தினவனன்றோ இவன். (பெரும் பணைத்தோள் மொய்ம்மலராள் முன்நின்று தான் இரப்பாள்) அதற்குப்பின், நீண்டு சுற்றுடையதான தோளையுடையவளாய் அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடையவளாகையாலே, "பாதாருந்துதமேவ பங்கஜரஜ:" [ஸ்ரீகுண]என்கிறபடியே தாமரைப் பொடியும் உறுத்தும் மென்மைமிக்கவளான பிராட்டி.

"யதி த்வம் ப்ரஸ்திதோ துர்க்கம் வநமத்யைவ ராகவ ।
அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்நதீ குஶகண்டகாந் ॥"

[ரா-அ 27-6]

[ரகுகுலத்துதித்தவரே! நீர் செல்லவரிய வனத்திற்குப் புறப்பட்டு விட்டீராகில், நானும் இப்போதே தர்ப்பைகளையும், முட்களையும் மிதித்துப் பாதையைச் சீர்செய்துகொண்டு உமக்கு முன்னால் செல்லுகிறேன்.] என்று வனம் செல்லுவதில் முற்பட்டு நின்று, "தொட்டால் வாடும் மாலையை மலர்த்த நினைத்து நெருப்பிலே இடுவாரைப்போலே, என் கை பட்டாலும் கன்றும் மென்மைமிக்

வலியையுடையனான பிள்ளையுடைய குணங்களுக்கு. (அவனளந்த நீணிலந்தானத்தனைக்கும் நேர்) அன்றளந்ததத்தனையும் அக்குணத்துக்கு நேர். 79.

---

ஸ்ரீமானானவன் தான் அளந்துகொண்ட பரப்பையுடையதான பூமி ஒப்பாகப் போரும்; அதாவது — மாத்ருவசனத்தை மறுத்துப் பிராட்டியிரப்பைத் திரஸ்கரித்து, தன் ஸௌகுமார்யத்தைப் புரிந்து பாராமல், போகிற காட்டில் மிறுக்கைக் கடைக்கணியாமல் பித்ருவசநபரிபாலனத்தையே புரஸ்கரித்து, * மன்னும் வளநாடு கைவிட்டுக் காட்டையுகந்த சக்ரவர்த்தித் திருமகன் செயல்களுக்கு ‘இடங்கை வலம்புரி நின்றார்ப்ப’ இத்யாதிப்படியே அநுகூலாக்ரேஸரரான

---

இத்திருவடிகளைக்கொண்டு கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுக்குப் போகிற இன்று உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்; இத்திருவடிகளில் முள்ளும் கல்லும் குத்தாதபடி பாதையைச் சீர்திருத்திக்கொண்டு உமக்கு முன்னே செல்லுவேன்” என்று வேண்ட, அவளுடைய மென்மையை நோக்கி அதையும் மறுக்க, ‘பர்த்தாவை விட்டு பார்யை பிரியக்கூடாது என்று சொன்ன சொல் தாய்க்குத்தான் பொருந்துமோ? எனக்குப் பொருந்தாதோ?’ என்று பலபடியாகப் பிரார்த்திக்க, தர்மத்தோடு ஒத்திருக்கையாலே அதற்கு இணங்கியது வரையிலுள்ள விருத்தாந்தம் அனைத்தையும் நினைக்கிறார். இத்தால் தர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவே பிறந்தவனிவன் என்று காட்டுகிறார். இந்த விருத்தாந்தமெல்லாம் எங்கே கண்டீர்? என்ன,-(சொல்நின்ற தோன்றல்) ஆதிகாவ்யமான ஸ்ரீராமாயணத்தால் சொல்லப்படும் ப்ரதானபுருஷன்; (சொல்) ‘சொல்லென்றால் எல்லாம் சொல்லாகுமோ? இந்த ஸ்ரீராமாயணமன்றோ சொல்லெனத்தக்கது’ என்று எல்லாக்கவிகளாலும் புகழப்படும் பெருமையை உடையதென்று காட்டுகிறார். (தோள் நலம் தான் நேரில்லாத்தோன்றல்) ‘தோள்’ என்று மஹாவீரனான இவனுடைய தோள் பலத்தைக் காட்டுகிறது; ‘நலம்’ என்று திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டும் மென்மையைக் காட்டுகிறது. இப்படித் தோள்வலியிலும், மென்மையிலும், தன்னை எண்ணினால் அதற்குப்பின் இரண்டாம் விரலிடத்தன்னோடொத்தவன் இல்லையென்னலாம் படியுள்ள ப்ராதான்யத்தை உடையவன். தாயும், பிராட்டியும் ‘காடுபோகவேண்டா’ என்றதையும்

ஸூரிகள் வயிற்றெரிச்சலேயும், தன் திருவடிகள் ஸௌகுமார்யத்தையும், காடுமோடையுமான அளக்கிற பூமியினுடைய கொடுமையையும் ஆஸுரப்ரக்ருதிகளான நமுசிப்ரப்ருதிகள் அலேச்சலேயும் பாராமல் ஆஶ்ரிதனான இந்த்ரன் ப்ரார்த்தனேயைத் தலேக்கட்டுகைக்காகக் கல்லும் கரடுமான * வன்மாவையத்தை அளந்துகொண்ட ஸ்ரீ வாமனனுடைய செயலானது ஸத்ருஶமாமித்தனேயென்கை. 79.

---

கேளாமல், தன் திருமேனிமென்மைக்குச்சேராத காட்டின் கொடுமையையும் கணிசியாமல், பொருந்தார்கை வேல் நுதிபோல் பரல் பாய மெல்லடிகள் குருதி சோர, விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய் கூரக் காடுசென்ற சக்ரவர்த்தித்திருமகனுடைய, தன் மென்மைபாராத தர்மரக்ஷணத்திலுறுதி, தோள்வலி முதலான தன்மைகள் அனைத்துக்கும் இவன் திரிவிக்கிரமாவதார காலத்தில் அளந்துகொண்ட பூமிப்பரப்பெல்லாம் ஒப்பாகும் என்கிறார் மேலே,— (அவனளந்த நீணிலந்தான் அத்தனேக்கும் நேர்) அதாவது,— இவன் மென்மையைக் கருதி, 'காடு போகவேண்டாம்' என்ற தாயின் வார்த்தையை மறுத்து, பிராட்டியின் வேண்டுகோளேயும் கணிசியாமல், தன் திருமேனியின் மென்மையைத் தானும் நினேயாமல், போகிற காட்டின் வெம்மையையும் திருவுள்ளம் பற்ருமல், தந்தையின் வசனத்தை மெய்யாக்கவேண்டும் என்பதிலேயே உறுதி கொண்டு * மன்னும் வள நாடு கைவிட்டுக் காட்டை உகந்த சக்ரவர்த்தித்திருமகன் செயல்களுக்கு, 'இடங்கை வலம்புரிநின்ருர்ப்ப' [71] என்னும் பாசுரத்தில் இவரே அருளிச்செய்தபடி, அன்புடையாரில் தலேவரான ஸுதர்ஶனபாஞ்சஜன்யங்களும், திருவனந்தாழ்வானும் பட்ட வயிற்றெரிச்சலேயும், தன் பூவாரடிகளின் மென்மையையும், காடுமோடையுமாயிருக்கும் அளக்கிற பூமியின் கொடுமையையும், அஸுரர்களான நமுசி முதலானுர் காலேக்கட்டிக்கொண்டு தடுத்ததையும் பொருட்படுத்தாமல், அடியானுன இந்திரனின் வேண்டுகோளேத் தலேக்கட்டுவதற்காகக் கல்லும் கரடுமான வன்மாவையத்தை அளந்துகொண்ட ஸ்ரீ வாமனனுடைய செயலானது ஒப்பாயிருக்கும்; ராவணுதிகளே அழித்த தோள்வலி முதலானவற்றுக்கும், நமுசி முதலானுரை அடக்கிய தோள்வலி முதலானவை ஒத்திருக்கும்; ஸ்ரீராமனுடைய தர்மரக்ஷணத்திலுறுதிக்கு ஸ்ரீவாமனனுடைய ஆஶ்ரிதரக்ஷணத்திலுறுதி ஒத்திருக்கும் என்று கருத்து. 79.

80. நேர்ந்தே னடிமை நினைந்தேன தொண்கமலம்
ஆர்ந்தேனுன் சேவடிமே லன்பாய் — ஆர்ந்த
அடிக்கோலங் கண்டவர்க் கென்கொலோ முன்னைப்
படிக்கோலம் கண்ட பகல்.

அடிமை நேர்ந்தேன்-(உனது திருவடிகளில்)கைங்கர்யம் பண்ண நேர் பட்டேன்; ஒண் கமலம் அது நினைந்தேன்— அழகிய தாமரைப் பூப்போன்ற அத்திருவடிகளைச் சிந்தித் தேன்; உன் சே அடி மேல்—உனது அத்திருவடிகள் விஷயத் திலே, அன்பு ஆய் ஆர்ந்தேன்—அன்பே வடிவெடுத்தவனாய் நிறைவுபெற்றேன்; ஆர்ந்த—உலகளந்த, அடி கோலம்— திருவடிகளினழகை,கண்டவர்க்கு-ஸேவிக்கப்பெற்றவர்கட்கு, படி கோலம் கண்ட முன்னைப் பகல் என் கொலோ-இயற்கை யான அலங்காரங்களை ஸேவிக்கப்பெற்ற முற்காலம் சிறந்த தாகுமோ?

வ்யா:-(நேர்ந்தேனடிமை) ஸ்வரூபாநுரூபமான கைங்கர் யத்தைக் கிட்டினேன். (நினைந்தேன் அதொண்கமலம்) ஸ்ப்

---

அவ: — இப்படிப்பட்டுள்ள அவன் திருவடிகளில் அடிமை ருசித்து, ஸ்ம்ருதிமாத்ரத்தாலே நான் அங்கே ப்ரவணமானபடி கண்டால், பண்டு அவன் வடிவழகைக் கண்டு அநுபவிக்கப்பெற்றவர்கள் அப்போது என்பட்டார் களோ? என்கிறார்.

உரை: — தேவர் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகப் பண்ணக்கடவ கைங்கர்யத்திலே அத்யவஸாயபுரஸ்ஸரமாக நேர்பட்டேன்; அந்தக் கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தி

---

80. அவ:—இப்படிப்பட்ட அவன் திருவடிகளில் அடிமையை விரும்பி, அவற்றை நினைத்த மாத்திரத்தில் அவற்றில் நான் ஈடு படுகிறபடியைக் கண்டால், பண்டைக்காலத்தில் அவன் வடிவழ கைக் கண்டு அனுபவிக்கப் பெற்றவர்கள் அப்போது என்னபாடு பட்டார்களோ என்கிறார்.

ருஹணீயமான திருவடிகளை நினைந்தேன். (ஆர்ந்தேனித்யாதி₃) உன்னுடைய சிவந்த திருவடிகளிலே ஸ்நேஹத்தை யுடையேனாய்ப் பரிபூர்ணனானேன். (ஆர்ந்தவித்யாதி₃) திருவுலகளந்த

யாய், அழகிய தாமரைப்பூப்போலே நிரதிசய போ₄க்₃யமாயிருக்கிற அந்தத் திருவடிகளை மநஸ்ஸாலே அநுஸந்தி₄த்தேன். நினைத்த மாத்ரத்திலே பெருகிவருகிற ப்ரேமத்தை உடையேனாய், வகுத்த சேஷியான தேவருடைய சிவந்த திருவடிகளின் மேலே, பிரிக்கவொண்ணாதபடி பொருந்தினேன். பூர்ணமான திருவடிகளின் அழகைக்கண்டு அநுப₄வித்தவர்களுக்கு இதுக்கும் அடியான வடிவழகை, ஒன்றொழியாதபடி முழுநோக்குச் செய்து அநுப₄விக்கப் பெற்றபோது என்னைத்தோ? என்பட்டார்களோ? என்கை. அன்றிக்கே,

வ்யா:— (நேர்ந்தேன் அடிமை) தேவரீர் திருவடிகளில் ஸ்வரூபாநுரூபமாகப் பண்ணக்கூடிய கைங்கர்யத்திலே உறுதியோடு ஈடுபடும்படிவாய்க்கப்பெற்றேன். (நேர்ந்தேன்) வாய்க்கப்பெற்றேன். உன்னுடைய நிர்ஹேதுககிருபையாலே எனக்கு இப்பேறு கிடைத்ததேயொழிய, இதற்கு ஹேதுவாக நான் செய்ததொன்றைக் காண்கின்றிலேன். "குட்டநாட்டுத்திருப்புலியூர் நின்ற மாயப்பிரான் திருவருளாம் இவள் நேர்பட்டதே—அன்றி மற்றோருபாயமென்?" [திருவாய் 8-9-10] "மூவுலகுக்கும் நாயகன் தன்னடிமை நேர்பட்ட" [திருவாய் 8-9-11] என்றாற்போலே. கைங்கர்யம் செய்வது எவ்விஷயத்திற்கு எனில்: (நினைந்தேன் ஒண்கமலம் அது) அந்தக் கைங்கர்யத்திற்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யாய், அழகியதாமரைப்பூப்போலே மிகவினிதாயிருக்கிற அந்தத் திருவடிகளை மனத்தாலே அனுஸந்தித்தேன். (ஆர்ந்தேன் உன் சேவடிமேல் அன்பாய்) நினைத்தவுடன் பெருகிவருகிற அன்பை உடையவனாய், இயற்கையிலேயே என் ஸ்வாமியாயிருக்கும் உன்னுடைய சிவந்த திருவடிகளின்மேலே பிரிக்கமுடியாதபடி பொருந்தினேன். ஆர்ந்தேன்—நன்கு பொருந்தினேன்; 'அன்பாய் உன் சேவடிமேல் ஆர்ந்தேன்' என்று அந்வயம். அன்றிக்கே 'உன் சேவடிமேல் அன்பாய் ஆர்ந்தேன்' என்று அந்வயித்து, 'உன்னுடைய சிவந்த திருவடிகளில் அன்பையுடையேனாய் அதனால் நிறைவுபெற்றேன்' என்று பொருள் கொள்ளவுமாம். (ஆர்ந்த அடிக்கோலம் கண்டவர்க்கு முன்னைப் படிக்கோலம்

திருவடிகளைக் கண்ட எங்களுக்கு முன் ஸ்வாபாவிகமான ஒப்பனைகளைக் கண்டகாலம் என்னுவது? நாங்கள் கண்டபடிக்கு ஒக்குமோ அது? 80.

---

ஆர்ந்த அடிக்கோலம் கண்டவராகிறார் ஶேஷபூதரான தாமாய், நான் திருவடிகளின் அழகைக்கண்டு ஈடுபட்டபடி கண்டால் முன்பு இவ்வடிவழகைக்கண்டு அநுபவிக்கப் பெற்றவர்கள் என்பட்டார்களோ? என்றுமாம். (ஆர்ந்த வடிக்கோலம் இத்யாதி) திருவுலகளந்தருளின திருவடிகளைக் கண்டவர்களுக்கு முன்பு ஸ்வாபாவிகமான ஒப்பனை கண்ட காலம் என்னோ? என்றுமாம் (ஆர்ந்தேன் உன் சேவடிமேல் அன்பாய்) என்று. திருவடிகளிலே ஸ்நேஹத்தை உடையேனாய், அத்தாலே பரிபூர்ணனானேன் என்னவுமாம். 80.

---

கண்ட பகல் என்கொலோ) பூர்ணமான திருவடிகளின் அழகைக் கண்டு அனுபவித்தவர்கள், இவ்வடியிலே வீழ்வதற்கு அடியாயிருப்பதாய், அநாதிஸித்தமான திருமேனியின் அழகை ஓரவயவம் விடாதபடி முழுவதும் நோக்கி அனுபவித்த காலத்தில் என்ன பாடு பட்டார்களோ? அன்றிக்கே, 'ஆர்ந்த அடிக்கோலம் கண்டவர்' என்று திருவடிகளில் அடிமைப்பட்ட தம்மையே குறிக்கிறதாய், 'நிறைந்த திருவடிகளின் அழகைக்கண்டே இத்தனை ஈடுபடுகிறேனாகில், முன்பு இவ்வடிவழகு முழுவதையும் கண்டவர்கள் என்ன பாடு பட்டார்களோ' என்கிறதாகவும் கொள்ளலாம். அன்றிக்கே, 'ஆர்ந்த அடி' என்று திரிவிக்கிரமனானபோது உலகெங்கும் பரவிய அடியாய், அப்பொழுது அவ்வடியின் இயற்கையழகைக் கண்டவர்களுக்கு. அதற்கு முன் அத்திருவடிகளை ஆபரணங்களால் மறைக்கப்பெற்றிருந்தபோது ஸேவித்த காலம் ஒக்குமோ? என்றுமாம். படிக்கோலம் - இயல்வாகப் பொருந்திய திருவாபரணங்களின் அழகு. திரிவிக்கிரமாவதார காலத்தில் திருவாபரணங்களில்லாமல் திருவடிகளின் இயற்கையழகை ஸேவித்தவர்களுக்கு முற்காலத்தில் அதைத் திருவாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றபோது ஸேவித்தது ரஸிக்காது என்று கருத்து. ''ஆபரணஸ்யாபரணம்'' என்கிறபடியே ஆபரணத்துக்கும் அழகு கொடுக்கும் விஷயமன்றோ இது. ''ஸர்வபூஷணபூஷார்ஹா:'' என்று திருவடி சொன்னானன்றோ.80.

81. பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன் கனவில்
மிகக்கண்டேன் மீண்டவனை மெய்யே—மிகக்கண்டேன்
ஊன்திகழு நேமி யொளிதிகழுஞ் சேவடியான்
வான்திகழுஞ் சோதி வடிவு.

பகல் கண்டேன்—இராக்காலம் கலவாமல் ஒரே பகற் காலமாய்ச் செல்லுகிற நல்விடிவைக் கண்டேன்; (அதற்கு அடியாக) நாரணனை கண்டேன்—ஸ்ரீமந் நாராயணனு(னாகிற என்றும் மறையாத சூரிய)னைக் கண்டேன்; மீண்டு—மறு படியும், கனவில் — மாநஸஸாக்ஷாத்காரத்திற் காட்டிலும், மிக மெய்யே—மிகவும் தெளிவாக, அவனை கண்டேன் — அவனைக்காணப்பெற்றேன்; ஊன் திகழும் நேமி— திருமேனி யில் விளங்குகின்ற திருவாழியையுடையவனும், ஒளி திகழும் சே அடியான்-பிரகாசம் மிக்க திருவடிகளையுடையவனுமான அப்பெருமானுடைய, வான் திகழும் — பரம பதத்திலே விளங்குகின்ற, சோதி வடிவு —சோதிமயமான திருமேனியை, மிக கண்டேன்—(இங்கே) நன்கு காணப்பெற்றேன்.

பெரி அவ:— (பகல்) நீர் கண்டபடி சொல்லிக்காணீ ரென்னச் சொல்லுகிறார்.

---

அவ: – பண்டு அவனைக்கண்டு அநுபவிக்கப்பெற்றவர் கள் என்பட்டார்கள் என்று பழங்கிணறு வாருகிறதென்? இப்போது அவனைக்கண்டு நான்தான் படுகிற பாட்டைப் பார்க்கமாட்டீர்களோ? என்கிறார்.

---

81. அவ:— சென்ற பாசுரத்தில் "என்கொலோ முன்னைப் படிக்கோலம் கண்ட பகல்" என்று பண்டைக் காலத்தில் அவனைக் கண்டு அநுபவிக்கப்பெற்றவர்கள் என்ன பாடுபட்டார்களோ என்று வியந்தார். "இப்படிப் பழங்கிணறு தூறெடுக்கவேண்டுமோ? இப்போது நான் அவனைக்கண்டு படுகிற பாட்டைக்கண்டால் போதாதோ?" என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (பகற்கண்டேன்) காளராத்ரியாய்ச் செல்லாதே விடியக்கண்டேன். வடுகர் வார்த்தை போலே தெரிகிறதில்லை. எங்களுக்குத் தெரியும்படி சொல்லீரென்ன; (நாரணனைக்

---

உரை:— இதுநெடுங்காலம் பகல்விரவாத ஸம்ஸாரகாள ராத்திரியிலே கண்கெட்டு முன்னடி தோற்றுதே திரிந்த நான், இப்போது "सुप्रभाता च मे निशा" (ஸுப்ரப₄ாதா ச மே நிஶா) என்னும்படி இரவு விரவாத பகலாய்ச் செல்லும் படியானதொரு நல்விடிவைக் கண்டேன். ப₄க₃வத₃ா ஜ்ஞைக்கு பயப்பட்டு முப்பது வட்டத்திலே போவது வரு வதாய்த்திரிகிற ப்ராதே₃ஶிகனான ஆதி₃த்யனன்றிக்கே, ஒரு காலத்திலும் போக்குவரத்தன்றிக்கே, "शास्ता जनानां"

---

வ்யா— (பகல் கண்டேன்) இவ்வளவு காலமாக பகல் வெளிச்சமேயில்லாத ஸம்ஸாரமாகிற காரிருளேயாயிருந்தது; "ஸுப்ரப₄ாதா ச மே நிஶா" [வி-பு 5-17-2] [என் இரவு இன்றே நல்விடிவாயிற்று.] என்கிறபடியே இன்றே இரவு கலவாத பகலே யாம்படி நல்விடிவு பிறந்தது என்கிறார். உலகில் நாம் காணும் இரவு பகலைச் சொல்லுகிறதன்று இங்கு. பகவத் விஷய ஜ்ஞான மின்மையே இங்கு இரவாகவும், அந்த ஜ்ஞானமே பகலாகவும் உணர்த்தப்படுகிறது.'நீர் பேசுவது எங்களுக்குப் புரியாத பாஷையா யிருக்கிறது. பகலுண்டாயிற்றெனில், ஓராதித்யனைக் காண வேணுமே; அது இங்குண்டோ?' என்ன: (நாரணனைக் கண்டேன்) "பீ₄ஷோதே₃தி ஸூர்ய:" [தைத்திரீயம் ஆந 8] [பரமபுருஷனிடம் பயத்தால் சூரியன் உதிக்கிறான்.] என்கிறபடியே பகவானின் ஆணைக்கு பயந்து இரவில் முப்பது நாழிகைகள் மறைந்திருப்பதும், பகலில் முப்பது நாழிகைகள் தோன்றுவதுமாயிருப்பவனும், அண்டவெளியில் துளியிடத்திலேயே பரவியிருப்பவனும், அங்கும் புறவிருளையே அழிப்பவனுக நாம் காணும் சூரியனைப்போலன்றிக்கே ஒருகாலத்திலும்மறைவதில்லாமையாலே அஸ்தமியாத ஆதித்யனும், "அந்த:ப்ரவிஷ்ட:ஶாஸ்தாஜநாநாம் ஸர்வாத்மா"[தை-ஆர 3-11] [ஸர்வாந்தர்யாமியாய், ஜனங்களை உள்நுழைந்து நியமிப்பவன்] என்று மறைகள் அறைகிறபடியே அனைவரையும் நியமிப்பவனும், நாரங்களாகிற உப₄யவிபூ₄திகளையும் சரீரமாகக் கொண்டவனுகை யாலே எங்குமுள்ளவனும், அகவிருளையே அழிப்பவனுன நாராயண னுகிற சூரியனைக்கண்டேன். இந்த சூரியனைக் காண்பதுபோல், கண்

கண்டேன், அஸ்தமியாதவாதித்யனைக்கண்டேன். (கனவிலித்யாதி₃) ப்ரத்யபி₄ஜ்ஞார்ஹமாகக் கண்டேன். (மிகக்கண்டேன்) வடிவிலே திகழாநின்ற திருவாழியையும், ஒளிதிகழாநின்ற

---

(ஶாஸ்தா ஜநாநாம்)என்னும்படி ஸர்வத்தையும் நியமித்துக் கொண்டு உப₄யவிபூ₄தியுக்தனுகையாலே ஸார்வத்ரிகனுன நாராயணனுகிற ஆதி₃த்யனைக் கண்டேன். இந்த்₃ரியங்கள் துணைசெய்யக் காண்கிற காட்சியன்றிக்கே, "स्वप्नधीगम्य" (ஸ்வப்நதீ₄க₃ம்யம்) என்னும்படி நேர்கொடுநேரே நெஞ்சாலே காணப்படும் ஸ்வப்நாவஸ்தை₂யிலுங்காட்டில் விஶத₃மாய், ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸஜ்ஞானத்தாலே இந்த்₃ரியங்களால் கலக்கவொண்ணுதபடி அழகிதாக மீண்டு அவனைக்கண்டேன். வடிவழகு விளங்காநின்றுள்ள திருவாழியையும், புகர் விளங்காநின்றுள்ள

---

ணைதிரே கண்டீரோ? என்ன, என்றேனும் கட்கண்ணுல் காண்பரிய அவனை நெஞ்சென்னும் உட்கண்ணுலேயே கண்டேன் என்கிருர் மேலே,—(கனவில் மிகக் கண்டேன்) கண் முதலான இந்திரியங்கள் துணைசெய்ய, இவ்வாதித்யனைக் காணும் காட்சி போலல்லாமல், "ஸ்வப்நதீ₄க₃ம்யம்" [மநு 12-122] [கனவுபோலிருக்கும் மாநஸஜ்ஞானத்தால் யோகிகளாலே அறியத்தக்கவனுயிருப்பவனை] என்கிறபடியே, நேருக்கு நேர் நெஞ்சாலே காணப்படும் கனவுக்காட்சிபோலே தெளிவாகக் கண்டேன். அன்றிக்கே, அக்கனவுக் காட்சியைக்காட்டிலும் தெளிவானதாய், வெளி இந்திரியங்களாலுண்டாகும் ப்ரத்யக்ஷமான காட்சிபோலவேயிருப்பதாய், அவ்வெளியிந்திரியங்களாலுண்டாகும் பிராக்ருதக் காட்சிகளாலே கலங்கச்செய்ய முடியாததான மானஸஜ்ஞானத்தாலே கண்டேன் என்கிருராகவுமாம். (மெய்யே கண்டேன்) இது பொய்த்தோற்றமல்ல; மெய்யான காட்சியேயாகும். (கனவில் மீண்டு அவனை மிகக் கண்டேன்) "கண்டேன் திருமேனி யான் கனவில்" [67] என்றபோது கண்டதோடன்றியில், மீண்டும் கண்டேன்; (மிகக் கண்டேன்) மறுபடியும் நினைவுபடுத்தி எடுத்துச் சொல்லமுடியாத கனவுபோலல்லாமல், நினைவுபடுத்தி உங்களுக்கு நான் கண்ட காட்சியை விவரிக்கலாம்படி தெளிவாகக் கண்டேன். நீர் கண்ட காட்சியை நினைவுபடுத்தி எங்களுக்கு விவரிப்பீர் என்ன, விவரிக்

திருவடிகளையுமுடையவனுடைய பரமபதத்திலே திகழாநின்ற ஜ்யோதிஸ்ஸையுடைத்தான திருமேனியைக் கண்டேன்; மேகம்போலே திகழாநின்ற ஜ்யோதிஸ்ஸையுடைய வடி வென்னவுமாம். 81.

---

சிவந்த திருவடிகளையுமுடைய ஸர்வேஶ்வரனுடைய, பர மாகாஶ ஶப்₃த₃வாச்யமான பரமபதத்திலே விளங்காநின் றுள்ள தேஜஸ்ஸையுடைத்தான வடிவழகை ப்ரத்யக்ஷ ஞார்ஹமாம்படி அழகிதாகக் கண்டேன். 'வான் திகழும்' என்றது மேகத்தோடு ஒக்க விளங்காநின்றுள்ள திருமேனி என்னவுமாம். "ஊன் திகழும்" என்றது, ஸர்வேஶ்வரன் திருமேனியிலே விளங்காநின்றுள்ள திருவாழி என்னவுமாம். ஶத்ருஶரீரத்திலே விளங்கும் என்னுதல். 81.

---

**கிருர் மேலே;— (ஊன் திகழும் நேமி) "ஆங்கவன் கைக் கண் டேன் கனலும் சுடராழி" [67] என்று முன்புகண்டதுபோலவே வடிவழகு விளங்காநிற்கும் திருவாழியையுடையவனைக் கண்டேன். 'ஊன்' என்று வடிவழகைச் சொல்லுகிறது. "வடிவார் சோதிவலத் துறையும் சுடராழி" [ திருப்பல்லாண்டு 2 ] என்ருரன்ரே பெரியாழ்வாரும். அன்றிக்கே, 'ஊன்' என்று உடம்பைச்சொல்லு மாகையாலே, இங்கு எம்பெருமானின் திருமேனியைச் சொல்லு கிறதாய், ஸர்வேஸ்வரனுடைய திருமேனியிலே விளங்காநிற்கும் திருவாழியாழ்வான் என்றுமாம். அன்றிக்கே, 'ஊன்' என்று ஶத்ருக்களின் மாம்ஸஶரீரத்தைச் சொல்லுகிறதாய், எப்போதும் எதிரிகளை அழித்தபடியிருக்கையாலே, சத்ருசரீரங்களிலேயே விளை யாடிக்கொண்டிருக்கும் ஸுத₃ர்ஶனுழ்வான் என்கிறதாகவுமாம். ( ஒளி திகழும் சேவடியான் ) ஒளிபெற்று விளங்கும் சிவந்த திருவடியை உடையவனைக் கண்டேன். (சேவடியான் வான் திகழும் சோதி வடிவு மிகக்கண்டேன்) இப்படிப்பட்ட ஸர்வேஶ் வரனுடையதாய், "பரமே வ்யோமந்" என்று உபனிஷத்துக்களில் மேலான வானமாகக் குறிக்கப்படுவதான பரமபதத்தில் விளங்கா நிற்பதான சோதிமிக்க திருமேனியையே முற்கூறியபடி தெளிவாகக் கண்டேன். வான்-என்றது பரமாகாசம் எனப்படும் விஷ்ணுவின் பரமபதம். அன்றிக்கே, 'வான்' என்று, ஆகாயத்திலுள்ள மேகமாய், 'வான் திகழும் சோதி வடிவு' என்று மேகம்போலே விளங்காநிற்கும் நீலமேனி என்கிருராகவுமாம். 81.**

82. வடிக்கோல வாள்நெடுங்கண் மாமலராள் செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னாள்—அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னும் நலம்புரிந்த தென்கொலோ
கோலத்தா லில்லை குறை.

வடி கோலம்-வடிக்கட்டின அழகையுடையவளும், வாள் நெடு கண் — ஒளி பொருந்திய மிகவினிய திருக்கண்களை யுடையவளும், மா மலராள் சிறந்த தாமரை மலரில் பிறந்த வளுமான பெரிய பிராட்டியார். செவ்வி படி கோலம்—தக்க பருவத்தை இயல்வாக உடைய(அவனது)அழகை, கண்டு— கண்ணால் அநுபவித்து, பல் நாள் அகலாள்—கணநேரமும் விட்டுப் பிரியாமல் எப்போதும் கூடியேயிருக்கின்றாள்; பின்னும்—எம்பெருமானுடைய அழகிலே பெரிய பிராட்டி யார் ஈடுபட்டு அழுந்துகிறபடியைக் கண்டுவைத்தும், ஞாலத் தாள் – பூமிப்பிராட்டியானவள், அடிக்கோலி — பாரித்துக் கொண்டு, நலம் புரிந்தது என் கொலோ-(அப்பெருமானிடத் தில்)ஆசையைப்பெருக்கிக்கொண்டிருப்பது என்னோ? கோலத் தால் குறை இல்லை — (எத்தனை பேர்கள் அநுபவித்தாலும் ஏற்றிருக்கும்படியான) அழகினால் குறையில்லையன்றோ. [எம்பெருமானிடத்தில் அழகு எல்லையற்றிருப்பதனால் பல ரும் ஆசைப்படத்தட்டில்லை.]

பெரி அவ:— (வடிக்கோல) கீழ் நாராயணனைக்கண்டே னென்றார். இப்போது லக்ஷ்மீஸநாதமாகக் கண்டேனென்கிறார்.

---

அவ:—வெறும் நாராயணனைக் கண்டமாத்ரமன்றிக்கே, ஸ்ரீமானான நாராயணனைக் காணப்பெற்றேன் என்கிறார்.

---

82. அவ:—நான் கண்டது ப்3ரஹ்மசாரி நாராயணனையன்று: ஸ்ரீமானான நாராயணனை என்கிறார்.

வ்யா:— (வடிக்கோலம்) அவனுடைய அழகையும் வடிக்கட்டிய அழகை உடையவளும். உலகிலுள்ள அழகனைத்தும் கோது(சக்கை) என்னலாம்படி வடிக்கட்டின அழகையுடையவன் அவன்; அவனு டைய அழகும் கோது என்னலாம்படி வடிக்கட்டின அழகையுடைய

வ்யா:— படிக்கோலத்துக்கு ருஜீஷமாய்க் கழித்தாராரோ வென்னில்: (வடிக்கோலமித்யாதி₃) ஓராளுமொரு நோக்கும் நேரான கண்ணையுடையளாய் ஸௌகுமார்யத்தையுடைய ளான பெரியபிராட்டியார் (செவ்வியித்யாதி₃) செவ்வியை யுடைத்தாய் ஸ்வாப₄ாவிகமான கோலத்தைக்கண்டு கால மெல்லாமகலாள்; ஒரு தேவையாலே அகலாதிருக்கிறளோ?

உரை: நாட்டில் அழகு அடங்கலும் கோதாம்படி அழகு படைத்த அவனழகாகிற கோதுகலவாத வடித்த அழகையும், வடிவிலே வடிவாய் ஒளிபெற்று போ₄க்தாவுக்கு அளவிட வொண்ணாத மிக்க போ₄க்₃யதையையுடைத்தான திருக்கண் களையும் உடையளாய், ஶ்லாக்₄யமான தாமரைப்பூவைப் பிறப்பிடமாக உடையளாகையாலே, ஸௌகந்த்₄யஸௌ குமார்யங்களைக் குறைவற உடையளுமான பெரிய பிராட்டி யாரும், * 'அரும்பினையலரை' என்கிறபடியே செவ்வியே ஸ்வ ப₄ாவமான அவன் வடிவழகைக் கண்டு அநுப₄வித்துக்

வள் இவள் என்று கருத்து. இப்படி வடித்தெடுத்த அழகையுடைய அவனுடைய திருமேனியில் மற்ற அவயவங்களெல்லாம் கோது என்னும்படி வடித்தெடுத்த அவயவத்தைப் பேசுகிறது அடுத்தபடி யாக—(வாள் நெடுங்கண்) வடிகட்டிய வடிவிலே வடிகட்டிய பகுதி யாய், ஒருநோக்காலே பரமபுருஷனையே வீழ்த்தவல்ல ஒளியுடைய தாய், இதை அனுபவிக்க இட்டுப்பிறந்த அவனுக்கும் அளவிட முடியாத மிகுந்த இனிமையையுடையதான திருக்கண்களை உடைய வளும். வாள்—ஒளி. நெடுங்கண்-இனிமைமிக்க கண். (மா மலராள்) சிறந்த தாமரையில் தோன்றியவளாகையாலே, நறுமணத்தையும் மென்மையையும் குறைவறப் பெற்றிருக்கும் பெரியபிராட்டியாரும், (செவ்விப் படிக்கோலம் கண்டு அகலாள் பன்னாள்) இத்தகைய சிறப்பை உடையவளும், "யுவா குமார:" [ருக்வேதம்] [யௌவன வயதின் தொடக்கநிலையையும், கௌமாரவயதின் முடிந்த நிலையையு முடையவன்] "அரும்பினை அலரை" [பெரியதிரு 7-10-1] என்கிற படியே செவ்வியையே இயல்வாக உடைய அவன் வடிவழகைக் கண்டு "இறையும் அகலகில்லேன்" [திருவாய் 6-10-10] என்னும்படி.

* 'பிணையலரை' என்னும் பழம்பதிப்புப் பாடம் பிழை.

என்னில், அன்று; வைத்தகண் வாங்கமாட்டாமையும், கால் வாங்கமாட்டாமையும். (அடிக்கோலியித்யாதி₃) அகலப் பாரித்து ஸ்ரீபூமிப்பிராட்டியார், பெரியபிராட்டியார் தண்ணீர் தண்ணீரென்கிற விஷயமென்று அறிந்தபின்பும் ஸ்நேஹிக் கைக்கடியென்னென்கிறது. அவள் கண்ணுக்கு விஷயம்

---

கண்ணை மாறவைத்தல், கால்வாங்குதல் செய்யமாட்டாதே, அவ்வழகுவெள்ளத்திலே ஆழங்காற்பட்டு, ''இறையும் அகல கில்லேன்'' என்னும்படி காலதத்வமுள்ளதனையும், க்ஷண காலமும் விஶ்லேஷிக்க க்ஷமையன்றிக்கேயிராநின்றாள். க்ஷமையே வடிவான ஸ்ரீபூ₄மிப்பிராட்டியானவள், தலைநீர்ப் பாட்டிலே அநுப₄விக்க இட்டுப்பிறந்த பேரளவுடையளான அவள் ஆழங்காற்பட்டு அழுந்துகிறபடியைக் கண்டிருக்கச்

---

அவனைக்கண்டகண்களை மாறவைத்தல், கண்டதுபோதும் என்று நீங்குதல் செய்யமுடியாதபடி காலதத்துவமுள்ளவரையிலும் கண நேரமும் பிரிய இயலாதவளாயிராநின்றாள். செவ்வி-தக்க பருவம். படி-இயல்வு. கோலம்-வடிவழகு. 'செவ்விப்படிக்கோலம் கண்டு' என்றது,'பருவத்தை இயல்வாகக்கொண்ட வடிவழகைக்கண்டு' என்றும், 'பருவத்தையும், இயல்வான வடிவழகையும் கண்டு' என்றும், 'பருவத்தையுடைய திருமேனியின் அழகைக்கண்டு' என்றும் மூன்று விதமாகப் பொருள்படும். மூன்றாவது பொருளில் 'படி' என்னும் பதம் திருமேனியைக் குறிக்கிறது. பன்னாள்-பலநாள்; எல்லாக் காலமும் என்றபடி. (பின்னும்) தலைமடையிலேயுள்ள பயிர்போலே, எம்பெருமானைத் திருமார்பிலேயேயிருந்து அனுபவிக்க இட்டுப் பிறந்தவளாய், ''பே₄ாகே₃ாபோத்₃க₄ாதகேளீசுளகித ப₄கே₃வத்₃ வைஶ்வரூப்யாநுப₄₄ரவா'' [ஸ்ரீகுணரத்நகோஶம்] [பரமபுருஷனு டைய விஶ்வரூபத்தையனுபவித்தாலும், அது அநுபவத்தின் தொடக்க விளையாட்டேயாம்படி அவ்வனுபவத்தை அளவுபடுத்தவல்லவள்.] என்கிறபடியே அவனுடைய ஸ்வரூபரூபாதிகளையும் அளவிடவல்ல பெருமையை உடையவளான பெரியபிராட்டியார், இவ்வண்ணமாக அவனை அநுபவித்து இறையும் அகலகில்லாமல் 'தண்ணீர் தண் ணீர்' என்று ஆழங்காற்பட்டு அழுந்துகிறபடியைக் கண்டிருக்கச் செய்தும். (ஞாலத்தாள்) பொறுமையே வடிவான பூமிப்பிராட்டி யானவள். (அடிக்கோலி நலம் புரிந்தது என்கொலோ) அவளைப் போலே அவனைமட்டும் அனுபவிக்க இழியாமல், அவளும், அவனு

அவனொருத்தனும், இவளுக்கு விஶிஷ்டம்; இவளோடே கூடினவவன். விஷயபூ₄யஸ்தையாலே ''அடிக்கோலி'' என்கிறது. தன்னில் மிடுக்கனானவன் அழுந்தப்புக்கால் கரையிலே நிற்கிறவன் புகாதே போகவன்றேவடுப்பது; எல்லாரிலும் அளவுடைய பெரிய பிராட்டியார் குமிழ்நீருண்ணும் விஷயமானால் இவள் அகலப் போகாதே அகப்படுகைக்கு ஹேதுவென்னென்னில், ஹேது சொல்லுகிறது.- (கோலவித்யாதி₃) நின்றார் நின்றநிலைகளிலே அகப்படவேண்டும் அழகு குறைவற்றிருக்கையாலே. இதரவிஷயங்கள் இருவர்க்கும் அநுப₄விக்கப்போராமையாலே சீறுபாறென்கிறது. கிண்ணகத்திலிழிவாரைப்போலே எல்லாரும் திரளவநுப₄விக்கவேண்டும் பரப்புண்டாகையாலே இவ்விஷயத்தை அநுப₄விப்பார்க்கு ப்ரியமேயுள்ளது.

---

செய்தேயும், அவளும் அவனுமான சேர்த்தியைக் கண்ணழிவற அநுப₄விக்கைக்கு அநுகு₃ணமாக, இலையகலப்படுத்துப் பாரித்து ஆசையைப் பண்ணிக்கொண்டு செல்லுகிறவிது ஏதாயிருக்கிறதோ? இதுக்கு அடி,-இருவர்க்கும் பாத்தம் போராமல் சீறுபாறு என்னவேண்டும்படி பே₄ாக்₃யதை அளவுபட்டிருக்கிற க்ஷுத்₃ரவிஷயங்கள் போலன்றிக்கே திரள்திரளாக இழிந்தாலும் குமிழ் நீருண்ணும்படி அழகால் குறைவற்றிருக்கையிறே. 82.

---

மான சேர்த்தியைக் குறைவற அநுபவிக்க இழிந்தவளாகையாலே, பசியுள்ளவர் அகலமான இலையையிட்டுக்கொள்வதுபோலே மிகவும் பாரித்துக்கொண்டு இப் மிதுனத்தை அனுபவிக்க ஆசைப்படுவது எதற்காக? அவன் ஒருவனை அனுபவிக்கவே இவனைவிடப் பெருமைபெற்ற அவள் இப்பாடு படுகிறாள்; இவள் இருவரையனுபவிக்க இழியலாமோ? தன்னைக்காட்டிலும் வல்லவனொருவன் ஆற்றில் அழுந்துவதைக்கண்டால் கரையிலே நிற்பவன் நீரில் விழாமல் எட்டிப்போகவன்றோ வேண்டும். அப்படியிருக்க, பொறுமையே வடிவானவள் என்று பெயர்பெற்ற இவள், பொறுமையிழந்து இருவரையும் அனுபவிக்கப் பாரித்துக்கொண்டு ஆசைப்படுவது எப்படி ஒட்டும்? இப்படி ஆசைப்படுவது உலகிற்போலே சக்களத்தி போராட்டத்திற்கு இடங்கொடுக்காதோ? என்று கேள்விக்குக் கருத்து இக்கேள்விக்குஆழ்வாரேபதிலுரைக்கிறார் கடைசிஅடியாலே:

(கோலத்தால் இல்லை குறை) பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியின் அழகுக்கு எவ்விதமான குறையுமில்லையன்றோ. பெரிய பிராட்டியார்க்கு அநுபவிக்கத்தக்க பரமபுருஷனின் அழகைக்காட்டிலும், பூமிப்பிராட்டிக்கு அநுபவிக்கத்தக்க அவனும், அவளுமான சேர்த்தியழகு விஞ்சியிருக்குமன்றோ என்கை. "அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா" [ரா-ஆ 37-18] [ஜனகராஜன் திருமகளைத் தனக்கென்று இட்டுப்பிறந்த தத்துவத்தின் தேஜஸ்ஸு அளவிடற்கரியது.]

"தயா ஸ ராஜர்ஷிஸுதோऽபி₄ராமயா
உபேயிவாந் உத்தமராஜகந்யயா |
அதீவ ராம: ஶுஶுபே₄ऽதிகாமயா
விபு₄: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர:||" [ரா-பா 77-36]

[அழகியவளாய், உத்தமராஜகன்யையான அந்த சீதாபிராட்டியோடு கூடியவராய், ராஜரிஷியான தசரதரின் பிள்ளையான அந்த ராமபிரான், மிக அழகியவளான ஸ்ரீதேவியோடு கூடிய தேவர் தலைவரான விஷ்ணுவைப்போலே மிக விளங்கிநின்றார்.] "திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார்" [திருவாய் 10-6-9] "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்" [திருப்பல் 2] என்னும் பிரமாணங்கள் இங்கு அநுஸந்திக்கவுரியவை. ஆக இப்படி "படிக்கோலம் கண்டு அகலாள் பன்னாள்" என்கிறபடியே அவள் அவன் ஒருவனுடைய வடிவழகிலே ஈடுபட்டு 'அகலகில்லேன் இறையும்' என்பவளானால், இவள் இருவருமான இச்சேர்த்தியழகைக்கண்டு அடிக்கோலி நலம் புரியத் தட்டில்லை என்று கருத்து. உலகிற்போலே சக்களத்தி போராட்டத்திற்கு இடம் கொடுக்காதோ என்னும் ஐயம் இவ்விஷயத்தின் பெருமையை அறியாததால் ஏற்படுவது. உலகிற்காணும் நாயகநாயகிகளுக்குக் கோலத்தால் குறையுண்டு; அற்பமான சிற்றின்பத்திற்காக இழிகிறவர்களாகையாலே, ஒரு நாயகனை ஒரு நாயகி அநுபவிக்கவே அங்கு விஷயம் போராது; ஆகையால் பல நாயகிகளிருந்தால் அங்கு சக்களத்தி போராட்டம் ஏற்படுகிறது. அநந்தமான பேரின்பத்தை அடையவே இங்கு எம்பெருமானை ஜீவாத்மாக்கள் அனைவரும் அடைகிறார்களாகையாலே, பெரிய ஆற்றிலிழிவார் திரள் திரளாக இழிவதுபோலே இங்கும் திரளாகவே இழியவேண்டும். மேலும்,

83. குறையாக வெஞ்சொற்கள் கூறினேன் கூறி
மறையாங் கெனவுரைத்த மாலை—இறையேனும்
ஈயுங்கொ லென்றே யிருந்தே னெனைப்பகலும்
மாயன்கண் சென்ற வரம்.

மறை-வேதங்களும், ஆங்கு என உரைத்த மாலை—(இத்தகையவன் என்னுமல்) அத்தகையவன் என்றே சொன்ன எம்பெருமானை, (புல்லறிவாளனை நான்) குறை ஆக-குறை

---

''லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம்
சூாயாமிவாப்₁யுத₃யிநீமவநீம் ச தஸ்யா:'' [ர-ஸ்த 1-63]

[ (ஸ்ரீரங்கநாதனுகிற குளத்தில்) விளையாடுவதில் விருப்பமுள்ள ராஜஹம்ஸப்பேடைபோன்றுள்ள பெரியபிராட்டியாரையும், அவளுடைய வளர்கின்ற நிழல்போன்ற பூமிதேவியையும் (அடையக்கடவேன்) ] என்றும்,

''பே₄க்₃யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்க₃ராகை₃ஸ் ஸமம்
நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ₄ள நீதா: பரீவாஹதாம்
தே₃வி த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே₃வ்ய: ஸஹஸ்ரம் தத₂ா
யாபி₄ஸ்த்வம் ஸ்தநபா₃ஹுத்₃ருஷ்டிபி₄ரிவ ஸ்வாபி₄: ப்ரியம்
ஶ்லாக₄ஸே || '' [ஸ்ரீகுண-26]

[தேவியே! உனக்குக் கீழ்ப்பட்டவர்களாய், (உன் நாதனுக்கு) தேவிகளாயிருக்கும் பூதேவி, நீளாதேவி முதலான ஆயிரக்கணக்கானவர்கள் உங்களிருவர்க்கும் புஷ்பம் சந்தனம் முதலியவை போலே விட்டுப்பிரியாத உபகரணங்களாயிருந்துகொண்டு இனியவர்களாயிருப்பவர்களாய், உங்களுடைய ப்ரணயரஸம் கரைபெருகும் போது அதை வெளிவிடும் மடைபோலிருக்கிறார்கள். நீயும் உன்னுடைய கொங்கை, திருக்கைகள், திருக்கண்கள் ஆகியவற்றால் உன் நாதனை உகப்பிப்பதுபோல் அவர்களைக்கொண்டும் உகப்பிக்கிறீர்] என்றும் பட்டர் அருளிச்செய்தபடியே, பூதேவியானவள் பெரியபிராட்டியாருக்கு நிழல் போலவும், ஸ்தநபா₃ஹுத்₃ருஷ்டிகளாகிற அவயவங்கள் போலவும், புஷ்பசந்தநாதிகளாகிற பே₄ாகே₃ாபகரணங்கள்போலவுமிருப்பவள். ஆகையால் இவ்விஷயத்தில் ஸாபத்நயம் (சக்களத்திபோராட்டம்) ஏற்பட இடமேயில்லை என்று அறியத்தக்கது.

யுண்டாம்படி, வெம் சொற்கள்—செவிசுடும்படியான சொற்களாலே, கூறினேன்—பேசினேன்; கூறி—(அப்படி) பேசினது மல்லாமல், மாயன் கண் சென்ற வரம்—அப்பெருமானிடத்தில் தங்கியிருக்கின்ற அருளில், இறையேனும்—சிறிதையாவது, ஈயும் கொல் என்றே—(நமக்குக்) கொடுக்குமோ என்று (பலனையும் எதிர்பார்த்துக்கொண்டு), எனைப்பகலும்-வெகுகாலமாக, இருந்தேன்—இருக்கின்றேன்

பெரி அவ:— (குறையாக) முன்பு ஸர்வ விஸஜாதீய வஸ்துவைப் பேசுகையாலே, 'என்னோடொப்பாருண்டோ? பெரிய தமிழன், பெரிது நல்லேன்' என்று சொன்னார்; இப்போது அவ்வஸ்துதன்னை லக்ஷ்மீஸநாதமாக அநுஸந்திக்கையாலே 'அங்குத்தைக்கு விஸத்ருஶமாகச் சொன்னேன்' என்கிறார்.

---

அவ:—'பெருந்தமிழன் நல்லேன் பெருகு' என்று அவனுக்குக் கவிபாடப்பெற்ற பெருமதிப்பாலே முன்பு செருக்கி வார்த்தை சொன்னவர், இப்போது நாய்ச்சிமாரும் தானும் சேர்ந்திருக்கிற பெரிய மேன்மையைக்கண்டு கூசி, 'நாம் இவ்விஷயத்தையோ கவிபாடப் பெருமதிப்பாலே இழிந்தது? என்ன ஸாஹஸிகனோ?' என்று கீழ்ச்செய்த செயலுக்கு அனுதபிக்கிறார்.

---

88. அவ:— எழுபத்துநாலாம் பாட்டில், 'ஒத்தார் மிக்காரையில்லாத பரம்பொருளைக் கவிபாடப்பெறுகையாலே, என்னையொத்த கவியில்லை; பெரிய தமிழன் நான்; மிக்கநன்மையையுடையவன்' என்று சொன்னார். இப்போது "வடிக்கோல வாள் நெடுங்கண் மாமலராள்" என்று தொடங்கும் சென்ற பாசுரத்தில், அப்பரம் பொருளையே, அவனிலும் விஞ்சிய ரூபகுணப்பெருமைகளையுடைய பெரியபிராட்டியாரோடும், பூமிப்பிராட்டியாரோடும் சேர்ந்தவனாக அனுஸந்தித்தவுடன், 'ஐயோ! தப்பச்சொன்னேன்! நானோ பெருந்தமிழன்? நானோ பெரிது நல்லேன்; இவ்விஷயத்தை என் கொடுஞ்சொற்களாலே நான் பேசப்புகுந்தது ஸாஹஸமன்றோ' என்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (குறையித்யாதி₃) அபரிபூர்ணமாம்படியாகவும் திருவுள்ளம் நோம்படியாகவும் வார்த்தை சொன்னேன்.

உரை:— அவன் படிகளை உள்ளபடி தறைகண்டு பேச ஒருப்பட்ட வேதங்களானவை, 'அது' என்று சொல்லுமித்தனை போக்கி, இத₃மித்த₂மென்று பரிச்சே₂தி₃த்துச் சொல்லமாட்டாத பெருமையையுடைய ஸர்வேஶ்வரனை அபரிபூர்ணமாம்படியாக, ப்ரேமம் வழிந்த *செவிக்கினிய செஞ்சொல்லன்றிக்கே, கேட்டார் செவி வெடிக்கும்படியிருக்கிற வெட்டிய சொற்களாலே சொன்னேன். இப்படிச்

வ்யா:— (குறையாக வெஞ்சொற்கள் கூறினேன்) சொல்லிலும், பொருளிலும் நிறைவில்லாதபடி, கேட்டார் செவி வெடிக்கும் படியாயிருக்கும் வெம்மைமிக்க வார்த்தைகளைச் சொன்னேன். (குறையாகக் கூறினேன்) நிறைவாளரான அவனைக் குறித்துக் குறைவான சொற்களைச் சொன்னேன். (வெஞ்சொற்கள் கூறினேன்) அன்புமிகு செவிக்கினிய செஞ்சொல்லால் துதிக்கத்தக்கவனைக் குறித்துக் கேட்பார் செவிசுடும் கீழ்மை வார்த்தைகளைப் பேசினேன். "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர்" [திருவாய் 1-5-11] என்றும், "இன்கவி பாடும் பரமகவிகள்" [திருவாய் 7-9-6] என்றும் நம்மாழ்வாராலும், "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்புகூரும் அடியவர்" [பெரியதிரு 2-10-4] என்று நாலுகவிப்பெருமாளாலும் புகழப்பெற்ற இவர் குறையாக வெஞ்சொற்கள் கூறியதாகச் சொல்லுவது கவிபாடப்படும் விஷயத்தின் சிறப்பை நோக்கியேயல்லாது, இவர்கவியில் குறையுண்டானதாலல்ல என்று அறியத்தக்கது. எப்படிப்பட்டவனைக் குறித்து இத்தகைய வார்த்தைகளைச் சொன்னீர்? எனில்,- (மறை ஆங்கு என உரைத்த மாலை) அவனுடைய தன்மைகளை உள்ளபடி முழுதுங்கண்டு "யுவா ஸ்யாத்" என்று தொடங்கிப் பேச முற்பட்ட வேதமானது, உலகிலுள்ள ஆனந்தங்களை நூறுநூறாக ஏற்றிக்கொண்டுபோய், பேரானந்தங்களை மேன்மேலே கற்பித்துக் கொண்டு, 'ஸ ஏகோ ப்₃ரஹ்மண ஆநந்த₃:' [ப்ரஹ்மத்தின் ஆனந்தம் அத்தகையது] என்று, அந்நிலையிலும் 'இது' 'இத்தகையது' என்று அதை அளவிடமுடியாமல், 'அத்தகையது' என்றே கூறி, 'யதோ வாசோ நிவர்த்தந்தே' [எதனிடமிருந்து வாக்குகள் திரும்புகின்றனவோ] என்று மேலே பேசமுடியாமல் கைவாங்கிநின்ற பெருமையை உடையவனை; ஆங்கு-அத்தகையது. மால்-பெரியவன்.

"वाग्विवृताश्च वेदाः" (வாக்₃விவ்ருதாஶ்ச வேத₃ா:) என்று சொல்லப்படுகிற ஸர்வாதி₄கனை; வேத₃ம் "ஈத்₃ருஶம்-இத₃ம்" என்று

---

சொல்லி, விஷயவைப₄வத்தைப் பார்த்தும் சொற்களின் வெம்மையைப் பார்த்தும் அநுதபிக்கவேண்டியிருக்க, அது செய்யாதவளவன்றிக்கே, ஆஶ்சர்யமான கு₃ணசேஷ்டிதங்களையுடையவனானவனிடத்தில்நின்றும் உண்டாய் வரக்கடவதான ப்ரஸாத₃மானது பண்டு கவிபாடினவர்களுக்கு அவன் கொடுத்துப்போரும்படியை நினைத்து, நான் பாடின கவிக்குப் பரிசிலாக ஏதேனும் சிறிதாகிலும் தாராதோ? என்று அநேகநாளெல்லாம் ப்ரத்யுபகாரத்தை நிரீக்ஷித்துக்

---

(ஆங்கு என உரைத்த) "தத்₃விஷ்ணோ:பரமம் பத₃ம்" [விஷ்ணுவின் பரமபதம் ஆங்குள்ளது] என்றும், 'தத்' [அது] என்றும், 'யஸ்யாமதம் தஸ்ய மதம்' [எவன் பரம்பொருளை அளவிட்டு அறியவில்லையோ அவனுக்கே அது அறியப்பட்டதாகிறது] என்றும் கூறுவதன்மூலம், 'இங்குள்ளது' 'இது' 'இத்தகையது' என்று அளவிடவொண்ணாதது பரம்பொருள் என்று சொன்ன வேதவாக்யங்கள் அனைத்தையும் நினைக்கிறார். (ஆங்கு மறை என உரைத்த மாலை) "வாக்₃விவ்ருதாஶ்ச வேத₃ா:" என்கிறபடியே வார்த்தை சொல்லும்போது, 'சொல்லும் வார்த்தையெல்லாம் மறையாகிற வேதமாக உள்ளது' என்று சொல்லும்படி வார்த்தை சொல்லும் ஸர்வேஶ்வரனை என்றும் பொருள் கொள்ளலாம். இத்தால் 'என் மனத்தில் நிறைந்துகிடக்கும் தீமையை அறியாதவனொருவனையோ நான் ஏமாற்றிக் கவி சொன்னேன்? எல்லாமறிந்தவனான பரமபுருஷனையன்றோ ஏமாற்றிக் கவிசொல்ல முற்பட்டேன்' என்கிறார். இனி, 'இப்படிப்பட்ட சிறந்த விஷயத்தில் இப்படிப் புன் சொற்களைப் பேசியதற்கு அநுதாபப்படவேண்டியது முறையாயிருக்க, அது செய்யாததோடன்றியில், என் கவிக்குப் பரிசு பெறு வேண்டியிருந்தேன் மூர்க்கனேன்' என்கிறார் பாசுரத்தின் பிற்பகுதியாலே,— (மாயன் கண் சென்ற வரம் இறையேனும் ஈயுங்கொல் என்றே எனைப்பகலும் இருந்தேன்) ஆஶ்சர்யமான குணச்செயல்களை உடையவனான அப்பெருமானிடத்தில் தங்கியிருக்கிற அருளைப் பண்டைக்காலத்தில் அவனைப்பற்றிக் கவிபாடியிருப்பவர்களுக்கு அவன் அளித்துப்போரும்படியை நினைத்து, 'அவ்வருளில்

சொல்லப் போகாதவனையென்றுமாம். (இறையேனுமித்யாதி₃) விஸத்₃ருஶமாகச்சொன்னவளவேயோ? ஒன்று சொன்னேனும் அதுக்கு ப்ரத்யுபகாரமும் வேணுமென்றிருந்தேன். 83.

---

கொண்டேயிருந்தேன். விஷயகௌ₃ரவத்தையும், சொல்லின் பொல்லாங்கையும், பச்சையை நச்ச இருந்தபடியையும் நினைத்து 'என்ன மூர்க்க₂னே?' என்று அநுதபிக்கிறார். பின்னை இவர் ஒரு ப்ரயோஜனத்துக்குக் கவிபாடினவரோ? என்னில்: இக்கவிபாட்டுக்காக அவன் ஒருகால் ஏறிட்டுக் கடாக்ஷிக்குமாகில், அதுவும் ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த பெரிய பேறு என்றிருப்பார் ஒருத்தரிறே; அத்தாலே குறையில்லை. (சென்றவரம்) 'அவன் பக்கல் சென்று பிறக்கக்கடவ வார்த்தை அவன் இறையேனும் ஈயுங்கொல் என்று இருந்தேன்' என்றுமாம். (மறையாங்கென உரைத்த மாலை) "वाग्विवृताश्च वेदाः" (வாக்₃விவ்ருதாஶ்ச வேத₃ா:) என்கிற படியே சொல்லும் வார்த்தையெல்லாம் மறையென்னலாம் படி சொல்லுமவன் என்னவுமாம். இத்தால், அகச்செறிவில் பொல்லாங்கு அறியாதானொருவனைச் சொல்லப்பெற்றதோ? ஸர்வஜ்ஞனையிறே நான் மருட்டிச் சொல்லிற்று என்கை. 83.

---

ஒரு சிறிதையாவது என் கவிக்குப் பரிசாகத் தர மாட்டானோ?' என்று பல காலம் என் இளைய புன் கவிதைக்குப் பிரதியுதவியை எதிர்பார்த்துக்கொண்டே இருந்தேன். கவிபாடத் தொடங்கிய விஷயமான ஶ்ரிய:பதியின் பெருமையையும், தன் சொல்லின் புன்மையையும், அதற்குக் கைம்மாறு வேண்டிநின்ற கீழ்மையையும் நினைத்து 'எத்தகைய மூர்க்கன் யான்?' என்று அநுதபிக்கிறார். அப்படியாகில், இவரும் ஒரு பயன்கருதிக் கவிபாடியவரோ? எனில், ஒரு க்ஷுத்₃ரப்ரயோஜனத்தைக் கருதியன்று இவர் கவிபாடியது; நம்முடைய கவிக்குத் தலையசைத்து ஒருகால் குளிரக் கடாக்ஷித்தானாகில் அதுவே நம் ஸ்வரூபத்துக்குப் பொருந்திய பெரும்பேறு என்றிருப்பவரிவர். ஆகையாலே பிரயோஜனாந்தரங்களைக் கருதினார் என்னும் தாழ்வு இவர்க்கில்லை. பின்னர் அனுதபிப்பானேன்? எனில்: அத்தகைய சிறந்த விஷயத்துக்குத் தகாத இளைய புன் கவியைப் பாடிவிட்டு, அதற்கு அவனருளைக் கைம்மாறாகக் கருது

84. வரங்கருதித் தன்னை வணங்காத வன்மை
உரங்கருதி மூர்க்கத் தவனை — நரங்கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவ னடியிணையே
அங்கண்மா ஞாலத் தமுது.

வரம் கருதி — (தேவர்களிடத்துப் பெற்ற) வரத்தை மதித்து, தன்னை வணங்காத — (ஸர்வேச்வரனை) தன்னை வணங்காதிருந்தவனும், வன்மை உரம் கருதி — (தன்னுடைய) வர வலிமையையும் உடல் வலிமையையும் நினைத்து, மூர்க்கத்தவனை-பிடிவாதம் கொண்டிருந்தவனுமான இரணியனை, நரம் கலந்த சிங்கம் ஆய் கீண்ட — நரசிங்கவுருக் கொண்டு பிளந்தொழித்த, திருவன்-அழகனுடைய, அடி இணையே — இரு பாதங்களே, அம் கண் மா ஞாலத்து — அழகிய இடமுடைத்தான இம்மாநிலத்தில். அமுது — (இனிமை மிக்க) அம்ருதமாகும்.

---

அவ:— விஷயவைபவம் சொல்லில், பொல்லாங்கு முதலானவையெல்லாம் கிடக்கிடீர்! விஷயத்தினுடைய ரஸ்யதையைப் பார்த்தால் சொல்லியல்லது நிற்கப்போமோ? என்கிறார்.

---

வதும் தகாது என்றிருக்கிறாராகையாலே அனுதபிக்கவும் குறையில்லை. மாயன்கண் சென்ற வரம்—மாயோனை அவனிடத்தில் பொருந்தியிருக்கும் சிறந்த அருள் என்று பொருள். அன்றிக்கே, சிறந்ததைக்குறிக்கும் 'வரம்' என்னும் பதம் அவனுடைய சிறந்த வார்த்தையைக் குறிப்பதாய், 'மாயனை அவனிடம் சென்றபோது பிறக்கக்கூடிய சிறந்த வார்த்தையைச் சிறிதேனும் நமக்கு அருள்வானோ என்று எதிர்பார்த்திருந்தேன்' என்கிறாராகவுமாம். 83.

84. அவ:— என்னுடைய வார்த்தையானது, அந்த விஷயத்தின் சிறப்புக்குத் தகாததாயிருந்தபோதிலும், அவ்விஷயத்தின் இனிமையே என்னை நிர்ப்பந்தித்துப் பாட வைக்கிறது என்று கூறி, மேலும் அவனையே கவிபாட இழிகின்றார்.

வ்யா:— (வரமித்யாதி₃) தே₃வதைகள் பக்கலிலே வரம் பெற்றவனாய், தே₃வதைகளுக்கும் அடியாயிருந்துள்ள உன்னை வணங்காத து₃ரபி₄மாநத்தையுடையவனான ஹிரண்யனை.

---

உரை:— தேவர்கள் பக்கல் பெற்ற வரத்தைத் தனக்கு உறுதியாக நினைத்து, அந்த தேவர்களுக்கும் அடியான பெருமையுடையவனான தன்னை, "ந நமேயம்" (ந நமேயம்) என்னும்படி வணங்காதே போந்தவனாய், அந்த தேவர்கள் வரத்தால் வந்த மிடுக்கையும், தன் தோளாலே எறிந்து கொண்ட மிடுக்கையும் தனக்கு உபகரணமாக உண்டென்று கருதி, அத்தால்வந்தமேணாணிப்பைஉடையவனானஹிரண்யனை, சேராச்சேர்த்தியான நரத்வஸிம்ஹத்வங்களோடே கூடின வடிவையுடையவனாய்க்கொண்டு கிழித்துப்பொகட்டவனாய்,

---

வ்யா:—(வரம் கருதி) தேவர்களிடம் பெற்ற வரத்தைத் தனக்கு உறுதியாக எண்ணி. (தன்னை) அந்த தேவர்களுக்கும் அவ்வரமளிக்கும் பெருமையை அளித்த தேவாதிதேவனான தன்னை. (வணங்காத) 'த்₃விதா₄பூ₄ஜ்யேயமப்யேவம்,ந நமேயம் து கஸ்யசித்'[ரா-யு 36-11] [இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனேயொழிய எவனுக்கும் வணங்கமாட்டேன்] என்று வணங்காதே போந்த மூர்க்கனான ஹிரண்யனை என்று மேலோடு கூட்டுவது. (வன்மை உரம் கருதி மூர்க்கத்தவனை) அந்த தேவர்களின் வரத்தால் வந்த வலிமையையும், கண்டதைத் தின்றும், எதிரிகளோடு போரிட்டும் தான் ஸம்பாதித்துக்கொண்ட தோள்வலிமையையும் தனக்குப் பக்கபலமாகக் கருதி, அதனால் பிடிவாதம் கொண்டிருந்த இரணியனை; 'மூக்கத்தவனை' என்று பாடமாம்போது கர்வம் கொண்டிருந்த இரணியனை என்று பொருளாகிறது. (நரங்கலந்த சிங்கமாய்க்கீண்ட) 'நான் இதுவரையில் கண்டுபோந்த எந்த ஜீவராசியாலும் இறக்கக்கூடாது' என்று வரம் வேண்டியிருந்தானாகையாலே தன் சரீரமான ப்₃ரஹ்மாதி₃களால் கொடுக்கப்பட்ட அவ்வரம் பொய்யாகாமைக்காக, அதுவரையில் கண்டறியாததொன்றாய், முரண்பட்டதாகையாலே சேராச்சேர்த்தியாய், கழுத்துக்குக்கீழ் நரத்தன்மையும் கழுத்துக்குமேல் சிங்கத்தன்மையும் கலந்ததான வடிவை உடையவனாய்க்கொண்டு கிழித்துப் போட்டதை நினைக்கிறார்.

(நரமித்யாதி₃) இதுக்கு முன்புள்ளதாலொன்றாலும் படாப்பே னென்று வேண்டிக்கொள்ள முன்பில்லாத நரங்கலந்த ஒங்கமாய் அவனைக்கீண்ட ஸ்ரீமானுடைய சரணத்₃வயமே ஒரு தே₃ஶத்திலே தேடிப் போகவேண்டாத அம்ருதம். ''திருவன்'' என்றது — ''அழகியான்றானே அரியுருவன்றானே'' '' नारसिंहवपुः श्रीमान्'' (நாரஸிம்ஹவபுஶ்ஸ்ரீமாந்) என்னும் வடிவு. 84.

---

பரஸ்பரவிருத்₃த₄மான இரண்டு வடிவை எடுத்துக் கொண்டவளவில், பொல்லாதாயிருக்கையன்றிக்கே, சேர் பாலும் க₂ண்ட₃ஶர்க்கரையும் கலந்தாற்போலே அத்யந்த ரஸாவஹமான அழகையுடையவனுடைய சேர்த்தியழகை உடைத்தான திருவடிகளே, ஸ்வர்க்க₃த்தில் தே₃வபோ₄க்₃ய மான அம்ருதம் போலன்றிக்கே, அழகிய இடமுடைத்தான மஹாப்ருதி₂வியிலே அநந்யப்ரயோஜனர்க்கு பு₄ஜிக்கலாம்படி நிரதிஶயபோ₄க்₃யமான அம்ருதம். 'மூர்க்கத்தவனை' என்று பாட₂மானபோது 'மூர்க்க₂னை ஹிரண்யனை' என்றபடி. 84.

---

இப்படி முரண்பட்ட வடிவங்கள் ஒன்று கலந்திருக்குமாகில் அழகற்றி ருக்குமோ? எனில்: ஏலம், லவங்கம், பச்சைக்கர்ப்பூரம், குங்குமப்பூ முதலானவற்றைச் சேர்த்துக் காய்ச்சியபாலும் கற்கண்டும்போலே அதிரஸமாகக் கலந்த அழகையுடையவனுயிருந்தான் என்கிறார்,— (திருவன்) அழகையுடையவன்; அழகாகக் கலந்த இந்த நரங்கலந்த சிங்கவுருவைக் கண்டவர்களுக்கு, அதற்குப்பின் எம்பெருமானே மிகவழகியதொரு நரவடிவையோ, சிங்கவடிவையோ கொண்டாலும் அது சுவையற்றிருக்கும் படியாக அதிரஸமாகக் கலந்த அழகை யுடையவன். ''ம்ருகோ₃ந பீ₄ம:'' [ருக்-மண்டலம் 1-21-154] என்று வேதத்திலும், ''நாரஸிம்ஹவபு: ஸ்ரீமாந்'' [நரங்கலந்த சிங்க வடிவையுடையவன்; (அவ்வுருவிலேயே) அழகாயிருப்பவன்] என்று ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும், ''அழகியான் தானே அரியுருவன் தானே'' [நான்-திருவ 22] என்று திருமழிசைப்பிரானாலும் உத்கோ ஷிக்கப்பட்டதன்றே. (அடியிணையே அங்கண்மாஞாலத்து அமுது) அவ்வழகியானுடைய, ஒன்றுக்கொன்றே ஒப்பாயிருக்கும் சேர்த்தி யழகையுடைய திருவடிகளே, மோக்ஷானந்தம்போல் ஒரு தேஶ

85. அமுதென்றும் தேனென்று
அமுதன்று கொண்டுகந்தா னென்றும்—அமுதன்ன
சொன்மாலை யேத்தித் தொழுதேன், சொலப்பட்ட
நன்மாலை யேத்தி நவின்று.

அமுது என்றும்—அமிருதம் போன்றவனென்றும், தேன் என்றும்—தேன் போன்றவனென்றும், ஆழியான் என்றும்—திருவாழியை யுடையவனென்றும், அன்று அமுது கொண்டு உகந்தான் என்றும்—முற்காலத்தில் (கடல் கடைந்து தேவர்க்கு) அமுதமெடுத்தளித்து மகிழ்ந்தவன் என்றும், ஏத்தி—துதித்து, சொலப்பட்ட—(சாஸ்திரங்களால் இவ்வண்ணம்) சொல்லப்பட்டிருக்கின்ற, நல் மாலை—மிகச் சிறந்த வனை எம்பெருமானை, அமுது அன்ன சொல் மாலை-அம்ருதம் போன்ற இப்பாசுரங்களினால், ஏத்தி நவின்று தொழுதேன்—பலகாலும் புகழ்ந்து சொல்லி வணங்கினேன்.

---

அவ-: அவனுடைய ரஸ்யதையை அநுஸந்தித்தவாறே 'அமுதன்ன சொன்மாலை ஏத்தித் தொழுதேன்' என்கிறார்.

---

விசேஷமான பரமபதத்தில் சென்றனுபவிக்கத்தக்கதாயிராமல் அழகியதாய், இடமுடையதான இப்பெரிய பூமியிலேயே, வேறொன்றிலும் கண் செலுத்தாது நாம் அனுபவிக்கத்தக்க மிகவினிய அமுதமாயிருக்கும். 'அங்கண்மாஞாலத்து அமுது' என்று தேவலோகத்தில் தேவர்களனுபவிக்கும் உவர்க்கடலிற் பிறந்த உப்புச்சாறான அமுதத்தைக் காட்டிலும் இதற்குச் சிறப்புச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். ''குறையாக வெஞ்சொற்கள் கூறினேன்'' என்று கவி பாடுவதினின்றும் கைவாங்கத் தொடங்கிய என்னை, இவ்வமுது மேலும் கவிபாடச் செய்துவிட்டது என்று கருத்து. 84.

85. அவ:— விஷயத்தின் இனிமை நிர்ப்பந்திக்கக் கவிபாட இழிந்தவர், அவ்வினிமையை அநுஸந்தித்தவுடன், 'அவ்வினிய விஷயத்தைப்பற்றியதாகையாலே, தம் குறையான வெஞ்சொற்களும் அமுதன்ன சொன்மாலையேயாயிற்று' என்கிறார் இப்பாசுரத்தில்

வ்யா:- (அமுதென்று மித்யாதி₃) அம்ருதத்தோடு பர்யாய சப்தம்போலே காணும் ஆழியானென்கை. (அமுதன்றித்யாதி₃) தன்னை வேண்டாதே உப்புச்சாறு வேண்டுமவர்க்கு அது தேடிக்

---

உரை:– நித்யபோ₄க்₃யமான அம்ருதமென்றும், ஸர்வ ரஸஸமவாயமான தேன் என்றும், நிரதிஶயபோ₄க்₃யமான திருவாழியை உடையனென்றும், அஸுரப₄யபீ₄தராய் தே₃வர்கள் ஶரணம்புக்கவன்று, கடலில் ஸாரமான அம்ருதத்தை அந்தக் கடலைக்கடைந்து வாங்கிக்கொண்டு கொடுத்து, 'இதுக்காகவாகிலும் நம்மை வந்து அர்த்தி₂க்கப்

---

வ்யா:— (அமுதென்றும்) தேவர்க்கே இனியதான அவ்வமுதம் போலல்லாமல் என்றும் எவர்க்கும் இனியதான அமுதம். இவ் வாராவமுதுக்குமுன் அது உப்புச்சாருகவேயன்றே இருப்பது. (தேன் என்றும்) அறுசுவைகளும் கலந்திருக்கும் தேன் என்றும், 'ஸர்வ ரஸ:' என்று உபனிஷத்துக்களில் எல்லாச் சுவையாகவும் சொல்லப் படுகிருனன்றே இவன். இப்படி அடியார்க்கு அமுதாகவும், தேனுகவு மிருப்பவன் கையும் திருவாழியுமான சேர்த்தியழகை உடையவனே என்கிருர் மேலே,-(ஆழியான் என்றும்) மிகவினியதான திருவாழியை உடையவன் என்றும். (அமுதென்றும்...ஆழியான் என்றும்) இவ்விஷ யத்தின் இனிமையை அறிந்தவர்களுக்கு, அமுது, தேன், ஆழியான் என்பவை ஒரே பொருளையுடைய பர்யாயஶப்தமாயிருக்கும்போலும்! இப்படி ஆராவமுதாயிருக்கும் தன்னை ஆசைப்படாமல், உப்புச் சாருன அமுதத்தை வேண்டுகிறவர்களுக்கு அதையும் கொடுத்து உகக்கின்றவன் இவனே என்கிருர் மேலே,— (அன்று) அஸுரர் களிடம் பயத்தாலே சாவுக்கு அஞ்சி தேவர்கள் தன்னைச் சரணம் புகுந்த அன்று. (அமுது கொண்டு உகந்தான் என்றும்) திருப்பாற் கடலில் ஸாரமான அமுதத்தைக் கடைந்து எடுத்து அவர்களுக்குக் கொடுத்து, 'இதற்காகவேனும் இவர்கள் நம்மை வந்து வேண்டி ஞர்களே' என்று, பெற்ற அவர்களைக்காட்டிலும் பிரீதியடைந்தவன் என்றும். 'உதா₃ரா: ஸர்வ ஏவைதே' [கீதை 7-18] [ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளும், ஜ்ஞானியுமாகிற மூவருமே உதாரர்கள் (வண்மைமிக்கவர்கள்)] என்று தன்னிடம் ஏதேனுமொன்றை யாசிப் பவர்களையும், தன்னுடைய ஔதா₃ர்யத்தை (வண்மைக்குணத்தை) திறம்பெறச் செய்பவர்களாகையாலே உதாரர்கள் என்பவனன்றே இவன். 'அமுது கொண்டு' என்றது அமுதைத் தான் கடைந்து

கொடுக்குமவன். (அமுதன்னவித்யாதி₃) அவனையும் தேவர்க
ளமுதத்தையும் ஒழிய இவருடைய அம்ருதம் அவனைப்
பேசுஞ்சொல்லு. (சொலப்பட்டவித்யாதி₃) "यस्मिन्नकृत्रिमगिरां
गतिरेककण्ठा" (யஸ்மிந்நக்ருத்ரிமகி₃ராம் க₃திரேககண்டா₂)

---

பெற்றேருமே' என்று ப்ரீதனுனென் என்றும், "रसो वै सः"
(ரஸோ வை ஸ:) "सर्वरसः" (ஸர்வரஸ:) "मध्व उत्सः"(மத்₄வ
உத்ஸ:). "घृतशङ्खचक्रः" (த்₄ருதஶங்க₂சக்ர:) என்கிற ஶ்ருதி
ஶாஸ்த்ரங்களாலே சொல்லப்பட்ட விலக்ஷணனான ஸர்வேஶ்
வரனை, ஆத₃ராதிஶயம் தோற்றப் புகழ்ந்து சொல்லி, எல்லா
போ₄க்₃யதையும் தன் போ₄க்₃யதையிலே பொதிந்திருக்கை

---

எடுத்ததையே காட்டுமாயினும், தேவர்களுக்காகவே எடுத்தானாகை
யாலே, தேவர்களுக்குக் கொடுத்ததற்கும் உபலக்ஷணமாகும். அன்
றிக்கே, 'கொண்டு' என்றதைத் தான் கொண்டதையே குறிப்பதாகக்
கொண்டால், 'அமுது' என்று பெண்ணமுதாகிற பெரிய பிராட்டி
யாரைக் குறிப்பதாகக் கொள்ளவேணும். "விண்ணவர் அமுதுண்ண
அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே!" [பெரிய திரு
6-1-2] என்றாரன்றே மங்கைமன்னன். 'என்றும்' 'என்றும்' என்னும்
நாலு பதங்களையும், 'ஏத்தி' என்னும் பதத்தோடும், 'சொலப்பட்ட'
என்னும் பதத்தோடும் கூட்டிப்பொருள்கொள்ளலாம். (அமுதன்ன
சொன்மாலை ஏத்தி) உலகிற்காணும் எல்லா இனிமையும் தன் இனி
மையிலே பொதிந்திருக்கையாலே 'அமுது' எனப்பட்ட அவனையும்
தன்னுட்பொதிந்து கொண்டிருக்கையாலே அப்பரமபுருஷனுகிற
அமுதம்போலே ஒப்பற்ற இனிமையை உடையதாயிருக்கும் சொற்
களால் தொடுக்கப்பட்ட இப்பிரபந்தத்தாலே அவனைத் துதித்து.
விஷயத்தின் பெருமையை அனுஸந்தித்தவுடன், தன் கவி அவ்விஷ
யத்திற்குத் தக்கதாகாது என்று கருதி, "குறையாக வெஞ்சொற்கள்
கூறினேன்" என்றார். அவ்விஷயத்தின் இனிமையை அனுஸந்தித்த
வுடன், அத்தகைய இனிய விஷயத்தைப்பாடும் தன் கவியை 'அமு
தன்ன சொன்மாலை' என்கிறார். ஆகையாலே விரோதமில்லை.
(ஏத்தித்தொழுதேன்) அவன் இனிமையை அனுஸந்தித்து வாயாலே
அவனைத்துதித்தவுடன், இவ்வினிமைக்குத்தோற்று, மமகாரமற்று
அவன் திருவடிகளிலே விழுந்தேன். இப்படித்துதித்துத் தொழுதது
தான் எவ்விஷயத்தை எனில்: (சொலப்பட்ட நன்மாலை) 'அமுதென்
றும்' முதலானவற்றை இங்கும் கூட்டலாம். "ரஸோ வை ஸ:'

என்று ப்ரமாணங்களாலே சொல்லப்பட்ட நன்மாலையேத்தி நவின்று அமுதன்ன சொன்மாலை யேத்தித்தொழுதேன். 85.

86. நவின்றுரைத்த நாவலர்கள் நாண்மலர்கொண்டு, ஆங்கே
பயின்றதனால் பெற்றபய னென்கொல் — பயின்றார்தம்
மெய்த்தவத்தால் காண்பரிய மேகமணி வண்ணனையான்
எத்தவத்தால் காண்பன்கொ லின்று.

நவின்று உரைத்த — (ஸாதனபுத்தியாலே அவன் திருநாமங்களைப்) பலகாலுஞ் சொல்லுகின்ற, நாவலர்கள் — கவிகள், நாள் மலர் கொண்டு — அப்போதலர்ந்த பூக்களைக் கொண்டு, ஆங்கே பயின்று — அந்த ஸர்வேச்வரனிடத்தில் நெருங்கி ஆச்ரயித்து, அதனால் பெற்ற பயன் என்கொல் — அதனால் (அவர்கள்) பெற்ற பிரயோஜநம் என்னோ? [எம்

---

யாலே அமுதென்று சொல்லப்படுகிற அவனையும் பொதிந்து கொண்டிருக்கையாலே, அம்ருதம்போலே நிரதிஶயபோக்ய மாயிருந்துள்ள ஶப்தஸந்தர்ப்பங்களாலே புகழ்ந்து திருவடிகளில் நிர்மமனாய் விழுந்தேன். 85.

---

[தை-ஆந 7-1] [அப்பரமபுருஷன் ரஸமாயிருப்பவனன்றோ] "ஸர்வ ரஸ:" [சாந் 3-14-2] [எல்லா ரஸமுமாயிருப்பவன் பரமபுருஷன்] "விஷ்ணோ:பதே பரமே மத்வ உத்ஸ:" [ருக்-மண்டலம் 1-21-154] [விஷ்ணுவின் மேலான திருவடியில் தேன் பெருக்கெடுத்தோடுகிறது.] முதலான ஶ்ருதிகளிலும், "த்ருதஶங்கசக்ர:" [நாரஸிம்ஹ புராணம்] "ஶங்கசக்ரகதாதர:" [ரா-யு 114-15] முதலான இதிஹாஸ புராணங்களிலும் அமுது முதலான எல்லா ரஸமாகவும் இருப்பவன் என்றும், சங்கசக்ரங்களை தரித்தவன் என்றும், தேவர்க்கு அமுதமளித்தவன் என்றும் சொல்லப்பட்டவனாய்,மிகச்சிறந்தவனான திருமாலை என்றபடி. அன்றிக்கே, "யஸ்மிந் அக்ருத்ரிம கிராம் கதிரேககண்டா" [எவனிடத்தில் ப்ரமம், ப்ரமாதம், விப்ரலிப்ஸை முதலான தோஷங்களற்ற சாஸ்திரங்கள் ஒருமிடறாகச் சேருகின்றனவோ] என்கிறபடியே தோஷமற்ற ப்ரமாணங்களால் சொல்லப்பட்டவன் என்றும் பொருள் கொள்ளலாம். (ஏத்தி நவின்று) அன்பின் மிகுதியாலே பலகாலும் புகழ்ந்து போற்றி, 'அமுதன்ன சொன்மாலை ஏத்தித் தொழுதேன்' என்று கூட்டிப் பொருள்கொள்ள வேணும். 85.

பெருமான் தானே தன்னைக் காட்டினாலல்லாமல் இவர்களுடைய சுயமுயற்சியால் என்ன பயன் பெறமுடியும் என்கை.] பயின்றார் தம்—ஸாத₄நாநுஷ்டாநம் பண்ணுமவர்களுடைய, மெய் தவத்தால்— சரீரம் நொந்து செய்கிற தபஸ்ஸினால், காண்பு அரிய— காண முடியாதவனும், மேகம் மணி வண்ணனை— நீல மேகத்தையும் நீல மணியையும் போன்ற நிறத்தையுடையவனுமான எம்பெருமானை, யான்-அடியேன், இன்று—இப்போது, எத் தவத்தால் கொல் காண்பன்— எந்தத் தபஸ்ஸினால் காண்கின்றேன்? [அவனே காட்டிக் கொடுக்கக் காண்கின்றேனேயொழிய, ஒரு தவஞ்செய்து காண்கின்றேனல்லேனென்கை.]

பெரி அவ:— (நவின்று) அவன் தானே காட்டக்கண்ட என்னோடொப்பார்களோ ஸாத₄நாநுஷ்டாநம் பண்ணிக் காண்கிறவர்கள்? என்கிறார்.

வ்யா:-(நவின்றித்யாதி₃) நாவலர்களானவர்கள் செவ்விப் பூவைக்கொண்டு ஸாத₃ரமாக உரைப்பார்கள். (பயின்ற

---

அவ:— அவன் தானே காட்டக்கண்ட என்னோடு ஒப்பர்களோ ஸாத₄நாநுஷ்டாநம் பண்ணிக்கண்டவர்கள்? என்கிறார்.

உரை:— அவன் திருநாமங்களை ஆத₃ரம்தோற்றப் பலகாலும் சொல்லிக்கொண்டு, ஶப்₃த₃ார்த்த₂ஸம்ப₃ந்த₄மறிந்து கவிபாடவல்ல ப்ரயோஜநாந்தரபரரான கவிகள், செவ்விப்

---

86. அவ:— தான் நன்மாலை ஏத்தி நவின்று சொன்மாலை ஏத்தித் தொழுததைச் சொன்னவுடன், உபாயபுத்தியுடன் அவனை நவின்றுரைத்துத் தொழுமவர்களைப்பற்றிய நினைவு ஏற்பட்டு 'இப்படி ஸாத₄நாநுஷ்டா₂னம்செய்து காணவிருக்கிறவர்கள், அவன், தானே தன்னைக்காட்டக்கண்ட என்னோடு ஸமானமாவரோ?' என்கிறார்.

வ்யா:— (நவின்றுரைத்த நாவலர்கள்) தாங்கள் பெறவிருக்கும் ப₂லத்தில் ஆதரத்தாலே, அதற்கு ஸாதனமான திருநாமத்திலும் ஆதரத்தைச் செய்து கொண்டு, அதனாலே பலகாலும் திருநாமத்

வித்யாதி₃) பெற்றால்தான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணிப் பெற்ற பேறென்? (பயின்றாரித்யாதி₃) ஆஶ்ரயித்தவர்களுடைய உடம்பு நோவப்பண்ணின தபஸ்ஸால் காணவரிய ஶ்ரமஹரமான

பூக்களை ஸம்பாதித்துக்கொண்டு அந்த ஸர்வேஶ்வரனிடத்திலே நெருங்கி ஆஶ்ரயிக்க. அததால் பெற்ற ப்ரயோஜநம் ஏதோ? இப்படி நெருங்கி ஸாத₄நாநுஷ்டா₂நம் பண்ணினாருடைய ஶரீரத்தை ஒறுத்துப்பண்ணின தபஸ்ஸால் காண

தைச் சொல்லும் *நாவன்மையுடையவர்கள். (நாவலர்கள்) இயலும் (சொல்லும்) பொருளும் இசையத் தொடுக்கவல்ல *சொல்லேருழவர்கள்; கழியமிக நல்ல வான் கவிபாடவல்ல கவிஞர்கள். நன் மாலை ஏத்திநவின்று, சொன்மாலை ஏத்தித்தொழும் தம்மைப்போன்ற கவிகளாயிருந்து வைத்தும், அக்கவிகளை ஸ்வயம் பிரயோஜனமாகப் பாடி அவனாலே அவனைக் காண இராமல், அக்கவிகளை ஸாத₄னமாக்குவதும், கற்பக விருக்ஷத்திடம் கௌபீநபிக்ஷைகேட்டாற் போலே, விலைமதிப்பற்ற கவிகளுக்கு விலையாக ஒரு க்ஷுத்₃ர ப்ரயோஜனத்தை அவனிடம் சென்று நச்சுவதுமாயிருக்கிறார்களே இவர்கள் என்று வருந்துகிறார். (நாண் மலர் கொண்டு) மலர் வாடிவிடில் ஸாதநாநுஷ்டானத்துக்குக் குறை வருமோ என்று சங்கித்து அப்போதலர்ந்த செவ்விப்பூக்களை சிரமப்பட்டு ஸம்பாதித்துக் கொண்டு (ஆங்கே)''ஸ ஸ்வேநைவ ப₂லப்ரத₃:ப₂லமபிஸ்வேநைவ நாராயணா:'' [அநர்க்கராகவம்] என்று தானே ஸாத₄நமாகவும் ஸாத்யமாகவுமிருக்கும் அவனைப் பெறச் சிலர் ஸாத₄நாநுஷ்டானம் செய்வதே! அவனை ஸாத₄நமாகப் பற்றி, அவனிலும் மிகத் தாழ்ந்த பொருள்களைச் சிலர் பெற விரும்புவதே! என்னும் வருத்தத்தைக் காட்டுகிறது. (பயின்றதனால் பெற்ற பயன் என்கொல்) அந்த ஸர்வேஶ்வர்னிடத்தில் நெருங்கி ஆஶ்ரயித்து, இவர்கள் பெறும் பயன் என்ன? ப₃ந்த₄கமான அற்பபலன்களைப்பெறுபவர்கள் ஒருபுறமிருக்க; ஸாத₄நாநுஷ்டா₂நம் செய்து அவனைப்பெற நினைப்பவர்கள் அவற்றால் அவனை எளிதில் பெற்றுவிடமுடியுமோ? அப்படியே பெற்றாலும், அதைப்பெற இவர்கள் பட்ட பாடுகளை நினைத்தால், இப்பாடுபட்டு ஒன்றைப் பெறுவதைவிடப் பேசாமலிருக்கலாம் என்னும்படி செய்தற்கரியவையாயிருப்பவையன்றோ அந்த ஸாத₄நாந்தரங்கள் என்று கருத்து. இப்படி ஸாத₄நாநுஷ்டா₂னம் பண்ணவிடில், அவனைக்காண்பது எப்படி? என்னில். நான்

* நாவலர்:—(1)நாவன்மையுடையார்; (2)நாவாகிற அலத்தை (ஹலத்தை-ஏரை) உடைய சொல்லேருழவர்.

வடிவையுடையவனை இன்றென்ன தபஸ்ஸு பண்ணிக் கண்டேன்? அவன் காட்டக்கண்டேனத்தனையிறே. "யாவர் நிகரகல்வானத்தே" "வானக்கோனைக் கவிசொல்லவல்லேற்கு இனி மாறுண்டே". 86.

---

அரியனாய், மேக₄ம்போலேயும், நீலமணிபோலேயும், ஶ்ரம ஹரமான வடிவையுடையனுமான ஸர்வேஶ்வரனை, அதி க்ஷுத்₃ரனான நான் இன்று எந்தத் தபஸ்ஸாலே கண்டு அநுபவிக்கப்பெற்றேன்? அவன் காட்டக்கண்டேனித்தனை யிறே என்று கருத்து. 86.

---

அவனையே உபாயமாகப்பற்றி அவனைக் கண்டாற்போலே காண லாம் என்று காட்டுகிறார் பின்னடிகளாலே; (பயின்றார் தம் மெய்த் தவத்தால் காண்பரிய) இப்படி நெருங்கி ஸாத₄நாநுஷ்டா₂னம் செய் தவர்கள் தம் உடம்புநோவச்செய்த கர்மயோகம் முதலான தவங் களால் காண அரியவனான. மெய்–உடம்பு; மெய்த்தவம்–சரீரத்தை வருத்திச் செய்யும் ஸாத₄நாநுஷ்டா₂னம். இவை பல அங்கங்களை யும், யோக்₃யதைகளையும் அபேக்ஷிக்கையாலே செயற்கரியவையா யிருப்பவை; ஆகையால் இவைகளை ஸாதனமாகக்கொண்டு அவனைக் காண்பது அரிது என்று கருத்து. (மேகமணி வண்ணனை) மேகம் போலேயும், நீலமணிபோலேயும் கண்டார் களைப்பை ஆற்றும் வடிவழகை உடையவனை. இத்தால், இவனைக்காண்பதே கண் படைத்த பயன் என்று காட்டுகிறார். (யான் இன்று எத்தவத்தால் காண்பன் கொல்) மிகத் தாழ்ந்த யான் இன்று என்ன தவத்தைப் பண்ணிக் காண்கிறேன்? அவனே தன் நிர்ஹேதுக க்ருபையாலே தன் வடிவழகைக் காட்டக்கண்டேனேயொழிய என்ன தவத்தைச் செய்து இன்று அவனைக் காண்கிறேன்? அவனையே யான் உபாய மாகப் பற்றியபடியால், எனக்கு யாதொரு ஸாத₄நாநுஷ்டா₂ன ஶ்ரமத்தையும் வைக்காமல் தானே தன்னைக்காட்டினான் என்று கருத்து. அடுத்த பாசுரத்தில் அவனை கர்ப்பவாஸத்திலேயே கண்டதாகக் கூறுகையாலே, 'என்ன தவம் செய்து நான் அவனை இன்று காணப் போகிறேன்?' என்று பொருள்கொள்வது பொருந்தாது. 'யான்' என்று தன் தாழ்ச்சியை அனுஸந்திப்பதாக அப்பிள்ளையுரை. 'யாவர் நிகர் அகல் வானத்தே' [திருவாய் 4-5-8] "வானக்கோனைக் கவி சொல்ல வல்லேற்கு இனிமாறுண்டே" [திருவாய் 4-5-9] என்ற விடத்திற்போலே, அவனைக்கொண்டே அவனைக்கண்ட தன் ஒப் பற்ற பெருமையை உணர்த்துகிறார் என்பது பெரியவாச்சான்பிள்ளை யின் திருவுள்ளம். 86.

87. இன்று வறிகின்றே னல்லேன் இருநிலத்தைச்
சென்றுங் களந்த திருவடியை—அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி யெந்தை திறம்.

அன்று கருக்கோட்டியுள் கிடந்து—முன்பு கர்ப்பஸ்தானத்துக்குள்ளே கிடந்து, திருக்கோட்டி எந்தை திறம்—திருக்கோட்டியூர்ப் பெருமானுடைய தன்மைகளை, கண்டேன்—கண்டு அநுபவிக்கப் பெற்றேன்; கை தொழுதேன்—(அநுபவத்துக்குப் போக்குவீடாகக்) கைதொழவும் பெற்றேன்; (ஆனபின்பு) இரு நிலத்தை-பரப்புமிக்க இந்நிலத்தை, ஆங்கு சென்று அளந்த திரு அடியை—(திரிவிக்கிரமாவதார காலத்தில்) அங்கங்கே தானே பரவி முழுதும் அளந்து கொண்ட திருவடியை, இன்று ஆ அறிகின்றேன் அல்லேன்—இன்றைக்குத்தான் அறிந்துகொண்டேனென்பதில்லை. (கர்ப்பவாஸமே தொடங்கி மறவாமலிருக்கிறேன்.)

பெரி அவ:-(இன்று) ஸாத₄நாநுஷ்ட₂ாநமும் யோக்₃யதையுமின்றியிருக்கக்கண்டிலேனோ? என்கிறார்.

---

அவ:— உம்முடைய பேற்றுக்கு ஏற்றமென்? என்னில்: நான் க₃ர்ப்ப₄ஸ்த₂னை காலமே தொடங்கி அடிமைச்சுவட்டோடு கூட அவன் படிகளை அநுப₄விக்கப்பெற்றவனன்றோ என்கிறார்.

---

87. அவ:— ஸாத₄நாநுஷ்ட₂ானம்பண்ணி அவனைப் பெற விருப்பவர்களின் தாழ்வைச் சொன்னார் சென்ற பாசுரத்தில். உம்முடைய பேற்றுக்குச் சிறப்பென்ன? என்னும் கேள்வியெழ, ஸாத₄நங்களை அனுஷ்டிக்கத் தகுதியேயற்றிருந்த கர்ப்பவாஸத்தின் போதே அவனாலே கடாக்ஷிக்கப்பெற்று, அவனுக்குக் கைங்கர்யமும் செய்து அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளின் பெருமைகளை அநுபவிக்கப்பெற்ற பேறன்றோ என்னுடையது என்கிறார்.

வ்யா:—(இன்றித்யாதி₃) இன்றுகவறிகிறேனோ? (இருநில மித்யாதி₃) அவனளக்கிற இடத்திலே பூ₄மிசென்றதோ? பூ₄மி

---

உரை:— ஒரு ஸாத₄நத்தை அறிந்து அநுஷ்டி₂க்கைக்கு யோக்₃யதையுங்கூட இல்லாதவன்று க₃ர்ப்ப₄ஸ்த₂ானத்துக்குள்ளே கிடந்து, நீர்மைக்கு எல்லைநிலமான திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனாய், க₃ர்ப்ப₄ஸ்த₂னை என்னுடைய த₃ய

---

வ்யா:— (இன்று அறிகின்றேனல்லேன்) பகவத்விஷயத்தை நான் இப்போதாக அறிகிறேனல்லேன். நான் இப்போதாக அறிந்திருந்தேனாகில், 'இவரும் ஒரு ஸாத₄னத்தை அனுஷ்டித்து பகவத் விஷயத்தை அறிந்தவர் போலும்' என்று நினைக்கக்கூடும். அப்படியல்லாமல், ஸாதநாநுஷ்டானத்துக்குத் தகுதியேயில்லாமலிருந்த கர்ப்பஸ்தானத்திலேயேயன்றோ அவன் தானே தன்னைக் காட்டக் கண்டேன் என்று கருத்து. இப்படித் தானே சென்று சிலரை விஷயீகரிக்கும் தன்மை அவனுக்கு உண்டோ? என்னில்: (இருநிலத்தைச் சென்று ஆங்கு அளந்த திருவடியை) பரப்பை உடைய தான பூமியை, 'இதை அளக்கவேணும்' என்று எவரும் யாசிக்காமலிருக்கச் செய்தேயும், அது இருக்குமிடம் தேடித் தானே சென்று, குழந்தையைத் தடவிக்கொள்ளும் தாயைப்போலே தடவியளந்த திருவடியன்றோ அவனுடையது. அவன் அளக்குமிடம் நோக்கி பூமி சென்றதோ? பூமிகிடந்தவிடமெல்லாம் தானே சென்று அளந்தானித்தனையன்றோ? இச்செயலிலிருந்தே அவன் நிர்ஹேதுகமாகத் தானே சென்று சிலரை விஷயீகரிப்பதுண்டு என விளங்கவில்லையோ? என்று கருத்து.

''கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று ஓர்
எண்தானும் இன்றியே வந்து இயலுமாறு
உண்டானை உலகேழும் ஓர் மூவடி
கொண்டானைக் கண்டு கொண்டனை நீயுமே''

[திருவாய் 1-10-5]

என்று நம்மாழ்வாரும் அச்யுதனுடைய அவ்யாஜோதா₃ரபா₄வத்தை (ஒரு வியாஜத்தையும் எதிர்பாராத வண்மைக்குணத்தை) விளக்கத் திருவுலகளந்த திருஷ்டாந்தத்தை எடுத்தருளினாரன்றோ. உம்மை அப்படி விஷயீகரித்தது எப்போது? எனில்: (அன்று) ஒரு ஸாத₄நத்தை அறிந்து அநுஷ்டி₂க்கத் தகுதியுடையவனாயிருந்தபோதோ அவன் என்னை விஷயீகரித்தது? '' அறியாக்காலத்துள்ளே ''

கிடந்தவிடமெல்லாம் தானே சென்றளந்தானித்தனையன்றே?
(அன்றித்யாதி₃) என ஸ்வாமியிடையாட்டம் க₃ர்ப்ப₄ஸ்த₂ாநத்
திலே கிடக்கச்செய்தே கண்டேன். 87.

---

நீயத₃ஶையைக் கண்டு நிர்ஹேதுகமாக விஷயீகரித்த என்
ஸ்வாமியுடைய கு₃ணசேஷ்டிதாதி₃களாகிற ப்ரகாரத்தைக்
கண்டு அநுப₄விக்கப்பெற்றேன். அநுப₄வத்துக்குப் போக்கு
வீடாகக் கைதொழுகை முதலான அடிமைத்தொழிலிலும் அந்

---

[திருவாய் 2-3-3] என்கிறபடியே அறிவு வெளிப்படுவதற்குத் தகுதியேயில்லாமலிருந்த அன்றன்றே அவன் என்னைக் கடாக்ஷித்தது. (கருக்கோட்டியுள் கிடந்து) "ஸுகுமாரதநுர் க₃ர்ப்பே₄" [வி-பு 6-5-10] என்று தொடங்கி ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஆறு ஶ்லோகங்களாலே விவரிக்கப்பட்ட சொல்லவொண்ணு வேதனைகளை அனுபவிக்கவேண்டிய கர்ப்பஸ்தானத்திலே கிடந்து. இவர் அயோநிஜர் என்று பிரஸித்தமாயிற்றே எனில்: இவர் பிறந்த குருக்கத்திமலரே இவர்க்கு கர்ப்பஸ்தானமாகிறது. கர்ப்பஸ்த₂ானம் எதுவாயினும், அது ஸங்குசிதமாகவும் (இடநெருக்கடியுள்ளதாயும்) ஜ்ஞாநஸங்கோசகமாகவுமன்றே இருப்பது. அதனையிட்டுச் சொல்லுகிறார். அயோநிஜரான முதலாழ்வாரும் "அன்று கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன் திருவரங்கமேயான் திசை" [முதல்திருவ 6] என்றாரன்றே. அப்பாசுரத்தை அடியொற்றியே இவரும் பாடுகிறார். (கண்டேன்)

"ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மது₄ஸூத₃ந: ।
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேய: ஸ வைமோக்ஷார்த்த₂சிந்தக: ॥
[பார-சாந்தி 358-73]

[பிறந்து கொண்டிருக்கும்போது எந்தப் புருஷனை மதுஸூதனன் கடாக்ஷிக்கின்றானோ, அவனே ஸத்வகுணமுடையவன் என்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷபலத்தை நினைப்பவன்.] என்கிறபடியே கர்ப்பத்திற்கிடக்கும்போது, என் விலக்காமையே காரணமாகக் குளிரக் கடாக்ஷித்து என் நோவெல்லாம் தீரும்படி தானே தன்னைக் காட்டிக்கொடுக்கக்கண்டேன். ஆகையால் நான் பெற்றபேறு ஒரு ஸாதனத்தை அனுஷ்டித்துப்பெற்றதல்ல என்று கருத்து. இப்படிக் கண்டதுதான் எதை? எனில்: (திருக்கோட்டி

88. திறம்பிற் றினியறிந்தேன் தென்னரங்கத் தெந்தை
திறம்பா வழிசென்றார்க் கல்லால்—திறம்பாச்
செடிநரகை நீக்கித்தாம் செல்வதன்முன் வானோர்
கடிநகர வாசற் கதவு.

தென் அரங்கத்து எந்தை—அழகிய கோயிலில் பள்ளி கொண்டிருக்கும் என் ஸ்வாமியாகிற, திறப்பா வழி—தப்பிப் போகாத மார்க்கத்திலே (அவனையே உபாயமாகக்கொண்டு) சென்றார்க்கு அல்லால்—நடப்பவர்களுக்குத்தவிர (மற்ற வர்க்கு), தாம்—தாமாகவே, திறம்பா செடிநரகை நீக்கி அறுக்கமுடியாத புதர்போன்ற ஸம்ஸார வெந்நரகை அறுத்துக்கொண்டு, செல்வதன் முன்-போவதற்குள்ளே, வானோர்-நித்யஸூரிகளுடையதும்,கடி-அரணையுடையதுமான,நகரம்-

---

வயிக்கப்பெற்றேன். ஆனபின்பு, பரப்பை உடைத்தான பூமியை, ஒருவர் இரக்கவன்றிக்கே, ஆங்கே தானே சென்று அளந்துகொண்ட திருவடியை இன்றாக அறிகிறேனல்லேன். 87

---

எந்தை திறம்) நீர்மைக்கு எல்லை நிலமான திருக்கோட்டியூரிலே கோயில்கொண்டு எழுந்தருளியிருப்பவனாய், கர்ப்பத்திலிருக்கும் என்னுடைய வருந்தத்தக்க நிலையைக்கண்டு நிர்ஹேதுகமாக என்னைக் கடாக்ஷித்த என் ஸ்வாமியுடைய ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி, செயல்கள் ஆகிய எல்லாப் பெருமைகளையும் கண்டு அநுபவிக்கப்பெற்றேன் என்கிறார். 'திறம்' என்று அவனுடைய தன்மைகள் அனைத்தையும் குறிக்கிறது. கண்டு அநுபவித்தது மாத்திரமோ? (கைதொழுதேன்) அநுபவத்துக்குப் பரீவாஹமாக (போக்குவீடாக) அஞ்சலி செய்வது முதலான அடிமைத் தொழிலிலும் ஈடுபட்டேன். அதனாலே இன்று அறிகின்றேனல்லேன் என்று கீழோடே கூட்டுவது. (இன்று அறிகின்றேனல்லேன்...திருக்கோட்டி எந்தை திறம்) பரமபதநாதனோ என்னைக் கடாக்ஷித்தது? நீர்மைக்கு எல்லை நிலமான திருக்கோட்டியூரானன்றோ எனக்கு ஜாயமாந கடாக்ஷத்தைச் செய்தது. அதனாலேயே இன்றளவும் நான் அவனை மறவாமலிருக்கிறேன் என்றபடி. 87

வைகுந்தமா நகரத்தினுடைய, வாசல் கதவு—வாசற் கதவானது, திறப்பிற்று – மூடிக்கொண்டுவிடும்; இனி அறிந்தேன்- (இதை) இப்போது அறிந்து கொண்டேன்.

பெரி அவ: — (திறம்பிற்று) அவன் தானே விஷயீகரித்தார்க்கு அவனைக் கிடைக்குமித்தனையல்லது வேறு சிலர்க்குக் கிடையாதென்கிறது.

வ்யா: — (தென்னரங்கமித்யாதி₃) "மாமேகம்" (மாமேகம்) என்றருளிச் செய்தபடியே அவனையே உபாயமாகப் பற்றினவர்

---

அவ:— அவன்தானே விஷயீகரித்தார்க்கு அவனைக் கிடைக்குமத்தனை; வேறு சிலர்க்குக் கிடையாது என்கிறார்.

உரை:— திருத்தேர்த்தட்டிலே அர்ஜுனன் ஒருவனுக்கும் ஒருகால் 'மாமேகம்" (மாமேகம்) என்று சொன்ன தம்முடைய நிரபேக்ஷோபாயப₄ாவத்தை ஸர்வகாலத்திலும்

---

88. அவ:— அவன் தானே தன்னைக் காட்டக்கண்டவர்கள் அவனை அடையலாமேயொழிய, தம் முயற்சியாலேயே அவனைக் காண நினைப்பார் அவனை அடையமுடியாது என்று கூறி, சென்ற இரண்டு பாசுரங்களில் உபபாதித்துவந்த அர்த்த₂த்தை நிக₃மனம் செய்கிறார்.

வ்யா:— (தென் அரங்கத்து எந்தை) அழகிய பெரியகோயிலிலே பள்ளிகொண்டருளியிருக்கும் என் ஸ்வாமி. மஹாபாரத யுத்தத்தின் போது திருத்தேர்த்தட்டில் வீற்றிருந்து அர்ஜுனன் ஒருவனுக்கு ஒரு தடவை, "மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ" [கீதை 18-66] [ஸௌலப்₄யம் முதலான ஆஶ்ரயிப்பதற்குரிய குணங்களையுடைய என்னை ஒருவனையே உபாயமாக ஆஶ்ரயிப்பாய்.] என்று சோதிவாய்திறந்து அருளிச்செய்த தன்னுடைய நிரபேக்ஷமான (எந்தக்கைம்முதலையும் எதிர்பாராத) உபாயத்துவத்தை எல்லாக் காலத்திலும், எல்லார்க்கும் நடத்தி வைத்துக்கொண்டு அழகிய கோயிலிலே கண்வளர்கின்றவனன்றோ இவன் என்கிறார். "மாம் ஏகம்" என்ற கண்ணனைக் காட்டிலும் இவனுக்கு ஸௌலப்₄யாதி₃கு₃ணங்கள் விஞ்சியிருக்கையாலே இவனை எடுக்கிறார். (எந்தை திறம்பாவழி) என் ஸ்வாமி

களுக்கு. ''ஶாமேக்'' (மாமேகம்) என்றதிலும் ஸௌலப்₄யகாஷ்டை₂யைச் சொல்லுகிறது. (திறம்பாவித்யாதி₃) தாமே தூறு மண்டப் பண்ணின ஸம்ஸாரத்தை நீக்கிச் செல்லுமவர்களுக்கு நித்ய ஸூரிகளுடைய அரணையுடைத்தாயிருந்துள்ள கலங்காப்

ஸர்வருக்கும் க்ரயம் செலுத்திக்கொண்டு, அழகிய கோயிலிலே அர்ச்சாவதார ஸௌலப₄ஞ்யக்கொண்டு பள்ளிகொண்டருளுகிற என் ஸ்வாமியான பெரியபெருமாளுடைய மற்றொன்றால் சலிப்பிக்கவொண்ணாத நிரபேக்ஷோபாயபூ₄வமாகிற மஹாமார்க்க₃த்தைப்பற்றி நடக்குமவர்களுக்கொழிய, அநுப₄வத்தாலும் தொலைக்கவொண்ணாதபடி அவிசால்யமாய், அடித்தலை கண்டறுக்கவொண்ணாதபடி தூறுமண்டிக் கிடக்கிற ஸம்ஸாரமாகிற நரகத்தைத் தங்கள் ஸாத₄நா

யான அவனேயாகிற தவறாத வழி. ''ஶரணம்-நாராயன:''[ஸுபால] ''நாராயணம் பராயணம்'' [நாராயணஸூக்தம்] என்கிற வேதாந்த பரமரஹஸ்யத்தை வெளியிடுகிறார் இவனைத் 'திறம்பாவழி' என்கையாலே மற்ற வழிகளெல்லாம் 'திறம்பும் (தவறும்) வழிகள்' என்று உணர்த்தப்படுகிறது. ''உபாயோபேயத்வே ததி₃ஹ தவ தத்த்வம் நதுகு₃ணௌ'' [ர-ஸ்த 2-87] [உனக்கு உபாயத்வமும், உபேயத்வமும் ஸ்வரூப நிருபககுணமாயுள்ளது; நிருபிதஸ்வரூப விஶேஷணமன்று.] என்கிறபடியே இவனுக்குள்ள உபாயத்வம் ஸ்வரூபப்ரயுக்தமாய், வேறொன்றை அபேக்ஷியாததாய், வேறொன்றால் அசைக்க முடியாமலிருப்பது. கர்மம், ஜ்ஞானம், ப₄க்தி முதலான உபாயாந்தரங்களுக்குள்ள உபாயத்வம் ப₄க₃வத் ஸங்கல்பத்தால் செயற்கையாக ஏற்பட்டதாய், பல அங்கங்களை அபேக்ஷிப்பதாய், அங்கங்களில் குறையுண்டானால் நிறைவேற மாட்டாததாய் உள்ளது. அதனாலேயே இவனைத் 'திறம்பாவழி' என்கிறார். (திறம்பாவழி சென்றார்க்கல்லால்) தவறாத ராஜபாட்டையான இவனை உபாயமாகப் பற்றி நடக்கின்ற பாக்கியசாலிகளையொழிந்த மற்றவர்களுக்கு, இவர்களுக்கு ஏற்படும் தௌர்ப்பாக்கியத்தைப், பாசுரத்தின் எஞ்சிய பகுதிகளாலே காட்டுகிறார். (திறம்பாச் செடிநரகை நீக்கி) அவனையே உபாயமாகப் பற்றாமல், தானே அவனை அடைய இருப்பவன் முதன் முதலில் தன் முயற்சியாலே நீக்கவொண்ணாத இந்த ஸம்ஸாரத்தை நீக்கிக்கொள்ள வேண்டும். இதுதான் எப்படிப்பட்டது

பெருநகரத்தில் கதவுதிறப்பிற்றென்னுமிடமறிந்தேன். தானே ஸம்ஸாரத்தை நீக்க இவனுக்குக் காலம் போராது; பாபம் பண்ணின காலம் அநாதி₃யாகையாலே. திறம்பிற்றிளியறிந் தேனென்றந்வயம். 88.

---

நுஷ்டா₂நத்தாலே போக்கித் தாங்கள் சென்று கிட்டுவதுக்கு முன்னே நித்யஸூரிகள் நித்யாநுப₄வம் பண்ணி வாழுகிற ஸ்த₂லமாய், ஸ்வயத்நஸாத்₄யமல்லாத அரணையுடைத்தான கலங்காப்பெருநகரின் வாசலிற்கதவு தப்பிற்று. இப்போது இத்தை நிரூபித்து அறிந்தேன். கடியென்று பரிமளமாய், போ₄க்₃யதை விஞ்சின நக₃ரம் என்றுமாம். இத்தால் ப₄க₃வத் ப்ரீதிஸாத்₄யம் பரமபத₃ம்; ஸ்வயத்ந ஸாத்₄யமன்று என்றபடி. 88.

---

எனில்: (திறம்பா நரகு) 'நரகம்' என்று ப்ரஸித்திபெற்ற பாபப₂லாநுப₄வம் பண்ணும் உலகை, பாபத்தை அநுப₄வித்துத் தீர்க்கலாம். இந்த ஸம்ஸாரமாகிற நரகத்தை அநுபவித்துத் தீர்க்கமுடியாது. அநுபவிக்கும்போதெல்லாம் மேலும் புண்யபாபங்களைச் செய்வித்துத் தொலைக்கவொண்ணாதபடி வளர்ந்துவரும் இது. இதன் மூல ஸ்த₂ானத்தைக் கண்டுபிடித்து வேரறுத்துவிட்டால் என்ன ? எனில்: (செடி நரகு) மூலஸ்த₂ானம் எது என்று கண்டுபிடித்து வேரறுக்க முடியாதபடி புதர்மண்டிக்கிடப்பது இந்த ஸம்ஸாரவெந்நரகு. (நரகை நீக்கித் தாம் செல்வதன் முன்) இத்தகைய கொடிய நரகத்தை ஸாத₄நாநுஷ்டா₂னத்தாலே போக்கித் தாங்கள் கிட்டுவதற்கு முன்னே (வானோர் கடிநகர வாசற் கதவு திறம்பிற்று) நித்யஸூரிகள் என்றும் அவனை அனுபவிக்கும் இடமாய், 'அயோத்₄யா' என்றும் 'அபராஜிதா' என்றும் எவராலும் வெல்லமுடியாதது என்று பெயர் பெற்றிருக்கையால் தம் முயற்சியாலே எவராலும் அடையமுடியாத அரணையுடையதான கலங்காப்பெருநகரின் வாசலிலுள்ள கதவு மூடிக்கொண்டுவிடும். 'திறம்பிற்று' என்று எதிர்காலப் பொருளில் இறந்தகாலமாகச் சொன்னது இவ்வர்த்தம் உறுதியாக நடக்கும்என்று காட்டுகிறது. கடி-மதிள். பரிமளம்என்றுபொருளான போது, ஸர்வகந்தங்கள், ஸர்வரஸங்கள் முதலான இனிமைகள் நிரம்பிய இடம் என்றதாகிறது. 'வானோர் நகர்' என்றது, 'மரீநாம் பத₃ம்' [பு ஸூ] என்கிறபடியே அவன் பரமபதத்தை நித்யஸூரிகளிட்டவழக்காக்கி வைத்திருக்கிறபடியைச் சொல்லுகிறதாகவுமாம். (நரகை நீக்கித் தாம் செல்வதன் முன்-கதவு திறம்பிற்று) இவன் தன்

89. கதவிக் கதஞ்சிறந்த கஞ்சனைமுன் காய்ந்து
அதவிப்போர் யானை யொசித்து — பதவியாய்ப்
பாணியால் நீரேற்றுப் பண்டொருகால் மாவலியை
மாணியாய்க் கொண்டிலையே மண்.

கதம் சிறந்த — கோபம் மிக்க, கஞ்சனை — கம்ஸனை, முன் கதவி காய்ந்து — அவன் கண்முன்னே கோபித்து முடித்து, போர் யானை — போர் செய்வதாக எதிர்த்துவந்த குவலாயபீட மென்னும் யானையை, அதவி — அடர்த்து, ஒசித்து — கொம்பு முறித்து, பண்டு ஒருகால்-முன்னொரு காலத்தில், பதவியாய்-நீர்மையை யுடையவனாய்க்கொண்டு, மாணி ஆய் — பிரமசாரியாகி, மாவலியை — மஹாபலியினிடத்திலே. பாணியால் — கையினாலே, நீர் ஏற்று-தானம் வாங்கி, மண் கொண்டிலையே-பூமியைப் பெற்றாயல்லையோ?

அவ:— நீர் இப்படிச் சொல்லுகைக்கு, நம்மைப்பற்றினார்க்கு நாம் எங்கே உதவக்கண்டீர்? என்ன; விரோதியைப்போக்கியும் விரகாலே ஆஶ்ரிதர்கார்யம் செய்யும்படியும் சொல்லி, 'இதுவன்றோ உன்படி' என்கிறார்.

முயற்சியாலே ஸம்ஸாரநரகை நீக்கிக்கொண்டு போவதற்குள் அக்கதவு நிச்சயமாக மூடிக்கொண்டுவிடும் என்றதால் இவனால் ஸம்ஸாரத்தை நீக்கமுடியாதாகையால் பரமபதத்தை அடையவேமுடியாது என்றதாகிறது. பாபம் பண்ணின காலம் அநாதியாகையால், தானே ஸம்ஸாரத்தை நீக்க இவனுக்குக் காலம் போராது; ஆகையால் அவன் காலில் விழுந்தே ஸம்ஸாரத்தை நீக்கிக்கொள்ள வேணும் என்று கருத்து. (இனி அறிந்தேன்) இப்போது இதை ஆராய்ந்து அறிந்தேன். ஆக, இப்பாசுரத்தால் அவனையே உபாயமாகக் கொள்வதால் ஏற்படும் அவன் உகப்பால் பரமபதத்தைப் பெறலாமேயொழியத் தம் முயற்சியாலேயே அவனைப் பெறமுடியாது என்றதாயிற்று. பக்திநிஷ்டர்களும் அவ்வப்போது அவனையே உபாயமாகப் பற்றித் தம் தடைகளை நீக்கிக்கொண்டே அவனைப் பெறுகிறார்கள் என்பதும் அறியத்தக்கது. 88.

அவ:— 'நான் அபேக்ஷாநிரபேக்ஷமாக அடியார்கார்யம் செய்வேன்' என்று நீர் சொல்லுவதற்கு ப்ரமாணமுண்டோ? அப்படி யாருக்காவது நான் உதவியது உண்டோ?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அடியார்களின் விரோதிகளைப்போக்கியும், நல்ல உபாயங்களாலே அவர்களுடைய கார்யம் செய்தும் அவர்களுக்கு உதவிய இடம் மூன்றைச்சொல்லி, 'இத்தகையவனன்றோ நீ' என்கிறார்.

வ்யா:— (கதவி) நெஞ்சில் அகன்ற சீற்றத்தை உடையனுயிருந்துள்ள கம்ஸனை, (கதவி முற்காய்ந்து) சீறி முற்காய்ந்து: தலைமயிரைப் பற்றி முன்னேபிடித்து என்னவுமாம். (அதவியித்யாதி₃) ஆனையை வ்யாபரியாதபடிக்கேடாக

---

உரை: - மிக்க சீற்றத்தை உடையனான கம்ஸனைச் சீறி, அவன் ஸந்நிதி₄யிலே தன் கொலை தானே காணும்படி முடித்து, தப்பிப்பிழைக்க இடமறும்படி அடர்த்து, யுத்₃தே₄ாந்

---

வ்யா:-(கதவிக் கதம் சிறந்த கஞ்சனை)'சிறந்த கதம் கஞ்சனைக் கதவி' என்று அந்வயம். நெஞ்சிலே மிகுந்த சீற்றத்தை உடைய கம்ஸனைக் கோபித்து; கதம்—சீற்றம்; கதவி-சீறி. 'கதம் சிறந்து' என்று பாட₂மானபோது கண்ணனுடைய கோபமே அவனுக்கோர் அழகை அளிக்கிறது என்று கருத்து. (கஞ்சனை முன் காய்ந்து) தான் நேரில் வருவதற்கு முன்னமே, அவனுடைய பாகவதாபசாரங்களைக் கேள்விப்பட்டு அவனிடம் கடுங்கோபங்கொண்டு நேரில் தோன்றுவதற்கு முன்னமே கஞ்சன்வயிற்றில் நெருப்பென்ன நின்றனன்றே இவன். அன்றிக்கே, அக்கஞ்சன் முன்னிலையிலே, அவன் தலைமயிரைப் பற்றிப் பிடித்து, தன் கொலையைத் தானே அவன் காணும்படி முடித்து என்றும் கொள்ளலாம். கம்ஸன் முதலானுரை ஸங்கல்பமாத்ரத்தாலே அழிக்கமுடிந்தபோதிலும், இவர்கள் செய்த பாகவதாபசாரத்தின் கனத்தைப் பார்த்து, இவர்கள் ஸங்கல்பமாத்ரத்தாலே நல்ல சாவாகச் சாகக்கூடாது என்று முடிவுகட்டித் தானே அவதரித்து இப்படிச் சித்ரவதை செய்கிறனன்றே.

''சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு
ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த
வேதமுதல்வன்'' [திருவாய் 3-5-5]

என்று ஆழ்வாரும், ''ஈஶ்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறுமை'' என்று நஞ்சீயரும் அருளினரன்றே. இப்படிக் கஞ்சனைக் கொல்லுவதற்கு முன்னமே, அவன் மதமூட்டி நிறுத்தியிருந்த குவலயாபீடத்தைக்கொன்று அவனை ஶவப்ராயனுக்கிய செய்தியைக் கூறுகிறுர் அடுத்தபடியாக.- (அதவி) தப்பிப்பிழைக்க இடமில்லாதபடி அடக்கி; இவனைக்கண்ட

அடர்த்துக் கொம்பை ஒசித்து. (பதவியாய்) நீர்மையை யுடையவனாய், கம்ஸனைக் கொன்றாற்போலே, மூலையடி

முகமான குவலயாபீடத்தை அநாயாஸேந முறித்து விழ விட்டு, இப்படி மிடுக்குக்கொண்டுவ்யாபரிக்கவொண்ணாதபடி ஔதார்யமென்பதொரு குணலேஶம் கிடக்கையாலே, நீர்மையை உடைமையாய்க்கொண்டு கொடுத்து வளர்ந்த கையாலே உதகஜலத்தை ஏற்றுவாங்கி, முன்பொருகாலத்திலே கொடுக்கையிலே தீக்ஷித்திருந்த மஹாபலியை, இரப்

மாத்திரத்தில் அது தன் மதமெல்லாம் அடங்கப்பெற்றது (போர் யானை) மதமூட்டிப் போருக்கு ஸித்தப்படுத்தி வைக்கப்பெற்றிருந்த குவலயாபீடமெனும் யானை. ''ஆருமதயானை அடர்த்தவன்தன்னை'' [திருவாய் 9-4-11] என்றாரன்றோ நம்மாழ்வாரும் (ஒசித்து) ஒரு குச்சியை ஒடிப்பதுபோலே அநாயாஸமாக இப்பெரிய யானையை முறித்து விழவிட்டு, ''குலநல்யானை மருப்பொசித்தாய்'' [திருவாய் 4-8-1] என்கிறபடியே அதன் கொம்பை முறித்ததையே கூறுகிறாராகவுமாம். ஆக இத்தால் குணலேஶமற்றவர்களாகையாலே பலத்தையே காட்டவேண்டிய இடங்களில் பலத்தைக் காட்டி அடியார் கார்யம் செய்தபடியைப் பேசினார். இனி, இப்படித் தன் பலத்தைப் பிரயோகிக்கமுடியாதபடி மாவலியிடம் 'வண்மை' என்றொரு நற்குணம் கிடக்கையாலே, தன் ஸ்வரூபத்தையும் அழியமாறி உபாயத்தாலே அடியார்களாகிற தேவர்களின் காரியத்தைச் செய்தபடியைப் பேசுகிறார்,— (பதவியாய்) 'பதவீ' என்னும் வடசொல் வழியைக் காட்டுமாகையாலே, கம்ஸனைக் கொன்று கார்யம் ஸாதித்தாப் போலேயல்லாமல், நேரான வழியிலே அவனிடமே சென்று அவன் தன்னதாக அபிமானித்திருந்த தன் நிலத்தை அவனிடமே யாசித்துப் பெற்றபடியைச் சொல்லுகிறது. அன்றிக்கே,'பதவி'என்று சிறப்பாய், 'தனக்குச் சிறப்பைத்தரும் நீர்மைக்குணத்தைஉடையவனாய்'என்றும் பொருள் கொள்ளலாம். (பாணியால் நீரேற்று) ''அலம்புரிந்த நெடுந்தடக்கை'' [திருநெடு-6] என்கிறபடியே,யாசிப்பார்'அலம், அலம்' [போதும் போதும்] என்னும்படி கொடுத்து நீண்ட திருக்கையாலே தானஜலத்தை ஏற்று. (பண்டு ஒருகால்) முன்பு ஒரு காலத்தில், இப்படித் தன் ஸ்வரூபத்தை அழியமாறியும் அடியார்காரியம்செய்த அதுவும் ஒரு காலமே! என்கிறார். (மாவலியை) யாகத்திலே எவன் எது கேட்டாலும் கொடுக்க உறுதியுடனிருந்த மாவலியை. அவன்

யன்றிக்கே வழிகொடு வழியேயென்றுமாம். (பாணியால் நீரேற்று) குடங்கையால் நீரேற்று. (பண்டித்யாதி₃) ஐஶ்வர்யம் தோற்றக் கொண்டாயோ? அர்த்தித்₂வந்தோற்ற மாணியாயன்றோ கொண்டது. 89.

---

பிலே தகணேறின ப்₃ரஹ்சாரியாய்க்கொண்டு பூ₄மியை அவன்பக்கல்நின்றும் வாங்கிக்கொண்டிலேயோ? உன்னை ஆஶ்ரயித்த வஸுதே₃வர், தே₃வகியார், இந்த்₃ரன் இவர்களுக்கு விரோதி₄யைப்போக்கிக் கார்யம் செய்து கொடுத்திலேயோ? என்றபடி. கதவுகை – சீறுகை; அதவுகை— நெருக்குகை. 'கதவிக்கதஞ்சிறந்து' என்று பாட₂மான போது கோபத்தாலே சிறந்து அழகியனாய் என்று பொருளாகக்கடவது. பதவியென்றது — பதவியென்று வழியாய், கம்ஸனைக் கொன்றாற்போலே மூலையடியேயன்றிக்கே வழி கொடு வழி என்னவுமாம். 89.

---

மஹாப₃லமுடையவன் என்று பெயர் சுமந்து திரிந்தபோதிலும் அவனிடம் இவ்வண்மைக் குணம் கிடப்பதைக் கண்டு, அவனிடம் தன் ப₃லத்தைக் காட்டாமல், இக்குணலேசத்தையே பற்றாசாகக் கொண்டு ஸகலப₃லப்ரத₃னான தன் ஸ்வரூபத்தையே அழித்துக் கொண்டு யாசகனாய்ச் சென்றானன்றோ. (மாணியாய்க் கொண்டிலையே மண்) யாசகத்திலே தழும்பேறின ப்ரஹ்மசாரியாகி, உன்ன தான மண்ணை அவனிடம் யாசித்துப்பெற்றாயன்றோ! (மாணியாய்க் கொண்டிலையே) யாசித்தபோது, ஐஶ்வர்யம் தோற்றவந்து யாசித்தாயோ? இரப்பையே இயல்வாகக் கொண்ட ப்₃ரஹ்மசாரியாய் வந்து கொண்டாயன்றோ.

''க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் வக்ஷ:ஸ்த₂லா-
லயாம்''

[மார்பிலிருக்கும் மனைவியை மான்தோலாலே மறைத்துக்கொண்டு] என்கிறபடியே ஸகலைஶ்வர்யங்களுக்கும் நாயகியான ஸ்ரீதேவி மார்பிலேயே இருக்கவும், அவளையும் மான்தோலாலே மறைத்துக்கொண்டு வந்து, அவளுக்கும் உனக்கும் தகாத செயலைச் செய்தாயன்றோ; இப்படியாக, உன்னுடையவர்களான வஸுதேவர், தேவகீ, இந்திரன் முதலானோர்க்கு. அவரவர் தடையைப் போக்கி நீ காரியம் செய்து கொடுத்தது லோகப்ரஸித்தமன்றோ? இதை உன்னாலும் மறைக்கமுடியுமோ? என்று கருத்து. 89.

90. மண்ணுலக மாளேனே வானவர்க்கும் வானவனாய்
விண்ணுலகம் தன்னகத்துக்கு மேவேனே – நண்ணித்
திருமாலைச் செங்க ணெடியானை எங்கள்
பெருமானைக் கைதொழுத பின்.

திரு மாலை – பிராட்டிக்கும் ஸ்வாமியாய், செம் கண் — செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனாய், நெடியானை — ஸர்வேஶ்வரனை, எங்கள் பெருமானை — எம்பெருமானை, நண்ணி – கிட்டி, கை தொழுத பின் — அஞ்ஜலி பண்ணி ஆஶ்ரயித்த பின்பு, மண் உலகம் ஆளேனே - இந்த லீலா விபூதியை நானிட்டவழக்காக நிர்வஹிக்க மாட்டேனோ? வானவர்க்கும் வானவன் ஆய் – நித்ய ஸூரிகளுக்கும் தலைவனாயிருந்துகொண்டு, விண் உலகம் தன் அகத்து- நித்யவிபூதியிலே எல்லாவிடங்களிலும், மேவேனே — பொருந்தியிருந்து பேரானந்தமநுபவிக்கமாட்டேனோ?

பெரி அவ: — 'கம்ஸனைக் கொன்றோம்: ஆனையைக்கொன்றோம்; பூமியையளந்தோமென்று நம்முடைய செயல்களைச் சொல்லுமத்தனையோ? உமக்குப் பெறவேண்டுமது சொல்லீரோ?' என்னச் சொல்லுகிறார்.

---

அவ: — 'நாம் ஆஶ்ரிதருக்குச் செய்த கார்யங்களை வகையிட்டுச் சொல்லுகிறதென்? உமக்குப்பெறவேண்டுவது சொல்லீர்' என்ன, 'உன்னை ஆஶ்ரயித்தபோதே எல்லாப் புருஷார்த்தங்களும் பெற்றேனன்றோ' என்கிறார்.

---

90. அவ:— 'நாம் அடியார்க்காகச் செய்த காரியங்கள் ஒரு புறமிருக்கட்டும்; நீர் பெறவிரும்பும் பயனைச் சொல்லுவீராக' என்று எம்பெருமான் கேட்க, "உன்னைப் பற்றியபோதே நான் பெறற்கரிய பயன்களையெல்லாம் பெற்றேனன்றோ? இனிப் பெறவேண்டியது என்ன இருக்கிறது?" என்கிறார்.

வ்யா:—(மண்ணித்யாதி₃) ஓரடி வர நின்ற பூ₄மியை ஆளுகை எனக்கொரு பணியோ? (வானவரித்யாதி₃) நித்யஸூரிகளுக்கு அவ்வருகாய்ப் பரமபதத்திலிருக்கை எனக்

---

உரை:—ஸ்ரீய:பதியாய், வாத்ஸல்யாம்ருதவர்ஷியான சிவந்த திருக்கண்களையும் உடையனாய், "ருணம் ப்ரவ்ருத்₃த₄ம்" (ருணம் ப்ரவ்ருத்₃த₄ம்) என்னும்படி ஆஸ்ரிதவிஷயத்தில் எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்யப்பெற்றிலோம் என்று உருகி,

---

வ்யா:—(மண்ணுலகம் ஆளேனே) அவனுடைய ஓரடியிலே அடங்கும் இந்த லீலாவிபூ₄தியை நான் சொன்னதே சட்டமாக ஆள்வது எனக்கு அரிதோ? 'மண்ணுலகம்' என்று பூ₄மியைச் சொன்னது உபலக்ஷணமாய், லீலாவிபூதியனைத்தையும் குறிக்கிறது. (வானவர்க்கும் வானவனாய் விண்ணுலகம் தன்னகத்து மேவேனே) அநந்தக₃ருட₃விஷ்வக்ஸேநாதி₃களைப்போலே நித்யஸூரிகளுக்குத் தலைவனாய்ப் பரமபதத்தில் ஆநந்தநிர்ப்ப₄ரனாகப் பொருந்தியிருக்கையும் எனக்கு அரிதோ? (விண்ணுலகம் தன் அகத்து) மற்றுள்ளார் போகக் கூசும்படியான அந்த:புரம் முதலான விடங்களிலும், பெருமாளும் பிராட்டியும் தனியேயிருக்கும்போதும் போய்ப் பரிமாறவல்ல பெருமையைப் பெறுவது எனக்கு அரிதோ? இவ்வளவு பெருமைகளும் உமக்கு எளிதாயிருப்பது எதனாலே யென்னச் சொல்லுகிறார் மேலே,-(திருமாலை) புருஷகாரபூ₄தையான பிராட்டியோடு கூடியிருப்பவனையன்றோ நான் ஆஶ்ரயித்தது. ப்₃ரஹ்மசாரிநாராயணனையன்றே. ஆகையால் எனக்கு இவை எளித்திப்பதில் ஐயமில்லை என்று கருத்து (செங்கண் நெடியானை) "தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ—தஸ்ய உதி₃தி நாம" [சாந்தோக்யம்] [அவனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரை போன்ற இருகண்கள் உள; அவனுக்கு 'உத்' (உயர்ந்தவன்) என்று பெயர்] என்கிறபடியே ஐஶ்வர்யத்தைக் கோட்சொல்லித்தரும் திருக்கண்களையுடையவனாகையாலே ஆஶ்ரயிக்கத்தக்க ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்த எனக்கு இவற்றை அடைவதில் அருமையில்லை என்று கருத்து. அன்றிக்கே, 'செங்கண்' என்றது வாத்ஸல்யத்தாலே சிவந்த கண்ணைக் குறிக்கிறதாய், அடியார் குற்றம் காணாமையோடன்றிக்கே, அவர்கள் செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளுமவனாயிருக்கையாகிற வாத்ஸல்யமாகிற அமுதைப் பொழியும், குறிச் சிவந்த கண்களையுடையவனாய்,

கொரு பணியுண்டோ? (திருமாலைச் செங்கணெடியானை எங்கள் பெருமானை நண்ணிக் கைதொழுதபின்) ஶ்ரிய:பதியாய் ஸமாஶ்ரயணீயனும் எங்களுக்கு ஸ்வாமியானவனைக் கிட்டிக்

---

நெஞ்சு 'பதண்பதண்' என்றிருக்குமவனாய், எங்களுக்கு ஸ்வாமியானவனைக் கிட்டி, அஞ்ஜலிப₃ந்த₄த்தைப்பண்ணி ஆஶ்ரயித்தபின்பு பூ₄ம்யுபலக்ஷிதையான லீலாவிபூ₄தியை நானிட்டவழக்காக நிர்வஹியேனோ? நித்யஸூரி₊ளுக்கும்

---

''கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்த₃த் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம்|
ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந் நாபஸர்ப்பதி||''
[பார-உத் 47-39]

[தூரத்திலிருந்த என்னைக்குறித்து திரௌபதி 'கோவிந்தா' என்று கூப்பிட்டது வட்டியால் வளர்ந்த கடன்போலே என் நெஞ்சை விட்டு அகலுகின்றதில்லை] என்கிறபடியே அடியார் திறத்தில் எவ்வளவு செய்தாலும் 'ஒன்றும் செய்யப் பெற்றிலோம்' என்று உருகி, நெஞ்சு 'பதண்பதண்' என்று அடித்துக்கொள்ளப் பெற்றவனாய், அடியார்க்கு என் செய்வதென்றே இருக்கும் நெடியானைப்பற்றிய எனக்கு இவற்றைப் பெறுகை அரிதோ? என்கிறாராகவுமாம். புருஷகாரமும், ஐஶ்வர்யமும், வாத்ஸல்யமும் இருந்தாலும் உமக்குக் காரியம் செய்யவேண்டிய அவசியமென்ன? எனில்: (எங்கள் பெருமானை) ''அஸ்மத்ஸ்வாமிந்'' [கத்யம்] என்கிறபடியே எங்களை உடையவனாகையாலே எங்களுக்கு இப்பலன்களை அளித்தாலல்லது அவனால் தரித்து நிற்கமுடியாது என்று கருத்து. இப்படிப்பட்டவன் திறத்தில் இவ்வரிய பலனைப் பெறுவது எளிதாம்படி நீர் செய்தது என்ன? எனில்; (கிட்டிக் கைதொழுதபின்) அவனை அணுகி ஓரஞ்ஜலி செய்ததே என் செயல், இவ்வஞ்ஜலியே அகாரவாச்யனான அவனை நீர்ப்பண்டமாக உருக்கி அனைத்தையும் எனக்களிக்க ஒருப்படச்செய்துவிட்டது என்கிறார்.

''த்வத₃ங்க்₄ரிமுத்₃தி₃ஶ்ய கதா₃பி கேநசித்
யதா₂ததா₂ வாபி ஸக்ருத் க்ருதோஞ்ஜலி:|
தத₃வ முஷ்ணாத்யஶுபா₄ந்யஶேஷத:
ஶுபா₄நி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே||''
[ஸ்தோ-ர 28]

கைதொழுதபின் போ₄க₃ மோக்ஷங்களில் எனக்கொரு குறையுண்டோ? 'अर्थितश्च मया प्राप्ताः'' (அர்த்த₂தஶ்ச மயா ப்ராப்தா:) என்கிறபடியே ஒன்றிலே எல்லாம் உண்டான விஷயம். 80.

---

அவ்வருகான பெருமையை உடையனாய்க்கொண்டு பரமபத₃த்திலே காலதத்வமுள்ளதனையும் ஸு்கோ₂த்தரனாய்ப் பொருந்தியிரேனோ? உன்னளவில் அல்பாநுகூல்யம்பண்ணினால் மண்ணோடே விண்ணுமாளுகை பெரிய பணியோ? என்றபடி. 90.

---

[உன் திருவடியைக்குறித்து எப்போதாவது எவனாலேயாவது எம்மாதிரியாவது ஒரு தடவை செய்யப்பட்ட அஞ்ஜலியானது அப்போதே பாபங்களை மிகுதியில்லாமல் அழிக்கின்றது; நன்மைகளை வளரச்செய்கின்றது. ஒருபோதும் குறைவதில்லை.] என்று காயிக ப்ரபத்தியான இவ்வஞ்ஜலியின் பெருமையை அருளிச்செய்தாரன்றோ ஆளவந்தார். ஆக, உன் விஷயத்தில் சிறிது அநுகூலமாயிருப்பார்க்கும் மண்ணோடு விண்ணுமாள்வது அரிதல்ல; ஆகையால்போ₄க₃மோக்ஷங்களாகிறஎல்லாப்பலனும் எனக்குக் கைவந்தேயிருக்கிறது என்று கருத்து. முமுக்ஷுவான இவர் 'மண்ணுலகமாளேனே?' என்று இவ்வுலகபோகத்தைச் சொன்னது தான் பெறும் முக்தியில் இந்தபோகமும் அடங்கியிருக்கிறது என்னும் கருத்தாலே.

'அர்த்த₂தஶ்ச மயா ப்ராப்தா தே₃வராஜ்யாத₃யோ கு₃ணா: |
ஹதா₂த்ரும் விஜயிநம் ராமம் பஶ்யாமி ஸுஸ்தி₂தம் ||''
[ரா-யு 116-24]

[எதிரியையழித்து வெற்றிகொண்டு விளங்கும் ராமனைப் பார்த்த என்னாலே, தேவருலகம் முதலான எல்லாப்பெருமைகளும் பெறப்பட்டனவாயின] என்று திருவடி கூறியதுபோலே கூறுகிறார்.

''அடங்கெழில் சம்பத்து
அடங்கக்கண்டு ஈசன்
அடங்கெழில் அஃதென்று
அடங்குக உள்ளே'' [திருவாய் 1-2-7

91. பின்னு லருநரகம் சேராமல் பேதுறுவீர்
முன்னால் வணங்க முயல்மினோ பன்னூல்
அளந்தானைக் கார்க்கடல்சூழ் ஞாலத்தை எல்லாம்
அளந்தா னவன் சேவடி.

பின்னால் – சரீரம் விழுந்தபின்பு, அரு நரகம் – கொடிய நரகத்தை, சேராமல்—அடையாமலிருப்பது எப்படியென்று, பேதுறுவீர் – மனங்கலங்கியிருக்கும் மனிசர்களே!. பல் நூல்- பலவகைப்பட்ட சாஸ்திரங்களினால், அளந்தானை — நிச்சயிக்கப்பட்டிருப்பவனும், கார் கடல் சூழ் ஞாலத்தை எல்லாம் அளந்தான் அவன் — கரிய கடலால் சூழப்பட்ட பூமியையெல்லாம் அளந்துகொண்டவனுமான எம்பெருமானுடைய சே அடி—செவ்விய திருவடிகளை, முன்னால் — இப்போதே, வணங்க - வணங்குவதற்கு, முயல்மின் - முயற்சிசெய்யுங்கள்.

பெரி அவ:— (பின்னால்) ப்ரக்ருதிவஶ்யரான பின்பு நரகம் ஒருவகை தப்பாது. அவ்விஷயத்தை வணங்கப் பாருங்கோள்.

---

அவ:—ப்ரக்ருதிவஶ்யரானபின்பு ஶரீரவிஶ்லேஷஸமநந்தரம் நரகம் ஒருவகை தப்பாது; ஆனபின்பு அவன் திருவடிகளை வணங்கப் பாருங்கோள் என்கிறார்.

---

என்று ஆழ்வார் அருளியபடியே 'அவனுடையது' என்னும் அநுஸந்தானத்துடன் இவனுக்கு லீலாவிபூதியின் அநுபவமும் உண்டன்றோ; அதைச் சொல்லுகிறாராகவுமாம். 90

91. அவ:— இனி இத்தகைய பேற்றை ஸம்ஸாரிகள் இழந்துவிடக்கூடாது என்னும் பரமகருணையாலே நாலு பாட்டாலே இவனை ஆஶ்ரயிக்கச் சொல்லி அவர்களுக்கு உபதேசிக்கிறார். அதில் இப் பாட்டில்,'நீங்கள் ப்ரக்ருதிவசப்பட்டவர்களாயிருக்கையால், உங்கள் சரீரம் விழுந்தவுடன் நரகமடைவது தவிர்க்கமுடியாது; அந் நரகத்தை அடையாமலிருக்க வேண்டுமாகில், அவன் திருவடிகளை வணங்க முயலுங்கள்' என்கிறார்.

வ்யா: — (பன்னூலளந்தானை) எல்லா ப்ரமாணங்களாலும் ஜிஜ்ஞாஸிக்கப்பட்டவனை. (காரித்யாதி₃) வேதை₃கஸமதி₄க₃ம்யமாய் அரிதாயிருக்குமோவென்னில்: வரையாதே எல்லார் தலையிலும் அடியை வைத்த ஸௌலப₄னுடைய திருவடிகளை.

---

உரை:— ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃களான பலவகைப்பட்ட ஶாஸ்த்ரங்களாலும், யத₂ாவாக அறுதியிடப்பட்டிருக்குமவனாய், கறுத்த கடலாலே சூழப்பட்டிருக்கிற இந்த பூ₄மியையெல்லாம் அளந்துகொண்ட ஸௌலப்₄யத்தை

---

வ்யா:—அவன் தான் வணங்கத்தக்கவனோ? எனில்: (பல் நூல் அளந்தான்) ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம், இந்த ஶ்ருதி முதலானவற்றின் அர்த்த₂த்தை உள்ளபடி அறிந்த ஶிஷ்டர்களின் நூல்கள் ஆகிய பலவகைப்பட்ட ஶப்₃த₃ப்ரமாணங்களால் உள்ளபடி அறுதியிடப்பட்டிருப்பவன். 'அளந்தான்' என்றது அளக்கப்பட்டவன் என்றபடி. 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்கிறபடியே அளத்தற்கரியானை இவனை அளக்கப்பட்டவன் என்பது பொருந்துமோ? எனில்: இவன் அளத்தற்கரியான் என்று அறுதியிடுதலே இவனை அளத்தலாகிறபடியாலே குறையில்லை. "யஸ்யாமதம்" [எவனுக்கு இது அளவிட்டு அறிதற்கரியதோ] என்ற ஶ்ருதி, "தஸ்ய மதம்" [அவனுக்கு இது அறியப்பட்டதாகிறது] என்று உடனே கூறிற்று; "வேதா₃ஹமேதம் புருஷம்" [பு-ஸூ] [நான் இப்புருஷனை அறிவேன்] என்ற வேதபுருஷன், அறிந்தபடி எவ்விதம் என்னும் கேள்வியெழ, "மஹாந்தம்" (மிகப்பெரியவனை] என்று. 'அளவிடமுடியாதபடி மிகப்பெரியவனென்று அறிந்தேன்' என்றானன்றே. ஆகவிப்படி எவராலும் அளத்தற்கரியானாயிருப்பவனென்று எல்லா சாஸ்திரங்களும் கூறுகையாலே இவனே வணங்கத்தக்கவன் என்று கருத்து. இப்படி சாஸ்திரங்களாலேயே அறியத்தக்க பரம்பொருளாயிருப்பானாகில் அவனைக்கிட்டி வணங்குவது எப்படியெனில், இவ்வுலகில் சேதனரைத் தேடி அவதரிக்கும் ஸௌலப்₄யத்தையுடையவனாகையால் இவனே வணங்கத்தக்கவனாகிறான் என்கிறார். (கார்க்கடல் சூழ் ஞாலத்தை எல்லாம் அளந்தான்) கறுத்த கடலாலே சூழப்பட்ட உலகனைத்தையும் அளந்து திருவடியாலே தடவிக் கொடுத்தவன். "ஸ பூ₄மிம் விஶ்வதோ வ்ருத்வா" [பு-ஸூ] [அவன் பூமியை எல்லாப்புறமும் சூழ்ந்தான்] என்கிறபடியே,

(பின்னாலருநரகஞ்சேராமல் பேதுறுவீர் முன்னால் வணங்க முயல்மினோ) முன்னடி தோற்றாதே பாபத்தைப் பண்ணிப் பின்னை அநுதாபம்பிறந்து பேதுற்றிருக்கிற நீங்கள், 'சரீரஸமநந்தரம் வடிம்பிட்டு நிற்கிறது; பின்னைச்செய்கிறோம்' என்று

---

யுடையனானவனுடைய சிவந்த திருவடிகளை ஶரீரவிஶ்லேஷத்துக்குப்பின்பு பொறுக்கவொண்ணாத நரகங்களில்சென்று கிட்டாதபடியாக, 'பாபபலமான நரகம் வரில் செய்வதென்?' என்று அஞ்சி அறிவு கலங்குகிற நீங்கள், 'பின்னைச் செய்

---

ஒருவனைப்பிடிக்க எண்ணி ஊரையே வளைத்துக்கொள்வாரைப் போலே, ஒரு சேதனனாவது நமக்குக் கிடைக்கமாட்டானா என்னும் நசையாலே, தேவகாரியமாகிற வியாஜத்தைக்கொண்டு ஓரிடம் விடாமல் உலகனைத்தையும் அளந்தவனன்றோ இவன். ஆகையால் இவனே வணங்கத்தக்கவன் என்றபடி. வஸிஷ்டன் சண்டாளன் என்னும் வாசிபாராமல் எல்லார் தலையிலும் திருவடியை வைத்த இவ்வுலகளந்த செயலிலே ஸௌலப்யஸௌஶீல்யகாருண்ய வாத்ஸல்யாதிகளான ஆஶ்ரயணஸௌகர்யாபாதக குணங்களனைத்தும் தோற்றுகின்றன. 'பல் நூலளந்தான்' என்று பரத்வத்தைச் சொல்லுகையாலே, ஆஶ்ரிதகார்யாபாதகமான ஜ்ஞானம், சக்தி முதலான எல்லாக்குணங்களும் தோற்றுகின்றன. ஆக, இரண்டாலும் இவனே வணங்கத்தக்கவன் என்று நிலைநிறுத்தப்பட்டதாயிற்று. (அளந்தானவன் சேவடி) அளந்த அப்பெருமானுடைய மற்ற அவயவங்களெல்லாம் கிடக்க, அப்படியளந்த அத்திருவடிகளையே வணங்க முயலுங்கள் என்கிறார். கைக்குழந்தைக்கு தாரகமான தாய் முலைபோலே ஶேஷபூதனுக்கு ஶேஷத்வத்தை நிலைநிறுத்தும் திருவடிகளே உத்தேஶ்யமாகின்றனவன்றோ. இவ்வடியிணையை வணங்க வேண்டிய அவசியமென்ன? எனில்: (பின்னால் அருநரகம் சேராமல் பேதுறுவீர்) சரீரம்பிரிந்தபின்பு பொறுக்க அரியநரகங்களைச் சேராமலிருப்பது எப்படி? என்று மனம் கலங்கியிருப்பவர்களே! அநாதிகாலமாகப் பாபத்தையே செய்து, ஆஸ்திகராகையாலே இப்போது அநுதாபம் பிறந்து, ''அறியாமல் அநாதிகாலமாக நாம் பாபங்களைப் பண்ணிவிட்டோம்; இனிப் பாபபலமான நரகம் வராமற்போகாதே; என்ன செய்வோம்'' என்று அறிவு கலங்கியிருப்பவர்களன்றோ நீங்கள்; உங்களுடைய இக்கலக்கம் தீர அருமருந்தாயிருப்பது இவ்வடிகளை வணங்குவதே என்கிறார். 'இப்போது தேஹயாத்ரைக்கே

ஆறியிருக்கவொண்ணுது; முற்பட வணங்கிப் பின்னே தேஹ யாத்ரை பண்ணப் பாருங்கோள். 91.

92. அடியால்முன் கஞ்சனைச் செற்று, அமர ரேத்தும்
படியான் கொடிமேல்புள் கொண்டான்--நெடியான்றன்
நாமமே யேத்துமின்க ளேத்திஞல் தாம்வேண்டுங்
காமமே காட்டும் கடிது.

முன்-(அவன் தீங்குசெய்வதற்கு) முன்னே, அடியால் — திருவடியினுல், கஞ்சனை — கம்ஸனை, செற்று — உதைத்துக் கொன்றவனும், அமரர் ஏத்தும்படியான் — தேவர்கள் துதிக்கும்படியாகவுள்ளவனும், கொடி மேல் புள் கொண்டான் — கொடியின்மேலே கருடபக்ஷியையுடையவனும், நெடியான் தன் — நீண்ட நினைவையுடையவனுமான ஸர்வேஶ்வரனுடைய, நாமமே — திருநாமங்களையே சொல்லி, ஏத்துமின்கள் — துதி செய்யுங்கள்; ஏத்திஞல் — அப்படித் துதித்தால், தாம் வேண்டும் காமம் — தாங்கள் விரும்பும் பயனை, கடிது — விரைவாக, காட்டும்-(அத்திருநாமம்) பெறுவிக்கும்.

---

கிறேம்' என்று ஆறியிராமல், ஒரு க்ஷணமாகிலும் முற்பட ஆஶ்ரயிக்க உத்ஸாஹியுங்கோள். 91.

---

போதுபோதவில்லை; சாகுங்காலத்தில் வணங்கிஞல் போதாதோ?' என்னில்,—(முன்ஞல் வணங்க முயல்மினே) மன்னுயிராக்கைகள் மின்னின் நிலையிலவாகையாலும், உடம்பு விழுந்தவுடன் நரகம் கிடைப்பது நிச்சயமாகையாலும், ஒரு கணமும் காலதாமதம் செய்யலாகாது; ஆகையால் சடக்கென அவனை வணங்கிப் பின்னர் தேஹ யாத்ரைக்காக லோகவ்யாபாரங்களில் ஈடுபடுங்கள் என்கிருர். (முன்ஞல் வணங்க முயல்மினே) சாவதற்கு ஒருகணமாவது முன்ஞல் அவனை ஆஶ்ரயிக்க முயலுங்கள் என்கிருராகவுமாம். (வணங்க) பக்தியையாவது, ப்ரபத்தியையாவது சொல்லுகிறது ஆக, ஆஸ்திகராயிருப்பார் நரகம் முதலான அநிஷ்டங்களைப் போக்கிக்கொள்வதற்கு இவனை வணங்குவதே தக்கது என்று அருளிச்செய்தாராயிற்று. 91.

பெரி-வ்யா:— (அடியால்) கம்ஸன் ஈஶ்வரனை வஞ்சிக்க நினைத்தத்தை அவனுக்கு முன்னே கோலித் திருவடிகளாலே மார்விலே ஏறி முடித்தவன். (அமரரேத்தும் படியான்) குடி

---

அவ:—அவனை ஆஶ்ரயிக்க, உங்களுக்கு அபேக்ஷிதமான புருஷார்த்தங்களெல்லாம் கிடைக்கும்; ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:—'பாதபங்கயமே தலைக்கணியாய்' என்று என் போல்வார் ப்ரார்த்திக்கக் கிடக்குமதாய், நிரதிஶய ஸுகுமாரமான திருவடிகளாலே அவன் நினைத்த வஞ்சனம் அவனுடையாம்படி ஏற்கவே கம்ஸனை உதைத்து முடித்து,

---

92 அவ:—புருஷார்த்தமானது அநிஷ்ட நிவ்ருத்தி என்றும், இஷ்டப்ராப்தி (வேண்டியது கிடைத்தல்) என்றும் இருவகைப் பட்டிருக்குமன்றோ; அதில் அநிஷ்ட நிவ்ருத்தியை விரும்பினீர்களாகில் அவனையே ஆஶ்ரயிப்பீராக என்றார் சென்ற பாட்டில். இப் பாட்டில் இஷ்டப்ராப்தியை விரும்பினாலும் அவனையே துதிக்க வேண்டும் என்கிறார்.

வ்யா:— இப்படி அவன் அநிஷ்டநிவ்ருத்தியையும், இஷ்டப்ராப்தியையும் செய்து கொடுத்த இடமுண்டோ? எனில்: (அடியால் முன் கஞ்சனைச் செற்று) கம்ஸனைக்கொன்று, தேவர்களுக்குக் குடியிருப்பைக் கொடுத்தவிடம் ஒன்று போதாதோ? என்கிறார். (அடியால்) "படிக்களவாக நிமிர்த்த நின் பாதபங்கயமே தலைக் கணியாய்" [திருவாய் 9-2-2] என்கிறபடியே என்னைப்போன்ற அன்புடையார் தலையிலணிய ஆசைப்பட்டிருப்பதாய், திருமகள் கரம் தொடச்சிவந்து காட்டும் மென்மைமிக்க திருவடிகளாலே. (முன் கஞ்சனைச்செற்று) கம்ஸன் இவனுக்குத் தீங்கு செய்ய நினைப்பதற்கு முன்னம், அவன் நினைத்த தீங்கு அவனுக்கேயாம்படி அவனையழிக்கத்திட்டமிட்டுத்திருவடிகளாலேமார்பிலேஏறிஉதைத்து அவனை அழித்து. 'முன்' என்றதற்கு 'முற்காலத்தில்' என்று பொருள்கொள்ளலாமாயினும் 'கம்ஸன் தனக்குத் தீங்கு செய்ய நினைப்பதற்கு முன்தான் அவனுக்குத் தீங்கு செய்யக்கோலி' என்று பொருள் கொள்வது சிறக்கும். (அமரர் ஏத்தும்படியான்) இப்படித் தங்கள் விரோதியான கம்ஸன் அழிகையாலும், தங்கள்குடியிருப்புப் பெறுகையாலும்,

யிருப்புப்பெற்றோமென்று ப்ரஹ்மாதிகளேத்தும்ஸ்வபாவத்தை யுடையவன். (கொடிமேல்புட் கொண்டான்) ரக்ஷணத்துக்குக் கொடிகட்டியிருக்கிறவன். (நெடியான்றன்னுமமேயேத்துமின்

அந்த ஸ்வபாவத்துக்குத் தோற்று ப்ரஹ்மாதிதேவர்கள், 'தேவராலே எங்கள் குடியிருப்புப்பெற்றோம்' என்று வாய் விட்டுப்புகழும்படியான ஸ்வபாவத்தை உடையனாய்' ரக்ஷணத்துக்குக் கட்டின கொடிமேலே 'கருடத்வஜன்' என்னும்படி எடுக்கப்பட்ட பெரியதிருவடியை உடையனாய்,

அறப்பெரியவனான அவன் தன்னைத்தாழ்த்திக்கொண்டு தங்கள் காரியம் செய்த நீர்மைக்குத் தோற்று, "தேவரீராலே விரோதி நீங்கப் பெற்றுக் குடியிருப்பும் பெற்றோம்" என்று வாய்விட்டுப் புகழும்படியான பெருமையை உடையவன். (கொடிமேல் புள்கொண்டான்) இப்படி அநிஷ்டநிவ்ருத்தியையும், இஷ்டப்ராப்தியையும் செய்து அனைவரையும் ரக்ஷிப்பவன் தானே என்பது தோற்ற, 'வேதாத்மா விஹகேச்வர:' எனப்படும் வேதஸ்வரூபனான கருடனைக் கொடியாகக் கொண்டிருப்பவன். இத்தால் இவன் ரக்ஷணத்திற்குக் கொடி கட்டிக்கொண்டிருப்பவன் என்று தோற்றுகிறது. "ஸுபர்ணோஸி கருத்மாந்" என்று வேதத்திலேயே வேதஸ்வரூபனாக ஓதப்படும் கருடனைக் கொடியாகக் கொண்ட இவன், அப்பெருமையற்ற ரிஷபம் முதலானவற்றைக் கொடியாகக்கொண்ட மற்ற தெய்வங்களைக்காட்டிலும் சிறந்தவன் என்றும் காட்டப்படுகிறது. "சேவல் அம் கொடியோய்" [பரிபாடல் 1] "செவ்வாய் உவணத்து உயர்கொடியோனே" [பரிபாடல் 2] "புள்ளின் நிவந்து ஓங்கு உயர் கொடிச் சேவலோய்" [பரிபாடல் 3] "சேவல் ஓங்கு உயர் கொடியோயே" [பரிபாடல் 4] "அவிழ்துழாய் மலர்தருசெல்வத்துப் புள் மிசைக் கொடியோனும்" [பரிபாடல் 8] என்று மத்யஸ்தர்களான பண்டைத்தமிழர்களும் பலவிடங்களில் கருடக்கொடியானது இவன் பரம்பொருள் என்பதைக்காட்டுவது என்று கோஷித்தனரன்றே. (நெடியான்) நீண்ட நினைவையுடையவன். ஒருநாள் ஒரு திருநாமம் சொன்னவனை ஒருநாளும் மறவாமல் என்றும் நினைத்திருந்து மேன்மேலே மோக்ஷபர்யந்த பலங்களை அளிப்பவன் என்று கருத்து. 'நெடியான்' என்றதற்குத் 'திரிவிக்கிரமனாய் நெடிதுயர்ந்தவன்' முதலான பல பொருள்கள் உண்டாயினும், அடுத்தபடியாகத் திருநாமத்தின் பெருமை சொல்லுகிறுராகையாலே, இங்கு இதுவே பொருளாகக் கடவது (தன்

கள்) ஒருநாள் ஒரு திருநாமஞ் சொன்னவனை ஒருநாளும் மறவாதவனுடைய திருநாமங்களையேத்துங்கோள். (ஏத்திஞு லித்யாதி₃) ப்ரதிப₃ந்த₄கம் போக்குகை, ஐஶ்வர்யம், ஆத்ம லாப₄ம், தன்னைத் தருகை எல்லாங் கிடைக்கும். (கடிது) தே₃வதாந்தரப₄ஜநம்போலே ப₂லத்துக்கு விளம்ப₃மில்லை. 92.

---

தன் பக்கல் ஓரடிவர நின்றவர்களை நெடுக நினைத்துக்கொண் டிருக்கும் ஸ்வப₄ாவனானவனுடைய திருநாமங்களையே சொல்லி வாய்விட்டுப் புகழுங்கோள்; இப்படிப் புகழ்ந்தால் தந்தாமுக்கு அபேக்ஷிதமான ஐஶ்வர்யகைவல்ய ப₄க₃வல்லாப₄ங்களாகிற ஸகலபுருஷார்த்தங்களையும் ஏத்தின

---

நாமமே ஏத்துமின்கள்) இத்தகையவனுடைய திருநாமங்களையே சொல்லுங்கள்; மற்றொரு தெய்வத்தின் நாமத்தை ஏத்திஞல் இஷ்ட ப்ராப்தி அநிஷ்டநிவ்ருத்திகள் அனைத்தையும் அடையமுடியாது. இவன் திருநாமமே ஸம்ஸாரமாகிற பரமாநிஷ்டத்தையும் நீக்கி மோக்ஷமுள்ளிட்ட எல்லாப்பலன்களையும் அளிக்கவல்லது என்று கருத்து "ஆஸ்ய ஜாநந்தோ நாம சித்₃ விவக்தந" [அறிவாளி களே! இவனுடைய நாமத்தைச் சொல்லுங்கள்] "த்₄ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ:" [இவனைக் கீர்த்தனம் செய்யும் ஜனங்கள் நிலையான பலனைப் பெறுகிறார்கள்.] என்று வேதமும் விஷ்ணுஸூக் தங்களிலே இவன் திருநாமத்துக்கு இப்பெருமையை உத்கோஷித்த தன்றோ பரமபுருஷார்த்த₂மான மோக்ஷமொன்றைத்தான் இத்திரு நாமம் தருமோ? எனில்; ஏத்திஞல் தாம் வேண்டும்காமமே காட்டும்) அவன் திருநாமத்தை ஸங்கீர்த்தனம் செய்தால், அவரவர் விரும்பும் எல்லாப்பலன்களையும் அத்திருநாமமே காட்டித்தரும். 'காமம்' என்னும் பதம் விரும்பப்படும் பலன்களைக் குறிக்கிறது.

"ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம் |
கைவல்யம் ப₄க₃வந்தம் ச மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ||"

[இவ்வுலகச் செல்வங்களையும், சுவர்க்கம் முதலான மறுமைச் செல் வங்களையும், ஆத்மாநுப₄வமாகிற கைவல்யமோக்ஷத்தையும், பகவானையும் இம்மந்திரம் அடைவிக்கும்] என்கிறபடியே ஐஶ்வர்யம், ஆத்மப்ராப்தியாகிற கைவல்யம், பகவத் ப்ராப்தியாகிற பரம

93 கடிது கொடுநரகம் பிற்காலும் செய்கை
கொடிதென் றதுகூடா முன்னம்— வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய் கீண்டானைக் கொங்கை [நஞ்
சுண்டானை யேத்துமினோ வுற்று.

---

வாய் மூடுவதுக்கு முன்னே சீக்ரமாகக் கைப்படும்படி காட்டித்தரும். கடிது ஏத்துமின் என்றுமாம். 92.

---

மோக்ஷம் ஆகிய இஷ்டங்களில் எவரெவர் எதை விரும்புகிறார்களோ அதையும் தரும்; அவ்விஷ்டங்களுக்குத் தடையாயிருக்கும் அநிஷ்டங்களையும் போக்கித்தரும் என்று கருத்து. இத்தால் திருநாமத்துக்குள்ள பலகரணத்வம் காட்டப்படுகிறது. ப்ரபன்னரான இவ்வாழ்வார் திருநாமம் முதலான உபாயாந்தரங்களை உபதேசிக்கலாமோ? எனில்: ப்ரபத்திக்கு உறுப்பான மஹாவிஸ்வாஸமில்லாத மந்தாதிகாரிகளுக்குத் திருநாம ஸங்கீர்த்தனமே தஞ்சமாகையாலே உபதேசிக்கக் குறையில்லை. பலபல புருஷார்த்தங்களை விரும்புவாரும், அவற்றுக்குப் பல பல ஸாதனங்களை அனுஷ்டிக்க விரும்புவாருமாக உலகம் பின்னருசியாயிருக்கையாலேயன்றோ அவரவர்களைப் படிப்படியாகத் திருத்துவதற்காக சாஸ்திரங்கள் பற்பல புருஷார்த்தங்களையும், அவற்றையடையப் பற்பல சாதனங்களையும் உபதேசித்து, அவற்றிலெல்லாம் வெறுப்புற்ற மிகச்சிறந்த அதிகாரிகளுக்குப் பரமப்ராப்ய ப்ராபகமாயிருப்பவன் ஸர்வேஸ்வரன் என்று உபதேசிக்கின்றன. அந்த ரீதியிலே இவரும் 'தாம் வேண்டும் காமமே காட்டும்' என்று இதர ப்ராப்ய ப்ராபகங்களில் ருசியுடையார்க்கு அவற்றை உபதேசிக்கக்குறையில்லை. தாம் வேண்டும் காமத்தைக் காட்டுவது வேண்டி நீண்ட நாள் கழித்தோ? எனில்: (காட்டும் கடிது) ஏத்தின வாய் மூடுவதுக்கு முன்னே மிகவிரைவாக விரும்பியது கைப்படும்படி காட்டித்தரும். திரௌபதிக்குத் திருநாமம் புடைவை சுரந்த விடத்திலே இதைக் கண்டோமன்றோ. இத்தால் மற்ற தெய்வங்களை ஆஸ்ரயிப்பார்க்குப் பலன் தாமதித்துக்கிடைப்பதுபோலே இவ்விஷயத்தில் இல்லை என்று அருளிச்செய்தாராயிற்று. 'கடிது ஏத்துமின்கள்' என்று அந்வயித்து. 'மின்னின் நிலையற்ற சரீரம் விழுமுன் சடக்கெனத் துதியுங்கள்' என்றும் பொருள்கொள்ளலாம். ஆக, இப்பாசுரத்தில் ஆஸ்திகர்களாய், ப்ரயோஜநாந்தரங்களை விரும்பியிருப்பாரும் அவனையே துதிக்கவேண்டும் என்றாராயிற்று. 92.

கொடு நரகம்—கொடிய நரகமானது, கடிது—கண்கொண்டு காணவொண்ணாதபடி கோரமாயிருக்கும்; பிற்காலும்—அதற்குமேலும், செய்கை—(அங்கு நமன் தமர்கள் செய்யும் வேதனைச்) செயல்கள், கொடிது—பொறுக்க முடியாதவையாயிருக்கும், என்று—என்று அறிந்துகொண்டு, அது கூடா முன்னம்—அந்த நரகவேதனை நேராதபடி, வடி சங்கம் கொண்டானை - கூர்மையான வடிவையுடைய சங்கைத் திருக்கையிலே உடையவனும், கூந்தல் வாய் கீண்டானை—கேசியின் வாயைக் கிழித்து ஒழித்தவனும், கொங்கை நஞ்சு உண்டானை-(பேய்ச்சியின்) முலையில் தடவியிருந்த விஷத்தை உண்டவனுமான எம்பெருமானை, உற்று — அடைந்து, ஏத்துமின்—துதிபுரியுங்கள்.

பெரி அவ:— (கடிது) ஆஶ்ரயிக்கைக்கொரு உபாயஞ் சொல்லுகிறது.

அவ:—க்ரூரமான நரகம் வந்து கிட்டுவதுக்கு முன்னே, நிரதிஶயபோ₄க்₃யனாய், ப்ரதிகூலஹந்தாவானவனை விரும்பி ஏத்துங்கோள் என்கிறார்.

93. அவ:—'எங்களுக்கு எக்காமமும் வேண்டியதில்லை; இவ்வுலக வாழ்க்கையே எங்களுக்கு நீர் சொல்லும் மோக்ஷத்திலும் இனிதாயிருக்கிறது; ஆகையால் நாங்கள் அவனை ஏத்தவேண்டிய அவசியமில்லை' என்று சிலர் கூற, 'பாவிகாள்! இங்கு உங்களுக்கு வேறொன்றும் வேண்டியிராவிடிலும், இவ்வுடலழிந்தவுடன் நீங்கள் அடையவிருக்கும் நரகத்தைத் தவிர்த்துக் கொள்ளவாவது அவனைத் துதியுங்கள்' என்கிறார். வரவிருக்கும் கொடிய நரகயாதனைகளை அநுஸந்தித்தால், விரோதிகளை நீக்குகின்றவனும், மிகவினியவனுமான அவனைத் துதித்தல்லது நிற்கமுடியாது என்றபடி. முன் இரண்டு பாசுரங்களிலும், ஆஸ்திகர்களாய், ப்ரயோஜநாந்தரங்களை விரும்புகின்றவர்கள் அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் அவனையே தொழவேண்டும் என்றார். இப்பாட்டில், 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்றிருக்கும் உலகாயதர்களான நாஸ்திகர்களும் நரகத்தைத் தவிர்த்துக்கொள்ள அவனையே துதிக்கவேண்டும் என்கிறார். ஆஸ்திகஶ்ரேஷ்ட₂ர்களான முமுக்ஷுக்கள் தம்மைப் போலே அவனையே ப்ராப்யப்ராபகங்களாகக் கொண்டு ஆஶ்ரயிக்க வேண்டும் என்கிறார் அடுத்த பாசுரத்தில். ஆகையாலே புநருக்தியில்லை.

வ்யா:— (கடிதித்யாதி₃) நரகதர்சநமோ கடிது; பின்பு அங்குச்செயல்களோ கொடிது. ருதிரவாறுகளிலே பொகடுகை, வாள்போன்றிருந்துள்ள கோரைகளிலே ஏறிடுகை இவற்றை அநுஸந்தித்து; (அது கூடா முன்னம்) அவை கிட்டுவதுக்கு

---

உரை:—''க்ரூரமான நரகம் முதலிலே கண்கொண்டு காணவொண்ணாதபடி சால வெவ்விதாயிருக்கும். பின்னும் கர்மாநுகு₃ணமாக, 'சேவதக்குவார்போலப் புகுந்து' என்கிற படியே யமப₄டர் பண்ணக்கடவ நலிவுகள் மிகவும் து₃ஸ் ஸஹமாயிருக்கும்'' என்று அவற்றை அநுஸந்தி₄த்து நரக த₃ர்ஶனமும், அவர்கள் பண்ணும் நலிவும் வந்து கிட்டு

---

வ்யா:-(கடிது கொடுநரகம்)கொடியதான நரகம் முதன்முதலில் கண்ணால் காணமுடியாதபடி கோரமாயிருக்கும். (பிற்காலும்) அதற்குமேலே; (செய்கை கொடிது) அங்கு நமன்தமர்கள் செய்யும் வேதனைச் செயல்கள் மிகக்கொடியவையாயிருக்கும். ''தென்னவன் தமர் செப்பம் இலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின்முன்னாக இழுப்பதன் முன்னம்'' [பெரியாழ் திரு4-5-7] [சே அதக்குவார்-காளைக்குக் காயடிப்பார்.] நமன்தமர் செய்யும் வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன்'' [பெரிய திருமொழி 1-6-3]''வம் புலாங்கூந்தல் மனைவியைத் துறந்து பிறர் பொருள் தாரமென்றிவற்றை நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி எற்றிவைத்து எரியெழுகின்ற செப்பினாலியன்ற பாவையைப் பாவி தழுவென மொழிவதற்கு''[பெரியதிருமொழி 1-6-4] என்று மற்றை யாழ்வார்கள் அருளியபடியே,இவன் செய்த பாவத்திற்குத்தக்கபடி ரத்த நதிகளிலே போடுவது, வாள்போன்றிருக்கும் கோரைகளில் மூக்கும் முகமும் உதடும் பல்லும் உடையும்படி பின்னும் முன்னும் இழுப்பது, எரியும் நெருப்பில் இடுவது, வஸ்திரமில்லாமல் பழுக்கக் காய்ச்சியசெப்புப் பாவையைத் தழுவச்செய்வது, செக்கிலிட்டு ஆட்டுவது, நாய்களைத் தொடையில் கவ்வச்செய்வது, சூலத்தால் குத்துவது முதலான துன்பங்கள் மிகவும் பொறுக்கவொண்ணாதவையாயிருக்கும். (என்று) இவ்விஷயத்தில் உங்களுக்கு நம்பிக்கையில்லாவிடினும் 'சாஸ்திரங்களும், அறிவாளிகளும் இப்படிச் சொல்லுகையாலே இப்படி நேரிட்டுவிட்டால் என்ன செய்வது?' என்று அநுஸந்தியுங்கள். இப்படி அநுஸந்திப்பதே அவனை ஆஶ்ரயிப்பதற்கு உபாயம்

முன்னே. (வடி சங்கங்கொண்டானை) கூரிய ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலே ஆயுதமாகக் கொண்டவனை, கேசியின் வாயைக் கிழித்தவனை. (கொங்கை நஞ்சுண்டானை) பூதனையை

---

வதுக்கு முன்னே எதிரிகளை முடிக்கும் கூரிய த்வனியையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை உடையனாய், கேஶியினுடைய வாயைக்கிழித்துப் பொகட்டவனாய், பூதனையினுடைய முலையில் நச்சுப்பாலை உண்டு அவளை முடித்துப் பொகட்டவனை,

---

என்கிறது மேலே,—(அது கூடாமுன்னம்) இவ்வுலகில் துன்பம் நேராமலிருப்பதற்கு விழிப்புடனிருப்பதுபோலே, மறுமையிலும் நரக தர்ஶனம் அதிலனுபவிக்கும் வேதனைச்செயல்கள் ஆகிய துன்பங்கள் நேராமலிருப்பதற்குச் செய்யவேண்டியதைச் செய்யவேண்டாவோ? என்கிறார். இப்படிப்பட்ட விரோதிகளைப் போக்குவதற்கு வல்லவனோ அவன்? எனில்: (வடி சங்கம் கொண்டானை) "ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" [கீதை 1][அப்பாஞ்சசன்னியமுழக்கம் திருதராஷ்ட்ரபுத்திரர்களின் நெஞ்சங்களைப் பிளந்தது.]"வரிவளையால் குறைவில்லாப் பெருமுழக்கால் அடங்காரை எரியழலம் புகவூதி இருநிலம்முன் துயர்தவிர்த்த... விரிபுகழான்" [திருவாய் 4-8 8] என்கிறபடியே வடிவிற்போலே முழக்கத்திலும் எதிரிகளின் நெஞ்சைப்பிளக்கவல்ல கூர்மையையுடைய பாஞ்சசன்னியமாகிற சங்கையுடையவனன்றோ இவன். (வடி சங்கம்) அழகியசங்கம் என்றும் பொருள்கொள்ளலாம். (கூந்தல் வாய்கீண்டானை)குதிரையுருக்கொண்டு வந்த அஸுரனான கேசியின் வாயைக்கிழித்தவனன்றோ இவன். 'கூந்தல்' என்னும் பதம் பிடரி மயிரைக்குறித்து, அதையுடைய குதிரையுருவோடு வந்த கேசியைக் குறிக்கும். கேஶி என்னும் பதமும் பிடரிமயிரையுடைய குதிரை என்று பொருள்படும். "கூந்தல் எரிசினம் கொன்றாய்" [பரிபாடல் 3-31] "மேவார் விடுத்தந்த கூந்தற்குதிரையை வாய்பகுத்திட்டு"[கலித்தொகை 67]"கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்"[முத்தொள்ளாயிரம்]என்று கூறினரன்றோ தமிழரும். "கேசி-குதிரையாய் வந்து பொருதானோர் அசுரன்; இப்பெயர் கேசம் என்னும்வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன் பொருண்மைபற்றி 'கூந்தல்' என்றார்" என்று பரிபாடல் (3-31) உரையில் பரிமேலழகர் உரையிட்டதும் இங்கு காணத்தக்கது. (கொங்கை நஞ்சு உண்டானை) இவனை முடிக்க எண்ணித் தாயாய் வந்த பேயான பூதனையின்




முடித்தவனை. (ஏத்துமினோவுற்று) நரகக்கொடிதென்று அநுஸந்தி்க்க விரோதிநிரஸநசீலனானவனை கிட்டி ஏத்தலாம். 93.

94. உற்று வணங்கித் தொழுமின் உலகேழும்
முற்றும் விழுங்கும் முகில்வண்ணன்—பற்றிப்
பொருந்தாதான் மார்விடந்து பூம்பாட கத்துள்
இருந்தானை ஏத்துமென் னெஞ்சு.

உலகு ஏழும் முற்றும் விழுங்கும்—உலகங்களையெல்லாம் (பிரளயங்கொள்ளாதபடி) ஒன்று தப்பாமல் அமுதுசெய்தவனும், முகில்வண்ணன்—மேகம்போன்ற வடிவையுடையவனும், பொருந்தாதான்—தன்னோடு பொருந்தாத இரணியனை, பற்றி—பிடித்து, மார்பு—அவன் மார்பை, இடந்து—கிழித்தவனும், பூ பாடகத்துள் இருந்தானை—அழகிய திருப்பாடகமென்னும் திருப்பதியில் வீற்றிருப்பவனுமான எம்பெருமானை, என் நெஞ்சு—என் மனமானது, ஏத்தும்—துதிக்கும்;(நீங்களும் இப்படியே)உற்று வணங்கி தொழுமின்—(அகலாதபடி) அணுகி வணங்கி ஆஶ்ரயியுங்கோள்.

---

மேலெழவன்றிக்கே ஸமநஸ்கமாக உறைத்துநின்று ஸ்தோத்ரம் பண்ணுங்கோள். வடிசங்கம்—அழகிய சங்கம் என்னவுமாம். 93.

---

மூலையில் நஞ்சை உண்டு அவனை முடித்தவனை. இப்படி விரோதிகளை முடித்ததுபோலே உங்களுடைய நரகபயத்தையும் போக்க வல்லவன் அவனே என்று கருத்து. (ஏத்துமினோ உற்று)கண்டதே காட்சியென்றிருந்த நாஸ்திகநிலையைத் தவிர்த்துக்கொண்டு, 'இவன் நரகபயத்தைத் தவிர்ப்பானோ மாட்டானோ' என்று அவநம்பிக்கை கொள்ளாமல், மனப்பூர்வமாக இவனையே விரோதிநிவர்த்தகன் என்று அறுதியிட்டுத் துதியுங்கள். ஆக, நாஸ்திகர்களும், மறுமையில் தாங்கள் அனுபவிக்கவிருக்கும் நரகத்தின் கொடுமையை அநுஸந்தித்தார்களாகில், அதைத் தவிர்க்கவல்ல அவனையடைந்து துதித்தே தீருவர்கள் என்றுராயிற்று. நாஸ்திகர்கள் பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணுவதற்கு உபாயம் நரகபயத்தை அனுஸந்திக்கையே என்றபடி. 93.

பெரி அவ:— (உற்று) என்னுடைய நெஞ்சு ஏத்துகிறுப் போலே நீங்களுமேத்துங்கோளென்கிறுர். தான் நமஸ்கரித்துக் காட்டி ப்ரஜையை நமஸ்கரிப்பிப்பாரைப்போலே.

வ்யா:— (உற்றித்யாதி₃) கிட்டி அபி₄மாநசூந்யராய்த் தொழுங்கோள். (உலகித்யாதி₃) லோகமொன்றும் பிரிகதிர்ப்

---

அவ:—என்னுடைய நெஞ்சு கண்டீர்களே ஏத்துகிற படி. அப்படியே நீங்களும் ஜக₃த்₃ரக்ஷணஸ்வப₄ாவனுய், நிரதிஶயபே₄ாக்₃யனுனவனை ஏத்துங்கோள் என்கிறுர்.

உரை:-பூ₄ம்யாதி₃களான ஸகலலோகங்களையும் ஒன்றும் பிரிகதிர்ப்படாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கும் ஸ்வப₄ாவனுய்,அத்தால்வந்த ஹர்ஷம் நிழலிட்டுத் தோற்றும்

---

94. அவ:—இனி, இப்பாட்டில், தம்மைப்போலே முமுக்ஷுக்களாயிருப்பாரைப்பார்த்து, 'உலகை ரக்ஷிப்பதையே இயல்வாகக் கொண்டவனுய், மிகவினியவனுனவனை என் நெஞ்சு துதிப்பது போல் நீங்களும் துதியுங்கள்' என்கிறுர். தான் நமஸ்கரித்துக் காட்டிக் குழந்தைக்கு நமஸ்காரத்தைப் பழக்கிவைப்பாரைப்போலே தன் நிலையைக்காட்டி முமுக்ஷுக்களைப் பழக்கிவைக்கிறுர்.

வ்யா:— (உற்று வணங்கித் தொழுமின்) 'மிகத்தாழ்ந்த நாம் மிக உயர்ந்த அவனைக் கிட்டுவது தகுமோ' என்று உங்களுடைய தகுதியின்மையை நினைத்து அகலப்பாராமல், திருவாய்ப்பாடியில் வெண்ணெயைப்போலே உங்களுடைய ஆத்மவஸ்துவைப்பெறவே அவன் ஆசைப்பட்டிருக்கிறுன் என்றறிந்து அவனைக்கிட்டி, அகல நினைக்கும் அபிமானத்தையும் கைவிட்டுத் திருவடிகளில் விழுந்து கைகூப்பி அவனைத் தொழுங்கள். நாஸ்திகர்களைப்போலே நாஸ்திக்ய புத்தியாலே அகல்வதும், ப்ரயோஜநாந்தரபரர்களைப்போலே மற்ற பிரயோஜனங்களைக்கொண்டு அகல்வதும் முமுக்ஷுக்களான இவர்களுக்கு இல்லை; ''வளவேழுலகு'' [திருவாய் 1-5] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வாருக்குப்போலே அயோக்₃யனென்று அனுஸந்தித்து அகல்வதே உண்டு. ஆகையாலே, 'உற்று' என்று அப்படியகலுகையைத் தவிரச் சொல்லுகிறுர். 'வணங்கி' என்று அப்படித் தம்மைக்கொண்டு அகலுகையாகிற அபிமானமற்று

படாதபடி தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்து ப்ரஜை பால் குடித்தால் தாயுடம்பு நிறம் பெறுமாப்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனாய், பொருந்தாத ஹிரண்யன்மார்பைப்பற்றி

---

படியிருக்கிற வர்ஷுகவலாஹகம் போன்ற வடிவையுடையனாய், பிடித்தபிடியே பிணமாம்படி பிடித்துத் தன்னுடன் பொருந்தாத ஹிரண்யனுடைய மார்பை இரண்டு கூறாகப் பிளந்து பொகட்டு, பின்னும் ஆஶ்ரிதவிரோதிகளைப் போக்குகைக்காக நிரதிஶயபோக்யமான திருப்பாடகத்திலே சிறுக்கனுக்கு உதவின படியை எல்லாரும் காணவேணுமென்று எழுந்தருளியிருந்த ஸர்வேஶ்வரனை என்னுடைய நெஞ்சா

---

அவன் திருவடிகளில் விழுவதைச் சொல்லுகிறது. 'தொழுமின்' என்று கைகூப்பி ஆஶ்ரயிப்பதைச் சொல்லுகிறது. இனி இப்படி ஆஶ்ரயிக்கலாம்படி ஸர்வரக்ஷகனாய், விரோதிகளை அழிப்பவனாய், மிக இனியவனாயிருப்பவன் அவனென்று காட்டி. இத்தகையவனை என்னெஞ்சு துதிப்பதைப்போலே நீங்களும் துதியுங்கள் என்கிறார்,—(உலகு ஏழும் முற்றும் விழுங்கும்) பூமி முதலான எல்லா உலகங்களையும், "ஒரு பொருள் புறப்பாடின்றி" [திருவாசிரியம் 7] என்கிறபடியே ஒருபொருள் வெளிப்படாதபடி முழுவதையும் ப்ரளயத்தால் நோவுபடாதபடி தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்த இவனே ஸர்வரக்ஷகன் என்றபடி. (முகில்வண்ணன்) குழந்தை பால் குடித்தால் தாய் உடம்பு நிறம் பெறுவதுபோலே, உலக ரக்ஷிக்கப்பெற்ற ஆனந்தம் வடிவிலே நிழலிட்டுத் தோற்றுமபடியிருக்கிற நீர்கொண்ட மேகம்போன்ற திருநிறத்தையுடையவனன்றோ இவன். ஆக, தன் பேருக அனைவரையும் ரக்ஷிக்கின்றவன் இவன் என்றதாயிற்று; இனி, அடியாரின் விரோதிகளைப் போக்குவதை இயல்வாகக்கொண்டவன் என்கிறது.-(பற்றி) பிடித்த பிடியிலேயே பிணமாம்படி இரணியனைப்பிடித்து. இவனையும் திருத்தியிருக்கலாமே ? எனில்: (பொருந்தாதான்) தன்னிடம் எத்தனையோ அபசாரங்களைச் செய்தும் பொறுத்திருந்து, அடியானான பிள்ளையிடம் பொறுக்கவொண்ணாத அபசாரங்களைச் செய்தபின்பே 'இவன் இனிப் பொருந்தான்' என்று நிச்சயித்து அவனை அழித்தான். (மார்பிடந்து)'உளந்தொட்டு' [பெரியாழ்திரு 1-6-9] என்கிறபடியே இவன் நெஞ்சிலே சிறிதாவது ஈரப்பசை உள்ளதா என்று துழாவிப்

யிட்ந்து பின்னும் ஆஶ்ரிதவிரோதி₄களைப் போக்கவேணுமென்று திருப்பாடகத்திலே எழுந்தருளியிருக்கிறவனை ஏத்தா நின்றதென்னெஞ்சு. 94.

95. என்னெஞ்ச மேயானென் சென்னியான் தானவனை
வன்னெஞ்சம் கீண்ட மணிவண்ணன் — முன்னம்சே
யூழியா னூழி பெயர்த்தான் உலகேத்தும்
ஆழியா னத்தியூ ரான்.

---

னது இவ்வோ ஸ்வபா₄வங்களைச் சொல்லிப் புகழாநிற்கும். இப்படியே நீங்களும் உங்கள் அயோக்₃யதையை நினைத்துப் பிற்காலியாதே, கிட்டிநின்று, ப₄க்₃நாபி₄மானராய்த் திருவடிகளிலே விழுந்து அஞ்ஜலிப₃ந்த₄த்தைப் பண்ணி ஆஶ்ரயியுங்கோள். 94.

---

பார்த்து இல்லையென்றறிந்தபின்பே அவன் மார்பை இருகூறுகப் பிளந்து அழித்தான். இது முற்காலத்திலன்றோ? எனில், இக்காலத்திலிருப்பார்க்கும் தடைகளைப்போக்கித் தன்னை அடைவிப்பதற்காகத் திருப்பாடகத்தில் எழுந்தருளியிருக்கிறன் என்கிறர்— (பூம்பாடகத்துள் இருந்தானை) பிற்காலத்திலுள்ளார்க்கும் ஆஶ்ரித விரோதிகளைப் போக்குவதற்காக, மிகவினிய திருப்பாடகம் என்னும் திவ்யதேசத்திலே, பிள்ளையான பிரஹ்லாதனுக்கு உதவின திருமேனியை அனைவரும் காணலாம்படி வீற்றிருந்த ஸர்வேஶ்வரனை. பாடகம் — பாடு+அகம் — பெருமைதோற்ற வீற்றிருக்கும் இடம். ஸ்ரீகாஞ்சியில் பாண்டவ தூதனுகப் பெரிய திருமேனியுடன் வீற்றிருக்கும் இடம். 'பூம்பாடகம்' என்றதால் இனிமை தோற்றுகிறது. "உலகேழும் முற்றும் விழுங்கும் முகில்வண்ணன்" என்று ஸர்வ ரக்ஷகத்வமும், "பற்றிப் பொருந்தாதான் மார்பிடந்து" என்று ஆஶ்ரித விரோதி₄நிரஸனத்தை இயல்வாகக் கொண்டமையும் காட்டப்பட்டன. (ஏத்தும் என் நெஞ்சு) என்னுடைய நெஞ்சானது அவனுடைய ஸர்வரக்ஷகத்வம், ஆஶ்ரிதவிரோதி₄நிரஸந ஶீலத்வம், நிரதிஶய போ₄க்₃யத்வம் ஆகிய இந்த ஸ்வபா₄வங்களைச் சொல்லிப் புகழாநிற்கும். இதுபோலே நீங்களும் உற்று வணங்கித் தொழுமின் என்று அந்வயித்துக்கொள்ளவேணும். 94.

தானவனை—(இரணியனாகிற) அசுரனுடைய, வல் நெஞ்சம் — வலிய மார்வை, கீண்ட — கிழித்தொழித்தவனும், மணிவண்ணன் — நீலமணிபோன்ற நிறத்தையுடையவனும், முன்னம் சேய் ஊழியான்-முன் ஸ்ருஷ்டி காலத்தில் அனைத்துமாயிருந்தவனும், ஊழி பெயர்த்தான் — ப்ரளய காலத்தில் ஸம்ஹரித்தவனும், உலகு ஏத்தும் ஆழியான்-உலகத்தவரால் துதிக்கப்பட்டவனாய்க்கொண்டு, திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனும், அத்தியூரான்—திருவத்தியூரில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமான், என் நெஞ்சம் மேயான்—என்னுடைய நெஞ்சிலே பொருந்தியிரா நின்றான்; என் சென்னியான் — என்னுடைய தலையிலே எழுந்தருளியுள்ளான்.

---

அவ:— ஜகத்காரணபூதனாய், ஸர்வலோகசரண்யனானவன் திருவத்தியூரிலே நின்றருளி என்னுடைய ஸர்வாவயவங்களிலும் வந்து புகுந்தான் என்கிறார்.

---

95. அவ:—சென்ற நாலு பாசுரங்களாலே பரோபதேசம் பண்ணி நாட்டைத் திருத்தியவர், இனி, பிரபந்த ஸமாப்தியளவும் ஸ்வாநுபவத்திலே இழிகிறார். அதில் இப்பாசுரத்தில், உலகிற்கு ஒரே காரணனாய், அனைவராலும் சரணமடையத்தக்கவனாய்த் திருவத்தியூரிலே நின்றருளியவன் மிகத்தாழ்ந்த என்னுடைய எல்லா அவயவங்களிலும் வந்து புகுந்து என்னை அனுபவியா நின்றான். என்கிறார். * பாடக்ரமத்தைக் காட்டிலும் அர்த்தக்ரமம் வலிது என்னும் நியாயத்தையொட்டி, "முன்னம் சேய் ஊழியான், ஊழி பெயர்த்தான், உலகேத்தும் ஆழியான், தானவனை வன்னெஞ்சம் கீண்ட மணிவண்ணன் அத்தியூரான் என்நெஞ்சம் மேயான் என் சென்னியான்" என்று அந்வயித்துப் பொருள்கொள்ளவேணும்.

---

* ஆழ்வார்களின் பாசுரங்கள் பெரும்பாலும் பாடக்ரமமும் அர்த்தக்ரமமும் ஒத்திருக்கும். அப்படி ஒத்திராத சிலவிடங்களில் அந்வயத்தை மாற்றிப் பொருள்கொள்வதுமுண்டு. இவ்விடம் அத்தகையதொன்று.

பெரி வ்யா:— (என்னெஞ்சமேயானித்யாதி₃) ஹிரண்யனுடைய "ईश्वरोऽहं" (ஈஶ்வரோஹம்) என்ற திண்ணிய நெஞ்சைக்கீண்டு, சிறுக்கன் விரோதிபோயிற்றென்று புகர்த்த வடிவையுடையவன். (முன்னமித்யாதி₃) தன்னாலே ஸ்ருஷ்டமான ஜக₃த்திலேயுள்ளான். (ஊழியித்யாதி₃) காலோபலக்ஷித ஸகலபதா₃ர்த்த₂ங்களையுமுண்டாக்கினவன்; எல்லாருமேத்தும்படி திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன்;

---

உரை:— "सदेव सोम्येदमग्र आसीत्" (ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீத்) என்கிறபடியே ஸ்ருஷ்டே: பூர்வகாலத்திலே அழிந்த ஜக₃த்தை ஸ்ருஷ்டிக்கைக்காகக் காலோபலக்ஷிதமான ஸூக்ஷ்மசித₃சித்₃வஸ்துக்களை ஶரீரமாகக்கொண்டு நின்றவனாய், இப்படி ஸ்ருஷ்டித்தவளவில் தன்னை வழிபடாதே இவை அதிப்ரவ்ருத்தமானவாறே காலஶேஷமாம்படி இவற்றை ஸம்ஹரித்தவனாய், ஸ்ருஷ்டமான ஜக₃த்தை ரக்ஷிக்கைக்காக, லோகத்திலுள்ளவர்கள் இருந்ததே குடியாக ஏத்தி ஆஶ்ரயிக்கும்படி திருப்பாற்கடலிலே அநிருத்₃த₄ரூபியாய்க்கொண்டு கண்வளர்ந்தருளினவனாய்,

---

வ்யா:-(முன்னம் சேய் ஊழியான் ("ஸதே₃வ ஸோம்யஇத₃மக்₃ர ஆஸீத்" [ச₂ாந் 6-2-1] [குழந்தாய்! ஆதியில் இவ்வுலகம் ஸத் எனப்படும் ப்ரஹ்மமாகவே இருந்தது] "ஏகோ ஹவை நாராயண ஆஸீந் ந ப்₃ரஹ்மா நேஶாந:" [மஹோபனிஷத்][நாராயணன் ஒருவனே (முதலில்) இருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை.] முதலான ப்ரமாணங்களில் கூறியபடியே ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் நாமரூபமற்றுத் தன்னோடு ஒன்றிக்கிடந்த உலகைப்படைப்பதற்காகக் காலத்தினால் உபலக்ஷிக்கப்படும் ஸூக்ஷ்மசேதநாசேதனங்களடங்கிய அனைத்துலகையும் சரீரமாகக்கொண்டு "ப₃ஹு ஸ்யாம்" [நானே பலவாகக்கடவேன்]என்று அவற்றைத் தானாகவே அபிமானித்து நின்றான். 'முன்னம்' என்று ப்ரளய காலத்தைக்குறிக்கிறது. 'சேய் ஊழி' என்று பழமையான அக்காலத்தைச்சொல்லி, அக்காலத்திலிருந்த ஸூக்ஷ்மமான சேதநாசேதனப் பொருள்கள் அனைத்தையும் உபலக்ஷிக்கிறது. 'ஊழியான்' என்று அவற்றை ஸ்ருஷ்டிப்பதற்காக அவற்றைத் தானாகவே அபி₄மானித்து அந்தர்யாமியாய் அதி₄ஷ்டி₂த்து நின்ற நிலையைக்குறிக்கிறது.

இனி, அடுத்ததான ஸ்ருஷ்டி நிலையைக் கூறுகிறார்,-(ஊழி பெயர்த்தான்) ஊழிகாலத்தில்எல்லாப்பொருள்களையும்படைத்தான். இங்கும் ஊழியென்று ஊழிகாலத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் குறிக்கிறது. பெயர்த்தலாவது முன் நிலையிலிருந்து மாறுபடுத்தலேயாகையாலே, ஸ்ருஷ்டிகாலத்தில் அனைத்தையும் அதி₄ஷ்ட்டி₂த்து நின்ற நிலைக்கு அடுத்ததான ஸ்ருஷ்டி நிலை இங்கு குறிக்கப்படுகிறது என்பது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம். அப்படியன்றியே, 'ஊழியான்' என்று ஸ்ருஷ்டிக்காக அதி₄ஷ்ட்டி₂த்துநின்றதைச் சொன்னபோதே ஸ்ருஷ்டியும் அர்த்தாத் சொல்லப்பட்டதாகிறபடியால்,'ஊழி பெயர்த்தான்' என்று இப்படித் தன்னைவழிபடுவதற்காக சரீரத்துடன் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சேதனர்கள் தன்னை வழிபடாமல் இஷ்டப்படி திரியத் தொடங்கியவளவில், காலத்தைக்கொண்டே இவற்றை உபலக்ஷிக்க வேண்டும்படி இவற்றின் நாமரூபங்களை அழித்து ஸம்ஹரித்து நின்ற நிலையைக்குறிப்பதாக அப்பிள்ளை திருவுள்ளம். இப்படி ஸ்ருஷ்டிக்கப்பட்ட பொருள்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்து நின்ற நிலையைக் கூறுகிறார் மேலே,-(உலகேத்தும் ஆழியான்) ஸ்ருஷ்டிக்கப்பட்ட உலகை ரக்ஷிப்பதற்காக, உலகத்திலுள்ளார் அனைவரும் துதித்து அடையலாம்படி திருப்பாற்கடலிலே அநிருத்₃த₄நாராயணனாக அவதரித்து யோக₃நித்₃ரை செய்பவன். ஆழி-கடல்; இங்கு திருப்பாற்கடல். "த்ரிபாதூ₃ர்த்₄வ உதை₃த் புருஷ: பாதோ₃(அ)ஸ்யேஹாப₄வாத் புந:" [பு-ஸூ] [பரமபதத்தில் மூன்று வியூஹங்களையுடையவனாகிப் பரமபுருஷன் ஸங்கற்பித்தான். அவனுடைய ஒரு வியூஹமான அநிருத்தன் இவ்வுலகில் க்ஷீராப்திநாதனாக மறுபடியும் அவதரித்தான்.] என்று புருஷஸூக்தத்தில் இவ்வர்த்தம் சொல்லப்பட்டது. அடுத்தபடியாக, "ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாநஶநே அபி₄" [பு ஸூ] [அதற்குப்பின் உணவு அருந்துகின்றவர்களும், அருந்ாதவர்களுமான ஜீவர்களை ரக்ஷிப்பதற்காக எங்கும் அவதரிப்பதன்மூலம் வியாபித்தான்] என்று சொல்லப்பட்ட அவதாரங்களில் ஒன்றைக் கூறுகிறார்.-(தானவனை வன் நெஞ்சம் கீண்ட) அத்திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் நிலையில், இரணியனின் கொடுமையைப் பொறுக்கமாட்டாத தேவர்கள் அவனை ஸம்ஹரிக்கும்படி பிரார்த்திக்க, அக்கடலினின்றும் நரஸிம்ஹரூபியாய் அவதரித்து, அஸுரனான ஹிரண்யனுடைய வலிய ஹ்ருதயத்தைக் கிழித்துப் போட்டவன். (தானவனை) ராக்ஷஸகுலத்திற்பிறந்தும், "ந ச ராக்ஷஸ சேஷ்டித:" என்று அரக்கருடைய செயலற்றிருந்த தர்

(அத்தியூரான்) திருவத்தியூரிலே நிற்கிறவன். (என்சென்னி

---

அங்குநின்றும் நரஸிம்ஹரூபியாய்வந்துஅவதரித்து, ஆஸுர ப்ரக்ருதியான ஹிரண்யனுடைய, தன் உக்ரமான வடிவைக் கண்டும் இளகாதபடி கடிநமான ஹ்ருதயத்தைக் கிழித்துப் பொகட்டவனாய், சிறுக்கன் விரோதிபோகப்பெறுகையாலே, நீலமணிபோலே இருண்டு குளிர்ந்த வடிவையுடையனாய், அக்காலத்தின் பிற்பட்டாரையும் ரக்ஷிக்கைக்காகத் திருவத்தியூரிலே வந்து நின்றருளின நீர்மையில் ஏற்றத்தை உடைய

---

மாத்மாவான விபீஷணனைப் போலல்லாமல் ஆஸுரஸ்வபாவத்தைப் பரிபூர்ணமாகப் பெற்றிருந்தவனாய் அஸுரர்தலைவனான ஹிரண்யனை என்றபடி. (வல் நெஞ்சம்) "நானே ஈஶ்வரன்" என்று எண்ணிய வலிய நெஞ்சம். நரசிங்கனுடைய உக்ரமான வடிவைக் கண்டும் இளகாதபடி கடினமான ஹ்ருதயம் என்றுமாம். பெற்றெடுத்த பிள்ளையென்றும் பாராமல் பிரஹ்லாதன் விஷயத்தில் பொறுக்க முடியாத அபசாரங்களைச் செய்த வலிய நெஞ்சம் என்னவுமாம். (கீண்ட) இவன் பரமபாகவதனான பிரஹ்லாதன் விஷயத்தில்செய்த அபசாரங்களைக் கண்டு, இவனுடைய இருதயத்தைக் கிழித்துப் போடுவதே தக்கது என்றிருந்தான் போலும்! (மணிவண்ணன்) அந்தப்பிள்ளையின் விரோதி அழியப்பெறுகையாலே, திருமேனியில் ஏற்பட்ட நிறத்தைச் சொல்லுகிறது; நீலமணி போலே இருண்டு குளிர்ந்த வடிவையுடையவன் என்றபடி. (அத்தியூரான்) அக்காலத்திற்குப் பிற்பட்டாரையும் ரக்ஷிப்பதற்காகத் திருவத்தியூரில் வந்து நிற்கிற ஸௌலப்யப்பெருமையை உடையவன். 'அத்தியூர்' என்று காஞ்சியைப் பொதுவாகக் குறிப்பிட்டபோதிலும், 'ஹஸ்திஶைலம்' என்று பிரஸித்திபெற்ற பேரருளாளனின் திவ்யதேசத்தையே இது குறிக்கிறது எனக்கொள்வது தக்கது. "திருவத்தியூரிலே நிற்கிறவன்" "திருவத்தியூரிலே வந்து நின்றருளின" என்ற வ்யாக்யானமும், உரையும், "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்பூண்ட அன்பாளன் இராமானுசன்" [இராமா 31] என்ற இராமாநுசநூற்றந்தாதிப் பாசுரமும் இதை வலியுறுத்தும். நின்றதிருக்கோலமாயிருப்பவனும், இராமானுசனுடைய அன்புக்குப் பாத்திரமாயிருந்தவனும் வரதனேயன்றோ. 'அத்தியூரான் புள்ளையூர்வான்' என்று அடுத்தபாசுரத்தில் கருடஸேவையை விசேஷித்து மங்களாசாஸனம் செய்திருப்பதும், உலகம் புகழ நிற்கும் வரதனுடைய கருடஸேவையையே உணர்த்து

யான் என்னெஞ்சமேயான்) ''தலைமேல தாளிணைகள் நிலை பேரானென்னெஞ்சத்து'' என்கிறபடியே. 95.

வன் ''இடவகைகள் இகழ்ந்திட்டு'' என்கிறபடியே இந்தத் திருப்பாற்கடல் திருவத்தியூரா கிற இடங்களை உபேக்ஷித்து. ஸௌபரி போகார்த்தமாகப் பல வடிவெடுத்தாற்போலே என்னை அநுபவிக்கைக்காகப் பல வடிவெடுத்துக்கொண்டு, ''நிலைபேரான் என்னெஞ்சத்து'' என்னும்படி என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி நித்யவாஸம் பண்ணுநின்றான். ''தலைமேல தாளிணைகள்'' என்னும்படி என்னுடைய உத்தமாங்கத்திலும் விரும்பி வர்த்தியாநின்றான். ஒருவன் அபிநிவேசம் இருக்கும்படியே! என்று விஸ்மிதராகிறார். 95.

கிறது என்றும் கூறுவர். (என் நெஞ்சம் மேயான்) ''வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும் இடவகைகள் இகழ்ந்திட்டு என் பால் இடவகைகொண்டனையே'' [பெரியாழ் திரு 5-4-10] ''அனந்தன் பாலும் கருடன் பாலும் ஐதுநொய்தாக வைத்து என் மனந்தன்னுள்ளே வந்து வைகி'' [பெரியாழ் திரு 5-4-8] ''பனிக்கடலில் பள்ளி கோளைப் பழகவிட்டு ஓடி வந்து என் மனக்கடலில் வாழவல்ல மாய மணாளநம்பீ'' [பெரியாழ் திரு 5-4-9] ''கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்-வெல்ல நெடியான் நிறம்கரியான் உட்புகுந்து நீங்கான் அடியேனது உள்ளத்தகம்'' [பெரிய திருவ 68] என்கிறபடியே பரமபதம் திருப்பாற்கடல் முதலான ஸ்தானங்களையும் உபேக்ஷித்து என் நெஞ்சிலே உகப்புடன் வாழ்கிறான். ஸ்ருஷ்டி, அவதாரம் முதலான செயல்களெல்லாம் இவரைப் பெற அவன் அனுஷ்டித்த ஸாதநாநுஷ்டானங்களேயாகையாலே, இவரைப் பெற்றபின் ஸாதநாநுஷ்டான ஸ்தலங்களிற் காட்டிலும் இவர் நெஞ்சிலேயே மிகவும் பொருந்தப் பெற்றான். (என் சென்னியான்) மிகப்பெரியவனான அவன் மிகத் தாழ்ந்த என நெஞ்சில் வாழ்வதுடன் திருப்திபெறாமல், ''தலைமேல தாளிணைகள்-நிலைபேரான் என்நெஞ்சத்து'' [திருவாய் 10-6-6] என்கிறபடியே மிகத்தாழ்ந்த என்னுடைய தலையிலும் உகப்புடன் எழுந்தருளினான். இங்கு தலையைச் சொன்னது மற்ற அவயவங்களுக்கும் உபலக்ஷணமாய், ''இவையும் அவையும்'' [திருவாய் 1-9] என்னும் திருவாய்மொழியிற்போலே ஸாத்மிக்க ஸாத்மிக்க போகத்தையளிக்கும் ஸர்வேஶ்வரன் ஸௌபரிமஹர்ஷி

96. அத்தியூ ரான்புள்ளை யூர்வான் அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான்—முத்தீ(தி)
மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் றனக்கும்
இறையாவா னெங்கள் பிரான்.

புள்ளை ஊர்வான்—பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டு நடத்துமவனாய், அணி மணி இன் துத்தி சேர் நாகத்தின் மேல் துயில்வான்—அழகிய மாணிக்கங்களையும் இனிய படப்பொறிகளையுமுடையனான ஆதிசேஷன்மேல் பள்ளிகொள்பவனாய், முத்தீ மறை ஆவான்—மூன்று அக்நிகளையும் சொல்லும் வேதத்தால் அறிவிக்கப்படுகிறவனாய், மா கடல் நஞ்சு உண்டான் தனக்கும் இறை ஆவான்—பெரிய கடலிலிருந்து உண்டான விஷத்தை உட்கொண்டவனான உருத்திரனுக்கும் ஸ்வாமியாயிருப்பவன், எங்கள் பிரான்—எம்பெருமானாவதற்காக, அத்தியூரான் — திருவத்தியூரில் எழுந்தருளியிருக்கிறான்.

---

அவ:—உப₄யவிபூ₄தியுக்தனான பெரிய மேன்மையை யுடையவன்கிடீர் என்னை இப்படி விரும்புகிறான் என்கிறார்.

---

யானவர் பல பத்னிகளிடம் போ₄க₃மனுபவிப்பதற்காகப் பல வடிவெடுத்துக்கொண்டாற்போலே இவ்வாழ்வாரை அநுபவிப்பதற்காகப் பல வடிவெடுத்துக்கொண்டு இவருடைய எல்லா அவயவங்களிலும் ஸம்ஶ்லேஷித்ததைக் கூறுகிறதாகவுமாம். பாட்டின் மற்றைப் பகுதிகளாலே ஸர்வேஶ்வரனுடைய பெருமைகளையெல்லாம் சொல்லி, ''என் நெஞ்சம் மேயான் என் சென்னியான்'' என்று இத்தகைய பெருமையை உடையவன் மிகத்தாழ்ந்த என்பக்கல் காட்டும் அன்பிருக்கும்படியென்! என்று ஆச்சரியப்படுகிறார். 95.

96. அவ:— இப்படி என்னை விரும்பினவன் உபயவிபூதி நாயகனாயிருக்கையாகிற பெரிய பெருமையை உடையவனன்றோ என்கிறார். 'அத்தியூரான்' என்பது முதலிலிருந்தபோதிலும், அர்த்த₂க்ரமத்தை நோக்கிக் கடைசியில் அந்வயிக்கத்தக்கது.

பெரி வ்யா:— (அத்தியூரானித்யாதி₃) இரண்டாலும் ஸர்வேஶ்வரனென்றபடி.(முத்தீமறையாவான்)மூன்றக்நியையுஞ்

உரை:—பெரிய திருவடியை மேற்கொண்டு நடத்துமவனும்,அணியப்பட்ட மாணிக்கங்களும், அழகிய பொறிகளும் சேர்ந்திருக்கிற திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளுமவனும்,மோக்ஷப்ரதிபாத₃கங்களானவேதாந்த

வ்யா:— (அத்தியூரான் புள்ளையூர்வான்) "ஆதி₄ராஜ்யமதி₄கம் பு₄வநாநாமீஶ தே பிஶு"நயந் கில மௌளி:"[வரதராஜஸ்தவம்-25] [ஈசனே! உன் கிரீடமே நீ எல்லா உலகங்களுக்கும் சக்ரவர்த்தி என்று காட்டித்தருகிறதன்றோ ] என்கிறபடியே திருவத்தியூரில் நின்ற நிலையிலிருந்தும், வேதஸ்வரூபனான கருடனை வாஹனமாகக் கொண்டமையிலிருந்தும், இவனே ஸர்வேஶ்வரனென விளங்குகிறது. எத்தனையோ திவ்யதேசங்களில் எம்பெருமான் புள்ளையூர்ந்தாலும் அத்தியூரான் புள்ளையூர்ந்து நடத்தும் உத்ஸவமே இவ்வாழ்வார் மங்களாசாஸந பலத்தாலே உலகமேத்த நின்றது. (புள்ளை ஊர்வான்) "ஓடும் புள்ளேறி" [ திருவாய்1-8-1] என்கிற படியே பெரியதிருவடியின் மேலே நற்றரிக்க இருந்து நடத்த வல்ல தத்துவமேயன்றோ ஸர்வேஶ்வரனுகமுடியும். (அணி மணியின் துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான்) அணியப்பட்ட மாணிக்கங்களும், அழகிய படப்பொறிகளும் சேர்ந்த திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டிருக்குமவன். (அணி மணி) அழகியமணி என்னுதல்; அலங்காரமாக அணியப்பட்ட மணி என்னுதல். (இன் துத்தி) படத்திலுள்ள அழகிய பொறி. (சேர்) அழகிய மணிகளும் பொறிகளும் சேர்ந்திருக்கையாலே ஸர்வேஶ்வரனுடைய படுக்கையாயிருக்கத்தக்க அழகையுடையவனுயிருக்கிருன் திருவனந்தாழ்வான். (நாகத்தின்) படுக்கைக்குரிய மென்மை, குளிர்த்தி, நாற்றம் முதலான எல்லா குணங்களும் நிரம்பப்பெற்ற திருவனந்தாழ்வானின். (மேல் துயில்வான்) இத்தகையவனைப் படுக்கையாகக்கொண்டிருப்பதிலிருந்தே இவனே பரம்பொருள் என்பது விளங்கும் என்று கருத்து. "அமிதௌஜா: பர்யங்க: தஸ்மிந்ப்₃ரஹ்ம ஆஸ்தே"[கௌஷீதகி][ அளவற்றபலத்தையுடைய அநந்தன் படுக்கை; அப்படுக்கையில் ப்ரஹ்மம் உள்ளது. ]என்றதன்றோ உபனிஷத்தும்.புள்ளையூர்வானுயிருக்கை, நாகத்தின்மேல் துயில்வானுயிருக்கை என்னும் இரண்டாலும் இவனே

சொல்லப்படாநின்ற வேதத்தாலே ஸமாராத்4யதயா ப்ரதிபாதிக்கப்பட்டவன். ''முத்திமறையாவான்'' என்று பாடமாகில் மோக்ஷப்ரதிபாத3க வேதத்தாலே ப்ரதிபாத்3யனென்றபடி.

ப4ாக3ங்களாலே ப்ரதிபாதி3க்கப்படுமவனாய், பெரிய கடலிற் பிறந்த விஷத்தைப் பாநம்பண்ணி அந்த சக்தியோகத்தாலே தன்னை ஈஶ்வரனாக அபி4மானித்திருக்கிற ருத்3ரனுக்கும் ஈஶ்வரனான எம்பெருமான் இப்படி உப4ய

ஸர்வேஶ்வரன் என்றபடி. (முத்தீ மறை ஆவான்)கா3ர்ஹஸ்பத்யம், ஆஹவநீயம், த3க்ஷிணாக்3னி என்னும் மூன்று அக்னிகளைச் சொல்லும் வேதத்தாலே அவ்வக்னிகளைக்கொண்டு ஆராதிக்கப்படுபவனாக அறிவிக்கப்படுபவன். 'மறை ஆவான்' என்ற ஸாமாநாதி4கரண்யம் (ஒரே வேற்றுமையில் படிப்பது)ப்ரதிபாத்3யப்ரதிபாத3க ப4ாவ நிப்3ந்த4னம். பௌருஷேயமான ஆகமங்களிலும், ராஜஸதாமஸ புராணங்களிலும், இருள் துயக்குமயக்கு மறப்புக்களையுடைய புருஷர்களின் நூல்களிலும் பரம்பொருளாகச் சொல்லப்படும் மற்ற தெய்வங்களைப்போலல்லாமல் அபௌருஷேயமான வேதத்தாலேயே பரம்பொருளாகச் சொல்லப்படுமவன் என்று கருத்து. ''முத்திமறையாவான்'' என்று பாடமானபோது முக்தியைச் சொல்லும் உபநிஷத்3ப4ாக3ங்களாலே முக்தப்ராப்யனாகச் சொல்லப்படுகிறவன் என்று பொருளாகிறது 'மறை' என்று வேதசிரஸ்ஸான உபனிஷத்துக்களைச்சொல்லுகிறது. ''வேதத்து மறை நீ'' [பரிபாடல்3-66]என்றனர் பழந்தமிழரும். ''மறை'' என்று வேதம் முழுவதையுமே சொன்னாலும், அதில் பல பலன்களைச் சொல்லியிருந்தபோதிலும், முக்தியைச் சொல்லுவதிலேயே அதற்கு நோக்காகையாலே 'முத்தி மறையாவான்' என்று சொல்லக் குறையில்லை. (மாகடல் நஞ்சுண்டான தனக்கும் இறையாவான்)பெரிய கடலிலே (அமுதங்கடைந்தபோது) உண்டான விஷத்தைக் குடித்து, அந்த சக்தியுடைமையாலே தன்னை ஈஶ்வரனாக அபி4மானித்திருக்கிற உருத்திரனுக்கும் ஈஶ்வரனானவன் இவனே. ''கேஶீ விஷஸ்ய பாத்ரேண யத்3ருத்3ரேண அபிப3த் ஸஹ'' [ருக்-மண்டலம 10, ஸூ 136-7] [அழகிய கேசத்தையுடைய கேசவன் (ஆலகால) விஷத்திற்குப் பாத்திரமாயிருந்த உருத்திரனோடு கூட விஷத்தைக் குடித்தார்.] என்று வேதம் கூறியபடியே விஷத்தைக் குடித்ததாக விருதூதித்திரியும் உருத்திரன் உண்மையில் விஷத்தை

(மாகடலித்யாதி) அபி₄மாநியானருத்ரனுக்கும்ஈஶ்வரனானவன் எங்கள் பிரானாகைக்காகத் திருவத்தியூரிலே நின்றான். 96.

---

விபூ₄தியுக்தனாய் வேதாந்தவேத்யனானதன் பெருமைபாராதே எங்களுக்கு உபகாரம் பண்ணுமவனாய்க் கொண்டு திருவத்தியூரிலே வந்தருளினான். ஸூரிகளில் தலைவரான திருவடி திருவனந்தாழ்வானைச் சொல்லுகையாலே நித்யவிபூ₄தி யோக₃ம் சொல்லிற்று; ஸம்ஸாரிகளில் தலைவனான ருத்₃ரனைச் சொல்லுகையாலே லீலாவிபூ₄தியோக₃ம் சொல்லிற்று என்கை. "முத்தீமறையாவான்" என்று பாட₂மானபோது த்ரேதாக்₃னியை ப்ரதிபாதிக்கிற வேதத்தாலே ஸமாராத்₄ய தயா ப்ரதிபாதி₃க்கப்படுமவன் என்று பொருளாகக் கடவது. 96.

---

வைத்திருந்த பாத்திரம்போலேயும், அவனுக்கு அந்தர்யாமியான கேசவனே அவனைப் பாத்திரமாகக்கொண்டு விஷத்தைக் குடித்தவனாகவுமிருந்தனரன்றோ. "புள்ளையூர்வான்......நாகத்தின் மேல் துயில்வான்" என்று நித்யஸூரிகளில் தலைவரான திருவடியையும் திருவனந்தாழ்வானையும் சொல்லுகையாலே, நித்யவிபூ₄தியை உடையவன் என்று சொல்லப்பட்டதாயிற்று; "மாகடல் நஞ்சுண்டான்" என்று ஸம்ஸாரிகளில் தலைவனான உருத்திரனைச்சொல்லி அவனுக்கும் இறைவன் என்கையாலே லீலாவிபூ₄தியை உடையவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. இரண்டுக்குமிடையில் "மறையாவான்" என்று சொன்னதாலே இப்படி உப₄யவிபூ₄திகளை உடையவனாக வேதமே இவனைச்சொல்லுகிறது என்று உணர்த்தப்பட்டது. இப்படி உப₄யவிபூ₄திகளையும் உடையவனாய் வேதாந்தங்களில் அறிவிக்கப்படுபவன் தன் பெருமைபாராமல் எங்களை விஷயீகரிக்கைக்காகத்திருவத்தியூருக்கு எழுந்தருளினான் என்கிறார் மேலே,–(எங்கள் பிரான் அத்தியூரான்) இப்படியாகப் பெரியவனாயிருப்பவனன்றோ எங்களுக்கு உபகரிப்பதற்காகத் திருவத்தியூருக்கு எழுந்தருளினான். 'எங்கள்' என்று "கேசவன்தமர் கீழ்மேல் எமர் ஏழெழு பிறப்பும்" [திருவாய் 2-7-1] என்கிறபடியே ஸம்பந்த ஸம்பந்திகளளவரையும் சொல்லுகிறார். "என் நெஞ்சமேயான் என் சென்னியான்"

97. எங்கள் பெருமா னிமையோர் தலைமகன்நீ
செங்க ணெடுமால் திருமார்பா—பொங்கு
படமூக்கி னாயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய்
குடமூக்கில் கோயிலாக் கொண்டு.

திரு மார்பா—பெரிய பிராட்டியைத் திருமார்பிலுடைய வனே! செம் கண் நெடு மால்-சிவந்த திருக்கண்களையுடைய ஸர்வேஶ்வரனாய், இமையோர் தலை மகன்-நித்யஸூரிகளுக் குத் தலைவனாய், எங்கள் பெருமான் நீ—எங்களுக்கு ஸ்வாமி யான நீ, குடமூக்கு இல்-கும்பகோண க்ஷேத்ரத்தை, கோயில் ஆ கொண்டு — கோயிலாகத் திருவுள்ளம்பற்றி, பொங்கு படம் மூக்கின்-ஓங்கிய படங்களையும் மூக்கையுமுடையவனும், ஆயிரம் வாய்—ஆயிரம் வாயையுடையவனுமான, பாம்பு— ஆதிசேஷனாகிற, அணை மேல்-படுக்கையின் மீது, சேர்ந்தாய்- பள்ளி கொண்டருளினாய்.

---

அவ:—என்னை விஷயீகரிக்கைக்காகத் த்திருக்குடந்தை யிலே ஸௌலப்யனாய் வந்து பள்ளிகொண்டருளினாய் என்கிறார்.

உரை:— எங்களை அடிமை கொள்ளுகைக்கடியான பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே உடையவனே!

---

என்று என்னை விரும்பியதோடன்றியில், என்னோடு நேரேயும், பரம் பரையாகவும் தொடர்பு பெற்றவர்கள் அனைவர்க்கும் உபகரிப்பதற் காகவே ஹஸ்திகிரியிலே எழுந்தருளினான் என்கிறார். 96.

97. அவ:-பிரானே! நித்யவிபூதிநாயகனாய், ஸர்வேஶ்வரனான நீ நித்யஸம்ஸாரியாய்ப்போந்த என்னையும் எமரையும் ஆட்கொள் வதற்காகத் திருவத்தியூரில் நின்றவளவன்றிக்கே, திருக்குடந்தை யில் திருவனந்தாழ்வான்மேலே அதிஸௌலப்யனாகப் பள்ளிகொண் டருளினாயன்றோ என்று ஆஶ்சர்யப்படுகிறார். எங்கள் பிரானாவதற் காகத் திருவத்தியூரில் நின்றதோடல்லாமல், ஸம்ஸாரத்தைக் கிழங்கெடுத்தாலல்லது எழுந்திருக்கமாட்டேன் என்பவன்போலே திருக்குடந்தையில் படுக்கையை விரித்துப் பள்ளிகொள்வதும் செய்தாய் என்கிறாராகவுமாம்.

பெரி வ்யா:— (எங்கள் பெருமானித்யாதி₃) எங்களுக்கு ஸ்வாமியான ஸௌலப்₄யத்துக்கு மேலே நித்யஸூரி போ₄க்₃

---

அயர்வறுமமரர்கள் அதிபதியாய், அவர்களுக்கு போ₄க்₃ய மான சிவந்த திருக்கண்களையுடைய ஸர்வாதி₄கனை

---

வ்யா:— (திருமார்பா) திருவாகிற ஸ்ரீதேவியை மார்பிலே தரித்து நிற்பவனே! எங்களை இப்படி நீ ஆட்கொள்ளுகைக்கு மூலகாரணம் இப்பெரிய பிராட்டியின் புருஷகாரக்ருத்யமேயாகும் என்று கருத்து. த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்தின் அர்த்தத்தை அனுஸந்திக்கிறார். "எங்கள் பெருமான்" என்பது பாசுரத்தின் முதலிலிருந்தபோதிலும், எங்கள் பெருமானாவதற்காக நீ திருக்குடந்தையைக் கோயிலாகக்கொண்டு திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளினாய் என்று கூட்டிப்பொருள்கொள்ளவேண்டும் என்பது அப்பிள்ளை திருவுள்ளம். அப்படியல்லாமல், "எங்கள் பெருமான்" என்று முன் பாசுரத்தில் 'எங்கள்பிரான்' என்னும் தொடராலே உணர்த்தப்பட்டஸௌலப்₄யத்தையே அநுவதிக்கிறார் என்பது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம். இந்த நிர்வாஹத்தில், "இமையோர் தலைமகன்...திருமார்பா" என்று அவனுடைய பரத்வத்தைக் கூறுவதாகக் கொள்ளவேண்டும். (திருமார்பா) "வேத₃ாந்தாஸ் தத்வசிந்தாம் முரபி₄து₃ரஸி யத்பாத₃சிந்ஹைஸ்தரந்தி" [ஸ்ரீகுண 44] [வேதாந்தங்கள் முராரியின் திருமார்பில் எந்தப் பிராட்டியின் திருவடியடையாளங்களைக்கண்டு பரதத்துவவிசாரத்தை முடிக்கின்றனவோ] என்று பட்டர் அருளியபடியே, "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" [பு-ஸூ] முதலான வேதாந்தபாகங்கள் லக்ஷ்மீநாயகனென்றன்றோ பரம்பொருளை அறுதியிட்டன. (இமையோர் தலைமகன்)"அயர்வறும் அமரர்கள் அதிபதி"[திருவாய் 1-1-1] "தத்₃விஷ்ணோ:பரமம்பத₃ம்ஸதா₃ பஶ்யந்திஸூரய:"[ருக்வேதம்] [விஷ்ணுவின் மேலான அப்பதத்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்]என்கிறபடியே நித்யஸூரிகளுக்கு நாயகனாயிருக்கையாலும் நீயே பரம்பொருளாகிறாய் என்று கருத்து. அடுத்தபடி அவர்களை எழுதிக்கொண்டிருக்கும் பரத்வஸூசகமான திருக்கண்களை அநுபவிக்கிறார்,-(செங்கண் நெடுமால்) "தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகம் ஏவம் அக்ஷிணீ" [சாந் 1-6-7] [அப்பரமபுருஷனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இரு கண்கள் உள]

யனுய், ஶ்ருதிப்ரஸித்தமான கண்ணையுடையனுய், ஶ்ரிய:பதி யானவனே! (பொங்கித்யாதி₃) விஸ்த்ருதமான படங்களையும் மூக்கையுமுடையனுன திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந் தாய்; திருக்குடந்தையைக் கோயிலாகக்கொண்டு பாம்பணை மேல் சேர்ந்தாயென்றந்வயம். 97.

---

ஸர்வேஶ்வரனுய், ஆஶ்ரிதரான எங்களுக்கு ஸ்வாமியான நீ எங்களை அங்கீகரிக்கைக்காகத் திருக்குடந்தையைக் கோயி லாகக்கொண்டு, திருமேனி ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான படிணங்களையும், திருமூக்கையுமுடையனுய், அநுப₄வஜநித ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஏத்துகைக்கு ஆயிரம் வாயை உடையனுமான திருவனந்தாழ்வானுகிற படுக்கையின்மேலே பள்ளிகொண்டருளினுய். 97.

---

என்று உபனிஷத்தில் பிரஸித்₃த₄மானதாய், இவனே ஸர்வேஶ்வரன் என்று கோட்சொல்லித்தரும் சிவந்த திருக்கண்களை உடையவன். நெடுமால் — மிகப்பெரியவன். இவனுடைய கண்களிலிருந்தே வேதாந்தங்களில் பரம்பொருளாகச் சொல்லப்படுபவன் இவனே என்பது விளங்கும் என்று கருத்து. (எங்கள் பெருமான்) 'எங்கள் பெருமானுவதற்காக' என்பது அப்பிள்ளை நிர்வாஹம்; 'எங்கள் பெரு மான்' 'இமையோர்தலைமகன்' 'செங்கண் நெடுமால்' 'திருமார்பா' என்னும் அனைத்தையும் விளிகளாகக் கொண்டார் பெரியவாச்சான் பிள்ளை. (நீ) இத்தகைய பரத்வஸௌலப்₄யங்களை உடைய நீ; 'பாம்பணைமேல் சேர்ந்தாய்' என்று அந்வயம். (குடமூக்கில் கோயி லாக் கொண்டு) திருக்குடந்தையாகிற திவ்யதேசத்தைக் கோவிலா கக்கொண்டு. 'குடமுக்கு' என்று திருக்குடந்தையின் பெயர். 'குட மூக்கு இல்' என்றது திருக்குடந்தையாகிற ஸ்தானம் என்றபடி. (பொங்கு பட மூக்கின் ஆயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய்) உன் னுடைய திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே ஓங்கி நிற்கும் படங்களையும், மூக்குகளையும் உடையவனுய்,எம்பெருமானை அனுபவித்ததால் உண் டான ஆனந்தத்துக்குப் போக்கு விட்டுத் துதிக்கலாம்படியான ஆயிரம் வாய்களை உடையவனுன திருவனந்தாழ்வானுகிற படுக் கையின்மேலே பள்ளிகொண்டருளினுய்; எங்கள் பிரானுவதற்காகத் திருவத்தியூரில் நின்றதோடல்லாமல், பரத்வஸௌலப்₄யங்களையும் திருமேனியழகையும்காட்டி ஸம்ஸாரத்தைக் கிழங்கோடு களைந்தா

98. கொண்டு வளர்க்கக் குழவியாய்த் தான்வளர்ந்தது
உண்ட துலகேழு முள்ளொடுங்க கொண்டு
குடமாடிக் கோவலனாய் மேவிஎன் னெஞ்சம்
இடமாகக் கொண்ட விறை.

கோவலன் ஆய் — இடையனாய்வந்து பிறந்து, குடம் கொண்டு ஆடி — குடங்களைத் தலையிலும் கையிலுங்கொண்டு கூத்தாடி,(அந்நிலையோடே)என் நெஞ்சம் மேவி-என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி, இடம் ஆக கொண்ட இறை— (எனது நெஞ்சையே) நிலைநின்ற கோயிலாகக் கொண்ட ஸ்வாமி, கொண்டு வளர்க்க—சிலர்கையிலெடுத்துச்சீராட்டி வளர்க்க வேண்டும்படியான, குழவி ஆய் — பச்சைக் குழந்தையாய், தான் வளர்ந்தது — தான் வளர்ந்தருளினான்; (அப்போது) உள் ஒடுங்க-தன்னுள்ளே(ஒரு மூலையில்)ஒடுங்கும்படி, உண்டது — உணவாக உட்கொண்டது, உலகு ஏழும் — ஏழு உலகங்களுமாகும்! (என்ன ஆச்சரியம்!)

---

அவ:— தம்மை விஷயீகரித்த ஸர்வேஶ்வரனுடைய அக₄டிதக₄டநாஸாமர்த்₂யம், குடக் கூத்தாடுகை முதலான தி₃வ்யசேஷ்டிதங்களை அநுப₄விக்கிறார்.

---

லல்லது எழுந்திருக்கமாட்டேன் என்பவன்போலே திருக்குடந்தையில் படுக்கையைவிரித்துப் பள்ளிகொள்வதும் செய்தாய் என்று பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹத்தில் பாசுரத்தின் திரண்டபொருள். திருவத்தியூரில் நின்ற அழகைக்காட்டி எங்களை எழுதிக்கொண்டது போலே, திருக்குடந்தையில் கிடந்த அழகைக்காட்டி எங்கள் பெருமானாய் என்பது அப்பிள்ளை நிர்வாஹத்தில் பாசுரத்தின் திரண்டபொருள். 97.

98. அவ:— இப்படி அர்ச்சாரூபியாய் நின்று என்னை எழுதிக்கொண்டதோடல்லாமல், சிறு குழந்தையுருவிலே உலகனைத்தையும் விழுங்கிய அக₄டிதக₄டநாஸாமர்த்₂யம்,குடக்கூத்தாடினது முதலான அழகியசெயல்களைக் காட்டியும் என்னை ஆட்கொண்டாய் என்கிறார்.

பெரி வ்யா:—(கொண்டித்யாதி₂) எடுத்து வளர்க்க வேண்டும்படி குழவியாய்த் தான் வளர்ந்தது. ஸ்தநந்த₄யாவஸ்தை₂யிலே வயிற்றிலே வைத்தது அடங்க உலகேழும். தனக்கு ரக்ஷகர் வேண்டியிருக்கிற அவஸ்தை₂யிலே லோகத்துக்கு

---

உரை:— இடையனாய் வந்து பிறந்தருளி, ஜாத்யுசிதமாக ஐஶ்வர்யச் செருக்காலே குடமெடுத்துக் கூத்தாடி, அந்தக் குடக்கூத்தாடின சுவட்டோடே இடைவெளியறப் பொருந்திக்கொண்டு என் ஹ்ருத₃யத்தைத் தனக்கு இருப்பிடமாகக்கொண்ட ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன், சிலர் எடுத்துக்கொண்டு சீராட்டி வளர்க்கவேண்டியிருக்கிற முக்₃த₄ஶிஶுவான வடிவையுடையனாய்க்கொண்டு தான்

---

வ்யா:— (கோவலனாய்) ஸர்வேஶ்வரனானவன், இடக்கையும் வலக்கையுமறியாத ஆயர்குலத்திலே ஒருவனாய் வந்து பிறந்தான். (மேவி)பொருந்தி. இவன் செய்த அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டு இவன் தேவனோ, கந்தர்வனோ என்று ஆயர்கள் ஐயமுற்றாலும்,

" நாஹம் தே₃வோ ந க₃ந்த₄ர்வோ ந யக்ஷோ ந ச ராக்ஷஸ: |
அஹம் வோ பா₃ந்த₄வோ ஜாத: நைதச்சிந்த்யமிதோऽந்ய-
யதா₂ ||" [வி-பு 5-13-13]

[நான் தேவனுமல்லன்; கந்தர்வனுமல்லன்; யக்ஷனுமல்லன்; ராக்ஷஸனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்தவன்; வேறுவிதமாக நீங்கள் நினைக்கலாகாது.] என்று அவர்களை மறுத்துக் கூறும்படி அவர்களிடம் பொருந்தினான் என்று கருத்து. (குடம் கொண்டு ஆடி) சீர்மல்கும் ஆய்ப்பாடியில் பிறந்த செல்வச் செருக்காலே ஆய்க்குலத்துக்குரிய குடக்கூத்தினை ஆடி. (குடம் கொண்டு ஆடி) குடங்களைக் கையிலும் தலையிலும் எடுத்துக் கொண்டு ஆடும் குடக்கூத்து ஆயர்களுக்கு உரியது, 'மேவி' என்பதை, 'என் நெஞ்சம் மேவி' என்றும் அந்வயித்துப் பொருள் கொள்ளலாம்,— (குடமாடி என் நெஞ்சம் மேவி) வீதியிலே குடமாடிக்கொண்டே வந்தவன் அதிலே என் நெஞ்சு ஈடுபட்டவுடன் சடக்கென என் நெஞ்சிலே புகுந்து குடக்கூத்தாடத் தொடங்கினான் என்கிறார். (இடமாகக் கொண்ட இறை)இப்படிக் குடமாடி என் நெஞ்சிலே பொருந்தி, எதற்கும் உருகாத வலிய நெஞ்சான

ரக்ஷகனானான். (கொண்டித்யாதி₃) இடையனாய் ஜாதிக்கு உசித மான கூத்தையாடி என்னெஞ்சிலே பொருந்தி இரங்கப் பண்ணி என்னெஞ்சைக் கோயிலாகக்கொண்ட ஈஶ்வரன் உண் டது உலகேழுமுள்ளொடுங்க. 98.

---

வளர்ந்து, அத்தசையிலே திருவயிற்றுக்குள்ளே ஒரு புடை யிலே அடங்கும்படி அமுது செய்தது ஸகலலோகங்களையும்; கொண்ட வடிவின் சிறுமையையும், உண்ட லோகத்தின் பெருமையையும், அதுதான் திருவயிற்றில் ஒருபுடையிலே அடங்கினபடியையும் 'இது ஓர் ஆஶ்சர்யமிருக்கும்படியே!' என்று விஸ்மிதராய் அநுப₄விக்கிறார். 98.

---

அதையும் குடக்கூத்தை ஆடியாடி உருகப்பண்ணி அதையே தான் நித்யவாஸம் செய்யும் கோயிலாகக்கொண்ட ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன். இப்படி நீர்மையை மாத்திரமுடையவனல்லன், அக₄டிதக₄டநாஸாமர்த்₂யமான மேன்மையையும் உடையவன் என் கிறார் முன்னடிகளாலே; கல்லினும், இரும்பினும், வைரத்திலும் வலிமைமிக்க தன் நெஞ்சை உருக்கி அதில் தனக்கு இடம் கொடுக்கச் செய்த அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத்தை அநுஸந்தித்த வுடன் இவன் செய்த மற்றொரு அக₄டிதக₄டநாஸாமர்த்₂யத்தைக் கூறு கிறாராகவுமாம்,—(கொண்டு வளர்க்கக் குழவியாய்த் தான் வளர்ந் தது) சிலர் எடுத்துக்கொண்டு சீராட்டி வளர்க்கவேண்டியிருக்கிற பச்சைக்குழந்தையின் வடிவையுடையவனாய்க் கொண்டன்றே (ஆலிலையில்) கண்வளர்ந்தருளினான். "பாலனாய் ஏழுலகுண்டு பரிவின்றி ஆலிலை அன்னவசம் செய்யும் அண்ணலார்" [திருவாய் 4-2-1] "அடியார்ந்த வையமுண்டு ஆலிலை அன்ன வசம் செய்யும் படியாதுமில் குழவி" [திருவாய் 8-7-10] என்று நம்மாழ்வாரும் இவனுடைய கலப்பற்ற பிள்ளைத்தனத்தை அநுஸந்தித்து வயிறு பிடித்தாரன்றே. இப்படிப் பச்சைக் குழந்தையாயிருந்தபோது இவன் செய்த செயல்தான் என்னவெனில்,— (உள்ளொடுங்க உண்டது உலகேழும்) பச்சைக்குழந்தையாயிருந்த தன் சிறு வயிற்றினுள்ளே ஒரு மூலையிலே ஒடுங்கும்படி உண்டது எல்லா உலகங்களுமாகும். 'ஏழுலகு' என்றது ஸம்ஸாரமண்டலத்திலுள்ள எல்லாவுலகங்களுக்கும் உபலக்ஷணம். 'இது ஜரிக்கும். இது ஜரிக்காது' என்று அறியாமல், கண்டதையெல்லாம் வாயிலே எடுத்துப்போடும் பருவத்துக்குச்சேர எல்லாவுலகையும் வாயிலே

99. இறையெம் பெருமா னருளென்(று) இமையோர்
முறைநின்று மொய்ம்மலர்கள் தூவ—அறைகழல
சேவடியான் செங்க ணெடியான் குறளுருவாய்
மாவலியை மண்கொண்டான் மால்.

இமையோர்—(பிரமன் சிவன் முதலான) தேவர்கள், எம்பெருமான்-'எங்களுக்கு வகுத்த ஸ்வாமியான, இறை—ஸர்வேஶ்வரனே! அருள் என்று—(எங்கள் விஷயத்தில்) தயைபுரியவேணும்' என்று சொல்லி, முறை நின்று—அடிமைக்கு ஏற்ப நின்று, மொய் மலர்கள்—அழகிய புஷ்பங்களை, தூவ—முறைகெட இடாநிற்க, அறை கழல சே அடியான்—ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய திருவடிகளையுடையவனாய், செம் கண்-சிவந்த கண்களையுடையனாய், நெடியான்-அனைவரிலும் மேம்பட்டவனாய், மால்—அடியார் பக்கல் அன்புடையவனான திருமால், குறள் உரு ஆய்—வாமநரூபியாய் வந்து தோன்றி, மாவலியை—மஹாபலியிடம், மண் கொண்டான்—பூமியை அளந்துகொண்டான்.

---

யிட்டதாயிற்று இப்பச்சைக்குழந்தை; ரக்ஷகவஸ்துவின் செயலாகையாலே இது ரக்ஷணமாய்த் தலைக்கட்டிற்று. தனக்கு ஒரு ரக்ஷகர் வேண்டியிருக்கும் பருவத்திலே உலகிற்கு ரக்ஷகனானான். இது என்ன ஆச்சர்யம்! என்று வியப்படைகிறார்.

"பாலன்றனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின்
மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று
வேலை நீர் உள்ளதோ? விண்ணதோ மண்ணதோ?
சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு" [முதல்திருவ 69]

என்று முதலாழ்வாரான பொய்கையார் இப்பச்சைக்குழந்தை செய்த அகடிதகடநாஸாமர்த்யச்செயலிலே ஈடுபட்டதுபோலே, இவரும் எடுத்துக்கொண்ட வடிவின் சிறுமையையும், அமுது செய்த உலகங்களின் பெருமையையும், அவ்வுலகங்களும் இச்சிறு திருவயிற்றின் ஒரு மூலையிலே அடங்கியபடியையும் கண்டு, 'இது ஓர் ஆஶ்சர்யமிருக்கும்படியென்!' என்று ஈடுபட்டு இன்புறுகிறார். ௯௨

பெரி வ்யா:—(இறையித்யாதி₃) அஸ்மத்ஸ்வாமியான ஈஶ்வரனே! அருளென்று ஒன்று கெட்டவன்ருகப பாடிகாப்பாரை வளைப்பாரைப்போலே, "ஈஶ்வரோஹம்" என்று ஊதின காளங்

அவ:—ப்ரயோஜநாந்தரபரராா தேவர்களுக்குக் கார்யம் செய்யும்படி சொல்லுகிருர்.

உரை:-"ஈஶ்வரோऽஹம்" (ஈஶ்வரோऽஹம்) என்று காளமூதித் திரிகிற து₃ர்மானிகளான ப்₃ரஹ்மாதி₃தே₃வர்கள் தங்கள் து₃ர்மானத்தையும் ஊதின காளத்தையும பொகட்டு, "எங்களுக்கு வகுத்த ஸ்வாமியான ஸர்வேஶ்வரனே! எங்கள் பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும்" என்று அர்த்தி₂க்

99. அவ:— இப்படித் தன்னையே விரும்பும் அநந்யப்ரயோஜனரை ரக்ஷிப்பதற்காகப் படாதபாடுபட்டதோடன்றியில், தன்னை விரும்பாமல் அற்பபலன்களைப் பெறவிரும்பியவர்களையும் படிப்படியாகத் திருத்துவதற்காகப் படாதனபட்டு அவர்கள் காரியத்தை ஸாதி₄த்துக்கொடுத்தானன்றே என்கிருர்.

வ்யா:—(இறை எம்பெருமான்! அருள் என்று) "அகி₂லஜக₃த் ஸ்வாமிந் அஸ்மத்ஸ்வாமிந்" [எல்லாவுலகுக்கும் இறைவனே! (விசேஷித்து) எங்களுக்கு ஸ்வாமியானவனே] என்ருப்போலே 'எங்களுக்கு வகுத்த ஸ்வாமியான ஸர்வேஶ்வரனே! எங்கள் விஷயத்தில் தயை புரியவேண்டும்' என்று பிரார்த்தித்துக்கொண்டு. (இறை எம்பெருமான்) "கள்வா! எம்மையும் ஏழுலகும் நின் உள்ளே தோற்றிய இறைவ!" [திருவாய் 2-2-10] என்ருப்போலே ஸ்தோத்ரம் செய்யாநிற்பர்கள். (அருள் என்று) பாடியில் வாழும் குடிமக்கள் தங்கள் உடைமைகளில் ஒன்று கெட்டுப்போய்விட்டால், பாடிகாக்கும் தலைவன் வாசலிலே வந்து 'ஐயோ! எங்கள் உடமை போய்விட்டதே' என்று கூக்குரலிட்டு வளைத்துக்கொள்வதுபோலே, இவர்களும் ராவணாதியராலே குடியிருப்பிழந்தபோது ரக்ஷகனை இவனிடம் வந்து சுற்றிநின்று கூக்குரலிடுவர்கள். இப்படி ஸ்தோத்ரம் செய்பவர்கள் தான் யாரென்னில்: (இமையோர்) "வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்" [திருவாய் 2-2-10] என்று சொல்லப்பட்டவர்களாய், எம்பெருமானும் இவரும் ஸமமானவரோ என்று பாமரர் மயங்கும்படி தமக்கென்று சில உலகங்கள் வாஹனங்கள் கொடிகள் ஆயுதங்கள் முதலானவற்றை உடையவர்களாய், 'ஈஶ்வரோऽஹம்' [நானே ஈஶ்வரன்] என்று காளமூதித்திரிகிற து₃ர

களைப்பொகட்டுதேவர்கள் புஷ்பத்தூவியாஶ்ரயிக்க,(அறைகழல சேவடியான்)த்₄வநியாநின்ற வீரக்கழலேயுடைய சிவந்த திருவடிகளையுடையவன். எல்லாவாப₄ரணங்களுக்குமுபலக்ஷணம்.

---

துக்கொண்டு, அவன் ஶேஷியும் தாங்கள் ஶேஷபூ₄தருமாகிற முறையிலே நின்று, அழகிய புஷ்பங்களை அக்ரமமாகப் பணிமாறிக்கொண்டு ஆஶ்ரயிக்க,த்₄வநியா நின்றுள்ள வீரக்கழலேயுடைத்தான சிவந்த திருவடிகளையுடையனாய், ஐஶ்வர்ய ஸூசகமான சிவந்த திருக்கண்களையுடைய ஸர்வாதி₄கனான ஸர்வேஶ்வரன் அந்த தேவர்கள் விஷயத்திலே மதகு திறந்து பாய்கிற வ்யாமோஹத்தையுடையனாய்க்கொண்டு,

---

பி₄மானிகளான பிரமன் சிவன் இந்திரன் முதலான தேவர்களன்றோ தங்களுடைய து₃ரபி₄மானத்தையும், ஊதின காளத்தையும், விருதுகளையும் விட்டு வந்து துதிக்கின்றனர் என்கிறார். இப்படி வாயால் துதிப்பது மாத்திரமோ? காயிகவ்யாபாரமும் செய்கின்றனர் என்கிறார் மேலே.—(முறை நின்று) 'அவன் தலைவனும், தாங்கள் தா₃ஸபூ₄தருமாகிற முறைதோற்றத் தலைவணங்கிக் கைகூப்பி நின்று' 'ஒருவர்பின் ஒருவராக நின்று' என்றும் பொருள்கொள்ளலாம். (மொய் மலர்கள் தூவ) தம்மடியார் தம்மை மலர்களாலே அர்ச்சனை செய்வதுபோலே, தாமும் அழகிய மலர்களாலே எம்பெருமானை அர்ச்சனை செய்து வழிபடாநிற்க. (தூவ) தங்கள் காரியம் ஆகவேண்டுமென்னும் பரபரப்பாலே திருவடியிலிடவேண்டிய பூவைத் தலையிலேயிட்டு முறைகெட அர்ச்சிப்பர்கள். இப்படி இவர்கள் வழிபடும்போது அவன் செய்வது என்னவெனில்: (அறைகழல சேவடியான்) ஒலிக்கின்ற வீரக்கழல் முதலான திருவாபரணங்களையுடைய சிவந்த திருவடிகளை உடையவனாய் நிற்பவன். (அறைகழலசேவடி) இவர்கள் வழிபடும்போதே இவர்கள் காரியம் செய்வதற்காகத் திருவடிகள் வீரக்கழல் ஒலிக்கத் துடிக்கிறபடி. 'கழல்' என்று வீரக்கழலாகிற ஒரு திருவாபரணத்தைச் சொன்னது காலிலணியும் எல்லாத் திருவாபரணங்களுக்கும் உபலக்ஷணம். (செங்கண் நெடியான்) "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம், தம் தே₃வதாநாம் பரமஞ்ச தை₃வதம்" [ஶ்வே] [ஈஶ்வரர்க்கெல்லாம் மேலான மஹேஶ்வரனும், தேவதைகளுக்கெல்லாம் மேலான தேவதையுமான அவனை] என்கிறபடியே தன்னை அடிபணியும் இந்த தேவதைகளுக்கெல்லாம் தானே தலைவன் என்பதைக் காட்டித் தரும் ஶ்ருதிப்ரஸித்₃த₄மான செந்தாமரைக்கண்களை உடையவனாயிருப்பவன். நெடியான்—அனைவரிலும் பெரியவன்.

(செங்கணெடியான்) ஸர்வேஶ்வரன். (குறளுருவாய் மாவலியை மண்கொண்டான் மால்)ஆஶ்ரிதார்த்தமாகச் சுருக்கின வடிவையுடையனாய் மஹாபலி பக்கலிலே மண் கொண்ட வ்யாமுக்தன். 99.

---

ஸ்ரீவாமநரூபியாய் வந்து திருவவதரித்தருளி, லோகமடங்க விழுங்கும்படி முசிவற வளர்ந்த வடிவையுடையனாய்க் கொண்டு பூமியை அளந்துகொண்டான். முறைநின்று-பர்யாயமாய்நின்று என்னவுமாம். 99.

---

(மால்)'இவர்கள் நம்மை விரும்பாமல், ஒருக்ஷுத்ரபலத்தையன்றோ விரும்புகிறார்கள்' என்று சிறிதும் முகஞ்சுளிக்காமல், அந்த தேவர்கள் விஷயத்திலும் மதகு திறந்துவிட்ட ஏரிபோலேபாய்கிற அன்பு வெள்ளத்தை உடையவனாயிருப்பவன். இப்போது இவர்கள் வேண்டியதைக் கொடுத்தாலாவது, பிறிதொரு காலத்தில் நம்மையே பயனாகப் பற்றுவார்களோ என்னும் நப்பாசையாலே அவர்கள் திறத்திலும் அன்பைப் பொழிகிறான் என்று கருத்து. இவர்களுடைய காரியத்தை ஸாதித்துக்கொடுத்ததுதான் எப்படியெனில், தன்னைத் தாழ்த்திக்கொண்டன்றோ இவர்களுடைய காரியம் செய்தான் என்கிறார்,—(குறளுருவாய்) மிகப்பெரியவனாய் எல்லாப் பலன்களையும் கொடுப்பவனாயிருப்பவன் அடியார்களான தேவர் காரியம் செய்வதற்காகத் தன் பெருமைக்குத்தகாதபடி மிகச்சிறியதாய், யாசிப்பதையே இயல்வாகக்கொண்ட வாமநப்ரஹ்மசாரி வடிவையன்றோ எடுத்துக்கொண்டான் என்று கருத்து. ஹிரண்யராவணாதியரைப் போலே ஶத்ருஸம்ஹாரம் செய்து காரியம் செய்யாமல், இப்படித் தன்னைத் தாழ்த்திக்கொண்டு காரியம் செய்வானேன்? எனில்—(மாவலியை) தன் அடியானான பிரஹ்லாதனின் வமிசத்தில் வந்தவனாகையாலும், இவனிடம் ஔதார்யம் (வண்மை) என்றொரு குணமிருக்கையாலும் இப்படிக் காரியம் செய்தான் என்று கருத்து. இம்மாவலியிடம் இவன் பெற்றதுதான் எது? எனில்: (மண் கொண்டான்) தன்னுடையதான மண்ணைத் தானே இவனிடம் யாசித்துப் பெற்றான். இது ஓராஶ்சர்யமிருந்தபடியென்! என்று வியப்படைகிறார்.(மாவலியைமண்கொண்டான் மால்) என்கையாலே மாவலிபக்கலிலும் வெள்ளமிடும்வாத்ஸல்யத்தை உடையவனாயிருந்தபடியாலே இப்படித்தன்னைத்தாழவிட்டுக் காரியம் செய்தான் என்பது தோற்று

**100.** மாலே நெடியோனே கண்ணனே விண்ணவர்க்கு
மேலா வியன்துழாய்க் கண்ணியனே — மேலால்
விளவின்காய் கன்றினல் வீழ்த்தவனே என்றன்
அளவன்றால் யானுடைய வன்பு.

மாலே—(அடியாரிடத்தில்) அன்புடையவனே! நெடியோனே—அளவிட்டுமுடியாதவனே! விண்ணவர்க்கு மேலா—நித்யஸூரிகளுக்குத்தலைவனே! வியன் துழாய் கண்ணியனே-திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனே! கண்ணனே —ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்தவனே! மேலால் — முன்பொரு காலத்தில், விளவின் காய் — (அஸுராவேசமுள்ள) விளங்காயை, கன்றினல்- (அத்தகைய) ஒரு கன்றைக்கொண்டு, வீழ்த்தவனே—உதிர்த்துத்தள்ளினவனே!, யான் உடைய —(உன்னிடத்தில்) அடியேன் வைத்திருக்கிற, அன்பு—அன்பானது, என்தன் அளவு அன்று — என்னளவிலே அடங்கி நிற்பதன்று.

---

அவ—''ப்ரயோஜநாந்தரபரர் நம்மை ஆச்ரயிக்கும்படி சொன்னீர்;உமக்குச் செய்யும்படி சொல்லீர்'' என்ன, ''கொள் கொம்பு மூடப்படர்ந்த அன்பை ஆச்ரயத்தளவாக்கித் தர வேணும்'' என்கிருர்.

---

கிறது இதுபெரியவாச்சான்பிள்ளையின் பாடம். ''மாவடிவில் மண் கொண்டான்'' என்று பாடம் கொண்டார் அப்பிள்ளை. உலகனைத்தையும் விழுங்கும்படியான மிகப்பெரிய வடிவையுடையவனாகி உலகளந்தான் என்றுபொருள். (குறளுருவாய்மாவடிவில்) ''சுருக்குவாரையின்றியே சுருங்கினாய் சுருங்கியும் பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்'' [திருச்சந்த 109] என்று திருமழிசைப்பிரான் அருளியபடியே, ஒருவர் தூண்டுதலின் பேரிலன்றியே தன் இச்சையாலேயே இப்படிச் சிறிய வடிவையும் பெரியவடிவையும் எடுத்துக் கொண்டான் என்று கருத்து. 99

100. அவ:—''மற்ற பயன்களை விரும்புவார் நம்மை அடையும் படியையும் நாம் அவர்களுக்குக் காரியம் செய்யும்படியையும் சொன்னீர்; உமக்குச் செய்யவேண்டிய காரியம் இன்னதென்று சொல்வீர்'' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, 'கொள்கொம்பு மூடப்படர்ந்த கொடிபோலே, என்னுடைய அன்பானது என் ஸ்வ

பெரி. வ்யா:—(மாலே) ஸர்வாதி₄கனே! (நெடியோனே) அபரிச்சே₂த்₃யனானவனே! (விண்ணவரித்யாதி₃) நித்ய ஸூரி

உரை:—ஸ்வரூபரூபகு₃ணங்களால் வந்த பெருமையை உடையனாய், விபூ₄தியோக₃த்தால் வந்த வைப₄வத்தை உடையனாய், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நிர்வாஹகனாய், பரமபத₃வாஸிகளான நித்யஸூரிகளுக்கு அவ்வருகுபட்டிருக்குமவனாய், அவர்கள் உகக்கும்படி அத்யாஶ்சர்யமான திருத்துழாய்மாலையாலே அழகுபெற ஒப்பித்துக்

ரூபத்தையும் விஞ்சிப்பெருகித் தளர்ச்சியை உண்டாக்கி உன்னை அனுபவிக்கவொட்டாமல் தடுக்கிறது; அவ்வன்பை அடியேன் தாங்குமளவாகச் சுருக்கியருளவேண்டும்' என்கிறார்.

வ்யா:— தன் அன்பு தன்னளவன்றிக்கே பெருகிவருவதற்குக் காரணத்தை ஆறு விளிகளாலே காட்டுகிறார். (மாலே) ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூ₄திகள் ஆகிய அனைத்தாலும் ஏற்பட்ட பெருமையை உடையவனே! மால்-பெரியவன். (நெடியோனே) இப்படி எல்லாப்படியாலும் ஒப்பற்ற பெருமையையுடையவனாயிருக்கிறபடியால், உப₄யவிபூ₄தியிலுமுள்ள எவராலும் அளவிட வொண்ணாதவனாயிருப்பவனே! இது பெரியவாச்சான்பிள்ளை நிர்வாஹம். 'மாலே' என்று ஸ்வரூபரூபகுணங்களால் வந்த பெருமையையும், 'நெடியோனே' என்று உப₄யவிபூ₄திகளால் வந்த பெருமையையும் கூறுவதாக அப்பிள்ளை நிர்வஹித்தார். (கண்ணனே) "கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" [திருவாய் 1-8-8] என்கிறபடியே அந்த உப₄யவிபூ₄தியிலுள்ளாரையும் கண்போலே வழிகாட்டி நடத்திச்செல்லும் நிர்வாஹகனாயிருப்பவனே! "விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே கண்ணனே" என்று கூட்டி க்ருஷ்ணனாய் அவதரித்தவனே என்றும் பொருள்கொள்ளலாம். (விண்ணவர்க்கு மேலா) என்றும் பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளுக்கும் மேற்பட்டிருப்பவனே! (வியன் துழாய்க் கண்ணியனே) 'அந்த நித்யஸூரிகளாலும் ஆசைப்படத்தக்கதாய், உனக்குள்ள இப்பெருமைகள் அனைத்தையும் காட்டுவதான திருத்துழாய்மாலையாலே அழகாக அலங்கரிக்கப் பெற்றவனே! (மேலால்) முன்பொருகாலத்தில். (விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே) கண்ணனாய் வந்து அவதரித்தபோது கம்ஸனால் ஏவப்பெற்ற அஸுரர்கள் விளவாகவும், கன்றாகவும்

களுக்கவ்வருகாய் ஐஶ்வர்யஸூசகமானதிருத்துழாய் மாலையை யுடையாய்! (மேலாலித்யாதி₃) பண்டு கன்றுலே விளங்காயை

கொண்டிருக்குமவனுய், இப்படியிருந்துவைத்து க்ருஷ்ணனுய் வந்தவதரித்து, அஸுராவிஷ்டமாய் நின்றவிளாவின்காயை அஸுரமயமான கன்றுலே விழவிட்டவனே! உன் பக்கல் நான் உடையேனுன ப்ரேமம் ஆஶ்ரயபூ₄தனுன என்னள விலே அடங்கிநிற்பதொன்றன்று. த₄ர்மியழியாதபடி அத்தை அகஞ்சுரிப்படுத்தித் தந்தருளவேணும். அத₂வா 'ஆஶ்ரிதவ்யா முக்₃த₄ஞய், அந்த வ்யாமோஹத்துக்கு எல்லையில்லாதபடி யிருக்குமவனுய், அந்த வ்யாமோஹம் ப்ரேரிக்க க்ருஷ்ணனுய் வந்து அவதரித்து ஆஶ்ரிதருக்கு பவ்யனுயிருக்குமவனுய்,

நின்று உன்னை அழிக்க நினைக்க, கன்றையெடுத்து விளவின்மேல் எறிந்து உதிர்த்து இருவரையும் ஒக்க அழிந்துவிழச் செய்தவனே! இது மேன்மைக்கு அநுகூணமான நிர்வாஹம். இப்படியல்லாமல், தம்மை விஷயீகரித்த நீர்மைக்கு அநுகுணமாக இந்தஆறு விளி களையும் பின்வருமாறு பொருள் கொள்ளலாம்.—(மாலே) அடியா ரிடத்தில் அன்பே உருவானவனே! மேன்மேலெனப் பெருகிவரும் அன்பைப் பொழிந்து என்றனளவல்லாதபடி என் அன்பைப் பெரு கச் செய்துவிட்டாய் என்று கருத்து. (நெடியோனே) ''அதனிற் பெரிய என் அவாவறச்சூழ்ந்தாயே'' [திருவாய் 10-10-10] என்கிற படியே தத்வத்ரயத்திலும் பெரிய என் அன்பிலும் தன் அன்பு பெரிதாயிருக்கையாலே, தன் அன்பை எவராலும் எல்லை காண முடியாதபடியிருப்பவனே! (கண்ணனே) அவ்வன்பால் தூண்டப் பட்டு ஆயர்களையும், ஆய்ச்சிகளையும், பசுக்களையும், கன்றுகளையும் கூட ரக்ஷிப்பதற்காகக் கண்ணனுய் அவதரித்து அடியார்க்குக் கட்டவும் அடிக்கவுமாம்படியிருப்பவனே! (விண்ணவர்க்கு மேலா) ''இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால்வெண்ணெய் ஊண் என்னும் ஈனச்சொல்லே'' [திருவிருத்தம் 98] என்கிறபடியே இப்படி ஆஶ்ரிதபரதந்திரனுயிருந்த நிலையிலே நித்யஸூரிகளாலும் அளவிட முடியாதபெருமையைஉடையவனே! (வியன்துழாய்க்கண்ணியனே!) அடியார்களை ரக்ஷிப்பதற்கென்றே தனிமாலையிட்டிருப்பவனே! (மேலால் விளவின் காய் கன்றினுல் வீழ்த்தவனே!) முன்பு அப்படிக் கண்ணனுய் அவதரித்தபோது வத்ஸாஸுரனையும் கபித்தா₂ஸுர

விழவிட்டவனே!(என்றனித்யாதி)என்னுஶ்ரயத்தினளவன்று உன்பக்கல் ஸ்நேஹம்; இத்தையகஞ்சுரிப்படுத்தவேணும். 100.

பெரியவாச்சான்பிள்ளை அருளிய
இரண்டாம் திருவந்தாதி வ்யாக்யானம் முற்றிற்று,
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

இந்நிலையிலே நித்யஸூரிகளுக்கும் அவ்வருகான பெருமையை உடையனாய், ஐஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனாய், விளாவாய் நின்ற அஸுரனைக் கன்றாய் நின்ற அஸுரனாலே எறிந்து விழவிட்டு இரண்டையும் முறித்துப் பொகட்டாற்போலே என் விரோதியைப் போக்கினவனே! எனக்கு உன்பக்கல்ப்ரேமம்என்னளவன்று; இத்தை அமைத்தருளவேணும்' என்கிறாராகவுமாம். 100.

அப்பிள்ளை அருளிய இரண்டாம்திருவந்தாதியுரை முற்றிற்று.
ஜீயர் திருவடிகளே சரணம்.

---

லையும் அழித்தாற்போலே நான் உன்னை அடையத் தடைகளையும் அழித்தருளியவனே! (என்றன் அளவன்றால் யான் உடைய அன்பு) எனக்கு உன்னிடமுள்ள அன்பு, கொள்கொம்பு மூடப்படர்ந்த கொடிபோலே என்னளவில் அடங்காததாயிரா நின்றது; அதனால், ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்''[பெரியதிருவ34]''சித்தமும் செவ்வை நில்லாது'' [திருக்குறு 10] என்றாற்போலே என் அங்கங்களிலும் மனத்திலும் தளர்வேற்பட்டு உன்னை அனுபவிக்கமுடியாமல் தடுமாறுகின்றேன். ''பத்திமைக்கன்புடையேனாவதே பணியாய் எந்தாய்''[திருக்குறு 10]என்கிறபடியே இத்தடுமாற்றமறும்படி என் அன்பை என்னளவிலே அடங்கும்படி சுருக்கியருளவேணும் என்று கருத்து. ஆக, 'அன்பேதகளியா' என்று தொடங்கி மேன்மேலாகப் பெருகிவந்த தன் அன்பை அளவுபடுத்தித் தரவேண்டும் என்று ப்ரார்த்தித்துப் ப்ரபந்தத்தைத் தலைக்கட்டினாராயிற்று. 100.

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶநபத்ராதிபனான
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
இரண்டாம் திருவந்தாதி வ்யாக்யானம் நிறைவுபெற்றது.
பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 15 | 27 | விளக்குக்கு உபாதான | விளக்கின் ஜ்வாலைக்குக் |
| 16 | 26 | விளக்குக்கு உபாதான | விளக்குக்குக் காரண |
| 27 | 14 | அறியமாட்டாமோ | அறியமாட்டோமோ |
| 29 | 22, 24 | நிருபித் | ரூபித் |
| 32 | 8, 12 | நிருபிக் | ரூபிக் |
| 43 | 7 | பொய்யேயுகந்து. | பொய்யேயுகந்தது: |
| 44 | 1 | யாகையால் | யாகையால். |
| 47 | 13, 14 | (ரக்ஷகனுக்) | (அடையத்தக்கவனென) |
| 49 | 27 | செய்வதற்குக் | செய்ததற்குக் |
| 86 | 25 | இன்பத்திற்குப்பின் | இன்பத்திலிருந்து: |
| 160 | 6 | வாமதேவோ | வாமதேவோSபி |
| 228 | 26 | யஜுர்வேதம் | யஜு-காடகம் 3-9-55 |

---

## ஸுதர்சனம் காரியாலயத்தில் கிடைக்கும் புத்தகங்கள்

1. ஆழ்வார் அருளிச் செயல்களுக்குப் பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள்

(பதவுரை அரும்பதவுரை ப்ரமாணத்திரட்டுகளோடு கூடியவை)

| | க்ரந்தங்கள் | விலை | தபால் |
| --- | --- | --- | --- |
| 1. | திருப்பாவை வ்யாக்யானங்கள் | 135 | 6-00 |
| 2. | பகவத்விஷயம் I (முதலிரண்டு திருவாய்மொழிகள்) | 37-00 | 5-00 |
| | ஷை II பாகம் (முதற்பத்து 3-10 ,, ) | 42-00 | 6-00 |
| | ஷை III பாகம் (இரண்டாம்பத்து முழுவதும்) | 52-00 | 7-00 |
| | ஷை IV பாகம் (மூன்றாம்பத்து முழுவதும்) | 80-00 | 10-00 |

II ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணத்துடன் கூடிய பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள்

| | | | |
| --- | --- | --- | --- |
| 1. | சிறியதிருமடல் வ்யாக்யானம் | 5-00 | 1-00 |
| 2. | பெரியதிருமடல் வ்யாக்யானம் | 8-00 | 2-00 |
| 3. | முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 18-00 | 2-00 |
| 4. | இரண்டாம் திருவந்தாதி வ்யாக்யானம் | 30-00 | 3-00 |
| 5. | நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் | 8-00 | 1-00 |
| 6. | திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் | 8-00 | 1-00 |
| 7. | திருமாலை வ்யாக்யானம் | 16-00 | 2-00 |
| 8. | நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் | 40-00 | 8-00 |
| 9. | திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 6-00 | 1-00 |

III அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணம் மாத்திரம்

| | | | |
| --- | --- | --- | --- |
| 1. | திருப்பாவை வ்யாக்யானம் | 20-00 | 2-00 |

IV நமது மற்ற வெளியீடுகள்

| | | | |
| --- | --- | --- | --- |
| 1. | ஸ்தோத்ரரத்ந சது:ச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் ப்ரமாணத்திரட்டுடன் | 12-00 | 1-00 |

| | | | |
|---|---|---|---|
| 2. | சது:ச்லோகீ வ்யாக்யானம் [நாயனாராச்சான்பிள்ளை] | 4-00 | 1-00 |
| 3. | கத்ய வ்யாக்யானங்கள் ப்ரமாணத்திரட்டுடன் | 7-00 | 2-00 |
| 4. | ஸ்ரீராமாயண தனிச்லோகம்[விவரணத்துடன்] I Part | 30-00 | |
| 5. | பாசுரப்படி ராமாயணம் | | 1-00 |
| 6. | ஈசாவாஸ்யோபநிஷத் வ்யாக்யானம் | 8-00 | 1-00 |
| 7. | ஸ்ரீவசநபூ$_4$ஷண வ்யாக்யானம் 4-அரும்பதவுரைகளுடன் முதல்பாகம் | 9-00 | 2-00 |
| 8. | சாரீரககாரிகாவளீ விவரணம் [முதல் பாகம்] | 10.00 | 2-00 |
| 9. | சாரீரககாரிகாவளீ விவரணம்[மூன்றாம்பாகம்] | 20-00 | 2-00 |
| 10. | ,, [நாலாம்பாகம்] | 16-00 | 2-00 |
| 11 | ஆறுவார்த்தை | | 1-00 |
| 12. | கோயிலொழுகு | 6-00 | 1-00 |
| 13. | திருக்குறள் ஸம்ஸ்க்ருதச்லோக மொழிபெயர்ப்புடன் | 10-00 | 1-00 |
| 14. | [போதாயந] ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 2-00 | 1-00 |
| 15. | [போதாயந] உபாகர்மவிதி | 2-00 | 1-00 |
| 16. | அருளிச்செயல் ரஹஸ்யம் [வரதாசார்யஸ்வாமி தொகுத்த பூ$_4$ஷணத்துடன்] | 4-00 | 2-00 |
| 17. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 5-00 | 2-00 |
| 18. | நாராயணஸூக்த வ்யாக்யானம் | 3-00 | 2-00 |
| 19. | ஸ்ரீஸூக்தவ்யாக்யானம் | 8-00 | 2-00 |
| 20. | பூ$_4$நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 8-00 | 2-00 |
| 21. | தே$_3$ஹளீச ஸுப்ரபாதம் | 1-00 | 1-00 |
| 22. | சாதிமத ஆராய்ச்சி [முதல் பாகம்] | 6-00 | 2-00 |
| 23. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸ்தவம் | 2-00 | 2-00 |
| 24. | விஷ்ணுசித்தவிஜயம் [முதல் பாகம்] | 8-00 | 2-00 |
| | விஷ்ணுசித்தவிஜயம் [இரண்டாம்பாகம்] | 10.00 | 2-00 |
| | ஷை [மூன்றாம்பாகம்] | 16-00 | 3-00 |
| 25. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் | 2-00 | 1-00 |
| 26. | ஆறாயிரப்படி கு$_3$ருபரம்பராப்ரபா$_4$வம் முதலியவை | அச்சில் | |
| 27. | ஸ்ரீகேசவமணிமாலை | 2-00 | 1-00 |
| 28. | அறுபதுக்கு அறுபது (ஸுதர்சனர் வைபவம்) | 2-00 | 1-00 |
| 29. | திருப்பாவை திருப்பள்ளியெழுச்சி-மூலம்மட்டும் | 2-00 | 1-00 |
| 30. | ஸ்ரீபகவத்கீதை பதவுரை[முதல் 6 அத்தியாயம்] | 6-00 | 2-00 |
| 31. | கீதாவ்யாக்யானம் [7, 8 அத்தியாயம்] | 12-00 | 2-00 |
| | ஷை [9 முதல் 12 அத்தியாயம்] | 20-00 | 3-00 |
| | ஷை [13 முதல் 15 அத்தியாயம்] | 20-00 | 2-00 |
| 32. | அக்$_3$நிஹோத்ரியும் வைணவமும் | 4-00 | 2-00 |
| 33. | சோலைமலைக்குறவஞ்சி | 6-00 | 2-00 |
| 34. | ஸ்ரீவைஷ்ணவ மகாநாடுமலர் | 2-00 | 1-00 |
| 35. | ஸுதர்சனர் பதில் [3 முதல் 11 சதகங்கள்] | 57-00 | 4-00 |

| | | | |
|---|---|---|---|
| 36. | ப்ராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம் | 5-00 | 1-00 |
| 37. | ஆண்டாள் சந்திரகலாமாலை | 3-00 | 1-00 |
| 38. | யதீந்த்ரமததீபிகை-ஸந்மதகாரிகாவளீவிவரணம் | 10-00 | 2-00 |
| 39. | சங்ககாலத் தமிழர் சமயம் | 2-00 | 1-00 |
| 40. | ஸ்ரீராமாநுஜ அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம் | 2-00 | 1-00 |
| 41. | சரமகுருநிர்ணயம் [ப்ரமாணத்திரட்டுடன் கூடியது] | 2-00 | 1-00 |
| 42. | மோக்ஷோபாய ப்ரதீபிகை- [வைகாநஸ ஸித்தாந்த ஸாரம்] | 10-00 | 2-00 |
| 43. | நித்யாநுசந்தானம் | அச்சில் | |
| 44. | வார்த்தாமாலை [விவரணத்துடன்] | 20-00 | 3-00 |
| 45. | ப்ரபந்நாம்ருதம் தர்ப்பணத்துடன் | 25-00 | 3-00 |
| 46. | கோதையும் சங்கத்தமிழும் | 1-00 | 1-00 |
| 47. | பரப்பிரம விவேகம் (உரையுடன்) | 5-00 | 1-00 |
| 48. | ஸ்ரீவைகுண்டஸ்தவவுரை [ஸ்ரீ P.B.A. ஸ்வாமி இயற்றியது] | 8-00 | 2-00 |
| 49. | சங்ககாலத் தமிழர் சமயமே கம்பனின் சமயம் | 8-00 | 2-00 |
| 50. | ஸ்ரீவைஷ்ணவமத விஜயம் | 3-00 | 1-00 |
| 51. | புருஷகாரம்-சிறையிருந்தவள் ஏற்றம் | 2-00 | 1-00 |
| 52. | ஸுதர்சனர் மணிவிழா மலர் (மலிவுப் பதிப்பு) | 10-00 | 2-00 |
| | ஷை சிறப்புப் பதிப்பு] | 20-00 | 2-00 |
| 53. | கத்யத்ரயம் (மூலம் மட்டும் தமிழ்) | 1-00 | 1-00 |
| 54. | திருவாய்மொழிக்கலம்பகம் | 8-00 | 2-00 |
| 55. | முமுக்ஷுப்படி ஸ்ரீவசனபூஷணம் ஆசார்யஹ்ருதயம் (மூலம் மட்டும்) | 8-00 | 1-00 |
| 56. | அஷ்டாதச ரஹஸ்யம் [ப்ரமாணத்திரட்டுடன்] | 3-00 | 3-00 |
| 57. | எம்பார் வைபவம் | 1-00 | 1-00 |
| 58. | நம்மாழ்வார் சிந்தனைகள் | 1-00 | 1-00 |
| 59. | ஸ்ரீ பாஷ்யகார ஸ்தோத்ரங்கள் | 1-00 | 1-00 |
| 60. | கைசிகபுராணம் | 2-00 | 1-00 |
| 61. | பூர்வாசார்ய ஸ்தோத்ரமாலா (முதல் பாகம்) | 3-00 | 1-00 |
| 62. | ஷை (இரண்டாம்பாகம்) | 3-00 | 1-00 |
| | ,, (மூன்றும் பாகம்) | 2-00 | 1-00 |
| | ,, (நான்காம்பாகம்) | 3-00 | 1-00 |
| 63. | The Epistemology & Metaphysics of Sri Ramanuja -Vindicated | 6-00 | 1-00 |
| 64. | P. B. Annangaracharya Swami's Contribution to Divyaprabandham | 2-00 | 1-00 |
| 65. | முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 15-00 | 2-00 |
| 66. | தத்வத்ரய ஸங்க்ரஹ விளக்கம் | 5-00 | 1-00 |
| 67. | கேநோபநிஷத் வ்யாக்யானம் | 7-00 | 1-00 |
| 68. | ஸங்கீத பக்திஸாரர் | 3 00 | 1-00 |
| 69. | ஆசார்ய வைபவ மஞ்சரி | 30-00 | 3-00 |